# மானுடத்தின் வெற்றி

இலின்



தமிழில்

எஸ். ராமகிருஷ்ணன்

**ஸ்டார் பிரசுரம்**

திருவல்லிக்கேணி
சென்னை-5

மேலக்கோபுரத் தெரு
மதுரை

# முன்னுரை

அற்புதம் இயற்றும் ஆற்றலுக்குரிய ஒருவன் இந் நிலவுலகில் வாழ்கின்றான்.

ஒரு நீராவியந்திரத்தை எளிதாகத் தூக்கிப் பிடிக்கும் கரங்களையும்,

ஒரே நாளில் ஆயிரக்கணக்கான மைல்கள் கடந்து செல்லும் பாதங்களையும்

மேலே, மேலே, மேக மண்டலத்துக்கும் அப்பால், எந்தப்பறவைக்கும் எட்டாத உயரத்தில் பறப்பதற்கேற்ற சிறகுகளையும்,

நீர் நிலையின் மேலும் அதன் அடியிலும் மீனை விடச்சிறப்பாக நீந்துவதற்குப் பயன் படும் மீன்துடுப்புகளையும்,

அவன் அடைந்திருக்கிறான்.

காணமுடியாதவற்றையும் கண்டறியும் திறன் படைத்த கண்களையும், உலகின் மறுபகுதியில் வாழும் மாந்தர் பேசுவதைக் கேட்கும் உரம் கொண்ட செவிகளையும் அவன் பெற்றிருக்கிறான்,

அவன் உலகத்தைத் தனக்கேற்ற தாக மாற்றியமைக்கிறான். கடல்களை இணைக்கிறான், காடுகளைப் படைக்கிறான், பாலைவனங்களைச் சோலைவனங்களாகச் சீரமைக்கிறான்.

வியப்புக்குரிய இந்த வல்லவன் யார்?

இவன்தான் மனிதன்.

மனிதன் இந்த அமானுஷ்யத்திறன் பெற்றது எப்படி ?

இந்த வினாவுக்கான விளக்கத்தைத் தான் நாம் இந்த நூலில் அளிக்கப் போகிறோம்.

### அத்தியாயம் 1.

# கண்ணுக்குத் தெரியாத கூடு

மனிதன் பேராற்றல் பெற்றுச் சிறக்காத காலம் ஒன்று இருந்தது. அப்பொழுது அவன் சிறுதிறம் படைத்த வனுகவே இருந்தான். அவன் தன்னைச் சூழ்ந்திருந்த உலகத் துக்கு எஜமானனுக இல்லாமல், அதன் இணக்க வணக்க மான அடிமையாகவே இருந்தான்.

அப்பொழுது, அவனுக்கு இயற்கையைக் கட்டியாளும் சக்தி சிறிதும் இல்லை. காட்டு விலங்குகளையும் பறவைகளை யும் போல், சுதந்திர மில்லாதவனுக வாழ்ந்தான்.

"என்ன ? காட்டு மிருகங்களுக்கும் பறவைகளுக்கும் சுதந்திர மில்லையா ? காட்டில் வாழும் அணில் தன்னிச்சை யாக மரம்விட்டு மரம் தாவிக் காலம் கழிப்பது உங்களுக் குத் தெரியாதா ? அந்த அணிலை யாரும் எந்தக் கூட்டிலும் அடைத்து வைக்கவில்லையே!" என்று நீங்கள் கேட்பீர்கள்.

"மரங்கொத்திப் புள் தனக்கு இஷ்டமான 'பர்ச்' மரத்தில் அலகினுல் கொத்திக் கொண்டிருப்பதை நீங்கள் கண்டதில்லையா ? அந்தப் புள்ளை ஒரு மரத்தில் கட்டிப்

போட்டிருக்கிறதென்று கற்பனை செய்கிறீர்களா?" என்றும் நீங்கள் வினவுவீர்கள்.

ஆம்; மேற்போக்காக நோக்கினால், பறவைக்குச் சுதந்திரமில்லை யென்ற பேச்சு பரிகசிக்கத் தக்கதாகத்தான் தோன்றுகிறது. தன்னிச்சையாகப் பறந்து செல்லும் மரங்கொத்திப் புள்ளை மரத்தில் கட்டிப் போட்டிருப்பதையோ, சுயேச்சையான அணிலைக் கூண்டில் அடைத்திருப்பதையோ ஒருவரும் பார்த்ததில்லை என்பது உண்மைதான்.

ஒருவரும் பார்த்ததில்லை என்பது மெய்; பார்க்கப் போவதுமில்லை என்பதும் மெய்; ஆனால் அதன் காரணம் என்ன? கூண்டும் சங்கிலியும் கண்ணுக்குப் புலனாகாதவையாக இருப்பதுதான்.

ஒருகாலத்தில் மனிதனும் இம்மாதிரியான கண்ணுக்குத் தெரியாத கூண்டில் அடைப்பட்டிருந்தான்; இத்தகைய காட்சிக்கு விளங்காத சங்கிலியால் கட்டிப் போடப் பட்டிருந்தான். அந்தச் சங்கிலியை முறிப்பதிலும் அந்தக் கூண்டிலிருந்து மீள்வதிலும் அவன் எப்படி வெற்றியடைந்தான் என்பதை நாம் அறியவேண்டுமானால் நாம் காட்டுக்குச் சென்று, இன்றும் கைதிகளாயுள்ள நமது உறவினர்கள் எவ்வாறு வாழ்கிறார்கள் என்பதைக் கண்டு கொள்ள வேண்டும்.

எனவே, மனிதனைப் பற்றிய இந்தப் புத்தகத்தைக் காட்டுப் பயணத்துடனும், காட்டுவிலங்கு, பறவைகளைப் பற்றிய பேச்சுடனும் தொடங்க வேண்டும்.

## சுதந்திரப் பறவை

"பறவையைப் போல் சுதந்திரமாக" வாழ்வதைப் பற்றி மக்கள் பேசுவதை நீங்கள் அடிக்கடிக் கேட்டிருப்பீர்கள். ஆனால் மரங்கொத்திப் புள் சுதந்திரமா யிருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்களா? வரையறை இல்லாத சுதந்திரத்தை அனுபவிப்பதாயிருந்தால், அது இஷ்டப்பட்ட இடத்துக்குப்

பறந்து சென்று இச்சை விழுந்த இடத்தில் வசிக்க முடிந் திருக்கும். ஆனால் உண்மையில் அந்த வாய்ப்பினை அது பெறவில்லை. ஒரு மரங்கொத்திப் புள்ளை மரமில்லாத புல் வெளிப் பிரதேசத்தில் கொண்டுபோய் விட்டுப் பாருங்கள். அங்கே அது இறந்துவிடும்; ஏனென்றால், மரங்களில்லாத இடத்தில் அது வாழமுடியாது. காட்சிக்குப் புலனாகாததும் முறிக்க முடியாததுமான ஒரு சங்கிலியால் இப்புள்ளை மரத் தோடு கட்டிப் போட்டிருப்பதற்கு ஒப்பான நிலைமை தான்!

இன்னோர் உதாரணத்தைப் பார்ப்போம். பிர் மரப்புள் ஒன்று இருக்கிறது. இதுவும் மரங்கொத்திப் புள்ளைப் போல் காட்டில்தான் வாழ முடியும். ஆனால் இது இஷ்டப் பட்ட காட்டில் வசிக்க முடியாது; பிர் மரக்காட்டில்தான் உயிர் வாழமுடியும். இதனைப் போலவே, பைன் மரப்புள் ஒன்று இருக்கிறது. இது பைன் மரக்காட்டில்தான் உயிர் வாழமுடியும்; வேறு எங்கும் இது வசிக்க முடியாது.

பிர் மரக்காட்டைச் சுற்றி ஏதோ ஒரு கண்ணுக்குத் தெரியாத கூண்டு அமைந்திருப்பதைப் போலவும், அந்தக் கூண்டு அது வெளியே செல்வதை அனுமதிக்காதிருப் பதைப் போலவும், பிர் மரப்புள் நடந்து கொள்கிறது. பைன் மரக்காட்டைச் சுற்றிக் கண்ணுக்குத் தெரியாத ஓர் உயர மான சுவர் இருப்பது போலவும், அதைக் கடக்க முடி யாதது போலவும் பைன் மரப்புள் நடந்து கொள்கிறது.

## காட்டில் உலாவுவோம்

நீங்கள் காட்டில் நடந்து செல்லும்பொழுது இம்மாதிரி யான புலனாகாத சுவர்களைக் கடந்து செல்கிறீர்கள்; நீங்கள் மரத்தில் ஏறும்பொழுது, கண்ணுக்குத் தெரியாத கூரை களைக் கடந்து செல்கிறீர்கள்; மிருகக்காட்சிசாலையி லிரு பதைப் போல், ஒவ்வொரு காட்டிலும், வெவ்வேறு பட்டி களும் கூண்டுகளும் உள்ளன.

காட்டில் நடந்து செல்லும்பொழுது, சூழ்நிலை மாறு தலை நீங்கள் கவனிக்காதிருக்க முடியாது. சிறிதுநேரம் பிர் மரங்களிடையே நடந்து செல்கிறீர்கள்; அதன்பின் பைன் மரங்களிடையே உலவுகிறீர்கள். பைன் மரங்களில் குட்டையானவை என்றும் நெட்டையானவை என்றும் இருவகைகள் இருப்பதையும் நீங்கள் பார்த்தறிய முடியும்.

ஓர் இடத்தில், வெண்மையான காளான்கள் மீது நடப் பீர்கள்; இன்னோர் இடத்தில், ஓங்கி வளர்ந்த புல்மீது அடி வைத்து நடப்பீர்கள்; மற்றோர் இடத்தில் மீண்டும் காளானை மிதிப்பீர்கள்; ஆனால் இந்தக் காளான் வெண்மை யாக இல்லாது, பச்சையாக விருக்கும்.

கோடைகால விடுமுறையைக் கழிப்பவருக்கு இவை அனைத்தும் காடுகள்தாம். ஆனால், காட்டிலாகா நிர்வாகி யைக் கேட்டுப் பார்த்தால், இங்கு ஒரு காடு அல்ல, நான்கு விதக் காடுகள் இருப்பதாகக் கூறுவார். தாழ்வான ஈர நிலத்தில், பிர் மரங்கள் உள்ளன; இவற்றின் செழுமையான முடிகள் மெல்லிறகு மஞ்சங்களைப் போல் உள்ளன. இன்னும் மேலே போனால், மணற்பாங்கான சரிவுகளில், பச்சைக் காளான்களிடையே பைன் மரங்கள் வளர்ந்திருக் கின்றன. இந்தப் பைன்மரத் தோப்புகளில் புதர்கள் மண்டிக் கிடக்கின்றன. இன்னும் மேலே ஏறிச் சென்றால், மணற்பாங்கான முகடுகளில், வெண்மையான காளான் களிடையே பைன் மரங்கள் வளர்ந்திருக்கின்றன. இங்கு ஈரமான இடங்களில் மீண்டும் புல்வெளிகள் தென் படுகின்றன,

ஆக, உங்களுக்கே தெரியாமல், நீங்கள் நான்கு சிறு உலகங்களைத் தனித் தனியாக இனங்காட்டும் மூன்று சுவர் களைக் கடந்திருக்கிறீர்கள்; நான்கு வெவ்வேறான கூண்டு களைக் கடந்திருக்கிறீர்கள். இவை ஒவ்வொன்றிலும் வெவ் வேறான கைதிகள் உள்ளனர்,

மிருகக்காட்சிசாலையில், வெவ்வேறு மிருகங்களின் பெயர்களை அறிவிக்கும் பலகைகள் தொங்குகின்றன

அல்லவா ? அதுபோல், காட்டிலும் பெயர்ப் பலகைகள் தொங்குகின்றன என்று கற்பனை செய்துகொள்வோம். அப்பொழுது, பிர் மரக்காட்டில், பிர் மரப்புள், மூன்று விரல்களையுடைய மரங்கொத்திப் புள், சிவந்த மார்பை உடைய 'பின்ஷ்' பறவை, பின்ஷ் குடும்பத்தைச் சேர்ந்த மற்றொரு பறவையான 'சாபின்ஷ்', நேரான குட்டைவாலையும் வட்டமான சிறிய சிறகுகளையும் உடைய ரன் பறவை, அணில், மார்ட்டன், காட்டுச் சுண்டெலி ஆகியவற்றின் பெயர்கள் குறிக்கப் பட்டிருக்கும்.

பைன் மரக்காட்டில் தொங்கும் பலகையில் வேறு பெயர்களைக் காண்பீர்கள். விப்பூர்வில், பாபோலிங்க், கட்டமிட்ட மேனியை உடைய மரங்கொத்திப்புள். ஈப் பிடிப்பான், மஞ்சள்நிற மார்பினை உடைய பீவீ பறவை, திரஷ் பறவை ஆகிய பெயர்களை அங்கே காண்பீர்கள்.

பர்ச் மரக்காட்டிலும் கைதிகள் இருக்கின்றனர். பர்ச் மரக்காட்டுக் கைதிகளைப் பிர் மரக்காட்டிலோ பைன் மரத் தோப்பிலோ உங்களால் காணமுடியாது. உதாரணத்துக்கு, பர்ச் கிரவுஸ் என்ற பறவையை எடுத்துக் கொள்வோம். இந்தப் பறவையின் பெயரே அதன் முகவரியைப் புலப் படுத்தி விடுகிறது. பர்ச்கிரவுஸ் என்பது இலைதழை அடர்ந்த பர்ச் மரத்தோப்பில்தான் உயிர்வாழ முடியுமென் பதை அதன் பெயரிலிருந்தே நீங்கள் ஊகித்தறிய முடியும்.

ஒவ்வொரு காடும் ஒரு கூடுமாதிரி இருக்கிறது. இந்தப் பெரிய கூடுகள் பல பட்டிகளாகவும் அறைகளாகவும் பிரிக் கப் பட்டுள்ளன. உதாரணமாக, ஒரு பெரிய மாளிகையில் உள்ளதைப் போல் ஒவ்வொரு காட்டிலும் பல மாடிகள் உள்ளன. இரண்டு மாடிக் காடுகளும் மூன்றுமாடிக் காடு களும் இருக்கின்றன. ஏழு அடுக்குக் காடுகள் கூட உள்ளன.

பைன் மரக்காடுகளில் இரண்டு தளங்கள் இருக் கின்றன ; அவற்றில் சில மூன்று தளங்களையும் பெற்றிருக்

கின்றன. முதல் தளத்தில் காளான்களும் புல்வகைகளும் உள்ளன; இரண்டாவது தளத்தில் புதர்கள் உள்ளன; பைன் மர உச்சிகள் மூன்ருவது தளத்தில் உள்ளன.

ஓக் மரக்காடு ஏழு அடுக்கு உடையது. ஏழாவது தளத்தில்தான், ஓக், ஆஷ், மாபிள், லின்டன் ஆகிய மரங்களின் உச்சிகள் இருக்கின்றன. அலை அலையாக அமைந்த அவற்றின் முடிகள், காட்டுக்குக் கூரை வேய்ந்தமாதிரி காட்சியளிக்கின்றன. அந்தக் கூரை கோடையில் பசுமையாகவும் இலையுதிர் காலத்தில் பன்னிறமாயும் இருக்கிறது. அதன் கீழே, ஓக் மரங்களின் மைய அளவில், ரோவன், ஆப்பிள், பேரிக்காய் இனவகை மரங்களின் உச்சிகள் உள்ளன. இது ஆருவது தளமாகும்.

அடுத்து, ஐந்தாவது தளத்தில், ஹேஸல் புதர்கள், பல்வகை முட்செடிகள் ஆகியவற்றின் ஒன்ருேடொன்று பின்னிய கிளைகளும் இலைகளும் உள்ளன. அவற்றுக்குக் கீழே, புல்லும் பூவும் தென்படுகின்றன. ஆனல், இந்தப் புல்லும் பூவும் பல தளங்களில் வாழ்கின்றன. நான்காவது தளத்தில், 'புளூ பெல்' என்ற மலர்கள் காட்சி தருகின்றன; மூன்ருவது தளத்தில், பூண்டுகளிடையே, பள்ளத்தாக்கின் லில்லி, கௌவீட் ஆகிய மலர்கள் புலப்படுகின்றன. வயலட் மலர்களும் ஸ்டிராபரீயும் இரண்டாவது தளத்தில் வசிக்கின்றன. முதல் தளமான பூமிமீது இலைவளம் உடைய காளான்கள் வசிக்கின்றன.

இன்னும் கீழே, அடித் தளத்துக்கும் கீழே, ஒரு நிலவறை இருக்கிறது. இங்குதான் மரங்கள், செடிகள் ஆகியவற்றின் வேர்கள் உள்ளன.

இந்தத் தளங்கள் ஒவ்வொன்றிலும் அதற்கே உரிய குடிபடைகள்—காட்டு விலங்குகளும் பறவைகளும்—உண்டு. மேலே, உச்சியிலுள்ள கிளைகளின் இடையே பருந்து தன் கூட்டைக் கட்டிக் கொண்டிருக்கிறது. சற்றுக் கீழே, ஓக் மரத்தின் உடற்பகுதியில் மரங்கொத்திப்

புள் வசிக்கிறது. ஐந்தாவது தளத்துப் புதர்களிடையே வாழும் குடிகள்தாம், பிறரைக் காட்டிலும் அதிகமாகக் கூச்சலிடக் கூடியவை. ரன் பறவைகள், 'சிவந்த வால்' என்ற பெயருள்ள புட்கள் முதலியவை அந்தத் தளத்தில் வசிக்கின்றன. அவை சீழ்க்கை அடித்தும், பாடியும் காட்டில் ஒலியைப் பெருக்குகின்றன. முதல் தளத்தில் குடியிருக்கும் காட்டுக் கோழியோ பூமியில் அலைந்து திரிகிறது. நிலவறையில் சுண்டெலிகள் வளை தோண்டிக் கொண்டு வசிக்கின்றன.

இந்தப் பெரிய பல அடுக்குக் கட்டிடத்தில், வித விதமான இருப்பிடங்கள் உள்ளன. உச்சியிடத்து இருப் பிடங்கள் வெளிச்சமுள்ளவை; கதகதப்பானவை; ஈர மில்லாதவை. பூமி மீதுள்ள இருப்பிடங்கள் இருட் டானவை; ஈரமானவை; குளிர் மிகுந்தவை. கோடை காலத்துக்கு மட்டும் தகுதியான தண்மையான இருப்பிடங் களும், ஆண்டு முழுவதும் வாழ்வதற்கேற்ற கதகதப்பான இருப்பிடங்களும் உள்ளன.

பூமியில் தோண்டிய வளை, குளிர்காலத் தங்குமனை யாகும். குளிர்காலத்தில், தண்ணீரெல்லாம் பனிக் கட்டி யாக உறையும் நாளில், நான்கு அல்லது ஐந்து அடி ஆழ முள்ள வளையில் உஷ்ண நிலையை அறிய முயற்சியுங்கள். பூமி மீது உஷ்ண நிலை 0 டிகிரி பாரன்ஹீட்டாக இருக்கும் பொழுது, வளையில் 46 டிகிரி பாரன்ஹீட்டாக இருப்ப தைக் காண்பீர்கள். நீராவியைக் கொண்டு வெப்பத்தை உண்டாக்காதபொழுதே, வளையில் 46 டிகிரி பாரன்ஹீட் டாக இருக்கிறது.

ஒக் மரத்தின் உடற்பகுதியில் குளிர்ச்சி அதிகம். அங்கு குளிர்காலத்தில் வாழும் பிராணி குளிரில் விறைத்து விடும். எனவே, கோடைகாலத்துக்கு அது சிறந்த

---

பாரன்ஹீட் அளவுப்படி நீர் பனிக்கட்டியாவது 32 டிகிரி அளவில்; நீர் ஆவியாக மாறுவது 212 டிகிரி அளவில்.

தங்குமனையாகப் பயன்படுகிறது. குறிப்பாக, இரவில் தம் வேலையைக் கவனித்துவிட்டுப் பகலில் நிழல் மிகுந்த இருண்ட இடத்தில் ஓய்ந்திருக்க விரும்பும் ஆந்தைகளுக்கும் வௌவால்களுக்கும் அது சொகுசான தங்குமனையாகும்

ஜனங்கள் ஒரு வீட்டிலிருந்து இன்னொன்றுக்கும் ஒரு தளத்திலிருந்து இன்னொரு தளத்துக்கும் குடி போகிறார்கள். ஆனால் காட்டில் ஒரு தளத்தில் வாழும் பிராணிகள் இன்னொரு தளத்தில் குடியிருப்பவையோடு இருப்பிடப் பரிவர்த்தனை செய்துகொள்ள முடியாது. ஏனெனில், காட்டில் வாழும் இவை தம்மிச்சையாகக் குடியிருப்பவை அல்ல; அவை கைதிகளாகவே உள்ளன. அவற்றின் இருப்பிடங்களைச் சிறைச்சாலையின் அறைகளுடன்தான் ஒப்பிடவேண்டும்.

காட்டுக் கோழி தரையில் வசிக்கிறது. அது தனது ஈரமான, இருண்ட இடத்தை விடுத்துக் கூரை போலமைந்துள்ள உச்சிமாடத்தின் வெளிச்சமான, ஈரமற்ற விடுதிக்குப் போகமுடியாது. பருந்து கிறுக்குத்தனமாய் அந்த மாற்றத்துக்கு ஒப்புக்கொண்டாலும், அதுவும் தரையில் வாழ முடியாது.

இந்த நிலைமைகளின் அடிப்படை என்ன ? காடுகளைக் கூடுகளாகவும் அறைகளாகவும் பிரிக்கும் சுவர்களும் கூரைகளும் எத்தகையவை ? கட்டுத்தளையின்றி வசிக்கும் காட்டு மிருகங்களையும் பறவைகளையும் கைதிகளாக மாற்றுவது எது ? பிர்மரப் புள்ளைப் பிர்மரக் காட்டிலும் பைன்மரப் புள்ளைப் பைன்மரத் தோப்பிலும், காட்டுக் கோழியைத் தரையிலும், மரங்கொத்திப் புள்ளையும் பருந்தையும் மேன்மாடங்களிலும் வாழும்படி கட்டாயம் செய்வது எது ?

## பிர்மரப் புள்ளின் வாழ்க்கை

பிர்மரக் காட்டுக்குச் சென்று, பிர்மரப் புள் எப்படி வசிக்கிறது, எவ்வாறு நாட்களைக் கழிக்கிறது என்பன

வற்றை அறிந்து வருவோம். காலையில் சிற்றுண்டி புசிக்கும் பொழுதோ, பகல் உணவு கொள்ளும்பொழுதோ அதைக் கண்டு வருவதுதான் உத்தமம். ஆனால், 'அதற்குக் காலைச் சிற்றுண்டி எப்பொழுது நிறைவு பெறுகிறது? பகலுணவு கொள்ளுதல் எப்பொழுது ஆரம்பமாகிறது?' என்பனவற்றை அறுதியிட்டுச் சொல்ல முடியாது. உண்பதற்கு நம்மை விட அதற்குப் பன்மடங்கு அதிக நேரம் தேவைப்படுகிறது.

பிர்மரப் புள் உணவை உட்கொள்ளும்பொழுது, கத்தியையோ முள் கரண்டியையோ பயன்படுத்துவதில்லை. அதனிடமுள்ள மேஜைக் கருவி சாமணம் ஒன்றுதான். ஓட்டை உடைத்துக் கொட்டைகளை எடுப்பதற்கு இந்தச் சாம்ணத்தைப் பயன்படுத்துவதில் அது மிகுந்த சாமர்த்தியசாலியாக உள்ளது. அந்தப் பறவை ஒரு பொழுதும் இந்தக் கருவியை விட்டுப் பிரிவதில்லை; உறங்கும் பொழுது கூட அது அந்தக் கருவியை நீங்காத் துணையாகப் பெற்றிருக்கிறது. எப்படியென்றால், அதன் அலகே அதற்குச் சாமணமாகப் பயன்படுகிறது. பாக்கை வெட்டிச் சீவலாக்குவதற்குத் தக்கதாகப் பாக்கு வெட்டி அமைந்திருப்பதைப் போல, அடைப்பானை எடுப்பதற்கு ஏற்றதாகத் தக்கை திருகி அமைந்திருப்பதைப் போல, பிர்மரக் கனியிலிருந்து கொட்டையை எடுப்பதற்கேற்ற வகையில் இதன் அலகு அமைந்திருக்கிறது. இந்தப் பறவையினம், ஆயிரக்கணக்கான ஆண்டுகளின் அனுபவத்தில், பிர்மரக் கனியிலிருந்து கொட்டையை எடுப்பதற்கேற்ற கருவியாகத் தன் அலகைச் சீரமைத்துக் கொண்டது. இதில் அது அடைந்துள்ள வெற்றி எத்தகையது என்று பாருங்கள்: இன்று பிர்மரப் புள்ளுக்குப் பிர்மரம் அவசியமாக விருப்பதைப் போலவே, பிர்மரத்துக்கும் இந்தப் புள்ளின் சேவை இன்றியமையாததாக உள்ளது. எவ்வாறெனில், பிர்மரப் புள் தன் உணவுக்காகக் கொட்டைகளை எடுக்கும்பொழுது பல கொட்டைகளைப்

பூமியில் சிதறிவிழச் செய்கிறது. இதன் மூலம், தன் இனத்து எதிர்காலத் தலைமுறைகளின் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்வதற்கான பிர்மரங்கள் உண்டாவதற்கு விதை தூவுகிறது. இந்தச் செய்கைதான், பிர்மரத்துக்கும் பிர்மரப் புள்ளுக்கும் இடையே உள்ள பிணைப்பை வலுவானதாகச் செய்கிறது.

பிர்மரப் புள் தன் நெருங்கிய உறவினனான பைன் மரப் புள்ளுடனும்கூட இருப்பிடத்தை மாற்றிக்கொள்ள முடியாது. ஏனென்றால், பிர்மரப் புள்ளின் அலகு பிர்மரக் கனிகளை உடைப்பதற்கு முற்றிலும் தகுதியாக இருக்கிறதேயல்லாமல், கடினமான பைன்மரக் கனிகளின் ஓடுகளை உடைத்துத் திறக்கும் அளவுக்குப் பலம் கொண்டதாக இல்லை. பைன்மரக் கனியிலிருந்து கொட்டையை எடுக்கும் பணியைப் பைன்மரப் புள்ளால்தான் சாதிக்க முடியும்.

பிர்மரப் புள்ளைப் பிர்மரக் காட்டிலும் பைன்மரப் புள்ளைப் பைன்மரக் காட்டிலும் கட்டிப் போட்டிருக்கும் சூழ்நிலை இதுவே. தானே விரும்பியல்ல; வேறு வழியில்லாததால்தான், பிர்மரப் புள் பிர்மரக் காட்டின் கைதியாகவும் துணைவனாகவும் வாழ்கிறது.

அதற்குச் சுதந்திரமில்லை என்பது உண்மை. ஆனால் பதிலுக்கு அது பட்டினி கிடக்கவேண்டிய இடர்ப்பாடு இல்லாது காப்பாற்றப் படுகிறது. குளிர்காலத்திலோ, கோடை காலத்திலோ, பிர்மரக் கனிகளுக்குத் தட்டுப்பாடு ஏற்படுவதே இல்லை. பிர்மரப் புள் குளிர்காலத்தில் கூட பிர்மரத்தைவிட்டு நீங்குவதில்லை; ஏனெனில் குளிர்காலம் முழுவதிலும், ஏராளமான கொட்டைகள் இருப்பதால் அதற்கு உணவுத்தட்டு ஏற்படுவதே இல்லை.

**காடுவாழ் கைதிகள்**

காட்டிலுள்ள இதர கைதிகளை நாம் கண்டோமானால், அவை ஒவ்வொன்றும் தத்தம் காட்டுடன் கட்

டப் பட்டிருப்பதையும், தளத்துடன் பிணைக்கப் பட்டிருப்பதையும் அறிந்து கொள்ளலாம். இவ்விதமாக அவற்றைக் கட்டிப் பிணைக்கும் சங்கிலிகளை அவற்றால் உடைத்தெறிய முடியாது என்பதையும் அறியலாம்.

உதாரணமாக, காட்டுக்கோழி ஏன் பூமியில் வசிக்கிறது? ஏனென்றால் அதன் உணவு நிலவறையில் உள்ளது. பூமிக்கு அடியிலுள்ள மண்புழுக்களைக் கண்டு, பற்றிக்கொள்வதற்குத் தனித் தகுதி படைத்ததாக அதன் நீண்ட அலகு இருக்கிறது. மரத்தில் வாழ்வதென்றால் அந்தப் பறவை என்ன செய்வதென்று அறியாது திகைத்து நிற்கும். அதனால்தான் காட்டுக் கோழியை ஒரு பொழுதும் மரத்தின் உச்சியில் பார்க்கமுடியாது. அதே போல, மரங்கொத்திப் புள்ளுக்குத் தரையில் என்ன செய்வதென்று தெரியாது. இந்த மரங்கொத்திப் புள் தொடர்ந்தாற்போல் பல நாட்களுக்கு ஒரு பிர் அல்லது பர்ச் மரத்தின் உடற் பகுதியைச் சுற்றிச்சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருக்கிறது. அது அங்கு எதைக் கொத்துகிறது? எதைத் தேடுகிறது?

ஒரு பிர் மரத்தின் மேற்பட்டையை நீங்கள் உரித்தெடுத்தால், அந்தப் பட்டையின் அடியில் மரத்தைச் சுற்றிலும், வளைவான சிறிய பாதைகள் குடையப் பட்டிருப்பதைக் காணலாம். பிர் மரத்தைச் சார்ந்து வாழும் பிர்மர வீவில் என்ற புழு உண்டாக்கிய பாதைகளே அவை. ஒவ்வொரு பாதையும் தொட்டில் போன்ற ஒரு சிறிய துளையில் முடிவு அடைகிறது. அந்தத் தொட்டில் வடிவுத் துளையில், அந்தப் புழுவின் லார்வா, முதலில் பியூப்பாவாகவும் பிறகு வீவிலாகவும் மாறுகிறது. இந்தப் பூச்சி பிர் மரத்தோடு ஒட்டிவாழப் பழகி விட்டது; மரங்கொத்திப் புள்ளோ இந்தப் பூச்சியை உண்டுவாழப் பழகிவிட்டது. மரங்கொத்திப் புள்ளுக்கு நீளமான,

---

லார்வா : முட்டையினின்றும் வெளிவந்த புழு.

பியூப்பா : செயலற்ற நிலையிலிருக்கும் கூட்டுப்புழு

வளையத்தக்க நாக்கு இருக்கிறது. மறைவாக உள்ள இந்தத் துளைகள், எவ்வளவுதான் பார்வைக்குப் புலனுகாதவாறு அமைந்திருந்தாலும், அந்த நாக்கினைக் கொண்டு இவற்றை அடைந்து, இந்தத் துளைகளிலுள்ள லார்வாவை நக்கிப் புசித்துவிடும் ஆற்றல் அந்த மரங்கொத்திப் புள்ளுக்கு உண்டு,

இங்கு மூன்று கண்ணிகளை உடைய சங்கிலித் தொடர்பை நாம் காண்கிருேம்: பிர்மரம்—வீவில்—மரங்கொத்திப்புள். இத்தகைய இணைப்புகளை 'உணவுச் சங்கிலிகள்' என்று விஞ்ஞானிகள் குறிப்பிடுவார்கள். காட்டில் வாழும் கைதிகள் அனைத்தும் இத்தகைய உணவுச் சங்கிலிகளால் இணைக்கப்பட் டிருக்கின்றன.

மார்ட்டன் என்ற பிராணியை உதாரணமாகப் பார்க்கலாம். மார்ட்டன் ஏன் காட்டில் வாழ்கிறது? ஏனென்ருல் அது இன்னெரு வனவாசியான அணிலை வேட்டையாடுகிறது. அணில் ஏன் காட்டில் வாழ்கிறதென்ருல், அதற்குத் தேவையான உணவு அங்குதான் கிடைக்கிறது. ஒரு சமயம், மனிதன் காலடி வைக்காத காட்டுக்குள் புகுந்து அணில்களைக் கொன்ற சில வேடர்கள், அந்த அணில்கள் என்ன உணவைக்கொண்டு வாழ்ந்தன என்பதைக் கண்டறிவதற்காக அவற்றின் வயிற்றைத் திறந்தார்கள். அந்த அணில்கள் பிர்மரக் கொட்டைகளையும் காளான்களையும் தின்றுவாழ்ந்தன என்பதைக் கண்டார்கள். எனவே, நாம் இன்னேர் இணைப்பை அறிய முடிகிறது: அதாவது: மார்ட்டன்—அணில்—காளான்கள்—பிர்மரக் கொட்டைகள்.

தாம் இந்தத் தொடர்பை மேலும் ஆராயலாம். மார்ட்டனும் அணிலும் ஏன் காட்டில் வாழ்கின்றன என்பதை நாம் கண்டுகொண்டோம். ஆனல் காளான்கள் ஏன் காட்டில் வளர்கின்றன? நாம் ஒவ்வொருவரும், நம் வாழ் நாட்களில் ஏதாவது ஒரு நாள், காளான்களைப் பிடுங்கிக் கொண்டு வந்திருப்போம். ஆனல், "காளான்கள் ஏன்

கடற்கரை யோரத்தில் வளர்வதில்லை? அவை ஏன் காட்டில் வளர்கின்றன ?" என்று நாம் கேட்டுக்கொண்ட தில்லை.

நாம் முன்னுல் குறிப்பிட்ட விலங்கு, பறவைகளைப் போலவே, காளான்களும் அவசியத்தை முன்னிட்டே காட்டில் வளர்கின்றன. காட்டில்தான் அவற்றுக்கு உணவு கிடைக்கிறது. எவ்வாறெனில், காளான்கள் பக்குவ மான உணவைக் கொண்டே வாழ்கின்றன. அதாவது செடிகளால் சேமிக்கப்பட்ட உணவினைக்கொண்டு உயிர் வாழ்கின்றன. காட்டு நிலத்தில், புல், இலை, பாசி ஆகிய வற்றின் துண்டு துணுக்குகள் ஏராளமாக அழுகிக் கொண்டிருக்கின்றன. இந்தப் பொருள்களைக் கொண்டு தான் காளான்கள் வாழ்கின்றன. எனவே, காளான்கள் வளரும் இடத்தில் ஒரு துர்நாற்றம் எப்பொழுதும் வீசிக் கொண்டிருக்கிறது.

எனவே, நமது உணவுச் சங்கிலியில் இன்னொரு கண்ணியைக் கண்டுவிட்டோம்: மார்ட்டன்—அணில்—காளான்—அழுகும் தாவரம். மார்ட்டன் காளான்களைத் தின்பதில்லை. ஆயினும் அது இந்த உணவுச் சங்கிலியின் மூலம் காளான்களுடன் தொடர்பு கொண்டிருக்கிறது.

வளர்ந்துவரும் செடிகள் திரட்டி உட்கிரகித்துக் கொள்ளும் சூரியசக்தியை ஒன்றிலிருந்து இன்னொன் றுக்கு மாற்றும் சாதனமே உணவுச் சங்கிலி என்பதாகும்.

ஆனுல் காட்டுக் கைதிகளைக் கட்டிப் போட்டிருப்பது உணவுச் சங்கிலி மட்டுமல்ல; வேறு சங்கிலிகளும் உள் ளன. உதாரணமாக, கலிபோர்னியா மரங்கொத்திப் புள் ளேக் காட்டுக் கைதியாக வைத்திருக்க இரண்டு சங்கிலி கள் பயன்படுகின்றன: ஒன்று, அதன் உணவுக்காக வேண்டிய கொட்டைகளை வழங்கும் ஓக் மரத்துடன் அதை இணைக்கிறது. இன்னொன்று, அந்தப் புள்ளைப் பைன் மரத்துடன் இணைக்கிறது. பைன் மரத்தின் கொட்டைகளை அது உண்பதில்லை; ஆனுல் வேறு ஓர்

காரணத்துக்காக அந்தப் பைன் அதற்கு அவசியமாகிறது அது அதற்கு ஒரு சேமிப்பு விடுதியாகப் பயன்படுகிறது. மரங்கொத்திப் புள், பைன் மரத்தின் குழிவுகளில் ஓக்மரக் கொட்டைகளைச் சேமித்து வைத்துக்கொள்கிறது. ஓக் மரங்களில் கொட்டைகளில்லாதபொழுது, இந்தச் சேமிப்பு லிருந்து எடுத்துக்கொள்கிறது.

## நுழையாதே!

இவ்வுலகிலுள்ள பல சிறுஉலகங்களில் காட்டு உலகமும் ஒன்று. இந்த உலகில் காடுகளைத் தவிர, மரமில் லாத புல்வெளிப் பிரதேசங்களும், பாலை நிலங்களும், மலை களும், துந்திர வெளிகளும், கடல்களும், ஏரிகளும் உள்ளன. காடுகளில் இருப்பதைப் போலவே, மரமில்லாத புல்வெளிப் பிரதேசத்திலும் ஒருவகையை இன்னொன்றி லிருந்து இனம்பிரித்துக் காட்டும் கட்புலனாகாத சுவர்கள் உள்ளன. ஒவ்வொரு கடலிலும், நீர்மட்டத்தின் அடியில் பல தளங்கள் உள்ளன. கருங்கடற்கரையில், இத்தகைய தளங்கள் எட்டு இருக்கின்றன. ஒரே வித்தியாசம்: இங்கு தளங்களைக் கீழேயிருந்து மேல் நோக்கி எண்ணாமல், மேலே யிருந்து கீழ்நோக்கி எண்ணவேண்டும். கற்பாறைகள் கடல்நீரின் விளிம்பைத் தொடும் இடத்துக்கு அருகா மையிலுள்ளது முதல் தளம். இங்கு கடல் சாமந்தி என்ற கடலில் வாழும் பிராணியும் நண்டுகளும் பாறைகளில் ஒட்டிக் கொள்ளும் நத்தை வகையும் வாழ்கின்றன. அதன் கீழ், இரண்டாவது அடுக்கில் மணற்பாங்கான அடித்தளத் தில், சிப்பிக் கூட்டில் உள்ள நண்டுவகை சஞ்சாரம் செய் கிறது; அங்கே, சுல்தான் மீன்கள் மணலில் புதைந்து கொள்கின்றன. இன்னும் கீழே போனால், நான்காவது தளத்தில், கிளிஞ்சல்கள் வசிக்கின்றன. அடிவாரத்திலுள்ள கடைசி தளத்தில், கந்தகித்த–ஹைட்ரஜன் என்ற விஷவாயு நிறைந்திருக்கிறது. ஆனால், இந்தத் தளமும் நாதி யற்றதாக இல்லை. இங்கு பாக்டிரியாக்கள் வாழ்கின்றன.

இவை இந்த விஷவாயுவினிடையே வசிப்பதற்குத் தகுதி யானவையாகத் தம்மை ஆக்கிக் கொண்டுவிட்டன. இதர உயிரினங்களுக்குப் பிராணுபத்தாக உள்ள விஷவாயு, அந்த பாக்டிரியாக்களுக்கு உயிர்மூச்சாக உள்ளது.

இந்த உலகில் ஏறத்தாழப் பத்து லட்சம் வகைப்பட்ட உயிரினங்கள் வசிக்கின்றன. இவை ஒவ்வொன்றும் தத்தம் சொந்த உலகத்தில் வாழ்கின்றன; அந்தந்தச் சிறிய உலகில் வாழ்வதற்கு இணக்கமாக அவை தம்மை மாற்றி யமைத்துக் கொண்டுள்ளன. சில நீரில் வாழ்கின்றன; வேறு சில இனங்கள் காய்ந்த நிலத்தில் வசிக்கின்றன. சில ஜீவராசிகளால் ஒளியைப் பொறுத்துக்கொள்ள முடியாது. இதர ஜீவராசிகள் இருளை வெறுக்கின்றன. வெப்பமேறிக் கொதிக்கும் மணலில் தம்மைப் புதைத்துக் கொள்ளும் இனங்கள் சில உண்டு. இன்னும் சிலவற்ருல் சதுப்பு நிலத் தில்தான் வாழமுடியும். "உள்ளே நுழையாதே!" என்ற அறிவிப்பைச் சில இனங்கள் காணும் இடத்திலேயே, "இங்கே நுழைக!" என்ற அறிவிப்பை வேறுசில உயிரி னங்கள் காண்கின்றன.

மீன்கள் அழியக்கூடிய இடத்தில் பறவைகள் நலம் பெற்று வாழ்கின்றன. மரங்கள் அடர்த்தியாக வளர்ந்துள்ள இடத்தில், காளான்கள் மண்டும்; ஏனெனில், காளான் நிழலை நேசிக்கிறது. காளானுக்கு நிழலிடம் காதல்; மரங் களுக்கோ ஒளியிடம் ஈடுபாடு.

உலகில், உயிரினம் எதுவும் வசிக்காத வெற்றிடம் ஒன்றும் இல்லை. ஓர் உயிரினம் பிழைக்கமுடியாத இடத் தில் இன்னென்று பிழைக்கிறது. வடதுருவ, தென்துருவப் பிரதேசங்களிலும், பூமத்தியரேகைப் பிரதேசத்திலும், மலை களின் உச்சியிலும், கடலின் அடியிலும். எங்கு பார்த்தாலும் உயிரினங்கள் தத்தம் இருப்பிடத்தில் வாழ்கின்றன. அவை தம் இருப்பிடத்திலிருந்து நீங்கி இன்னோர் இடத்துக்குச் செல்ல முடியாது.

துருவக் கரடியைக் கொண்டுவந்து அயன மண்டலக் காட்டில் விட்டால், நீராவி ஸ்நானம் செய்தது மாதிரி உடனடியாக இறந்து விடும்; ஏனென்றால், அது ஒரு கம்பளிக் கோட்டை உடுத்திக்கொண்டிருக்கிறது. அந்தக் கோட்டை நீக்க அதனால் முடியாது. மாறாக, அயன மண்டலப் பிரதேசத்தில் வாழும் யானையை ஆர்க்டிக் கடற்கரைப் பகுதிக்குக் கொண்டுபோனால், அது அங்கே குளிரில் விறைத்து மரித்துவிடும். ஏனெனில், குளிக்கப் போகிறவன் மாதிரி அது எப்பொழுதுமே அம்மண நிலையில் சஞ்சரிக்கிறது.

உலகத்தின் பல்வேறு பகுதிகளில் வாழும் பிராணி வகைகள் அனைத்தையும், புல்வெளிகளிலும் காடுகளிலும் இதர இடங்களிலும் வாழும் பிராணிகள் அனைத்தையும், ஒரு சேரப் பார்ப்பதற்கு ஒரே இடம்தான் இருக்கிறது. அதுதான் மிருகக்காட்சிசாலை. அங்கு அந்த விதவிதமான பிராணிகள் சிற்சில அடி தூரத்தில் அடுத்தடுத்து வாழ்கின்றன.

மிருகக்காட்சிசாலையில், தென் ஆப்பிரிக்கா ஆஸ்திரேலியாவுக்கு அண்மையில் உள்ளது; ஆஸ்திரேலியா வட அமெரிக்காவுக்குச் சில அடி தூரத்தில் உள்ளது. உலகம் முழுவதிலுமிருந்து மிருகங்கள் ஒன்றுகூட்டப் பட்டுள்ளன. ஆனால் அவை தாமாக அங்கே வந்து சேரவில்லை. மனிதன்தான் அவற்றை ஒருசேரக் குவித்தான்.

இந்த மிருகங்களின் பராமரிப்புக்காக மனிதன் எப்பாடு படவேண்டி யிருக்கிறது! ஒவ்வொரு பிராணிக்கும் அதற்குப் பழக்கமான சூழ்நிலையை இயன்ற அளவுக்கு உண்டாக்கிக் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஒன்றுக்குக் கடலுக்குப் பதிலாக குளம் ஒன்றை அமைத்துத் தரவேண்டும். இன்னொரு பிராணிக்கு மணற்பாங்கான பாலை நிலத்துக்குப் பதிலாக இருபது அடி நீளமுள்ள சதுரத்தில் மணலைக் கொட்டிப் பரப்பிவைக்க வேண்டியிருக்கிறது. மேலும், இந்தப் பிராணிகள் அனைத்துக்கும் உணவு அளிக்க

வேண்டும்; அவை ஒன்றையொன்று தின்னுது பார்த்துக் கொள்ள வேண்டும். துருவக் கரடியைக் குளிர்ந்த நீரில் குளிப்பாட்ட வேண்டும்; குரங்கைக் கத கதப்பான வெந் நீரில் நீராட்ட வேண்டும். ஒவ்வொரு நாளும் சிங்கத்துக் குத் தேவையான பச்சை இறைச்சி கிடைக்கவேண்டும். கழுகு தன் சிறகுகளைப் பரப்பிக் கொள்வதற்கு இடவசதி பெற்றிருக்க வேண்டும். இந்தப் பிராணிகள் அனைத்தும் தமக்குப் பழக்கமாகிவிட்ட சூழ்நிலையை அடைந்திருக்க வேண்டும்; இல்லாவிடில் அவை இறந்துவிடும்.

நல்லது, மனிதன் எத்தகைய பிராணி? அவன் சமநில வாசியா, காடுவாழ் பிறவியா அல்லது மலைநிலக் குடியா? நாம் காட்டில் வாழும் மனிதனைக் 'காட்டு மனிதன்' என்றும் சதுப்பு நிலத்தில் வாழும் மனிதனைச் 'சதுப்புநில மனிதன்' என்றும் குறிப்பிடுகிறோமா?

இல்லை; அம்மாதிரி குறிப்பிடுவதில்லை!

ஏனென்றால், காட்டில் வாழும் மனிதனால் சமநிலத்தில் வாழமுடியும்; சதுப்பு நிலத்தில் வாழும் மனிதன், காய்ந்த நிலத்துக்குக் குடியேறுவதை மனநிறைவுடன் வர வேற்பான்.

மனிதன் இங்கு அங்கு என்னுதபடி எங்கும் வசிக்கிறான். உலகத்தில் அவன் ஊடுருவிச் செல்லாத இடம் ஒன்றுகூட இல்லை. 'உள்ளே நுழையாதே' என்ற அறிவிப்பு அவனுக் குத் தடைபோடும் இடம் ஏதுமில்லை. வடதுருவப் பிரதேச ஆராய்ச்சியாளரான பாப்பினினும் அவரது கூட்டாளிகளும் மிதக்கும் பனிக்கட்டி மீது ஒன்பது மாதம் வாழ்ந்தனர். செந்தழல்போல் கொதிக்கும் மணற் பாலைநிலத்தின் நடுப் பாகத்துக்குப் போய் வரவேண்டி யிருந்தாலும் அவர்கள் இம்மாதிரி வெற்றிகரமாகப் போய்வந்திருப்பார்கள்.

மனிதன் போய்வர முடியாத இடம் ஏதுமில்லை. அவன் மிகவும் உயரமான மலைச் சிகரங்களது உச்சியை ஏறிப் பார்த் திருக்கிறான்; கடலின் அடியாழத்துக்குச் சென்று வந்தி

ருக்கிருன். சஹாரா பாலைநிலத்தைக் கடந்திருக்கிருன்; பனிக்கட்டிகள் செறிந்த வடதுருவ மண்டலத்தில் ஆராய்ச்சி நடத்தியிருக்கிருன்; பூமியின் குடலைக் குடைந்து உள்ளே சென்று வந்திருக்கிருன்; வான மண்டலத்தில் ஐந்து மைல் உயரத்துக்கும் அப்பால் உள்ள பகுதிக்குப் போய் வந்திருக்கிருன்.

ஆனல், முற்காலத்தில் மனிதன் இந்தச் சாதனைகளுக்கு உரியவனுகச் சிறக்கவில்லை. இன்றுபோல் சுதந்திரமும் திறமும் படைத்திராத அந்தக் காலத்தில், அவன் இந்தக் காரியங்களைச் செய்ய முடிந்ததில்லை.

**உங்களது முன்னேர்களைச் சந்தியுங்கள்!**

லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னல், இன்று போல் ஓக் மரமும் ஆஸ்பன் மரமும் பீச்மரமும் நிறைந்த காடுகள் இருந்ததில்லை, அக்காலத்துக் காடுகளில் வேறு வகைப்பட்ட மரங்கள் இருந்தன, அந்தக் காடுகளில் வசித்த பிராணி இனங்களும் முற்றிலும் வேறுபட்டவையே. அந்தக் காடுகளில் வளர்ந்த புல் பூண்டும் புதர்ச் செடிகளும் கூட வேறு வகைப் பட்டவைதாம். அந்தப் பூர்வீக காலத்துக் காடுகளில், பர்ச் மரமும் லின்டன் மரமும் ஆஷ் மரமும் மிர்டில், லாரல், மாக்னேலியா ஆகிய தாவர வகைகளுடன் அடுத்தடுத்து வளர்ந்தன. வாதுமைவகை மரமும் கொடி முந்திரியும் அக்கம்பக்கக் குடிகளாக விளங்கின. சோர்ந்து தொங்கும் கிளைகளை உடைய அடக்கமான வில்லோவுக்கு அருகில் இலவங்க மரங்கள் தமது ஒளி உமிழும் மலர்களை எடுப்பாகக் காட்டின. இந்த மிகப் பெரிய மரங்களுக்குமுன், வலுமிக்க ஒக் மரங்களே சின்னஞ் சிறியனவாகத் தோன்றின.

காட்டை வீட்டுக்கு ஒப்பிட்ட நமது உவமையைத் தொடர்ந்து கடைப்பிடித்தோமானல், இந்தக் காட்டை ஒரு வீட்டுடன் ஒப்பிட முடியாது; இதனை வானை அளாவும் கட்டிடத்துடன்தான் ஒப்பிடலாம். இந்தக்

கட்டிடத்தின் மேன்மாடங்களில் ஒளியும் ஒலியும் நிறைந்திருந்தன. பேரொளி வீசிய பெரிய மலர்களின் இடையே களிப்பூட்டும் நிறத்துக்குரிய பறவைகள் பறந்தன ; அவை கீச்சென்ற குரலில் கத்திப் பேரொலி செய்தன. குரங்குகள் கிளைகளில் தம்மைச் சமநிலைப்படுத்திக் கொண்டு, மரத்துக்கு மரம் எளிதாகத் தாவிக் குதித்தன.

ஒருவகை வாலில்லாக் குரங்குகள், கிளைகள் வழியே ஓடித் திரிந்தன. அந்தக் கிளைகள் அவற்றுக்குப் பாலம் மாதிரிப் பயன்பட்டன. தாய்க் குரங்குகள் தமது சிசுக்களை மார்பகத்தில் பற்றிப் பிடித்துக்கொண்டு, கடித்து மென்ற கனிகளையும் கொட்டைகளையும் அவற்றின் வாயில் திணித்தன. கொஞ்சம் வயதான குட்டிகள் தத்தம் தாயின் கால்களைப் பிடித்துக்கொண்டு தொங்கின. இந்த வாலில்லாக் குரங்குக் கூட்டத்தின் தலைவனான ரோமமடர்ந்த கிழக்குரங்கு, மரத்தின் உடற்பகுதியில் வேகமாகவும் எளிதாகவும் ஏறியது. மற்ற குரங்குகள் அந்தத் தலைவனைப் பின்பற்றின.

இந்த வாலில்லாக் குரங்குகள் எத்தகையவை ?

அந்தவகைக் குரங்குகளை இன்று நீங்கள் எந்த மிருகக்காட்சிசாலையிலும் காணமுடியாது. மனிதன், சிம்பன்ஸீ, கொரில்லா ஆகிய இனங்களைத் தோற்றுவித்த வாலில்லாக் குரங்கு வகையே அது. பண்டைக் காலத்தில் மரங்களின் மேல் வாழ்ந்த நமது பூர்வீக முன்னோர்கள் இந்த வகையினரே.

நமது மூதாதையர்கள், மரங்கொத்திப் புட்களைப்போல் காட்டின் மேன்மாடங்களில் வாழ்ந்தனர். பிற்காலத்தில் மனிதனாகப் பரிணமிக்கவிருந்த இந்த ஜந்துக்கள், நூற்றுக்கணக்கான அடி உயரத்தில் உள்ள பாலங்களிலும் மாடி முகப்புகளிலும் படியடுக்குகளிலும் சஞ்சரிப்பதைப் போல், மரக்கிளைகளில் நடமாடின. காடுதான் அவர்களது இல்லமாக இருந்தது. அவை மரங்களில் கிளைகள் பிரியும்

இடங்களில் வசதி செய்துகொண்டு அங்கே இரவைக் கழித்தன.

காடு அவர்களது கோட்டையாகப் பயன்பட்டது. பட்டாக் கத்தி போன்ற பற்களையும் குத்துவாள் அளவுக்கு நீளமாக முன்னுல் துருத்திக் கொண்டிருந்த பற்களையும் உடைய புலி வந்தபொழுது, அந்தப் பயங்கரமான பகைவனிடமிருந்து பாதுகாத்துக் கொள்வதற்கு மேற்சொன்ன வாலில்லாக் குரங்குகள் மரங்களின் உயரமான கிளைகளினிடையே ஒளிந்து கொண்டன.

காடு அவர்களது சேமிப்பு விடுதியாகவும் இருந்தது. அவர்கள் உண்பதற்காக, ஏராளமான கனிகளும் கொட்டைகளும் உயரத்திலுள்ள கிளைகளில் தொங்கின.

ஆனுல், அந்தக் காட்டுக் கூரையில் வாழவேண்டுமானுல், அவை அந்தச் சூழ்நிலைக்கு ஏற்ற உடலமைவைப் பெறவேண்டும். கிளைகளை எளிதாகப் பற்றிக்கொள்ள வேண்டும்; மரத்தின் உடற்பகுதியில் கால் தவருது ஓடவேண்டும்; மரத்துக்கு மரம் தாவிக் குதிக்க வேண்டும்; கனியைப் பற்றிப் பறிக்க வேண்டும்; கொட்டையை உடைக்க வேண்டும். எனவே, அவற்றுக்குக் கிளைகளைப் பற்றுவதற்கு ஏற்ற விரல்களும், கூரிய பார்வையும், வலுவான பற்களும் தேவைப் பட்டன.

நமது முன்னேர்கள், ஒரு சங்கிலியால் அல்ல; மூன்று சங்கிலிகளால் காட்டுடன் பிணைக்கப்பட்டிருந்தனர். காட்டுடன் மட்டுமல்ல; காட்டின் உச்சிமாடத்துடன் கட்டிப்போடப் பட்டிருந்தனர். இந்தச் சங்கிலிகளைத் தகர்த்தெறிவதில் மனிதன் எப்படி வெற்றியடைந்தான்? இந்தக் காட்டுப் பிராணி, தன் கூட்டைவிட்டு வெளியே வருவதற்கும், காட்டின் எல்லையைக் கடந்து செல்வதற்கும் எவ்வாறு துணிந்தது?

## அத்தியாயம்—2

# கதைத் தலைவனும் அவனது உறவினரும்

சில தலைமுறைகளுக்கு முன்னுல், கதாசிரியர்கள் தத்தம் கதாநாயகனது வாழ்வையும் சோதனை சாதனைகளை யும் விவரிப்பதில் ஒரு திட்டமான முறையைப் பின் பற்றினுர்கள். ஆரம்பத்திலுள்ள சில அத்தியாயங்களைப் படித்தால், தலைவனையும் அவனது உறவினரையும் பற்றிப் பல செய்திகள் தெரிந்துகொள்ளலாம். தொடக்கத்தி லுள்ள சில பக்கங்களைப் படித்தால், தலைவனது பாட்டி இளம்பருவத்தில் எவ்வாறு ஆடை அலங்காரம் செய்து கொண்டாள் என்பதையும், தலைவனது தாய் திருமண நாளுக்கு முதல் இரவில் என்ன கனவு கண்டாள் என்ப தையும் அறியலாம். அதன்பின் தலைவனது பிறப்பு, அவனுக்கு முதற்பல் முளைத்த சேதி. அவன் முதலில் பேசிய சேதி, நடந்த சேதி, குறும்பு செய்த தகவல் முதலியவை விவரமாக உரைக்கப் பட்டிருக்கும்.

ஏறத்தாழப் பத்து அத்தியாயங்களைப் படித்த பின், கதைத் தலைவன் பள்ளிக்கூடம் சென்று பயிற்சி பெறத் தொடங்கும் விவரம் பேசப்படும். இரண்டாவது பாகத் தின் இறுதியில், தலைவன் காதல் கொண்டிருப்பதைக் குறித்து ஆசிரியர் எடுத்துரைப்பார். மூன்ருவது பாகத்தில் தலைவன் பல்வேறு இடர்ப்பாடுகளைக் களைந்து திருமணம் புரிந்துகொள்ளும் சேதி தெரிவிக்கப்படும். அந்த நவீனம் ஒரு பின்னுரையுடன் முடியும். தலைவனும் அவனது மனைவியும் நரை காணும் வயதினை அடைந்தவர்களாகி, இளஞ் சிவப்புக் கன்னங்களை உடைய தம் பேரப்பிள்ளை இடறி விழுந்துகொண்டு நடக்கக் கற்றுக் கொள்வதைக் கண்டு மகிழ்வதாக அந்தப் பின்னுரையில் சித்திரிக்கப் பட்டிருக்கும்.

இந்தப் புத்தகத்தில் நாம் மனிதனின் வாழ்வையும் சோதனை சாதனைகளையும் பற்றி எடுத்துரைக்கப் போகிறோம். நாம் அந்த நாட்களில் வாழ்ந்த நாவலாசிரியர்களின் தனிசிறந்த உதாரணத்தைப் பின்பற்றுவோம்: நமது கதைத் தலைவனின் முன்னோர்களைப் பற்றியும், அவன் முதன்முதலில் பூமியில் தோன்றியதைப் பற்றியும், அவன் நடக்கவும், பேசவும், சிந்திக்கவும் கற்றுக் கொண்டதைப் பற்றியும், அவனது வாழ்க்கைப் போராட்டங்கள், இன்ப துன்பங்கள், வெற்றி தோல்விகள் ஆகியவற்றைப் பற்றியும் உங்களிடம் எடுத்துரைப்போம்.

துவக்கத்திலேயே, எங்களைப் பேரிடர்கள் எதிர்ப்படுகின்றன என்ற உண்மையை நாங்கள் ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும்.

நம் தலைவனது பாட்டியை நாங்கள் எப்படி வர்ணிப்பது? எந்த வாலில்லாக் குரங்குப் பாட்டியின் நேரடியான வழித்தோன்றலாக நம் தலைவனை மனிதன் விளங்குகின்றானோ, அந்தக் குரங்குப் பாட்டியின் இனம் பல்லூழிக் காலமாக உலகில் இல்லாதபொழுது, அவளை நாங்கள் எப்படி வர்ணிக்க முடியும்? அவளது உருவப் படமும் எங்களிடம் இல்லை. ஏனென்றால், வாலில்லாக் குரங்குகளுக்கு ஓவியக்கலை தெரியாது. முந்தைய அத்தியாயத்தில் நம்மால் அறிமுகம் செய்துவைக்கப்பட்ட முன்னோர்களுடன் ஏதாவது தொடர்பு கொள்ள வேண்டுமானால், பழம்பொருட்காட்சி சாலைக்குத்தான் செல்ல வேண்டும். அங்கும் அந்த மூதாதையரின் முழு உருவம் ஏதும் கிடைக்காது. அந்த மூதாதையர்களது எச்சங்களாக நமக்குக் கிடைத்திருப்பன வெல்லாம், சில எலும்புகளும் இரண்டு கைநிறையக் கொள்ளும் பற்களும் தாம். இவை ஆப்ரிக்காவிலும் ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் வெவ்வேறு இடங்களில் கண்டெடுக்கப்பட்டவை.

நாம் பல்லில்லாத பொக்கைவாய்ப் பாட்டிமார்களைப் பார்த்திருக்கிறோம். இங்கே நம் தலைவனது பாட்டியின் பற்கள் கிடைத்திருக்கின்றன; பாட்டியைத்தான் காண வில்லை.

மனிதன் அயனமண்டலக் காடுகளை விட்டு வெளியே வந்து பாதங்களை ஊன்றிநிற்கத் தொடங்கிப் பல கால மான பின்பும், இன்றும், அவனது நெருங்கிய உறவினர் களான கொரில்லாக்களும் சிம்பன்ஸீகளும் கிபன்களும் ஊராங் ஊட்டான்களும் இயற்கைவாழ் பிராணிகளாகவே காட்டில் இருக்கின்றன. மனிதனுக்குத் தன் எளிய உறவினர்களைப்பற்றி நினைப்ப தென்றாலேயே கொஞ்சம் வெறுப்பாகத்தான் இருக்கிறது. சில சமயங்களில் அவன் இந்த உறவுமுறையை மறுத்துப் பேசவும் முயல்கிறான். மனிதன், சிம்பன்ஸீ இருவரும் ஒரே தாய்வழி வந்தவர் கள் என்ற உண்மையைச் சுட்டுவதையே சிலர் வசை யாகக் கருதுகிறார்கள்.

இதைப்பற்றிச் சில ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு விசாரணை நடந்தது. பள்ளி ஆசிரியர் ஒருவர், மனித னுக்கும் வாலில்லாக் குரங்குக்குமுள்ள உறவுமுறையைப் பற்றித் தம் மாணவர்களிடம் சொல்லத் துணிந்தாரென்ப தற்காக, அவர் நீதிமன்றத்தில், கூண்டில் நிறுத்தப்பட்டு, விசாரணை செய்யப்பட்டார்.

"நாங்கள் குரங்குகள் அல்ல. எங்களை வானரங்க ளாக்குவதை அனுமதியோம்"

என்று பொறித்த கைப்பட்டைகளை அணிந்துகொண்டு பல கனவான்கள் தெருக்களில் நடந்தார்கள்.

பாவம்! பரிவுக்குரிய பள்ளி ஆசிரியருக்கு இந்த முட் டாள்களைக் குரங்குகளாக்கும் எண்ணம் லவலேசமும் கிடையாது. ஆயினும் மூடஜனங்கள் அவர்மீது குற் றம் சாட்டி அவரைத் திணறடித்தார்கள். நீதிபதியும்,

அச்சுறுத்தும் வகையில் குறுக்குக் கேள்விகளைக் கேட்டு அந்த ஆசிரியரைப் படுத்திவைத்தார்.

''நீதிபதி புத்திசுவாதீனத்தை இழந்துவிட்டார் போலிருக்கிறது! மனிதனுக்கும் வாலில்லாக் குரங்குக்கு முள்ள உறவைச் சொல்வது குற்றமானால், பெருக்கல் வாய்ப்பாட்டைப் போதிப்பதும் குற்றமென்று கூறிக் கூண்டிலேற்றலாமே!'' என்று அந்தப் பள்ளிஆசிரியர் அப்பொழுது நினைத்திருக்க வேண்டும்.

சட்டத்துக்கு உரிய சகல வழிமுறைகளுடனும் விசாரணை நடைபெற்றது. சாட்சிகள் தமது சாட்சியத்தைத் தெரிவித்த பின், பிரதிவாதியிடம் வாக்குமூலம் கோரப்பட்டது. கடைசியில், நீதிபதி தம் தீர்ப்பை அளித்தார் :

(1) மாந்தருக்கும் வாலில்லா வானரருக்கும் எத்தகைய உறவுமில்லை என்பது மெய்ப்பிக்கப் பட்டிருக்கிறது.

(2) குற்றவாளியின் மீது நூறு டாலர் அபராதம் விதிக்கப்படுகிறது.

இவ்வாறு (அமெரிக்க ஐக்கியநாடுகளி லுள்ள) டென்னஸி மாகாணத்தின் நீதிபதிகளில் ஒருவர், டார்வினும், இதர விஞ்ஞானிகளாலும் மனிதனது தோற்றத்தைப் பற்றிக் கண்டுபிடிக்கப்பட்ட விஞ்ஞானம் முழுவதையும் ஒழித்துவிட்டார்!

ஆனால் உண்மைகள், உறுதிப் பொருட்கள். அவற்றை நீதிமன்ற ஆணைகள் மூலம் நீக்கமுடியாது.

மனிதனுக்கும் வாலில்லாக் குரங்குக்கும் உள்ள உறவை நிரூபிக்கும் ருசுக்களைக் கொண்டு இந்தப் புத்தகத்தையே நிரப்பி விடலாம். ஆனால் அந்த விஞ்ஞானரீதியான ருசுக்கள் இல்லாமலேயே, சிம்பன்ஸீயையோ ஊராங் ஊட்டானையோ பார்த்துள்ள எவருக்கும் இந்த உறவு முறையை உணர்ந்துகொள்ள முடியும்.

## நமது உறவினர்கள்: ரோஸா, ராபேல்

சில ஆண்டுகளுக்கு முன்னல், ரோஸா, ராபேல் என்ற இரண்டு சிம்பன்ஸீகள் கோடூஹி (இப்பொழுது இதன் பெயர் பாவ்லோவ்) கிராமத்திலுள்ள ஐவான் பெட்ரோவிச் பாவ்லோவ் என்ற விஞ்ஞானியின் ஆராய்ச்சி நிலையத்துக்குக் கொண்டுவரப்பட்டன.

இரங்கத்தக்க நிலையிலுள்ள காடுவாழ் உறவினர்கள் தம்மைக் காணவரும்பொழுது, மாந்தர்கள் மதிப்புக் கொடுத்து நடப்பது வழக்கமில்லை. அவை வந்தவுடன் முதற் காரியமாக அவற்றைக் கூண்டில் அடைக்கிருர்கள். ஆனல் பாவ்லோவின் ஆராய்ச்சிசாலைக்கு ஆப்பிரிக்கக் காடுகளிலிருந்து வந்த இந்த விருந்தாளிகட்கு, மிகச் சிறந்த வரவேற்புக் கிடைத்தது. படுக்கையறை, போஜன அறை, நீராடும் அறை, அலுவலகம், விளையாடும் அறை ஆகியவற்றை உடைய கட்டிடப் பகுதி அவற்றுக்கென்று ஒதுக்கி விடப்பட்டது. படுக்கையறையில் இரண்டு சொகுசான படுக்கைகள் இருந்தன. ஒவ்வொரு படுக்கையின் தலை மாட்டிலும் ஒரு சிறு மேஜை போடப்பட்டிருந்தது. போஜன மேஜையின்மீது வெண்மையான துணி விரித்திருந்தது. நிலையறைப் பெட்டியில் தீவனங்கள் நிறைய இருந்தன.

அவை நரர்களல்ல; வானரங்களே என்பதை நினைவூட்டக் கூடியதாக எதுவும் அந்தக் கவர்ச்சியான இல்லத்தில் இல்லை. அவை உண்பதற்குப் பயன்படுத்தும் பொருட்டு, உணவுமேஜையில் கத்திகளும் முள்கரண்டிகளும் தேக்கரண்டிகளும் வைக்கப்பட்டன. அவற்றின் படுக்கைகளில் விரிப்புகளும் போர்வைகளும் தலையணைகளும் இருந்தன. விருந்தாளிகள் எப்பொழுதுமே முறை திறம்பாது நடந்துகொண்டன ரென்று சொல்லமுடியாது என்பது மெய். பகல் உணவைப் புசிக்கும்பொழுது, அவை கரண்டிகளை வைத்துவிட்டு, தட்டிலிருந்த களியை

நக்கி உண்பதுமுண்டு. இரவில் தலையணை மீது தலைவைத்துப் படுப்பதற்குப் பதிலாகத் தலைமீது தலையணையை வைத்துக் கொள்வதும் உண்டு.

ஆனால், ரோஸாவும் ராபேலும் முற்றிலும் மனிதர்களைப் போல் நடந்துகொள்ளாவிட்டாலும், கிட்டத்தட்ட மனிதர் மாதிரி நடந்துகொண்டன. உதாரணமாக, மனிதரைப்போல் ரோஸாவும் நிலையறைப் பெட்டியின் சாவிகளைப் பயன்படுத்தியது. அந்தச் சாவிக் கொத்தைக் காவற்காரன் வாடிக்கையாகத் தன் சட்டைப் பையில் வைத்திருந்தான். ரோஸா அடிக்கடி சப்தம் செய்யாது அவன் பின்னால் வந்து, சட்டைப் பையில் கையை நுழைத்துச் சாவிக் கொத்தை எடுத்தது. போஜன அறைக்கு விரைந்து சென்று நிலையறைப் பெட்டியின் கண்ணாடிக் கதவுகளுக்கு முன்னால் ஒருநாற்காலி மீது அமர்ந்து கொண்டது. கண்ணாடிக் கதவுகளுக்குப் பின்னால் தட்டுகளில் கொடிமுந்திரிப் பழங்களும் இதர கண்கவர் கனிகளும் இருந்தன. ரோஸா கவனமாகத் திறவுகோலைச் சாவித் துவாரத்தில் நுழைத்து, விரைவாகத் திருப்பிக் கதவைத் திறந்தது; கொடிமுந்திரிக் கனிக்குலையைக் கையிலெடுத்தது.

ராபேல்தான் சளைத்ததா ? இல்லை. அது பாடம் பயில்வதை நீங்கள் நேரில் பார்க்கவேண்டும். பழக்கூடையும் வெவ்வேறு அளவுகளிலுள்ள சில கட்டைகளுமே அதன் பயிற்சிக் கருவிகள். அந்தக் கட்டைகள் குழந்தையின் விளையாட்டுக் கட்டைகளைவிடப் பன்மடங்கு பெரியவை. அவற்றில் சின்னஞ் சிறியதாயிருந்த கட்டையே 'ஸ்டூல்' அளவு உயரமாயிருந்தது. பழக்கூடை கூரையிலிருந்து எட்டாத உயரத்தில் தொங்கியது. அதை எப்படி அடைவது ? அதிலுள்ள பழங்களை எப்படிப் பெற்றுப் புசிப்பது என்பதே ராபேல் தீர்வு காணவேண்டிய பிரச்னையாக இருந்தது.

முதலில், இந்தக் கடினமான யுக்திக் கணக்குக்கு ராபேலால் விடைகாண முடியவில்லை. அது காட்டு இல் லத்தில் இருந்தபொழுது, மரத்தில் ஏறித் தான் விரும்பிய பழத்தைப் பறித்துத் தின்றது. ஆனால் இங்கே பழம் மரக் கிளையிலிருந்து தொங்கவில்லை. அது எட்டாத தூரத்தில் காற்றில் அசைந்தாடிக் கொண்டிருந்தது. ராபேல் ஏறு வதற்குக் கட்டைகளைத் தவிர வேறு ஒன்றுமில்லை. ஆனால் மிகப்பெரிய கட்டைமீது ஏறிநின்றபொழுதும், ராபே லுக்குக் கூடை எட்டவில்லை.

கட்டைகளைத் திருப்பித்திருப்பி வைத்துக் கொண் டிருந்த பொழுது, ராபேல் தற்செயலாக ஒரு விஷயத்தைக் கண்டுபிடித்தது. கட்டைகளை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கினால், பழக்கூடையை நெருங்க முடியுமென்பதே அந்தக் கண்டுபிடிப்பு. கொஞ்சம் கொஞ்சமாக அது முன்னேறியது. முதலில் மூன்று கட்டைகளையும் பிறகு நான்கு கட்டைகளையும் இறுதியில் ஐந்து கட்டைகளையும் அடுக்கியது. இது அதற்கு எளிதான காரியமாயில்லை. அந்தக் கட்டைகளைத் தாறுமாறாக அடுக்கமுடியவில்லை. அவற்றை முறையாக அடுக்கவேண்டும். மிகப் பெரிய கட்டையை அடியில் வைத்து, அதைவிடக் கொஞ்சம் சிறியதை அதன்மேல் வைக்கவேண்டும். இவ்வாறு சின்னஞ் சிறியதை உச்சியில் வைக்கும் வரையில், வரிசைக் கிரமமாக வைக்கவேண்டும்.

மீண்டும் மீண்டும், சின்னக் கட்டைமீது பெரிய கட் டையை வைக்கும் தவற்றினையே அது செய்தது. அதனால் மீண்டும் மீண்டும் அடுக்கப்பட்ட கட்டைகள் நிலைகொள் ளாமல், அச்சுறுத்தும் வகையில் ஆடின. அந்த அடுக்குத் தலைகீழாக விழுந்துவிடுமென்றும் அத்துடன் ராபேலும் விழுமென்றும் தோன்றியது. ஆனால் அம்மாதிரி அவப்பேறு நிகழவில்லை. ஏனெனில், ராபேலிடம் 'குரங்கின் இலாகவம்' இருந்தது.

கடைசியில் அது யுக்திக் கணக்கைப் புரிந்து கொண்டது. ஏழு கட்டைகளையும் ஒன்றன் மேலொன்ருக அளவுக் கிரமத்தில் அடுக்கியது. அந்தக் கட்டைகளுக்கு எண் குறிப்பிட்டிருந்து அந்த எண்களைப் படித்துப் புரிந்து கொண்டால் எப்படிப் பிழையின்றி அடுக்குமோ, அம் மாதிரி அடுக்கியது.

கடைசியில் அது பழக்கூடையை அடைந்தது. அங்கே, ஆடி அசைந்த அடுக்கின்மீது அமர்ந்து, பாடுபட்டதன் பலனை, கூடையிலிருந்த கனிகளை, உண்டது.

வேறு எந்தப் பிராணி இவ்வாறு மானிடனுக்குரிய வழியில் நடந்துகொண்டிருக்க முடியும்? நாயினுல் இம் மாதிரி, கட்டைகளை முறையாக அடுக்க முடியுமா? நாய் மிக்க அறிதிறன் படைத்த பிராணி என்ருலும், அதனுல் இந்தக் காரியத்தைச் செய்யமுடியாது.

மனிதனைப்போல் ராபேல் வேலை செய்வதைக் காணும் பொழுது வியப்பாக இருந்தது. அது ஒரு கட்டையைப் பொறுக்கி யெடுத்துத் தன் தோள்மீது வைத்துக்கொண்டு, கரத்திஞல் அந்தக் கட்டையைச் சமனப் படுத்திக்கொண்டு, அடுக்க வேண்டிய இடத்துக்குக் கொண்டுசென்றது. அந்தக் கட்டை பொருத்தமாக இல்லையெனில், அதைக் கீழே போட்டுக்கொண்டு, சிந்தனை செய்வதைப் போல் அக்கட்டையின்மீது அமர்ந்திருந்தது. சில விஞடி நேரம் ஓய்ந்திருந்தபின் அது மீண்டும் தன் வேலையைத் தொடங் கியது; இந்தத் தடவை, முன்னுல் செய்த தவறுகளைத் திருத்திக் கொண்டது.

## சிம்பன்ஸியை மனிதஞக மாற்ற முடியுமா ?

நன்று, சிம்பன்ஸீ மனிதனைப் போல நடக்கவும் பேசவும் சிந்திக்கவும் உழைக்கவும் கற்றுக்கொள்ள முடியுமா ?

அம்மாதிரி பயிற்றுவிப்பதில் வெற்றி காணவேண்டு மென்று ஒரு மிருகப் பயிற்சியாளன் கனுக் கண்டான்.

அவன் மைமஸ் என்ற பெயருக்குரிய சிம்பன்ஸிக்குக் கற்பிப்பதற்கு மிகவும் பாடுபட்டான். மைமஸ் மிகுந்த அறிதிறன் படைத்த மாணவனுகத்தான் இருந்தது. அது தேக்கரண்டியை உபயோகிக்கவும், கழுத்தைச் சுற்றித் துண்டைக் கட்டிக்கொள்ளவும் கற்றுக் கொண்டது. மேஜைக்கு முன் நாற்காலியில் அமர்வதற்கும் மேஜை விரிப்பை மாசு படுத்தாமல் சூப்பைக் குடிக்கவும் அறிந்து கொண்டது. குன்றுச் சரிவின் இறக்கத்தில் சறுக்கு வண்டியில் செல்வதற்குக் கூட அது கற்றுக்கொண்டது.

ஆனாலும், அது மனிதனுகவில்லை.

இதன் காரணத்தைப் புரிந்துகொள்வது எளிது. சிம்பன்ஸியின் உடலமைப்பு மானிட உடலமைப்பிலிருந்து வேறுபட்டிருக்கிறது. அதன் கைகள் மனிதன் கைகளிலிருந்து வேறுபட்டவை. அதன் கால்களும் பாதங்களும் வித்தியாசமானவை. அதன் மூளையும் வேறு வகைப்பட்டது. அதன் நாக்கும் அப்படியே.

சிம்பன்ஸியின் வாய்க்குள் என்ன இருக்கிறதென்று பாருங்கள். ஆம், கவனமாகப் பார்க்கவேண்டும்; ஏனெனில் சிம்பன்ஸிகள் செம்மையாகக் கடித்துவிடுகின்றன. நாக்கு நன்ருகப் புழங்குவதற்குக் கூட சிம்பன்ஸியின் வாயில் இடமில்லை என்பதை நீங்கள் பார்த்தறிய முடியும். அங்கு உள்ள சிறிய இடத்தையும் அதன் பெரிய பற்கள் அடைத்துக்கொண்டு விடுகின்றன.

நாக்கு தன்னிச்சையாகப் புழங்குவதற்கு அதன் வாயில் இடமில்லாததால், அது ஒருநாளும் பேச்சுக் கலையைப் பயிலமுடியாது. மனிதன் பேசும்பொழுது அவனது நாக்கு பல சிக்கலான வித்தைகளைச் செய்ய வேண்டியிருக்கிறது. அது வில்லாக வளைகிறது, நடுங்குகிறது, வாயின் மேலண்ணத்தை மோதுகிறது, தொண்டையிலிருந்து ஒலி வெளிவரவேண்டுமென்பதற்காக

மேலண்ணத்தைத் தொட்டபின் பின்வாங்குகிறது. முன்னேக்கி இயங்கி முன்னிலைப் பற்களை அழுத்துகிறது. இத்தனைக் கழைக்கூத்தாடி வித்தைகளுக்கும் இடம் இருக்கவேண்டும். சிம்பன்ஸீயின் வாயிலோ, அடைபடாத இடம் மிகச்சிறிது.

மனிதனைப்போல் சிம்பன்ஸீக்குத் தன் கைகளால் உழைப்பது சாத்தியமா? இல்லை. அம்மாதிரி வினையாற்ற முடியாது. ஏனென்றால், சிம்பன்ஸீயின் கைகள் வேறு; மனிதனின் கைகள் வேறு. சிம்பன்ஸீயின் கட்டை விரல் அதன் சுண்டு விரலைக் காட்டிலும் சிறியது. நம் கைகளில் இருப்பதைப்போல், அதற்குச் சுண்டுவிரல் கட்டை விரலிலிருந்து அவ்வளவு தூரத்தில் இல்லை; கட்டை விரல் தான், ஐந்து விரல்களில் அதிகமான பயன்தரும் விரலாகும். நாம் கையென்று குறிப்பிடும் ஐந்து தொழிலாளர் படைக்குக் கட்டைவிரலே மேலாள். கட்டை விரலால் வேறு எந்த விரலுடனும் ஜோடி சேர முடியும்; நான்கு விரல்களோடும் ஒரே சமயத்தில் கூட்டுச்சேர முடியும். அதனுல்தான் நமது கைகளால் பல்வேறு கருவி வகைகளைத் திறமையாக ஆள முடிகிறது.

சிம்பன்ஸீயின் கையோ, மனிதனின் கையைவிட அதிகமாக, மனிதனின் பாதத்தை ஒத்திருக்கிறது. சிம்பன்ஸீ மரத்திலிருந்து பழத்தைப் பறிக்க முயலும்பொழுது, அது அடிக்கடி தன் கைகளால் கிளையைப் பற்றிக்கொண்டு பாதங்களால் பழத்தைப் பற்றிக்கொள்கிறது. அது தரையில் நடக்கும்பொழுதோ, தன் கைகளைத் தரையில் ஊன்றி ஆதாரம் தேடுகிறது. அதாவது, அது அடிக்கடி தன் பாதங்களைக் கைகளாகவும் கைகளைப் பாதங்களாகவும் பயன்படுத்துகிறது.

மனிதன் கைகளுக்குப் பதிலாகப் பாதங்களையும் பாதங்களுக்குப் பதிலாகக் கைகளையும் பயன்படுத்த முயன்ருல், அவனுல் எவ்வளவு வேலை செய்ய முடியுமென்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

மேலும், சிம்பன்ஸீயின் நாக்கு, பாதங்கள், கரங்கள் ஆகியவற்றின் அமைப்புவேறுபாட்டைத் தவிர, இன்னெரு மிக முக்கியமான உண்மையையும், சிம்பன்ஸீயை மனிதனுக்க முயலும் மிருகப்பயிற்சி வல்லுனர்கள் மறந்து விடுகின்றனர். சிம்பன்ஸீயின் மூளை மனிதனது மூளையைவிடச் சிறியது என்பதையும், அதன் மடிப்புகள் மனிதனது மூளையின் மடிப்புகளைவிட எண்ணிக்கையில் குறைவு என்பதையும் அவர்கள் மறந்து விடுகின்றனர். வாலில்லாக் குரங்கு மனிதனுவதற்கு லட்சக் கணக்கான ஆண்டுகளாயிற்று. எனவே, சிம்பன்ஸீயின் மூளை அமைப்பு மானிடனின் மூளை அமைப்பிலிருந்து வேறு பட்டிருப்பதாலேயே, சிம்பன்ஸீக்கு மனிதனைப்போல் சிந்திப்பதற்குக் கற்றுக்கொடுக்க முடியாது.

சிம்பன்ஸீகளின் குழப்பமான செயல்கள், அவற்றின் மூளை குழப்பமாகச் செயல்படுவதைத் தெட்டத் தெளிவாக வெளிப்படுத்துகின்றன. மாருக, மனிதனது மூளை முறையாகவும் ஒருநிலைப்பட்ட வகையிலும் செயல் படுகிறது.

எனினும், தன் பிறப்பகமான காட்டில் தன் வாழ்வை நடத்துவதற்குத் தேவையான அறிதிறனையும் அமைப்பையும் சிம்பன்ஸீ பெற்றிருக்கிறது. லட்சக்கணக்கான ஆண்டுகளில், அது இவ்வாறு தன் சிறிய உலகில் வாழ்வதற்கேற்ற முறையில் தன்னைச் சீரமைத்துக் கொண்டிருக்கிறது.

ஒரு தடவை, ரோஸாவையும் ராபேலையும் படம் பிடிப்பதற்காக ஒரு சலனப்பட டைரக்டர் வந்தார். அவை தம் இல்லத்துக்கு வெளியே தம்மிச்சைப்படி விளையாடும்பொழுது ஒரு படம் எடுக்கவேண்டுமென்று அவர் வற்புறுத்தினர். எனவே, அவை வெளியே விடப்பட்டன. அவை சுதந்திரம் அடைந்தவுடன், அந்தக் கணத்திலேயே, அண்மையிலிருந்த மரத்துக்குப் பாய்ந்து

சென்றன. அதன் அடி மரத்தில் ஏறி, மகிழ்ச்சி மிகுதியால் பற்களை நெறுநெறெனக் கடித்துக்கொண்டு கிளைக்குக் கிளை பாய்ந்தன. அந்த வசதிமிகுந்த சொகுசான இல்லத்திலிருப்பதைக் காட்டிலும், மரத்தின் மீது இருப்பதையே அவை பெரிதும் விரும்பின.

சிம்பன்ஸி, ஆப்பிரிக்காவிலுள்ள தன் பிறப்பகத்தில், காட்டின் உச்சிமாடத்தில் வாழ்கிறது. அது அங்கே கிளைகளிடையே தன் வீட்டைக் கட்டிக்கொள்கிறது. பகைவர்கள் வந்தால் அது மர உச்சிகளில் தஞ்சம் அடைகிறது. அதற்குத் தேவைப்படும் உணவான பழங்களும் கொட்டைகளும் மரங்களில் கிடைக்கின்றன. அது மரத்தில் வாழ்வதற்கே பழகிவிட்டபடியால், பூமியில் ஓடுவதைவிட நன்றாக மரங்களின் உடற்பகுதிகளில் ஓடுகிறது. மரங்களில்லாத இடத்தில் நீங்கள் ஒரு நாளும் சிம்பன்ஸீகளைக் காணமுடியாது.

ஒரு தடவை, ஆப்பிரிக்காவிலுள்ள காமரூன்ஸுக்கு ஒரு விஞ்ஞானி சென்றார். சிம்பன்ஸீகள் தமது பிறப்பகங்களில் எவ்வாறு வாழ்கின்றன என்பதைக் கவனித்து அறிவதற்கே அவர் சென்றார். அவர் பன்னிரண்டு சிம்பன்ஸீகளைப் பிடித்தார். அவை தமக்கு இயல்பான சூழ்நிலையில் வாழவேண்டுமென்பதற்காக, அவர் அவற்றைத் தன் பண்ணைக்கு அருகிலிருந்த காட்டில் விட்டுவைத்தார். அவை ஓடிவிடாமலிருக்கவேண்டுமென்பதற்காகக் கண்ணுக்குத் தெரியாத ஒரு பெரிய கூட்டைச் செய்தார். ரம்பம், கோடரி ஆகிய இரண்டே இரண்டு கருவிகளைக் கொண்டு இந்தக் கூடு கட்டப்பட்டது. அவர் என்ன செய்தார்? கணிசமான அளவுக்குக் காட்டை வைத்துக்கொண்டு, அதைச் சுற்றிலும் குறிப்பிடத்தக்க தூரத்துக்கு மரமே இல்லாமல் செய்தார். இவ்வாறு சுற்றுப்புறக்காடு அழிக்கப்பட்டவுடன், பெரிய திறந்த வெளியின் இடையே தீவு மாதிரி காடு இருந்தது. அவர் சிம்பன்ஸீகளை இந்தத் தீவில்தான் விட்டுவைத்தார்.

அவரது கணிப்புப் பிசகவில்லை. சிம்பன்ஸீ காடுவாழ் பிராணி. எனவே, அது தன்னிச்சையாகக் காட்டிலிருந்து நீங்காது. துருவப் பிரதேசக் கரடியைப் பாலைநிலத்தில் குடியேற்றுவது எப்படி அசாத்தியமோ, அதைப்போலவே சிம்பன்ஸீயை மரமில்லாத இடத்தில் குடியேறச் செய்வது அசாத்தியமாகும்.

நல்லது. சிம்பன்ஸீயால் காட்டைவிட்டு வெளிவர முடியாதென்றால், அதன் உறவினனான மனிதனால் மட்டும் எப்படி வெளிவர முடிந்தது?

## கதாநாயகன் நடை பழகுகிறான்

நமது காட்டுமனிதன் தன் காட்டுக் கூட்டை விட்டு ஒரு நாளிலோ ஓர் ஆண்டிலோ வெளியேறவில்லை. மனிதன் காடு நீங்கி மரமில்லாத சமவெளிக்கு வருவதற்காக சுதந்திரத்தைப் பெறுவதற்குள் லட்சக்கணக்கான வருஷங்கள் உருண்டோடிவிட்டன.

மரங்களின் உச்சியிலிருந்து இறங்கிக் கீழேவந்து பூமியில் நடக்கக் கற்றுக்கொண்டதே, காட்டு வாழ்வுப் பிணைப்பை முறிப்பதற்கு மனிதன் எடுத்த முதல் நடவடிக்கையாகும்.

இன்றுகூட, மனிதனுக்கு நடை பழகுவதென்பது எளிதான விஷயமாயில்லை. சிறு குழந்தைகளுக்கான பள்ளிக்கூடத்துக்குச் சென்றுவந்தவர்கள், அதில் 'ஊர்ந்து செல்வோருக்கென்று தனி வகுப்பு இருப்பதைப் பார்த்திருப்பார்கள். ஊர்ந்து செல்வோர் எனப்படுவோர், ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்குத் தவழ்ந்து செல்வதற்குக் கற்றுவிட்ட குழந்தைகள். ஆனால் அவர்களுக்கு நடக்கத் தெரியாது. ஊர்ந்துசெல்வோர் வகுப்பிலுள்ள குழந்தை நடந்துசெல்வோர் வகுப்புக்குப் போவதற்குள் பல மாதங்கள் ஆகிவிடுகின்றன. பூமியில் கை ஊன்றாமலும், சுவரையோ வேறு சாதனத்தையோ பிடித்துக் கொள்ளாமலும் நடப்பதென்பது எளிதான காரியமல்ல. சைக்கிளில்

சவாரி செய்வதைக் கற்பதைவிடவும் அது பன்மடங்கு கஷ்டமானதாகும்.

ஆனால், நம் மூதாதையர்கள் நடை பழகுவதற்காகப் பல்லாயிரம் ஆண்டு பாடுபட்டதுடன் ஒப்பிட்டால், குழந்தை சிலமாதகாலம் நடக்கப் படித்துக் கொள்வதற்காக எடுக்கும் முயற்சி ஒன்றுமில்லை யென்னலாம். நம் மூதாதையர்கள் மரத்து உச்சியில் வாழ்ந்தபோதும், சில சமயங்களில் பூமிக்கு வந்து சிறிதுநேரம் தங்கினரென்பது உண்மைதான். அவை சில சமயங்களில் கைகளை ஊன்றாமலேயே, பின்னங்கால்களால் ஒரு சில அடிகள் எடுத்து வைத்திருக்கலாம். சிம்பன்ஸி அம்மாதிரி சில சமயங்களில் செய்கிறதல்லவா ?

ஆனால் இரண்டு மூன்று தடவை அடி எடுத்து வைப்பது வேறு; ஐம்பது அல்லது நூறு தடவை அடி எடுத்து வைப்பது வேறு. பிந்தையதுக்குப் பிடிவாதமான முயற்சி தேவை; நாட்பட்ட முயற்சி தேவை. நமது மூதாதையர்கள் நான்குகால் பிராணிகளாகவே இருந்திருக்க முடியும். ஆனால், அப்படி இருந்திருந்தால் அவை மனிதர்களாகப் பரிணமித்திருக்க முடியாது. மனிதர்களானபின் அவர்கள் தம் கைகளை நடப்பதற்கு உபயோகிக்கத் தேவையில்லை. அப்பொழுது அந்தக் கைகளை வேறு பல பணிகளில் பயன் படுத்த முடிந்தது.

## விடுதலை பெற்ற கைகள் உழைப்புக்குப் பயன் படுகின்றன.

நமது முன்னோர்கள் மரங்களில் வாழ்ந்த பொழுதே, பாதங்களைப் போலல்லாமல் வேறு வழியில் கைகளைப் பயன்படுத்துவதற்குக் கற்றுக் கொண்டனர். அவர்கள் பழத்தையும் கொட்டையையும் பறித்தார்கள். அவர்கள் கைகளாலேயே கிளைகள் பிரியும் இடங்களில் தம் வீடுகளைக் கட்டிக் கொண்டனர்.

பழம் அல்லது கொட்டையைப் பறித்து எடுக்கக் கூடிய கையால், கல் அல்லது கம்பையும் எடுக்க, முடியும்.

கல் அல்லது கம்பு கையில் கிடைத்துவிட்டால், கை முன்னைவிட நீளமாகவும் வலுவானதாகவும் ஆகிவிட்ட மாதிரி பயன்கிடைக்கிறது.

பல்லால் உடைக்கமுடியாத கடினமான ஓட்டைக் கல்லால் உடைத்து. உள்ளேயிருக்கும் கொட்டையை எடுக்கலாம். கம்பினைக் கொண்டு உண்ணத்தக்க கிழங்குகளைத் தேடிப் பூமியைத் தோண்ட முடியும்.

இவ்வாறு, கொஞ்சம் கொஞ்சமாக, நமது முன்னோர் புதிய பொருட்களைத் தமது உணவுப் பட்டியலில் சேர்த்துக் கொண்டனர். பறவைகளும் சுண்டெலிகளும் அகழெலிகளும் வழக்கமாகத் தின்றவற்றை நம் மூதாதையர் உட்கொள்ளத் தொடங்கினர். ஆரம்பத்தில், காட்டிலிருந்த கனி கொட்டைகளைக் குரங்குக் கூட்டங்கள் காலி செய்து விட்டதால் வழக்கமான் உணவுக்குத் தட்டு ஏற்பட்ட பொழுதே நம் முன்னோர்கள் இத்தகைய உணவு வகைகளை உட்கொண்டனர். ஆனால் நாளாவட்டத்தில், அவர்களுக்கு இந்தப் புதிய உணவு பழகிவிட்டதால், அவர்கள் அடிக்கடி இந்த உணவைத் தேடுவதற்காக மரத்திலிருந்து கீழே இறங்கி வந்தனர். அவர்கள் கம்புகளது உதவியால் பூமியைத் தோண்டிக் கிழங்குகளை எடுத்தனர். கல்லைக் கொண்டு அடிமரங்களின் பட்டைகளை உடைத்தெடுத்து. அவற்றினுள் இருந்த (பூச்சிகளது) லார்வாவை எடுத்துப் புசித்தனர்.

உழைப்புக்குக் கையைப் பயன்படுத்த வேண்டுமானால் அதை நடப்பதற்கான பணியில் ஈடுபடுத்த முடியாது. கைகள் உழைப்பில் ஈடுபட ஈடுபட, பாதங்கள் நடந்து செல்லும் பணியை அதிகமாக மேற்கொள்ளவேண்டிய தாயிற்று.

ஆக, கைகள் பாதங்களை நடைப்பணியில் ஈடுபடுத்தின. பாதங்கள், கைகள் உழைப்புப் பணியில் ஈடுபடுவதற்கான உரிமையை அளித்தன. இவ்வாறாக, ஒரு புதியவகைப்

பிராணி உலகில் தோன்றியது. இது பின்னங்கால்களால் நடந்தது; முன்னங் கால்களை உழைப்பில் ஈடுபடுத்தியது.

இது இன்னமும் மிருகம் மாதிரியே தோற்றம் அளித்தது. ஆனல் இது கம்பையோ கருங்கல்லேயோ ஆளும் வகையை நீங்கள் கண்டிருந்தால், 'இந்த மிருகம் மனிதனுக மாறத் தொடங்கிவிட்டது' என்று உடனே சொல்லியிருப்பீர்கள். ஏனெனில், மனிதனுல் மட்டுமே கருவிகளைப் பயன்படுத்த முடியும்; மிருகங்களுக்குக் கருவிகள் ஏதுமில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள்.

அகழெலி பூமியைத் தோண்டும்பொழுது, அது மண்வெட்டியைப் பயன்படுத்துவதில்லை; தன் பாதங்களையே உபயோகிக்கிறது. சுண்டெலி மரத்தைக் குடையும் பொழுது அது கத்தியை உபயோகிப்பதில்லை; தன் பற்களையே பயன்படுத்துகிறது. மரங் கொத்திப் புள் மரத்தின் மேற்பட்டையில் ஓட்டை போடுவதற்குத் துறப்பணத்தை உபயோகிப்பதில்லை. அது தன் அலகையே உபயோகிக்கிறது.

நமது மூதாதையருக்கோ துறப்பணம் மாதிரி அமைந்த அலகோ, மண்வெட்டி மாதிரி அமைந்த பாதங்களோ, கத்தியைப்போல் கூர்மையான முன்வாய்ப் பற்களோ கிடையாது. ஆனல் கூரிய முன்வாய்ப் பற்களைவிடச் சிறந்த சாதனம் ஒன்றை அவர்கள் பெற்றிருந்தனர். அதாவது, அவர்களுக்குக் கை இருந்தது. இந்தக் கையைக்கொண்டு கல்லில் செய்த கூரிய பற்களையும், மரத்தில் செய்த வளைநகங்களையும் அவர்களால் உண்டாக்க முடிந்தது.

## நம் தலைவன் பூமிக்கு வருகிருன்

மேற்சொன்ன நிகழ்ச்சிகள் உருப்பெற்ற பொழுது, நிலவுலகின் தட்ப வெப்ப நிலைமை படிப்படியாக மாறிக்கொண்டிருந்தது. வட கோடியிலிருந்த பனி மண்டலங்கள் தெற்கு நோக்கி நகர்ந்தன. மலைகள் தமது பனி மகுடங்களைத் தம் புருவங்களை மறைக்கும் அளவுக்குத் தாழ்த்தின.

நமது முன்னோரின் காட்டு இல்லத்தில், இரவுப் பொழுதில் தண்மை அதிகரித்தது ; குளிர்காலத்தில் முன்னைவிடக் குளிர் அதிகமாயிற்று. இன்னமும் சீதோஷ்ண நிலை வெது வெதுப்பாகத்தான் இருந்த தென்றாலும், பழைய வெப்ப நிலை மறைந்து விட்டது.

குன்றுகளின் வடவண்டைச் சரிவுகளில், நீங்காப் பசுமைக்குரிய பனையின மரங்களும் மாக்னோலியா மரங்களும் லாரல் மரங்களும் இல்லாதொழிந்தன. அந்த இடத்தில் குளிர்காலத்தில் இலைகளை உதிர்த்துவிட்டுக் குளிரைச் சமாளிக்கக் கூடிய ஒக் மரங்களும் லின்டன் மரங்களும் வளர்ந்தன. இந்த மரங்கள் தமது வாழ்க்கைப் போராட்டத்தைக் குளிர்காலத்தில் கைவிட்டுவிட்டுத் தற்காலிகமாக இறந்தன வென்றும், மீண்டும் இளவேனிற் காலத்தில் புத்துயிர் பெற்றன வென்றும் தோன்றியது.

அத்தி மரங்களும் கொடி முந்திரிகளும் குளிருக்குமுன் பின்வாங்கின ; அவை பள்ளத்தாக்குகளிலும், குன்றுகளது தென் சரிவுகளிலும் மறைந்து கொண்டன. அயன மண்டலக் காட்டின் எல்லை மேலும்மேலும் தெற்கு நோக்கி நகர்ந்துகொண்டே யிருந்தது. காடுவாழ் பிராணிகளும் காட்டுடன் தெற்குநோக்கி நகர்ந்தன. யானையின் மூதாதையான மாஸ்டோடன் இல்லாதொழிந்தது; பட்டாக்கத்தி போன்ற பற்களை உடைய புலிகள் மேன்மேலும் அருமையாயின.

முன்னால் புதர்கள் அடர்த்தியாக மண்டிக் கிடந்த இடத்தில், இப்பொழுது திறந்த வெளிகள் தோன்றின. மரங்களுக்கிடையே இருந்த இந்தத் திறந்த வெளிகளில், காண்டாமிருகங்களும் மான்களும் கூட்டம் கூட்டமாக மேய்ந்தன. வாலில்லாக் குரங்குகளில் சில ஒழிந்தன ; சில மிஞ்சின.

இந்தப் புதிய சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு மாறிக் கொள்வது இலேசான காரியமல்ல. வாலில்லாக்குரங்குகளுக்

குத் தகுதியான உணவுவகைகள் மேன்மேலும் அருமை யாகிக் கொண்டிருந்தன. கொடிமுந்திரிகள் மிகக் குறை வாகவே கிடைத்தன; வாழை இன, அத்தி இன மரங்களைக் கண்டுபிடிப்பதே கடினமாயிருந்தது. காட்டுப் பிரயாண மும் சிரமமாகி விட்டது; முன்போல் மரம்விட்டு மரம் பாய முடியாது; தோப்புகளுக்கிடையே யிருந்த திறந்த வெளிகளில் ஓடவேண்டியிருந்தது. மரம் வாழ் பிராணிக்குத் தரையில் ஓடுவதே துன்பமான காரியம். மேலும், ஏதாவது விலங்கு எங்கிருந்தாவது பாய்ந்துவந்து தாக்கிவிடுமோ என்ற அச்சத்துடன், கண்காணிப்பாக ஓட வேண்டி யிருந்தது.

ஆனால், நம் மூதாதைக்கு வேறு வழியில்லை. பசி, அதை மரத்திலிருந்து உந்தித் தள்ளியது. மேன்மேலும் அதிகமாக, அது மரத்திலிருந்து இறங்கிவந்து ஏதாவது உண்ணக் கிடைக்குமா என்று பூமியில் தேடவேண்டிய தாயிற்று. ஆம்; முன்னாட்களில் வாலில்லாக் குரங்கு சுவைத்துப் பார்க்கவேண்டு மென்று எண்ணாது ஒதுக்கிய உணவு வகைகளையே இப்பொழுது நம் மூதாதை தேடி யது.

காட்டுவிலங்குகள் தமக்குப் பழக்கப்பட்டிருந்த கூடுகளிலிருந்து, தமக்கு ஏற்றவையாக இருந்த காட்டு உலகிலிருந்து, வெளியேறியதால் என்ன விளைவு ஏற்பட் டது? காட்டுவிதிகள் அனைத்தையும் மாற்றவேண்டிய தாயிற்று. இயற்கையில் தத்தம் இடங்களுடன் தம்மைப் பிணைத்திருந்த விலங்குகளை உடைத்தெறிய வேண்டிய தாயிற்று.

உதாரணத்துக்கு, காட்டில் வாழ்ந்த அணில் சம வெளிக்கு வரமுயற்சிக்கிற தென்று வைத்துக்கொள் வோம். அப்பொழுது அது தன் வாழ்க்கையை எப்படி மாற்றி அமைத்துக் கொள்ளவேண்டும்? முன்போல், பைன் மரக் கொட்டைகளையும் காளான்களையும் புசிக்க முடியாது; புல்லைத் தின்பதற்குப் பழகவேண்டும். அப்

படியாளுல், வேறுவிதமான பற்கள் அதற்கு அமைய வேண்டும். மேலும், அது சமநிலத்தில் தான் வசிப்பதற் கேற்ற வளையைத் தோண்டிக்கொள்ளவேண்டும். அதற்கு, அது வேறுவகைப்பட்ட நகத்தை அடைய வேண்டும். காட்டில் மரம்விட்டு மரம் பாயும்பொழுது, அதற்குச் சிறப்பாகப் பயன்படும் நேர்த்தியான வாலோ, சம வெளி வாழ்வில் இடையூருக அமைந்துவிடும். 'நான் இங்கிருக்கிறேன்' என்று பகைவர்களுக்குக் காட்டிக் கொடுக்கும் கொடியாக அந்த வால் விளங்கும்.

எனவே, அணில் காட்டை விடுத்துச் சமவெளிக்கு வந்து குடியேறுவதற்கு முன்ளுல், அது தன் 'பாரசூட்' வாலை இழக்க வேண்டும்; வயல் எலிக்கு இருப்பது போன்ற பற்களை அடைய வேண்டும். ஒரு வாக்கியத்தில் சொல்லப் போளுல், அணில் அணிலாக இல்லாமல் வேருென்ருக மாறவேண்டும். அது கிடக்கட்டும். பிர் மரப் பறவையைப் பற்றி எண்ணிப்பாருங்கள். அது ஓக்மரத் தோப்பில் குடியேறி, ஓக்மரக் கொட்டைகளைக் கொண்டு உயிர்வாழ முடியுமென்று நினைக்கிறீர்களா? முடியாது. ஏனெனில், பிர்மரக் கொட்டையின் ஓட்டை உடைத்து அதன் பருப்பை எடுப்பதற்கு முற்றிலும் தகுதியாக உள்ள அப்பறவையின் அலகிளுல் ஓக்மரக் கொட்டையின் ஓட்டை உடைக்க முடியாது. பிர்மரப் பறவை பிர்மரக் காட்டிலிருந்து கிளம்பி ஓக்மரத்தோப் பில் வசிக்கப் போவதென்ருல், அது முதன் முதலில், வேறு விதமான அலகினைப் பெறவேண்டும்.

பறவைகளும் பிராணிகளும் மாறுதல் அடைகின்றன என்பது மெய்தான். உலகத்திலுள்ள ஒவ்வொன்றுமே, எப்பொழுதும் மாறுதலடைந்து கொண்டிருக்கிறது. ஆளுல் இந்த மாறுதல்கள் கைகூடுவதற்கு ஆண்டுகள் பலவாகின் றன. ஒவ்வொரு குழந்தை அல்லது குட்டி அல்லது குஞ்சும் தம் பெற்ருேரிடமிருந்து மிகச் சிறிய அளவுக்கே மாறுபட்டிருக்கிறது. ஒரு புதிய ஜாதி, பழைய ஜாதியி

லிருந்து வேறுபட்டதாக உள்ள புதிய ஜாதி, பரிணமிப்பதற்கு, ஆயிரக்கணக்கான தலைமுறை தேவைப்படுகிறது.

நன்று. அப்படியானால் நமது மூதாதைக்கு நிகழ்ந்தது என்ன ?

நமது மூதாதை, தனது பழக்கவழக்கங்கள் அனைத்தையும் மாற்றிக்கொண்டிராவிடில், அவனும் இதர வாலில்லாக் குரங்குகளைப்போல் தென் திசை நோக்கிப் போயிருக்க வேண்டும். ஆனால், இதற்குள்ளாக, அவன் பிறரிடமிருந்து வேறுபட்டுவிட்டான். எப்படியெனில், கல்லாலும் மரத்தாலும் செய்த கூரிய பற்களையும் வளைநகங்களையும்கொண்டு உணவு தேட அவனால் முடிந்தது. சாறு மிகுந்த தென் பிரதேசக் கனிகள் காட்டிலே கிடைப்பது அரிதாயிற்று என்றாலும், அவை கிடைக்காத பொழுதும் வேறு உணவைக் கொண்டு ஜீவிக்க அவனால் முடிந்தது. மேலும், மரங்களுக்கிடையே திறந்தவெளி விரிந்து வந்ததைப் பற்றியும் அவன் அதிகமாகக் கவலைப் படவில்லை. அவன் பூமியில் ஓடுவதற்குக் கற்றுக் கொண்டு விட்டான் ; எனவே, மரமில்லாத திறந்த வெளிகளைக் கண்டு அவன் அஞ்சவில்லை. ஓடியபொழுது விரோதி எதிர்ப்பட்டால், தனிமையில் சமாளிக்க வேண்டிய கட்டாயம் அவனுக்கு ஏற்படவில்லை. நம் மூதாதையரான மாக்கள் கூட்டம்கூட்டமாகச் சஞ்சரித்தார்கள் ; அவர்கள் அனைவரிடமும் தடிகளும் கற்களும் இருந்தன ; எனவே, மாக்கள் கூட்டம் சேர்ந்துநின்று சத்துருவுடன் போராடியது.

தட்ப வெப்ப நிலைமையில் ஏற்பட்ட மாறுதலால் நம் மூதாதையர் இல்லாதொழியவு மில்லை ; அயனமண்டலக் காடுகள் தெற்குநோக்கி நகர்ந்தால், அவற்றுடன் அவர்கள் நகரவுமில்லை. பருவநிலை மாறுதல்கள், நம் மூதாதையர் மானிடராக வளரும் நிகழ்ச்சியைத் துரிதப் படுத்தின.

சரி, நம் உறவினர்களான வாலில்லாக் குரங்குகளுக்கு என்ன நேர்ந்தது ?

அவை அயனமண்டலக் காட்டுடன் பின்வாங்கின. எனவே காடுவாழ் பிராணிகளாகவே இருந்தன. அவை பின்வாங்காதிருக்க முடியவில்லை. ஏனெனில் அவை நம் மூதாதையரைப்போல் வளர்ச்சி அடையவில்லை; கருவிகளைப் பயன்படுத்தும் கலையைக் கற்கவில்லை. அவற்றில் புத்திசாலியாக இருந்த பிராணிகளும் மரத்து உச்சியிலேயே வாழ்ந்தன; தம் சாமர்த்தியத்தால், முன்னைவிட இலாகவமாகக் கிளைக்குக் கிளை தாவின; முன்னைவிட உறுதியாகக் கிளைகளைப் பற்றிக்கொண்டன. மனிதர்களாவதற்குப் பதிலாக, கைகளால் உழைப்பதற்கும் பாதங்களால் நடப்பதற்கும் கற்றுக்கொள்வதற்குப் பதிலாக, அவை மேன்மேலும் குரங்குத் தன்மையையே விருத்தி செய்து கொண்டன; மரங்கள்மேல் வாழும் கலையிலேயே மேன்மேலும் தேர்ச்சி பெற்றன. அவை தம் கைகளால் மட்டுமல்ல, பாதங்களாலும் கிளையைப் பற்றிக்கொள்வதற்குக் கற்றுக் கொண்டன. சிம்பன்ஸீ செய்வது மாதிரி, உடம்பின் எடையைக் கைகளில் தாங்கிக்கொண்டு நடப்பதற்குக் கற்றுக் கொண்டன. அந்த ஒரு காரியமே, அவை எக்காலத்திலும் மானிடராக முடியாது தடை செய்தது; ஏனெனில் நடப்பதற்குப் பயன்படுத்தாது, வேலை செய்வதற்கு வசதியாகக் கைகளின் சுதந்திரத்தைப் பெறுவது மானிடருக்கு இன்றியமையாததாகும்.

மேற்சொன்ன வாலில்லாக் குரங்குகளைப்போல் இலாகவமாகப் பாய்வதற்குக் கற்றுக்கொண்டு மரத்தின் மீது வசிக்கும் கலையில் தேர்ச்சிபெற முடியாத வாலில்லாக் குரங்குகளுக்கு மற்றொரு விபரீதம் நிகழ்ந்தது. இவற்றில், வடிவில் பெரியனவாயும் வலுமிகுந்தனவாயும் உள்ளவைதான் எஞ்சி வாழ முடிந்தது. ஆனால் அதிகமான எடையுள்ள பேருரு வானரங்களுக்கு மரத்தின்மேல் வாழ்வது கடினமாக இருந்தது. எனவே, விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், அந்தப் பெரிய வாலில்லாக் குரங்குகள் மரத்திலிருந்து இறங்கிப் பூமியில் வாழவேண்டியதாயிற்று.

உதாரணமாக, இப்பொழுதும் கொரில்லாக்கள் பூமிமீது தான் வாழ்கின்றன. அவை தம்மை எதிரிகளிடமிருந்து தற்காத்துக் கொள்வதற்குக் கற்களையோ கம்புகளையோ உபயோகிப்பதில்லை; தமது வலுவான தாடைகளிலுள்ள பெரிய முன்வாய்ப் பற்களைத்தான் உபயோகிக்கின்றன.

இவ்வாருக, மனிதனது வாழ்க்கைமுறையும் அவனது உறவினரது வாழ்க்கைமுறையும் வேறுபட்டன. மானிடன் பிறரைக் காட்டிலும் நெடுந்தூரம் முன்னேறினுன். நடப்பதற்கும் உழைப்பதற்கும் அவன் கற்றுக் கொண்டது நல்லதாயிற்று.

## காணுமற்போன கண்ணி

இரண்டு பாதங்களால் நடப்பதற்கு மனிதன் உடனடியாகக் கற்றுக்கொண்டு விடவில்லை. முதலில், அவனது நடக்கும் பாணி குறைபாடுள்ளதாகவும் அருவருக்கத்தக்கதாகவும் இருந்தது.

குரங்குமனிதன் தோன்றியவுடன் எவ்வாறு தோற்றமளித்தான்?

இன்று, உலகத்தின் எப்பாகத்திலும், குரங்கு மனிதன் வாழவில்லை; ஏனெனில் நீண்ட நெடுங் காலத்துக்கு முன்பே அவன் மானிடனுக மாறிவிட்டான். ஆனுல் உலகத்தில் எங்காவது அவனது எலும்புகள் கிடைப்பது சாத்தியம். அவை கிடைத்துவிட்டால், வாலில்லாக் குரங்கின் வழித்தோன்றலே மனிதன் என்பதற்கு இறுதியான ருஜு கிடைத்துவிடும். ஏனெனில், வாலில்லாக் குரங்கையும் மனிதனையும் இணைக்கும் சங்கிலியில் குரங்கு மனிதனே இணைப்புக் கண்ணியாவான். இந்தக் கண்ணியை இழந்துவிட்டோம். மண் அடுக்குகளிலும், மணல் அடுக்குகளிலும், பழைய நதிக்கரைகளது படிவுகளிலும், குரங்கு மனிதனின் எச்சம் ஏதும் கிடைக்கவில்லை.

புதைபொருள் ஆராய்ச்சியாளர்களால் பூமியைத் தோண்டிப்பார்க்க முடியும். ஆனால் எந்த இடத்தில் தோண்டுவது? 'எங்கு தோண்டினால் காணாமற்போன கண்ணி கிடைக்கும்?' என்ற விஷயத்தை அவர்கள் தீர்மானம் செய்யவேண்டும். பூமியோ ஒரு பெரிய கோளம். அதன் பரப்பில் எங்காவது இந்தக் காணாமற்போன கண்ணி கிடைக்குமா வென்று ஆராய முற்படுவது, மணலில் ஊசியைத் தேடுவதற்கு ஒப்பான காரியமாகும்.

சென்ற நூற்றாண்டின் இறுதியில், ஹீக்கல் என்ற புகழ்பெற்ற விஞ்ஞானி ஒரு ஊகக் கொள்கையை வகுத்தார்; பிதிக்காந்திரோப்பஸ் என்று விஞ்ஞான பாஷையில் குறிப்பிடப்படும் இந்தக் குரங்கு மனிதனின் எலும்புகள் தென்ஆசியாவில் கிடைக்கலாம் என்பதே அவரது ஊகம்.

நிலப்படத்தில் இந்தோனேஷ்யாவைச் சுட்டிக் காட்டி, அங்கே பிதிக்காந்திரோப்பஸின் எலும்புகள் கிடைக்கக் கூடுமென்று தாம் கருதுவதாக அவர் கூறினார்.

அவரது கருத்து ஆதாரமில்லாத கற்பனையே என்று பலர் எண்ணினார்கள். ஆனால் அது பிசகற்றதென்று ஒருவர் கருதினார். 'அவர் தன் வேலையிலிருந்தே விலகி, இந்தக் கற்பிதமான பிராணியின் எலும்புகளைத் தேடிக் கண்டு பிடிப்பதற்காக, இந்தோனேஷ்யாவுக்குப் போவதென்று தீர்மானித்தார். அவர் பெயர், டாக்டர் யூஜின் டுபாய். அவர் அப்பொழுது ஆம்ஸ்டர்டாம் சர்வகலாசாலையில் உடலமைப்புத் துறையில் ஆராய்ச்சி செய்துகொண்டிருந்தார்.

சர்வகலாசாலையில் பேராசிரியர்களாக இருந்த அவரது சக ஊழியர்களில் அநேகர் டுபாயின் செயலை ஆதரிக்கவில்லை; புத்திசுவாதீன முள்ளவன் எவனும் இப்படிச் செய்யமாட்டான் என்று அவர்கள் அபிப்பிராயம் கூறினார்கள். அந்தக் கல்லூரிப் பேராசிரியர்கள் அமைதி கண்டவர்கள். தினந்தோறும் கரத்தில் குடையை எடுத்துக்

கொண்டு சர்வகலாசாலையிலிருந்து புறப்பட்டு, ஆம்ஸ்டர் டாமின் அமைதி தவழும் வீதிகளில் நடந்துவிட்டுத் திரும்புவதைத் தவிர, தம் வாழ்நாளில் எவ்வகையான பிரயாணத்தையும் மேற்கொள்ளாதவர்கள் அவர்கள்.

ஆனால் டுபாய் சர்வகலாசாலையில் தான் வகித்து வந்த பொறுப்பிலிருந்து விலகினார்; தம் குறிக்கோளை நிறை வேற்றிக் கொள்வதற்காக டச்சு சாம்ராஜ்ய சேனையின் வைத்திய இலாகாவில் சேர்ந்தார். எனவே, ஏழு கடல் களையும் தாண்டி, நெடுந்தொலைவிலுள்ள இந்தோனேஷ்யா வுக்குச் செல்வது அவருக்குச் சாத்தியமாயிற்று.

அவர் சுமத்திரா தீவில் இறங்கியவுடன், தம் வேலை யைத் தொடங்கினார். பல ஆட்களை வேலைக்கு அமர்த் தினார். அவர்கள் அவரது மேற்பார்வையில் பூமியைத் தோண்டத் தொடங்கினார்கள். அவர்கள் மலை மலையாக மண்ணை வெட்டிக் குவித்துத் தேடினார்கள். ஒருமாதம் கழிந்தது; இரண்டாவது, மூன்றாவது மாதங்களும் கழிந் தன. ஆனால் பிதிக்காந்திரோப்பஸின் எலும்பு ஒன்றும் கிடைக்கவில்லை.

நீங்கள் ஏதாவது கைப்பொருளை இழந்துவிட்டு அதைத் தேட முற்பட்டால், நீங்கள் தேடும் பொருள் எங்காவது இருக்குமென்றாவது உங்களுக்குத் தெரியும். பொறுமையாகத் தேடினால், இழந்த பொருளைக் கண்டு எடுப்பதும் சாத்தியம். டுபாயின் வேலையோ இதை விடப் பன்மடங்கு கடினமானது. எங்கோ ஓரிடத்தில், வாலில் லாக் குரங்கின் எலும்புகளில் சில இருக்கவேண்டும் என்ற ஊகமே அவரது முயற்சிக்கு ஆதாரம். எனினும், அவர் விடாமுயற்சியோடு, நிலத்தை அகழ்ந்தெடுக்கும் வேலையை நடத்திக் கொண்டே யிருந்தார். ஓர் ஆண்டு உருண்டோடியது; இரண்டாவது, மூன்றாவது ஆண்டு களும் உருண்டோடின. இன்னமும் 'காணாமற்போன கண்ணி' கிடைக்கவில்லை.

டுபாயின் இடத்தில் இருந்தால், இந்தப் பயனில்லாத தேட்டத்தை நிறுத்துவதற்கே பலர் தயாராயிருப்பார்கள். டுபாய்க்கும் சில சமயங்களில் சந்தேகங்கள் ஏற்பட்டிருக்கும். சுமத்திரா தீவின் சதுப்பான நதிக்கரைகளிலும் அயனமண்டலக் காடுகளிலும் அலைந்து திரிந்தபொழுது, அவர் ஆம்ஸ்டர்டாமில் அமைதி தவழும் கால்வாய்களின் கரைகளிலுள்ள பழைய வீடுகளையும், வசீகரமான பூந்தோட்டங்களையும், தம் ஆராய்ச்சிசாலையின் தூய வெண் சுவர்களையும் அடிக்கடி எண்ணி எண்ணி வருத்தப் பட்டிருக்க வேண்டும்.

ஆயினும் எடுத்த காரியத்தை இடையில் கைவிடும் மனிதரல்ல டுபாய். சுமத்திரா தீவில் பிதிக்காந்திரோப்பஸின் எலும்புகள் கிடைக்காதபொழுது, அவர் இந்தோனேஷ்யாவின் இன்னொரு தீவான ஜாவாவில் முயன்றுபார்க்கத் துணிந்தார்.

இறுதியில், இங்கே, அவர் அதிர்ஷ்ட தேவதையின் ஆசிக்கு உரியவரானார்.

கெண்டங் குன்றுகளின் அடிவாரத்தில், பெங்காவான் நதியின் அடிப் பரப்பில், அவர் பிதிக்காந்திரோப்பஸுடைய மண்டையோட்டின் மேற்பகுதியையும் ஒரு தொடை எலும்பையும் இரண்டு பற்களையும் கண்டு எடுத்தார்.

சாய்வான தாழ்ந்த நெற்றியையும் முன்னுக்குப் புடைத்து வந்துள்ள பெரிய புருவ முகடுகளையும் பார்த்து, நம் மூதாதையரின் முழு முகத்தை ஊகித்தறிய வேண்டிய நிலை அவருக்கு ஏற்பட்டது. அந்த மூஞ்சி, மானிடனின் முகத்தைவிட வாலில்லாக் குரங்கின் முகறையையே பெரிதும் ஒத்திருந்தது. எனினும், மண்டையோட்டின் உட்பகுதியைக் கண்டபின், பிதிக்காந்திரோப்பஸ், வாலில்லாக் குரங்கை விடக் கூடுதலான அறிதிறன் உடையது என்பதை அவர் உணர்ந்தார். மனிதனுக்கு நெருங்கிய உறவினனான வாலில்லாக் குரங்கின் மண்டையறையை விட

இந்தப் பிதிக்காந்திரோப்பஸின் மண்டையறை மிகவும் பெரிதாயிருந்தது.

மண்டையோட்டின் ஒருபகுதியும், ஒரு தொடை எலும்பும், இரண்டு பற்களும் கிடைத்தால் போதுமா? போதாது. எனினும், அவற்றை ஆராய்வதின் மூலம், பல உண்மைகளை நிறுவுவதற்கு டுபாயால் முடிந்தது. அவர் தொடை எலும்பையும், தசைகளால் அதன்மீது உண்டாகியிருந்த இலேசான குறிகளையும் கவனமாக ஆராய்ந்தார்; அதிலிருந்து, பிதிக்காந்திரோப்பஸ் ஒருவகையாக நடக்கக் கற்றுக்கொண்டிருந்த தென்றும், ஆனால் கைகளை ஊன்றி நடக்கும் வழக்கத்தை முற்றிலும் கைவிட்டு விடவில்லை யென்றும் அவர் முடிவு செய்தார்.

அந்தப் பூர்வீக மூதாதை எப்படித் தோற்ற மளித்தான் என்பதை அவரால் எளிதாகக் கற்பனை செய்ய முடிந்தது. முழங்கால் மூட்டில் வளைந்த கால்களுடன் அவன் கூனிக் கொண்டும் நீண்ட கைகளைத் தொங்கவிட்டுக் கொண்டும் காட்டில் நடந்திருக்கவேண்டு மென்பதையும், முன்னுக்குப் புடைத்துக் கொண்டிருந்த புருவங்களின்கீழ் ஆழப் பதிந்திருந்த கண்களால், உண்பதற்கு ஏதாவது தீவனம் கிடைக்குமா வென்று கீழ்நோக்கிப் பார்த்துக் கொண்டு திரிந்திருக்க வேண்டு மென்பதையும் ஊகிக்க முடிந்தது.

இந்த மூதாதை வாலில்லாக் குரங்கு அல்ல; ஆனால், அவன் மானிடனுமல்ல. எனவே, தன்னால் கண்டுபிடிக்கப் பட்ட இந்தப் பிறவிக்கு ஒரு நாமத்தைச் சூட்ட வேண்டு மென்று டுபாய் தீர்மானித்தார். அவனுக்குப் 'பிதிக்காந்திரோப்பஸ் இரெக்ட்டஸ்' என்று பெயரிட்டார். வாலில்லாக் குரங்குடன் ஒப்பிடுங்கால், இவன் நிமிர்ந்து நடந்தான் என்பது தெளிவாவதால், 'நிமிர்' என்று பொருள்படும் 'இரெக்ட்டஸ்' என்னும் அடைமொழியைச் சேர்த்தார்.

டுபாய், பிதிக்காந்திரோப்பஸைக் கண்டுபிடித்து விட்டதால் அவரது வேலை இத்துடன் நிறைவு பெற்று

விட்டதென்று நீங்கள் எண்ணுவீர்கள். ஆனால் அது அவரது பணியின் துவக்கம் என்றுதான் சொல்ல வேண்டும். பூமியின் கடினமான படிவுகளைத் தோண்டி எடுப்பதையும் விட, மானிடரின் பிடிவாதமான மூட நம்பிக்கைகளையும் தப்பெண்ணங்களையும் கல்லி எறிவதுதான் கஷ்டமான காரியம்.

மனிதர்கள் வாலில்லாக் குரங்குகளின் வழித்தோன்றல் கள் என்பதை அங்கீகரிக்கக் கூடாதென்று பிடிவாதம் பிடித்தவர்கள் அனைவரும் டுபாயின் கண்டுபிடிப்புகளுக் குப் பல ஆட்சேபணைகளைக் கிளப்பினார்கள். டுபாய் கண் டெடுத்த மண்டையோடு கிபனுடைய* தென்றும், அவர் கண்டெடுத்த தொடை எலும்பு மனிதனுடைய தென்றும் நிரூபிப்பதற்காகக் கிறித்துவ மதச் சார்புடைய புதை பொருள் ஆராய்ச்சியாளர்கள் பகீரதப் பிரயத்தனம் செய்தனர்.

டுபாய் கண்டுபிடித்த குரங்கு மனிதன், உண்மையில் வாலில்லாக் குரங்கின் மண்டையோடும் மனிதனின் தொடை எலும்பும் கொண்டு உருவான கற்பனையே என்று சொல்வதுடன் அவர்கள் திருப்தி அடையவில்லை. டுபாய் கண்டுபிடித்த பொருட்களின் தொன்மையைக் குறித்தே அவர்கள் சந்தேகப்பட்டார்கள். அவை லட்சக் கணக் கான ஆண்டுகளாக அங்கே கிடந்திருக்கின்றன என்பதை மறுத்து, சில வருடங்களாகத்தான் கிடந்திருக்கவேண்டு மென்று மெய்ப்பிக்க முயன்றார்கள்.

ஒரு வாக்கியத்தில் சொல்வதென்றால், அவர்கள் பிதிக்காந்திரோப்பஸை மீண்டும் அடக்கம் செய்து அதன் நினைவு அற்றுப்போக வேண்டுமென்பதில் குறியாயிருந் தார்கள்.

---

*கிபன் : இக்காலத்திலுள்ள வாலில்லாக் குரங்குகளில் மிகச்சிறியது. பெரும்பாலும் மரங்களிலேயே காலம் கழிக்கும். இவை தென்கிழக்கு ஆசியாவில் வாழ் கின்றன. மொ-ர்.

டுபாய் தன்னுடைய கொள்கையைத் தைரியமாக நிலைநாட்ட முயன்றார். அவரது கண்டுபிடிப்பின் விஞ்ஞான முக்கியத்துவத்தை உணர்ந்தவர்கள் அனைவரும் அவரை ஆதரித்தனர்.

டுபாய் எதிரிகளின் வாதத்துக்குப் பதில் அளித்தார். பிதிக்காந்திரோப்பஸின் மண்டையோடு கிபனின் மண்டையோட்டிலிருந்து வேறுபட்டது என்பதை எடுத்துக் காட்டினார். முன்னுக்குப் புடைத்துவந்துள்ள புருவ முகடுகள் கிபனுக்குக் கிடையாது, பிதிக்காந்திரோப்பஸுக்கு உண்டு என்று அவர் விளக்கினார்.

ஆயினும், ஆட்சேபணையை ஐயத்துக்கு இடமில்லாது மறுக்க வேண்டுமானால், ஒரு முழுமையான எலும்புக் கூட்டைக் கண்டுபிடிக்க வேண்டும். எனவே பெங்காவான் நதிப் படுகையில் எலும்புகளைத் தேடும் பணி தொடர்ந்து நிகழ்ந்தது. ஐந்தாண்டுகளில், பூர்வீக காலப் பிராணிகளின் எலும்புகள் அடங்கிய 300 பெட்டிகள் ஐரோப்பாவுக்குக் கப்பலில் அனுப்பப்பட்டன. [அந்த ஆற்றங் கரையில் அந்தப் பிராணிகள் வசித்திருக்க வேண்டும்.] விஞ்ஞானிகள் அந்த எலும்புகளை யெல்லாம் பகுத்துத் தொகுத்து ஆராய்ந்தனர். ஆனால் இந்த ஆயிரக் கணக்கான எலும்புகளிடையே, பிதிக்காந்திரோப்பஸுக்கு உரியனவென்று சொல்லக் கூடியவையாக மூன்று தொடை எலும்புகளே கிடைத்தன.

ஆண்டுகள் உருண்டோடின. பிதிக்காந்திரோப்பஸைப் பற்றி மக்களுக்கு இருந்த சந்தேகங்கள் நீங்கவில்லை. அதன்பின், பிதிக்காந்திரோப்பஸுக்குப் பிந்தியும் மானிடனுக்கு முந்தியும் வாழ்ந்த ஓர் இனத்தை ஒரு விஞ்ஞானி திடீரென்று கண்டுபிடித்தார்.

நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால், இந்த விஞ்ஞானி பீகிங்கிலிருந்த மருந்துக்கடை யொன்றுக்குச் சென்றார். அவர் சீன மருந்து வாங்குவதற்குத்தான் போனார். அங்கே

முகப்பிடப் பலகை மீது பல பொருட்கள் காட்சியளித்தன: மானிட எலும்புக்கூடுபோல் தோற்றமளித்த சர்வ ரோக நிவாரணியான ஜின்ஷீன் வேர் அங்கு இருந்தது; மிருகங்களின் எலும்புகளும் பற்களும் ஏராளமாக இருந்தன; பலவகைப்பட்ட தாயத்துக்களும் இருந்தன.

அந்த எலும்புகளிடையே கிடந்த ஒரு பல் அந்த விஞ்ஞானியின் கவனத்தை ஈர்த்தது. அது மிருக வகைகளுக்கு உரிய பல் அல்ல. தற்கால மனிதனுடைய பல் அமைப்பிலிருந்தும் அதன் அமைப்பு வேறுபட்டிருந்தது. விஞ்ஞானி அந்தப் பல்லை விலைக்கு வாங்கி, ஐரோப்பாவிலுள்ள ஓர் அரும்பொருட் காட்சிசாலைக்கு அனுப்பினார். அங்கே, அதற்குச் 'சீனப்பல்' என்று எச்சரிக்கையாகப் பெயர் கொடுத்தார்கள்.

ஏறத்தாழ இருபதாண்டுகள் கழிந்த பிறகு, பீகிங்குக்கு அண்மையிலுள்ள சௌ-கௌ-டீன் என்ற குகையில் மேலும் இரண்டு பற்கள் தற்செயலாகக் கண்டெடுக்கப் பட்டன. அதன் பிறகு, அந்தப் பற்களுக்குச் சொந்தக்காரனே கண்டு பிடிக்கப்பட்டான். அவனுக்கு விஞ்ஞானிகள் சினுந்த்திரோப்பஸ் என்று பெயரிட்டனர்.

அவர்கள் அவனை முழு உருவில் காணவில்லை. பல வகையான எலும்புகளின் குவியலிலிருந்தே அவனை இனம் கண்டு கொண்டார்கள். 50 பற்களும் 3 மண்டையோடுகளும் 11 தாடை-எலும்புகளும் ஒரு தொடை எலும்பும் ஒரு முள் எலும்பும் ஒரு காறை எலும்பும் ஒரு மணிக்கட்டு எலும்பும் ஒரு பாத எலும்பும் அந்தக் குகையில் கிடைத்த குவியலில் இருந்தன.

அந்தக் குகையில் வாழ்ந்தவனுக்கு மூன்று தலைகளும் ஒரே ஒரு காலும் இருந்தன என்று இதிலிருந்து அனுமானிக்கக் கூடாது. அந்தக் குகையில் ஒரே ஒரு சினுந்த்திரோப்பஸ் தனியாக வாழவில்லையென்றும், அந்த இனத்தைச் சேர்ந்த பலர் ஒரு கூட்டமாக அங்கு வசித்தனர்

என்றும் நாம் புரிந்துகொள்ள வேண்டும். அவர்கள் வாழ்ந்த காலத்துக்குப் பின், லட்சக் கணக்கான ஆண்டு கள் ஓடிவிட்டதால், பல எலும்புகள் காணமற் போய் விட்டன. ஒரு வேளை, அவற்றைக் காட்டு விலங்குகள் தூக்கிப் போயிருக்கலாம். ஆனால் கிடைத்த எலும்பு களைக் கொண்டு, அந்தக் குகைவாசிகளின் தோற்றத்தைக் கற்பனைசெய்வது எளிதான காரியம்.

அப்படியானல், நீண்ட நெடுங் காலத்துக்கு முன், நமது கதையின் தலைவன் எப்படியிருந்தான்?

அந்தக் காலத்தில், நம் தலைவன் குறிப்பிடத்தக்க அழகோடு விளங்கவில்லை என்பதை ஒப்புக்கொள்ளத் தான் வேண்டும்.

நீங்கள் அவனைப் பார்த்திருந்தால், பயந்து பதறி ஓடி யிருப்பீர்கள். முன்னுக்கு நீட்டிக் கொண்டிருந்த முகம். நீளமாகத் தொங்கும் ரோமமடர்ந்த கைகள் ஆகியவற் றுடன் அவன் இன்னமும் பெரிய அளவுக்கு வாலில்லாக் குரங்கையே ஒத்திருந்தான். ஆனல் கண்ட மாத்திரத்தில் அவனை வாலில்லாக் குரங்கு என்று நீங்கள் தவருகக் கணித்தாலும், விரைவில் உங்கள் கருத்தை மாற்றிக் கொண்டிருப்பீர்கள். வாலில்லாக் குரங்கு எதுவும் மனித னைப் போல் நிமிர்ந்து நடப்பதில்லை. எந்த வாலில்லாக் குரங்குக்கும், மனிதனின் முகத்தைப் போன்ற முகமறை கிடையாது. மேலும் அந்தச் சினந்த்திரோப்பஸைப் பின் தொடர்ந்து அவனது குகைக்குச் சென்றால், உங்களது சந்தேகங்கள் நீங்கிவிடும்.

அவன் கோணலாக வளைந்த கால்களை இழுத்து இழுத்து விகாரமாக நடக்கிறன். திடீரென்று, மணல் மீது உட்கார்ந்து கொள்ளுகிறன். ஒரு பெரிய கல்லை அவன் கண்டதே காரணம். அந்தக் கல்லை எடுத்து உற்று நோக்குகிறன்; இன்னொரு கல்லை அதனுல் அடிக்கிறன். அதன்பின் தான்கண்ட கல்லை எடுத்துக் கொண்டு எழுந்திருந்து செல்கிறன்.

அவனைச் சேய்மையில் பின்தொடரும் நீங்கள் ஓர் உயரமான குன்றை அடைகிறீர்கள். அங்கே, குன்றிலுள்ள குகையின் வாயிலில் அவனைப் போன்றவர்கள் ஒரு கோஷ்டியாக உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள். அந்தக் குகையில்தான் அவர்கள் வாழ்கிறார்கள். ரோமம் அடர்ந்த உடம்பை உடைய ஒரு தாடிக்காரக் கிழவன், கல் கருவியால் மான்வகைப் பிராணி ஒன்றை அறுத்துக் கொண்டிருக்கிறான். அவனுக்கு அருகில் நிற்கும் பெண்கள் தம் கரங்களால் அந்த இறைச்சியைத் துண்டு துண்டாகப் பிய்க்கிறார்கள். துண்டுகளைத் தரும்படிக் குழந்தைகள் கெஞ்சிக் கேட்கின்றன. குகையினுள் எரியும் தீயின் வெளிச்சத்தில் அந்தக் காட்சி நன்கு புலனாகிறது.

'சினுந்திரோப்பஸ் கருவிகளைச் செய்யவும் தீயை உபயோகிக்கவும் அறிந்திருந்தது என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்?' என்று நீங்கள் கேட்கலாம்.

சௌ-கௌ-டீன் குகையே உங்களது கேள்விக்கு விடை தருகிறது. அந்தக் குகையைக் குடைந்து பார்த்த பொழுது, எலும்புகளைத் தவிர வேறு பல பொருட்களும் கண்டு பிடிக்கப்பட்டன. மண்ணோடு கலந்த சாம்பலின் கெட்டியான படிவும் திருத்தமுறாத கற்கருவிகளின் குவியலும் கண்டுபிடிக்கப்பட்டன. இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட கற்கருவிகள் கிடைத்தன; சாம்பல்படிவோ கிட்டத்தட்ட இருபத்தி மூன்று அடி தடித்திருந்தது.

சினுந்திரோப்பஸ் குலத்தினர் இந்தக் குகையில் நீண்ட காலம் வசித்தனரென்பதும், அவர்கள் பல்லாண்டு பல்லாண்டு அங்குத் தீ வளர்த்தனரென்பதும் தெளிவு. ஒரு வேளை, அவர்கள் தீ உண்டாக்குவது எப்படி என்பதை அறியாதிருந் திருக்கலாம்; உண்பதற்கு வேர்க் கிழங்குகளையும் கருவி செய்வதற்குக் கற்களையும் சேகரித்தமாதிரி, அவர்கள் தீயையும் சேகரித்திருக்கலாம். காட்டில் எங்காவது தீ எரிவதைக் கண்டு, கனிந்து எரிந்த மரத்துண்டுகளைக்

கவனமாகக் குகைக்கு கொண்டுசேர்த்திருக்கலாம். குகையி லுள்ள தீ காற்ருலோ மழையாலோ அணையாது, அங்கு அந்தக் குகைவாசிகள், அந்தத் தீயை அரியதோர் பொக்கிஷ மாகப் பாதுகாத்திருக்கலாம்.

## அத்தியாயம்—3

# கைச் சுவடுகள்

### மனிதன் விதிகளை மீறினுன்

**ந**ம் கதாநாயகன் கல் அல்லது கம்பைக் கையி லெடுத்தான்; உடனடியாக அவனுக்கு வலு கூடியது; சுதந்திரம் அதிகமாயிற்று. அவன் விரும்பிய பழமும் கொட்டையும் அவனது சுற்றுப்பிரதேசத்தில் இருக்கிறதா இல்லையா என்பதைப்பற்றி அவன் இப்பொழுது கவலைப் படத் தேவையில்லை. தனக்குப் பழக்கமான சுற்றுப்பிர தேசத்துக்கும் அப்பால் உணவு தேடிக்கொண்டு போக அவனுல் முடிந்தது. ஒரு சிறு உலகிலிருந்து இன்னெரு சிறு உலகத்துக்குப் போக அவனுல் முடிந்தது. திறந்த வெளிகளில் சிறிதுநேரம் தங்கியிருக்கவும் முடிந்தது. இதற்கு முன்னுல் அவன் தின்று பார்க்கவேண்டு மென்று கருதாத உணவுவகைகளை யெல்லாம்—பிற பிராணிக ளுக்கு உரிய உணவுவகைகளை யெல்லாம்—அவன் இப் பொழுது தின்ருன்; அதன் மூலம், விதிகள் அனைத்தையும் மீறினுன்.

ஆக, மானிடன் தனது துணிச்சலான சாகஸங்கள் நிறைந்த வாழ்வைத் தொடங்கியபொழுது, தான் வாழும் உலகத்தில் நிலைபெற்றிருந்த விதிமுறைகளை மீறுவோனு யிருந்தான். மரத்தில் வாழ்ந்த அவன், மரத்திலிருந்து இறங்கிவந்து நிலத்தில் அலைந்து திரிகிருன்; அவன் தன் பின்னங் கால்களை ஊன்றி நிற்கிருன்; முன்னுல் எண் ணிப் பார்க்காத வகையில், பின்னங் கால்களால் நடக்கி

றன். அத்துடன் அவன் நிற்கவில்லை; அவன் புசிக்கக் கூடாதவையாகக் கருதப்பட்டவைகளை அவன் உண்கி றன்; முற்றிலும் புதிய முறையில் தன் உணவைப் பெறு கிறன்.

"உணவுச் சங்கிலி"யின் விதிகளைத் தகர்த் தெறிந்தது தான் அவனது துணிவுமிகுந்த சாதனையாகும். அவன் விநோதமான உணவைப் புசிக்கத் தொடங்குவதுடன், பட்டாக்கத்தி போன்ற பற்களைஉடைய புலிக்கு—லட் சக் கணக்கான ஆண்டுகளாக அவனது முன்னோர்களைப் புசித்து வந்துள்ள அந்தப் புலிக்கு—இரையாக மறுக் கின்றன்.

அவனுக்கு இந்தத் துணிவு எப்படி ஏற்பட்டது? மரத்திலிருந்து இறங்கி, அவனை இரையாகக் கொள்வ தற்குக் கொடுவிலங்குகள் காத்திருந்த நிலத்தில் நடமாடும் துணிவு அவனுக்கு எப்படி உண்டாயிற்று? மரத்தடியில் மூர்க்கமான நாய் காத்துக்கொண் டிருக்கும்பொழுது மரத்தின் மேலுள்ள பூனை இறங்கி வருமா? வராது. ஆனல் மனிதன் எப்படி இறங்கினன்?

மனிதனுக்குத் துணிச்சலைத் தந்தது அவனது கை தான். அவன் பொறுக்கி எடுத்த கல்லும், பூமியில் உணவு தேடுவதற்குப் பயன்பட்ட கம்பும் அவனைப் பாது காத்துக் கொள்ளவும் உதவின. மனிதனின் முதல் கைக் கருவியே அவனது முதல் பேராயுதமாகவும் பயன்பட்டது.

அப்பொழுதும் அவன் காட்டில் தனியாகத் திரிவதில்லை. அவன் எப்பொழுதும் தன் தோழர்களுடன் கூட்ட மாகவே சஞ்சரித்தான். கல்லையும் கம்பையும் ஆயுதங்க ளாகத் தரித்த அக்கூட்டத்தினர் சேர்ந்துநின்று காட்டு விலங்கின் தாக்குதல்களைச் சமாளித்தனர். மரத்தடியில் மூர்க்கமான நாயொன்று அச்சுறுத்தும்பொழுது, மரத்தின் மேல் பல பூனைகள் இருந்தால், அவை கம்பும் கல்லும் ஆயுதமாகக் கொண்டிருந்தால், அந்தப் பூனைகள்கூட

மரத்திலிருந்து இறங்கி நாயுடன் போர்புரிவதற்கு அஞ்சாது என்று கூறலாம்.

மேலும், நீங்கள் நெருப்பை மறந்துவிடக் கூடாது. பேரபாயம் விளைவிக்கக் கூடிய காட்டுவிலங்கையும் பீதி கொண்டு ஓடச்செய்வதற்கு, மனிதனுல் நெருப்பைப் பயன்படுத்த முடிந்தது.

## கைச் சுவடுகள்

மரங்களுடன் தன்னை இணைத்த விலங்குகளைத் தகர்த்த பின், மனிதன் மரத்திலிருந்து பூமிக்கு வந்தான்; காட்டிலிருந்து ஆற்றுப் பள்ளத்தாக்குகளுக்குச் சென்ருன்.

மனிதன் ஆற்றுப் பள்ளத்தாக்குகளுக்குச் சென்ருன் என்பதை நாம் எப்படி அறிவோம்? அவனது சுவடுகள் நம்மை அங்கு இட்டுச் செல்கின்றன.

சுவடுகளா? அவனது அடிச்சுவடுகள் இத்துணைக் காலம் அழியாதிருக்க முடியுமா?

நாம் அவனது காலடிச் சுவடுகளைக் குறிப்பிடவில்லை; கைச்சுவடுகளைப் பற்றியே இங்கு பேசுகிருேம்.

நூருண்டுகளுக்கு முன்னுல், பிரான்ஸில் ஸோம் நதியின் பள்ளத்தாக்கில் சில தொழிலாளர்கள் மண்ணையும் சரளைக் கற்களையும் பாறைகளையும் அகழ்ந்து எடுத்துக் கொண்டிருந்தனர். அவையெல்லாம் பண்டைக் காலத்தில் அந்நதி கொண்டுவந்து சேமித்தவையாகும்.

நீண்ட நெடுங்காலத்துக்கு முன்னுல், உலகத்தில் தனக்கொரு பாதையை வகுத்துக் கொண்ட ஸோம் நதி இளமையின் முறுக்கோடு விளங்கியது. அதன் ஓட்டத்தில் வலு கொப்புளித்தது; வேகம் மிகுந்திருந்தது. எனவே, அது முழுமையான கற்பாறைகளையே பெயர்த்து அடித்துக்கொண்டு வந்தது. அது அவற்றை உந்தித் தள்ளிக்கொண்டு வந்த பொழுது ஒரு பாறையை இன்னென்ருேல் மீண்டும் மீண்டும்

புடைத்தது. இவ்வாறு அந்தப் பாறைகளை உடைத்து மழமழப்பாக்கியது. கரடுமுரடா யிருந்தவற்றை, வழ வழப்பாக்கி சிறு கற்களாகவும் கூழாங்கற்களாகவும் ஆக் கியது. பிறகு, நதியின் வேகம் தணிந்து அமைதி கண்ட பொழுது, அது இந்தக் கூழாங்கற்கள் மீதும் சிறு கற்கள் மீதும் மணலாலும் மண்ணாலும் படிவுகளை அமைத்தது.

இந்த மண்ணிலும் மணலிலும் மறைந்துகிடந்த கற் களைத்தான் தொழிலாளிகள் தோண்டி எடுத்துக் கொண் டிருந்தார்கள். அப்பொழுது அவர்கள் ஒரு விநோதத்தைக் கண்டனர். அது என்னவெனில், சில கற்கள் வழ வழப்பாக இல்லை. அதற்கு மாறாக, அவை நேர் நிறை யற்றவையாக இருந்தன; இருபுறங்களிலும் அவற்றிலிருந்து சிறு துண்டுகள் வெட்டியெடுக்கப் பட்டிருந்ததுமாதிரி தோன்றியது. அவற்றுக்கு அந்த வடிவம் எப்படி உண் டாயிற்று? நதியின் ஓட்டத்தில் அந்த உருவம் அமைய முடியாது; ஏனென்றால், ஆறு எப்பொழுதும் கற்களை வழவழப்பாக ஆக்கியது.

உள்ளூர்வாசியான பௌச்சர் டீ பெர்த்திஸ் என்ற விஞ்ஞானி இந்த விநோதவடிவக் கற்களைக் கண்டார். ஸோம் நதியின் கரைகளில் கண்டெடுக்கப்பட்ட பல பழங்கால எச்சங்களை அவர் தம் இல்லத்தில் சேகரித்து வைத்திருந்தார். தொல்காலத்திய (யானையினும் பெரிய) கம்பளி யானைகளின் தந்தங்களும் சடைக் காண்டாமிருகங் களின் கொம்புகளும் அந்த அருமையான சேமிப்பில் இருந் தன. அவர் இந்தப் பண்டைக்கால எச்சங்களின் உயர்ந்த மதிப்பை உணர்ந்திருந்தார். இன்று ஆடுகளும் வாத்து களும் வந்து தண்ணீர் குடிப்பதைப் போல, அந்தப் புராதன காலத்தில் ஸோம் நதிக்கு வந்து நீர்குடித்த பயங்கரமான பேருயிரினங்களின் மீத மிச்சங்களை அவர் உன்னிப்பாக ஆராய்ந்துகொண்டிருந்தார்.

ஆனுல் ஆதிமனிதன் எங்கேயிருந்தான்? அந்த ஆதி மனிதனது எலும்பு ஒன்றும் பௌச்சர் டீ பெர்த்திஸுக்குக் கிடைக்கவில்லை.

இந்தச் சமயத்தில்தான், மணலைத் தோண்டியெடுத்தவர்களின் கையில் மேற்சொன்ன விசித்தரமான கற்கள் கிடைத்தன. அவற்றை இரண்டு புறங்களிலும் கூராக்கியது யார் என்ற கேள்வி பௌச்சருக்குமுன் எழுந்தது. மனிதன்தான் அம்மாதிரிக் கூர்செய்திருக்க வேண்டுமென்று அவர் உடனடியாகத் தீர்மானித்தார். இந்தப் புதிய கண்டுபிடிப்பு அவரது உள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்தது. இந்தக் கற்கள் ஆதி மனிதனுடைய உடலின் மீத மிச்சங்கள் அல்ல என்பது உண்மை. எனினும், இவற்றில் அவனது வேலையின் முத்திரையைப் பார்க்கமுடிந்தது. இந்தக் கற்களைக் கூர்செய்தது நதி அல்ல; மனிதனது கைதான்.

பௌச்சர் டீபெர்த்திஸ் தமது கண்டுபிடிப்புக்களைக் குறித்து ஒரு புத்தகம் எழுதினுர். "படைப்பைப் பற்றியது. உயிரினங்களின் தோற்றம், வளர்ச்சி ஆகியவற்றைப் பற்றிய கட்டுரை" என்று அவர் அந்த நூலுக்குத் துணிச்சலோடு தலைப்பு இட்டார்.

உடனே போராட்டம் ஆரம்பமாயிற்று. டுபாய் தாக்குண்டதைப் போலவே, பௌச்சர் டீ பெர்த்திஸும் நாலாபுறத்திலிருந்தும் தாக்கப்பட்டார். அவர் முறையான பயிற்சி பெருதவரென்றும், அவருக்கு விஞ்ஞானத்தைப் பற்றி ஒன்றும் தெரியாதென்றும், அவரது கற்கோடரிகள் போலியானவை என்றும், மனிதனின் படைப்பைக் குறித்துக் கிறித்துவச் சமயம் போதிப்பதற்கு விரோதமான கருத்துக்களை உடைய அவரது நூலைத் தடைசெய்ய வேண்டுமென்றும் அவர்கள் கூறினுர்கள்.

பௌச்சர் டீ பெர்த்திஸுக்கும் அவரது எதிரிகளுக்கும் இடையே நடந்த இப்போராட்டம் பதினைந்து ஆண்டுகளுக்கு நீடித்தது. பௌச்சர் டீ பெர்த்திஸ் முதுமை எய்தினுர், அவரது மயிர் நரைத்தது. ஆயினும் மனித

குலத்தின் தொன்மையை ஸ்தாபிப்பதற்கான போராட்டத்தை அவர் விடாப்பிடியாக நடத்தினார். முதலாவது புத்தகம் எழுதிச் சிறிது காலமானபிறகு, இன்னொரு புத்தகத்தை எழுதினார்; அதன்பின் மற்றொரு புத்தகத்தையும் எழுதினார்.

அவர் பெரிய பிரதிகூலங்களை எதிர்த்துப் போராடினார். ஆயினும் இறுதியில் வெற்றிகண்டார். லெயில் என்ற பூதத்துவ விஞ்ஞானியும் பிரஸ்ட்விச் என்பவரும் அவருக்குத் துணையாக நின்றனர். அவர்கள் ஸோம் நதியின் பள்ளத்தாக்குக்குச் சென்று அகழ்ந்தெடுக்கப்பட்ட இடங்களை ஆராய்ந்தனர்; பௌச்சர் டீ பெர்த்திஸின் சேமிப்புகளையும் பரிசீலனை செய்தனர். கவனமான ஆராய்ச்சிக்குப் பின் அவர்கள் தமது முடிவை உலகுக்கு அறிவித்தனர். 'மாஸ்டோடென்களும் காண்டாமிருகங்களும் வாழ்ந்த காலத்தில், பிரான்ஸில் வாழ்ந்த ஆதிமனிதன் உபயோகித்த உண்மையான கருவிகளே பௌச்சர் டீ பெர்த்திஸ் கண்டு எடுத்தவை' என்று அவர்கள் கூறினர்.

"மனிதனது தொன்மையை மெய்ப்பிக்கும் பூகர்ப்பச் சான்றுகள்" என்ற தலைப்பில் லெயில் எழுதிய புத்தகம் டீ பெர்த்திஸின் எதிரிகளை வாயடைக்கச் செய்தது. அதன் பின் அவர்கள் வேறுவிதமாகப் பேசத் தொடங்கினார்கள். சுருக்கமாகச் சொல்லப் போனால், டீ பெர்த்திஸ் ஒன்றையும் புதிதாகக் கண்டுபிடித்துவிடவில்லை யென்றும், ஆதி மனிதனின் கருவிகள் முன்பே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன என்றும் அவர்கள் பேசத் தொடங்கினார்கள்.

இதற்குப் பதில் கூறும் முறையில், லெயில் நகைச் சுவையோடு குறிப்பிட்டார்: "முக்கியமான விஞ்ஞான உண்மை கண்டுபிடிக்கப்படும்பொழுதெல்லாம், அது சமயத்துக்கு முரணானதென்று முதலில் சொல்கிறார்கள். பிறகு, அந்தக் கண்டுபிடிப்பு எல்லோருக்கும் எப்பொழுதுமே தெரிந்திருந்த விஷயம்தான் என்று சொல்லுகிறார்கள்!"

டீ பெர்த்திஸின் கண்டுபிடிப்புக்குப் பின், மேலும் பல கற்கருவிகள் கண்டெடுக்கப் பட்டிருக்கின்றன. ஆற்றங்கரையோரங்களில் கல்லுக்காகவும் மண்ணுக்காகவும் தோண்டும்பொழுதே, அந்தக் கற்கருவிகள் அநேகமாகக் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன.

எனவே, மனிதன் வேலை செய்வதற்குத் தொடங்கிய காலத்தில் பயன்படுத்திய கருவிகளை நம்கால மனிதனது மண்வெட்டி பூமியில் சந்திக்கிறது.

கருங்கல்லைக்கொண்டு இருபுறமும் சீவப்பட்ட கற்கருவிகளே மிகவும் புராதனமானவை. ஆனால் இவற்றுடன், கல் துண்டுதுண்டாக உடைப்பட்டபொழுது சிதறிய துண்டுகளும் கிடைக்கின்றன.

இந்தக் கற்கருவிகளைத்தான் நாம் கைச்சுவடுகள் என்கிறோம். நாம் இவற்றைப் பின்பற்றிச் சென்றால், நதிகளின் மணல் திடர்களையும் பள்ளத்தாக்குகளையும் அடைகிறோம். அங்கே, அந்த ஆற்றுப் படிவுகளிலும் மணல் திடர்களிலும்தான், மானிடன் தனது செயற்கையான வளை நகங்களுக்கும் கூரிய பற்களுக்கும் தகுதியான பொருட்களைத் தேடினான்.

இது மனிதனுக்கே உரிய தொழில். பிராணி உணவுப் பொருளைத் தேடும்; கூடு கட்டிக்கொள்வதற்கு ஏற்ற பொருளைத் தேடும். ஆனால் தனக்குச் செயற்கையான வளைநகங்களையும் கூரிய பற்களையும் அமைத்துக்கொள்வதற்கு ஏற்ற பொருட்களைப் பிராணி தேடுவதில்லை.

## உயிர்ப்பு உடைய மண்வெட்டியும் உயிர்ப்பு உடைய குடமும்

சிற்பிகளாகவும் தச்சர்களாகவும் கொத்தர்களாகவும் நெய்வோராகவும் உள்ள பிராணிகளின் திறமையான உழைப்பைப்பற்றி நாம் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறோம். தையற்காரர்களாக உள்ள பிராணிகளின் வல்லமை

யைப் பற்றிக்கூடக் கேள்விப்பட் டிருக்கிறோம். உதாரண மாக, நாம் பீவர்களைப் பற்றி அறிவோம்; மரம்வெட்டி கள் மரங்களை வெட்டுவதைப் போல், பீவர்களும் தமது வலுமிகுந்த கூரிய முன்வாய்ப் பற்களால் மரங்களைத் திருத்தமாக வெட்டுகின்றன. அடிமரங்களாலும் கிளைக ளாலும் ஆற்றுக்கு அணைபோடுகின்றன; அதன் மூலம் தண்ணீரைத் தேக்கிப் பரவலாகப் பாயச்செய்து குளமே உண்டாகும்படிச் செய்கின்றன.

சிவந்த நிறமுடைய எறும்புகளான முசுடுகளை நாம் நன்கறிவோம்! ஓர் எறும்புப் புற்றில் கம்பால் குத்துங் கள். அவை தாம் வசிப்பதற்காக அந்த வளையில் ஒரு உண்மையான நகரத்தையே கட்டிக் கொண்டிருப்பதை நீங்கள் கண்கூடாகப் பார்ப்பீர்கள்.

எனவே, "மனிதனால் அழிக்கப்படாதிருந்தால், எறும்பு கள் அல்லது பீவர்கள் ஏதோ ஒரு காலத்தில் மனிதனைப் போல் முன்னேறுவது சாத்தியமல்லவா?

ஏறத்தாழப் பத்துலட்சம் ஆண்டுகள் கழிந்தபிறகு, எறும்புகள் தம் ஜாதியின் செய்தித்தாள்களைப் படிப்பதும், தம் இனத்தின் பாக்டரிகளில் பாடுவதும், தம்மவரின் ஆகாயவிமானங்களில் பறப்பதும், தம் இனத்தவர் வானொலி நிலையத்தில் பேசுவதைக் கேட்பதும் சாத்திய மாகலா மல்லவா?" என்று நீங்கள் வினவலாம்.

முடியாது. ஒருகோடி ஆண்டுகளான பிறகும் அவற் றால் இதைச் சாதிக்க முடியாதென்பதே நமது அபிப்ராயம். ஏனெனில், மனிதனுக்கும் எறும்புக்கும் மிக முக்கியமான வேற்றுமை ஒன்று இருக்கிறது.

அது என்ன வேற்றுமை?

---

பீவர்: பாலூட்டித் தொகுதியில் ரோடென்ஷியா என்னும் கொறிக்கும் விலங்கு வரிசை யைச் சேர்ந்தது. உளிபோன்ற கூரான விளிம்புள்ள முன்பற்களை உடை யது. இரண்டரை அல்லது மூன்று அடி நீளத்துக்கு வளரும் இது, வட அமெ ரிக்காவிலும், ருஷியாவிலும், போலந்திலும் காணப்படுகிறது.

மனிதன் எறும்பைவிட வடிவில் பெரியவனுயிருப்பதா?

இல்லை!

மனிதனுக்கு இரண்டு கால்களே இருக்கும்பொழுது, எறும்புக்கு ஆறு கால்கள் இருப்பதா?

இல்லை! நாம் கருதும் வேற்றுமை இதுவும் அல்ல!

மனிதன் எப்படி வேலை செய்கிறுன்? அவன் தனது கைகளாலும் பற்களாலும் மட்டும் பாடுபடுவதில்லை. அவன் கோடரியையும் மண்வெட்டியையும் சம்மட்டியையும் பயன்படுத்திப் பாடுபடுகிறுன். எறும்புகள் வாழும் வளையை நீங்கள் எத்துணைக்காலம் துருவித் துருவித் தேடினுலும், அங்கு ஒரு கோடரியையோ ஒரு மண்வெட்டியையோ நீங்கள் காணமுடியாது. ஏதாவதொன்றை இரண்டாக வெட்டவேண்டியதாயிருந்தால், எறும்பு என்ன செய்கிறது? அது தன் தலைமீது கத்தரிக்கோல் மாதிரி அமைந்துள்ள உறுப்பையே பயன்படுத்துகிறது. அது கால்வாய் தோண்டவிரும்பினுல் என்ன செய்கிறது? நான்கு உயிர்ப்புள்ள மண்வெட்டிகளை உபயோகிக்கிறது. அதாவது, தனது ஆறு பாதங்களில் நான்கு பாதங்களை உபயோகிக்கிறது. இடையிலுள்ள இரண்டு பாதங்களை ஊன்றி அவற்றில் தன்னை ஆதாரப்படுத்திக் கொண்டு, முன்னுலுள்ள இரண்டு பாதங்களால் மண்ணைத் தோண்டுகிறது; பின்னுலுள்ள இரண்டு பாதங்களால் அந்த மண்ணை வீசி எறிகிறது.

எறும்புக்கு உயிர்ப்பு உடைய பாத்திரங்களும் உண்டு. ஒருவகை எறும்பு (இதற்குத் 'தேன் எறும்பு' என்று பெயர்) உயிர்ப்புள்ள குடங்கள் நிறைந்த நிலவறைகளை உடையதா யிருக்கிறது. அந்த இருண்ட சிற்றறைகளில் வரிசை வரிசையாக அந்தக் குடங்கள் தொங்குகின்றன. அவை ஒன்றையொன்று நோக்கிக்கொண்டு அசையாது தொங்குகின்றன. ஆனுல் அந்த அறைக்குள் ஓர் எறும்பு

போனவுடன் என்ன நடக்கிறதென்று பாருங்கள். அது ஒரு குடத்தை நெருங்கியவுடன் அந்தக் குடத்தைத்தன் உணர்ச்சிக் கொம்பால் தட்டுகிறது. உடனே அந்தக் குடம் நகரத் தொடங்குகிறது.

அந்தக் குடத்துக்கும் தலையும் மார்பும் பாதங்களும் உள்ளன என்பதை நீங்கள் அறிந்துகொள்கிறீர்கள். கூரையிலிருந்து தொங்கும் எறும்பின் வயிறுதான் குடம் போல் காட்சியளிக்கிறது. அது தன் தாடைகளைத் திறந்த வுடன், அதன் வாயிலிருந்து ஒரு துளி தேன் கொப்புளிக் கிறது. அதை நாடியே அங்குவந்த வேலைக்காரஎறும்பு அந்தத் தேன்சொட்டை நக்கிவிட்டுத் தன் வேலையைக் கவனிக்கத் திரும்பிவிடுகிறது. அந்த எறும்புக்குடம் மீண் டும் இதர குடங்களிடையே அசைவற்றுத் தொங்குகிறது.

இத்தகைய 'உயிர்ப்புள்ள' சாதனங்களே எறும்புகளி டம் உள்ளன. மனிதரிடம் இருப்பதுபோல், செயற்கை யாக உண்டான கருவிகளும் பாத்திரங்களும் எறும்பு களிடம் இல்லை. எறும்புகளிடம் உள்ள கருவிகளும் பாத்திரங்களும் இயற்கையாக அமைந்தவை; அவற்றை அந்த எறும்புகளிட மிருந்து பிரிக்கமுடியாது.

பீவரின் கருவிகளும் உயிர்ப்பு உடையவை. அது கோடரியால் மரங்களை வெட்டுவதில்லை; தன் பற்களா லேயே வெட்டுகிறது. எனவே, எறும்போ பீவரோ தனது கருவிகளைத் தானே செய்துகொள்வதில்லை என்பதை நாம் புரிந்துகொள்கிறோம். அவை தமக்குத் தேவை யான கருவிகளுடனேயே பிறக்கின்றன.

முதற்பார்வையில், இது ஓர் அனுகூலமென்றே தோன்றுகிறது. உடற்கூறாக உள்ள கருவியை இழக்க முடியாதல்லவா? ஆனால் யோசித்துப் பார்த்தால், அந்த

---

* தேன் எறும்புகளில் சில வேலைக்காரஎறும்புகள் தம் வயிற்றில் தேனைச் சேக ரித்து வைக்கின்றன, அதனால் அவற்றின் வயிறு பருத்து உருண்டு தேன்குட மாக மாறியிருக்கும். இவை தேன் கிடையாத காலங்களில் தம் சேமிப்பிலிருந்து பிற எறும்புகளுக்குத் தேன் கொடுக்கின்றன.

கைய கருவி நல்லதல்ல என்பதை நீங்கள் புரிந்துகொள் வீர்கள். அந்தக் கருவியை உங்களால் திருத்த முடியுமா? முடியாது. மேம்படுத்த முடியுமா? முடியாது.

மழுங்கிப்போன கருவிகளைத் தீட்டிக் கூர்செய்வதற்கு யந்திரத்தொழிற்சாலைக்குப் போகிறோம். அம்மாதிரி ஒரு பீவர் தனது முன்வாய்ப் பற்களைக் கொண்டுபோய் தீட்ட முடியுமா? முடியாது. எறும்பு தான், செம்மையாகவும், விரைவாகவும் பூமியைத் தோண்டுவதற்காக ஒரு புத்தம் புதிய மண்வெட்டியை அனுப்பும்படி தன் சேமிப்பறைக்கு உத்திரவு அனுப்ப முடியுமா? முடியாது.

## மண்வெட்டிக் கரத்தை உடைய மனிதன்

மரம், இரும்பு, எஃகு ஆகியவற்றால் செய்த கருவி களுக்குப் பதிலாக, மனிதனிடமும் இதர பிராணிகளுக்கு இருப்பதைப்போல் உயிர்ப்புடைய கருவிகள் இருக்கின்றன என்று கற்பனைசெய்து பார்ப்போம்.

அவனால் புதிய கருவிகளை அடைய முடியாது; பழைய கருவிகளை விலக்கவும் முடியாது. அவன் குழிதோண்ட விரும்பினால், மண்வெட்டி போன்ற கையுடன் பிறந் திருக்க வேண்டும்.

விசித்திரமான கற்பனைதான். இருந்தாலும் அத்தகைய அரக்கன் பிறந்தான் என்று வைத்துக்கொள்வோம். அவன் நிலத்தைச் சிறப்பாக அகழ்ந்தெடுப்பான் என்பது மெய். ஆனால், மிக்க சிறப்பான பார்வைத்திறனைப் படைத்தவன், இன்னொருவனுக்குத் தன் பார்வையைப் போதிக்க முடியா திருப்பதைப் போல், அந்த அரக்கனால் தன் மண்வெட்டும் திறனையும் வேறு எவருக்கும் கற்பிக்க முடியாது.

அவன் எப்பொழுதும் தன்னோடு அந்த மண்வெட்டிக் கையையும் கொண்டுசெல்லவேண்டும். அது வேறு எந்த வேலைக்கும் பயன்படாது. அவன் சாகும்பொழுது

அவனோடு அந்த மண்வெட்டிக் கையும் சாகவேண்டியது தான்.

இந்தத்திறனை ஒரே ஒரு வகையில் வேறுசிலர் பெற முடியும். அதாவது, அவனது வம்சத்தினர் சிலர் இதைப் பரம்பரைப் பண்பாக அடைய முடியும். சிலர் மயிரின் நிறத்தையும் நாசியின் வடிவத்தையும் பரம்பரைச் சொத்தாக அடைவதைப் போல, அந்த அரக்கனின் குழந்தைகள் அல்லது பேரக் குழந்தைகளில் சிலர் இந்த மண்வெட்டிக் கையுடன் பிறத்தல் சாத்தியம்.

இன்னொரு விஷயம்: உயிர்ப்புள்ள கருவிகள் (அதாவது கருவியாகப் பயன்படும் உடலுறுப்புகள்) பிராணிக்குத் தீங்கு விளைவிக்காமலும் பயன் உள்ளவையாகவும் இருக்கும்பொழுதே, அவை பரம்பரைச் சொத்தாகத் தலைமுறை தலைமுறையாகக் கிடைக்கும். ஜனங்கள் அகழெலிகளைப்போல் நிலத்துக்கு அடியில் வாழ்வோராயிருந்தால், அவர்களுக்கு இயல்பாகவே மண்வெட்டிக் கரத்தினால் பயன் உண்டாகும். ஆனால் நிலத்தின்மேல் வாழும் பிராணிக்கு மண்வெட்டி போன்ற கரம் தேவையில்லாத ஆடம்பரப் பொருளாகவே யிருக்கும்.

நாமே செய்துகொள்ளாமல், இயற்கையாகவும் உயிர்ப்புள்ளதாகவும் ஒரு புதிய கருவியைப் படைக்க வேண்டுமானால், அதற்கு எத்தனை நிலைமைகள் ஒத்துப் போவது அவசியமென்பதை நீங்கள் உணரமுடியும். நமது அதிர்ஷ்டம், மனிதன் வேறு பாதையை மேற்கொண்டான். அவன் கைக்குப் பதிலாக உடம்பில் மண்வெட்டி உண்டாவதற்காகக் காத்திருக்கவில்லை. அவன் தானே ஒரு மண்வெட்டியை உண்டாக்கினான். மண்வெட்டியை மட்டுமா? கத்தி, கோடரி, இன்னும் பலபல கருவிகளையும் செய்துகொண்டான்.

அவனுக்குத் தன் முன்னோர்களிட மிருந்து இருபது விரல்களும் முப்பத்திரண்டு பற்களும் கிடைத்தன. அவன் அவற்றுடன் நீளமானவையும் குட்டையானவை

யும் கெட்டியானவையும் மெல்லியவையும் கூரியவையும் முனை மழுங்கியவையும் குத்துபவையும் வெட்டுபவையும் அடிப்பவையுமாக விதவிதமான விரல்களை—முன்வாய்ப் பற்கள், வளைநகங்கள், கைமுட்டிகள் ஆகியவற்றை—ஆயிரக்கணக்கில் படைத்துக் கொண்டான்.

இதர பிராணிகளுடன் ஏற்பட்ட போட்டியில் அவனுக்குக் கிடைத்த அனுகூலம் இதுவே. இந்த அனுகூலம் மனிதனுக்கு இருந்ததால் இதர பிராணிகளால் அவனை விஞ்சவோ நெருங்கவோ முடியவில்லை.

### கருவி செய்த மனிதனும், நதியும்

மனிதன் மனிதனாக வாழத் தொடங்கியபொழுது அவன் தன் கருவிகளைத் தானே உண்டாக்கவில்லை. நாம் காய்கனிகளையும் நாய்க்குடை போன்ற உணவுக் காளான்களையும் பறித்துக்கொண்டு வருவதைப் போல, அவன் கல்லில் செய்த பற்களையும் வளைநகங்களையும் சேகரித்தான். நீண்ட காலத்துக்கு அவன் இயற்கையால் உருவாக்கப்பட்டு வழவழப்பாக்கப்பட்ட கற்களைத் தேடி ஆற்று மணல் திடர்களிலே அலைந்துகொண்டிருந்தான்.

பெரிய கிலுகிலுப்பையைக் குலுக்கும்பொழுது அதிலுள்ள கற்கள் ஒன்றோடொன்று அடிபடுவதைப் போல், விரைவாகச் சுழலும் நீர்ச்சுழியில் கற்கள் ஒன்றையொன்று புடைத்துக்கொண்டு வழவழப்பாயின; அத்தகைய நீர்ச்சுழிகளின் அருகில்தான் ஆதி மனிதனுக்குக் கூரான கற்கள் கிடைத்தன. தன் வேலையால் பயனுண்டா இல்லையா என்று நதி சிந்தித்துப் பார்க்கவில்லை என்பது தெளிவு. எனவே, இயற்கையால் உருவாக்கப்பட்ட நூற்றுக்கணக்கான கற்களில், ஒரு சிலவே மனிதனுக்குப் பயனுள்ளவையாக இருந்தன.

எனவே, மனிதனே தனக்குத் தகுதியானவையாகக் கற்களுக்கு வடிவங் கொடுக்கத் தொடங்கினான், அதாவது, கருவிகளைச் செய்வதற்கு ஆரம்பித்தான். மனிதகுலத்தின்

வரலாற்றில் இத்தகைய நிகழ்ச்சி பலதடவைகள் நடை பெற்றுள்ளன; அதாவது, மனிதன் இயற்கையிலே கிடைத்த ஒன்றுக்குப் பதிலாகத் தானே செய்த கருவியை உபயோகிக்கும் நிகழ்ச்சி பன்முறை நடை பெற்றுள்ளது. அவன் இயற்கையின் பெரிய தொழிற்சாலையில் ஒரு மூலே யில் தனது சிறிய தொழிற்சாலையை அமைத்துக்கொண் டிருக்கிறுன். அங்கே புதிய பொருட்களைச் செய்து வருகிறுன்.

இம்மாதிரிதான் அவன் கற்கருவிகளைச் செய்தான்; ஆயிரக் கணக்கான ஆண்டுகள் கடந்தபின் இம்மாதிரியே உலோகக் கருவிகள் செய்தான். தூய உலோகக் கட்டிகள் கிடைப்பது அரிதாயிருந்ததால், அவற்றுக்குப் பதிலாக, தாதுப் பொருளை உருக்கி உலோகத்தை எடுக்கத் தொடங் கினுன். இயற்கை நிலையில் கிடைப்பதைப் பயன்படுத்தும் நிலையிலிருந்து, தானே செய்த பொருளைப் பயன்படுத்தும் நிலக்கு அவன் முன்னேறிய ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், இயற்கையின் கடுமையான அதிகாரத்துக்கு உட்பட்டிருக் கும் நிலையிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளும் பாதை யில் மேலும் ஒரு அடி முன்னேறினுன்.

ஆரம்பத்தில், தன் கருவிகளுக்குத் தேவையான பொருட்களை உண்டாக்க அவனுல் முடியவில்லை. இயற்கை யில் தயாராகக் கிடைத்த பொருட்களுக்குப் புதிய உருவம் கொடுப்ப தொன்றுதான் அவன் தொடக்கத்தில் செய்த காரியம்.

அவன் ஒரு கல்லை எடுத்து அதை இன்னெரு கல்லால் திரும்பத் திரும்ப அடித்து அதற்கு உருவம் அளித்தான். கிட்டத்தட்ட கோடரி அல்லது இறைச்சி கீறும் கத்தி மாதிரி கரடுமுரடான கருவியே ஆரம்பத்தில் அவனுல் செய்ய முடிந்தது. அது வெட்டுவதற்குப் பயன்பட்டது. மேலும், அக்கல்லிலிருந்து தெறித்த சிறுகற்கள் செதுக்குவதற்கும் சுரண்டுவதற்கும் துளை போடுவதற்கும் பயன்பட்டன.

பூமியின் ஆழத்தில் புதைந்துள்ள மிகப் பழமையான கருவிகள், இயற்கையில் உருவான கற்களைப் பெரிதும் ஒத்திருப்பதால், அந்தக் கருவிகளைச் செய்தது நதியா மனிதனா அல்லது அவை நீரோட்டத்தின்மீது செயல் பட்ட வெப்ப தட்ப நிலைகளின் விளைவா என்பதை அறுதியிட்டுச் சொல்வது கடினமா யிருக்கிறது.

ஆனால் ஐயத்துக்கு இடம் தராத வேறு கருவிகளும் கண்டெடுக்கப் பட்டிருக்கின்றன. நதிகளின் பழங்கால மணல்திடர்களிலும் கரைகளிலும், மண்ணை அகழ்ந்தெடுக்கும் வேலை நடைபெற்றிருக்கிறது. மண், மணல் ஆகியவற்றின் படிவுகளுக்குக் கீழே, ஆதி மனிதனின் தொழிற்சாலைகளே கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. அவற்றில் கருவிகளாகப் பயன்பட்ட கோடரிகளும் சிறுகற்களும் ஏராளமாக உள்ளன. அந்தச் சிறுகற்களில் ஒன்றை நீங்கள் ஆராய்ந்து பார்த்தால். அதைக் கூராக்குவதற்கு எந்த இடத்தில் அடித்தார்கள் என்பதையும், அதைத் தகுதியான கருவியாக ஆக்குவதற்கு எப்படி ஒழுங்கு செய்தார்கள் என்பதையும் புரிந்துகொள்ள முடியும்.

அத்தகைய கருவிகள் இயற்கையாகக் கிடைப்பதில்லை. மனிதனால்தான் அவற்றைச் செய்ய முடியும்.

இதன் காரணத்தை எளிதாகப் புரிந்துகொள்ள முடியும். இயற்கையில் எதுவும் குறிக்கோளுடனே திட்டமிட்டோ நிகழ்வதில்லை; ஒவ்வொன்றும் தானாக நிகழ்கிறது. ஆற்றிலுள்ள நீர்ச்சுழி எவ்வித யோசனையும் செய்யாது தன் இச்சைப்படி கற்களை ஒன்றோடொன்று மோதுகிறது. மனிதனும் அதேமாதிரி வேலையைச் செய்தான்; ஆனால், உணர்வோடு செய்தான், குறிக்கோளுடன் செய்தான். எனவே, நோக்கும், திட்ட மிடுதலும் பூமியில் தோன்றின. மனிதன் இயற்கையில் கிடைத்த கல்லைச் சீர்திருத்தியபொழுது, இயற்கையைச் சிறிது சிறிதாக மேம்படுத்துவதற்கும் அதைப் புனரமைப்பதற்கும் தொடங்கினான். இதர பிராணிகளைக் காட்டிலும் உயர்ந்த

நிலையிலிருந்த மனிதன், இதனால் மேலும் உயர்ந்தான். தனக்குத் தேவையான கல் இயற்கையில் தயாராகக் கிடைக்கவேண்டுமே என்று அதையே நம்பிநிற்கும் நிலை மையை அவன் கடந்துவிட்டான். இப்பொழுது தன் கருவியைச் செய்வதற்கு அவனால் முடியும்.

## வாழ்க்கைக்கதையின் ஆரம்பம்

வாழ்க்கைக் கதை என்பது கதைத்தலைவன் எங்கு பிறந்தான், எப்பொழுது பிறந்தான் என்ற விவரங்களுடன் தொடங்குவது வழக்கம். உதாரணம் ;

"ஜார்ஜ் வாஷிங்டன் பிரெடிரிக்ஸ்பர்க் அருகிலுள்ள பிரிட்ஜஸ்கிரீக்கில் 1732-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 22–ம் தேதி பிறந்தார்."

நாம் 67ம் பக்கத்துக்கு வந்துவிட்டோம். ஆனால் நமது கதைத்தலைவன் எங்கே, எப்பொழுது பிறந்தான் என்று எடுத்துரைக்கவில்லை. நாம் அவனுக்கு ஒரு பெயரைக் கூட இடவில்லை என்பதை ஒப்புக்கொண்டாக வேண்டும். நாம் அவனை ஓரிடத்தில் 'குரங்கு மனிதன்', என்றோம். இன்னோர் இடத்தில் 'மாக்கள்' என்றோம். வேறு இடங்களில் 'காட்டில் வாழ்ந்த நம் மூதாதை' என்று பொதுப்படையாகக் குறிப்பிட்டோம்.

இதற்கு விளக்கம் கூறும் வகையில் சில வார்த்தைகள் சொல்வதற்கு அனுமதியுங்கள்.

முதலில், கதைத்தலைவனது பெயர் விவகாரம். எங்க ளிடம் நல்லெண்ணத்துக்குக் குறைவில்லை என்றாலும், அவனை ஒரு பெயரால் அழைக்க முடியவில்லை. காரணம் அவனுக்குப் பல பெயர்கள் இருப்பதே.

ஏதாவது ஒரு வாழ்க்கைக் கதையை எடுத்துப் படி யுங்கள். முதல் பக்கத்திலிருந்து கடைசிப்பக்கம் முடிய, கதாநாயகன் ஒரே பெயருடன் விளங்குகிறான். அவன் சிறுவனாயிருந்து பெரியவனாக மாறுகிறான். ஆனால் அவனது

பெயர் மாறுவதில்லை. அவன் பிறந்தவுடன் ஜார்ஜ் என்று பெயர் சூட்டியிருந்தார்களென்ருல், வாழ்நாள் இறுதிவரை அவன் ஜார்ஜ் ஆகவே இருக்கிருன்.

ஆனுல் நமது கதைத்தலைவனது விவகாரம் சிக்கலானது. அவன் அத்தியாயத்துக்கு அத்தியாயம் பெரிய அளவுக்கு மாறுதல் அடைவதால், நாம் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும் அவனது பெயரை மாற்றவேண்டியிருக்கிறது.

ஆரம்பத்திலிருந்தே, அவனை 'மனிதன்' என்று குறித்திருந்தால் அதுவே மிகவும் எளிய காரியமாயிருந்திருக்குமென்பது உண்மை. ஆனுல் தற்கால மனிதனையும், வாலில்லாக் குரங்கைப் பெரிதும் ஒத்திருக்கும் பிதிக்காந்திரோப்பஸையும், ஒரே பெயரால் எப்படி அழைப்பது?

சினுந்த்திரோப்பஸ், பிதிக்காந்திரோப்பஸ் அளவுக்கு வாலில்லாக் குரங்கை ஒத்திருக்கவில்லை. ஆயினும் இவனையும் மனிதன் என்று குறிப்பிடமுடியாது.

நமக்கு, ஹீடல்பர்க் மனிதன் மேற்சொன்னவர்களைவிட நெருங்கிய உறவினனுக இருக்கிருன். அவன் எப்படித் தோற்றமளித்தான் என்று சொல்வது கடினம். ஏனெனில், ஹீடல்பர்க் அருகில் கண்டெடுக்கப்பட்ட தாடை ஒன்றுதான் அவனது எச்சமாக நமக்குக் கிடைத்திருக்கிறது. ஆனுல் இந்தத் தாடையை வைத்துக்கொண்டு ஊகித்துப் பார்த்தால், அவனுக்கு மனிதன் என்ற பெயரைச் சூட்டலாமென்று கூறலாம். அவனது பற்கள்; மிருகத்தின் பற்கள் அல்ல, அவை மானிடரின் பற்கள். வாலில்லாக் குரங்கின் முன்வாய்ப்பற்கள், முன்னுல் துருத்திக் கொண்டிருக்கும் தந்தம்போல் உள்ளன; ஆனுல் ஹீடல்பர்க் மனிதனின் பற்கள் அம்மாதிரி இல்லை.

எனினும், ஹீடல்பர்க் மனிதன் உண்மையான மனிதனுக ஆகிவிடவில்லை. அவனது நெற்றி, வானரத்தின்

நெற்றிபோல் பின்பக்கம் இறக்கமாக இருப்பதிலிருந்தே இது தெளிவாகும்.

பிதிக்காந்திரோப்பஸ், சீனந்த்திரோப்பஸ், ஹீடல்பர்க் மனிதன்! இதற்குள்ளாக மூன்று பெயர்கள்!

இந்தப் பெயர்ப் பட்டியலை நாம் இன்னும் நீட்டிக் கொண்டே போகலாம்; ஹீடல்பர்க் மனிதனுக்குப் பிறகு எரிங்ஸ்டார்ப் மனிதன்; அவனுக்குப் பின் நியன்தர்தால் மனிதன்; அவனுக்குப் பின் கிரோ—மாக்னன் மனிதன்.

ஒரு தலைவனுக்கு எத்தனை பெயர்கள்! ஆனால் நாம் கதையோட்டத்தை நிறுத்திவிட்டு முன்னால் பாயக்கூடாது. இந்த அத்தியாயத்தில் நம் கதைத்தலைவனது பெயர் ஹீடல்பர்க் மனிதனாகும்.

அவன்தான் தன் கருவிகளுக்கான பொருளைத் தேடி ஆற்றங்கரைகளில் அலைகிறான். புராதனமான ஆற்றோட் டப் படிவுகளில் இன்று கிடைக்கும் திருத்தமடையாத கோடரிகளை, ஒரு கல்லை இன்னொன்றால் அடித்துப் படைத்தவன் அவனே.

நம் தலைவனுக்கு ஒரு பெயரைக் கொடுப்பது எளி தல்ல என்பதை நீங்கள் இப்பொழுது உணரமுடியும்.

அவன் பிறந்த ஆண்டைக் கணித்துச் சொல்வது இதையும்விடச் சிரமமான காரியம்.

நம் தலைவன் இந்த வருஷத்தில் பிறந்தான் என்று நம்மால் சொல்லமுடியாது. ஒரு குறிப்பிட்ட வருஷத்தில் மனிதன் மனிதனாகிவிடவில்லை. பிதிக்காந்திரோப்பஸ், சீனந்த்திரோப்பஸ் ஆவதற்கு லட்சக்கணக்கான ஆண்டு கள் தேவைப்பட்டன. சீனந்த்திரோப்பஸ், தற்கால மனிதனாக உருப்பெறுவதற்கும் லட்சக்கணக்கான ஆண்டு களாயிற்று.

பிதிக்காந்திரோப்பஸ் பத்துலட்சம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தான் என்பதை ஞாபகப்படுத்திக்கொண்டு,

மனிதகுலத்துக்குப் பத்துலட்டம் வயது ஆகிறதென்று நீங்கள் சொல்லலாம்.

நம் தலைவனது பிறப்பிடத்தை வரையறுத்துக் கூறுவது மிகவும் கஷ்டமானது. அவனது பிறப்பகத்தை அறிவதற்காக, மனிதன், கொரில்லா, சிம்பன்ஸீ ஆகிய மூன்று இனங்களுக்கும் பொதுவான ஆதி மாதா எங்கு வாழ்ந்தாள் என்பதைக் கண்டறிய முனைந்தோம். புதை உயிர் தடமாக உள்ள அந்த வாலில்லாக் குரங்குப் பாட்டியை விஞ்ஞானிகள் டிரியோபிதிக்ஸ் என்று குறிப்பிடுகிறார்கள். அந்தப் பாட்டியின் முகவரியைக் கண்டு பிடிக்க நாங்கள் முயன்றபொழுது, அந்தப் பெயருக்கு உரியனவாய் அநேக குலங்கள் இருப்பதைக் கண்டோம். சில சுவடுகள் மத்திய ஐரோப்பாவுக்கும் வேறு சில வட ஆப்பிரிக்காவுக்கும் மேலும் சில தெற்கு ஆசியாவுக்கும் எங்களை இட்டுச்சென்றன.

மேலும், பிதிக்காந்திரோப்பஸ், சீனாந்த்திரோப்பஸ் ஆகியோரின் எலும்புகள் ஆசியாவிலும், ஹீடல்பர்க் மனிதனின் தாடை ஐரோப்பாவிலும் கண்டுபிடிக்கப் பட்டதை நாங்கள் நினைவூட்டிக் கொண்டோம்.

இத்தனைக்கும் பிறகு, மனிதன் எந்த இடத்தில் பிறந்தான் என்று குறிப்பிட்டுச் சொல்லமுடியுமா? எந்த தேசம் என்பதல்ல; எந்தக் கண்டத்தில் பிறந்தான் என்றாவது கணிக்க முடியுமா? முயன்று பாருங்கள்!

நாங்கள் சிந்திக்கத் தொடங்கினோம். பழைய கருவிகள் கண்டெடுக்கப்பட்ட இடத்தில்தானே மனிதன் பிறந்திருக்க வேண்டும்? ஏனெனில், மனிதன் கருவிகளைச் செய்யத் தொடங்கியவுடன் மனிதனாகிவிட்டான் என்பதில் ஐயமில்லை. ஒருவேளை, இந்தக் கருவிகள், அவனது பிறப்பகத்தைத் தீர்மானிப்பதற்கு உதவிசெய்யலாமல்லவா?

எனவே, நாங்கள் உலகத்தின் நிலப்படத்தை எடுத்துக் கொண்டு, திருத்தமுறாத கற்கோடரிகளான பழங் கருவி

களைக் கண்டெடுத்த இடங்களையெல்லாம் அப்படத்தில் குறித்தோம். அந்த வேலையை முடித்தபொழுது, படத்தில் பல புள்ளிகள் இருந்தன. அவற்றில் அநேக புள்ளிகள் ஐரோப்பாவில் இருந்தன. ஆனால் ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும்கூடப் புள்ளிகள் இருந்தன.

இதிலிருந்து ஒரு முடிவுக்குத்தான் வரமுடியும். அது என்னவெனில், மனிதன் முதன்முதலாகப் பழைய உலகத்தில்தான் தோன்றினான்; அங்கும் ஓரிடத்தில் அல்ல, வெவ்வேறு இடங்களில் தோன்றினான்.

## மனிதன் நேரம் பெறுகிறான்

நாம் இரும்பை எப்படி அடைகிறோம், நிலக்கரியை எப்படிப் பெறுகிறோம், நெருப்பு எப்படிக் கிடைக்கிறது என்பன பற்றிய விஷயங்கள் அனைவருக்கும் தெரிந்தவை.

நல்லது. ஆனால் நாம் எப்படி நேரத்தைப் பெறுகிறோமென்று உங்களால் சொல்லமுடியுமா?

இந்த விஷயத்தைப்பற்றிப் பலர் அறிந்திருக்கவில்லை.

எனினும், நீண்ட நெடுங்காலத்துக்கு முன்பே, மனிதன் நேரத்தை அடைவதற்குக் கற்றுக்கொண்டான் என்பது உண்மை. அவன் கருவிகளைச் செய்யத் தொடங்கிய பொழுது, தன் வாழ்வில் புத்தம்புதிய அம்சமான வேலை என்பதைச் சேர்த்துக்கொண்டான். வேலை செய்வதற்கு நேரம் தேவைப்பட்டது. ஒரு கற்கருவி செய்வதற்கு முன்னால், அதற்குத் தகுதியான கல்லை அவன் தேடிப் பெறவேண்டியதாயிற்று. இது சுலபமான காரியமல்ல; ஏனெனில், கண்ணில்படும் எந்தக் கல்லையும் கருவிக்குப் பயன்படுத்த முடியாது.

கருவி செய்வதற்குக் கடினத் தன்மையும் திண்மையும் உடைய கற்களே மிகச்சிறந்தவை. சுற்றிலுமுள்ள கற்கள் அனைத்தும் கடினமாகவும் திண்மையாகவும் இருப்பதில்லை. தகுந்த கல்லை அடைவதற்கு அங்குமிங்கும் தேடவேண்டிய

தாயிற்று. இம்மாதிரி தேடுவதற்கு மனிதன் அதிக நேரத்தைச் செலவிடவேண்டிய தாயிற்று. சில சமயங்களில், தேடிய கல் கிடைக்காது திரும்பவும் நேரிடும். அப்பொழுது அவன் அதிகமான நுண்துளைகளை உடைய கல்லையே உபயோகிக்க வேண்டியதாயிற்று. அல்லது சுண்ணும்புக் கல். மணற்பாறை ஆகியவற்றைப் போன்ற மென் பொருளுடன் திருப்தி யடைய வேண்டியதாயிற்று.

தகுதியான கல் கிடைத்தாலும், இன்னொரு கல்லைக் கொண்டு அதை வழவழப்பாக்கிக் கருவியாகச் சீரமைக்க வேண்டும். இதற்கு அதிகநேரம் தேவைப்பட்டது. அந்தக் காலத்தில் மனிதனது விரல்கள் இன்றுபோல் திறமையாக இயங்கவில்லை. அவன் அப்பொழுதே வேலை செய்யக் கற்றுக்கொண்டிருந்தான். நாம் எஃகில் கோடரி செய்வதற்குச் செலவிடும் நேரத்தைவிட அதிகமான நேரத்தை அவன் தனது திருத்தமுறாத கற்கோடரியைச் செய்வதற்குச் செலவிட்டான் என்பதில் சந்தேகமில்லை.

ஆனல் அவனுக்கு இந்த நேரம் எங்கிருந்து கிடைத்தது ?

ஆதி மனிதனுக்கு அலுவல் இல்லாத நேரம் மிகவும் குறைவு. நம் காலத்தில் சுறுசுறுப்பாகத் தொடர்ந்து வேலை செய்யும் மனிதனுக்குள்ள ஓய்வுநேரத்தை விட, ஆதி மனிதனது ஓய்வுநேரம் குறைவு. பொழுது புலர்ந்ததி லிருந்து சூரியன் மறையும் வரையில், அவன் காட்டு மரங் களிடையிலும் திறந்தவெளிகளிலும் அலைந்து உணவு களைச் சேகரித்துக் கொண்டிருந்தான். சாப்பிடக் கூடிய வற்றை யெல்லாம் தின்றுகொண்டும் தன் குழந்தைகளது வாயில் திணித்துக்கொண்டும் திரிந்தான். உறங்காத நேரத்தை யெல்லாம், உணவைச் சேகரிப்பதிலும் புசிப் பதிலுமே ஈடுபடுத்தினன். ஏனென்ருல், அவனுக்குக் கிடைத்த உணவைக் கொஞ்சமாகச் சாப்பிட்டால் போதாது. அதை நிறைய உண்டால்தான் பசி அடங்கியது. கொட்டைகளையும் தளிர்களையும் இலைகளையும் கனிகளையும்

லார்வாவையும் இவை போன்ற இதர துக்கடாத் தீனிகளை யும் தின்றுதான் வாழவேண்டுமென்று ஏற்பட்டால், நீங்களும் அதிகமாகத்தான் சாப்பிடவேண்டி யிருக்கும்.

மான்களின் கூட்டம் தாழ்வாக வளரும் தாவரங்களைக் கடித்து மென்று தின்று வாழ்க்கை நடத்துவதைப் பார்க்கிறோம். இவ்வாறு, உயிர் பிரியாது பாதுகாப்பதற்கே அதற்குப் பொழுது சரியாயிருக்கிறது. இதைப் போலவே, ஆதிகாலத்தில் மானிடர்மந்தை காட்டில் உணவு தேடித் தின்று காலம்கழித்தது. உணவு தேடித் தின்பதிலேயே பகற்பொழு தெல்லாம் கழிந்ததென்றால், அவன் எப் பொழுது கருவியைச் செய்வான் ?

இப்பொழுது ஓர் அற்புதம் நிகழ்ந்தது. வேலைக்கு ஒரு மாயமந்திர சக்தி இருப்பதாகத் தோன்றியது. எவ்வா றெனில், அதற்கு நேரம் தேவைப்பட்ட தென்றாலும் அதுவே நேரத்தை அளித்தது.

ஒரு காரியத்தைச் செய்வதற்கு எட்டுமணி நேரம் பிடிக்கிறது ; அதை நீங்கள் நான்குமணி நேரத்தில் செய்து முடித்துவிட்டீர்க ளானால், உங்களுக்கு நான்கு மணி நேரம் மிச்சமாகிறது. ஒரு வேலையைச் செய்வதற்குத் தேவையான நேரத்தைப் பாதியாகக் குறைப்பதற்கு, நீங்கள் ஒரு புதிய கருவியை உண்டாக்கி உபயோகித்தால், அப்பொழுது இன்னொரு பாதி நேரத்தை நீங்கள் மிச்சப் படுத்தி விடுகிறீர்கள்,

இம்மாதிரி நேரத்தை மிச்சப்படுத்தும் முறையைப் பூர் வீக மனிதன் கண்டுபிடித்தான். அவன் தன் கருவியை உருவாக்குவதற்குப் பலமணி நேரம் செலவிட வேண்டி யிருந்தது. ஆனால் அதன்பின், மரத்தின் மேல்பட்டைக்கு அடியில் உள்ள லார்வாவை இந்தக் கூரிய கருவியால் எடுப் பது எளிதாயிருந்தது. கூரிய கல்லால் கம்பை இழைத்துச் சீர்படுத்துவதற்கு ரொம்பநேரம் ஆயிற்று. ஆனால் அதன்

பின், உண்பதற்கேற்ற கிழங்குகளை இந்தக் கம்பினுல் தோண்டி யெடுப்பதும், புல்மேல் பாய்ந்துசென்ற சிறு பிராணியை அடித்துக்கொல்வதும் மிகவும் சுலபமாயின.

எனவே, உணவைச் சேகரிக்கும் பணி விரைவாக நிகழ்ந்தது. அதன் விளைவாக, மனிதன் வேலை செய்வதற்கு அதிக நேரம் கிடைத்தது. உணவு தேடுவதற்குத் தேவைப் படாத நேரத்தைக் கருவிகள் செய்வதில் அவன் ஈடுபடுத் தினுன். அவன் அந்தக் கருவிகளை மேன்மேலும் அபி விருத்தி செய்தான்; அவற்றை மேன்மேலும் கூராக்கினுன். ஒவ்வொரு புதிய கருவியைக் கொண்டும் அவன் அதிகமான உணவைச் சேகரிக்க முடிந்தது. இதன் மூலம், அவனுக்கு அதிக நேரம் கிடைத்தது. குறிப்பாக, வேட்டையாடு வதன் மூலம் அவனுக்கு அதிகநேரம் கிடைத்தது. ஏனெனில், ஒருநாள் முழுமைக்கும் போதுமான இறைச்சி யை அரைமணி நேரத்தில் பெறமுடிந்தது. ஆனுல், ஆரம் பத்தில், அவனுக்கு இறைச்சி அடிக்கடி கிடைக்கவில்லை. அவனுல் கல்லாலும் கம்பாலும் பெரிய பிராணிகளைக் கொல்லமுடியவில்லை. வயல் சுண்டெலியைக் கொன்ருல், குறைவான அளவே இறைச்சி கிடைத்தது.

இன்னமும் மனிதன் உண்மையான வேடனுகா திருந்தான்.

அவன் உணவுகளைத் தேடிப் பொறுக்கிச் சேகரிப் போனுகவே இருந்தான்.

## உணவுகளைப் பொறுக்கிச் சேகரித்த மனிதன்

நமக்கு உணவுகளைப் பொறுக்கிச் சேகரிப்பது கடின மான காரியமல்ல. நாம் ஒவ்வொருவருமே உணவுக் காளான்களைக் கண்டு பொறுக்கிச் சேகரிப்பதில் பலநாட்

---

ருஷியர்கள் உணவுக் காளான் தின்பதில் பேர்போனவர்கள். குங்குமப் பால் தொப்பி என்ற வகையை அவர்களில் பலர் உண்பர். அவர்கள் அதை வற்றல் போடுவதுமுண்டு. இந்தியாவில் சாதாரணமாகப் பயிராவது வைக்கோல் நாய்க்குடை என்ற காளான் என்பதை வாசகர்கள் அறிவார்கள். மொ-ர்.

கள் ஈடுபட்டிருக்கிறோம். பாசியில் மறைந்திருக்கும் காளானின் தவிட்டுநிறக் குடையைக் கண்டவுடன் நாம் எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறோம்! புல்லினிடையே, பிரகாசமான சிவப்புக் குடைக் காளானைத் திடீரென்று கண்டவுடன் நாம் எப்படி இறும்பூதெய்துகிறோம்! பாசியின் இடையிலோ, புல்லின் இடையிலோ விரல்களை நுழைத்து, கறுப்பு ஓரத்தை உடைய காளானின் தடிமனான தண்டைப்பற்றி அதைக் கவனமாக இழுத்து எடுக்கும் பொழுது, நமக்கு எத்தகைய மனநிறைவு உண்டாகிறது!

ஆனால் காளான்களைச் சேகரிப்பது ஒன்றுதான் உங்களது தொழில் என்று எண்ணிக்கொள்ளுங்கள். அந்நிலையில் உங்களுக்குப் போதுமான உணவு எப்பொழுதும் கிடைக்குமென்று நினைக்கிறீர்களா? நீங்கள் காளான்களைக் கண்டு சேகரித்துவரச் செல்லும்பொழுது, சில சமயங்களில், கூடை நிறையவும் தொப்பி நிறையவும் காளான் கொண்டுவருவது உண்மை. ஆனால் வேறு சில சமயங்களில், பகலெல்லாம் காட்டில் அலைந்து விட்டு, ஒரே ஒரு காளான் கூடையின் அடியில் கிடப்பதைப் பார்த்து மனம் வருந்திக்கொண்டு திரும்புகிறீர்க ளல்லவா?

எங்களுக்கு அறிமுகமாகி யுள்ள ஒன்பது வயதுச் சிறுமி ஒருத்தி, காட்டுக்கு உலாவச் செல்லும்பொழு தெல்லாம், "நான் நூறு காளான்களைக் கொண்டுவரப் போகிறேன்" என்று பெருமையடித்துக் கொள்வாள்.

ஆயினும் அவள் அடிக்கடி வெறுங்கையுடன் வீடு திரும்புகிறாள். அப்பொழுது வீட்டில் வேறு உணவு எதுவும் இல்லையென்றால், அவள் பட்டினிகிடந்து சாக வேண்டியதுதான்.

ஆதிகாலத்தில் உணவு வகைகளைப் பொறுக்கிச் சேகரித்து வாழ்ந்த மனிதன் இதைவிட மோசமான நிலைமையில் இருந்தான். அவன் தனக்குக் கிடைத்த ஒவ்வொரு உண்ணத்தக்க பொருளையும் தின்றதாலும், பகலெல்லாம்

அத்தகைய பொருளைத் தேடி அலைந்ததாலும், அவன் பட்டினியால் சாகாது பிழைத்தான்.

அவன் தனது மரம்வாழ் முன்னோர்களைவிட அதிகமான சுதந்திரத்தை அனுபவித்தான் என்பது மெய்; அவர்களை விட அதிகமான சக்தி உடையவனுயிருந்தா னென்பதும் உண்மை. ஆயினும், அவன் அரைப்பட்டினி கிடக்கும் இரங்கத்தக்க நிலையில்தான் இன்னமும் இருந்தான்.

இந்த நிலைமையை மேலும் மோசமாக்குவதற்கு, ஒரு பயங்கரமான உற்பாதம் அவனை நெருங்கியது.

## அத்தியாயம் 4.

# ஓர் உலகத்தின் முடிவும் இன்றைன்றின் ஆரம்பமும்

ஏதோ காரணத்தினுல்—என்ன காரணமென்று இது வரை கண்டுபிடிக்கப் படவில்லை—வடக்கேயிருந்த பனி மண்டலங்கள் தென்முகமாக நகர்ந்தன. பெரிய பனிக் கட்டியாறுகள் குன்றுச் சரிவுகள்வழியே இறங்கிப் பள்ளத் தாக்குகளினூடே சென்றன. அவை மலைகளின் பக்கங் களைத் தோண்டிக் குடைந்தெடுத்தன; குன்றுகளின் உச்சி களை வெட்டி யெறிந்தன. பெரிய பெரிய சிகரங்களை உடைத் துச் சுழற்றி எறிந்தன; இந்த இடிபாடுகளை யெல்லாம் தம்முடன் கொண்டு சென்றன. முகப்பில், இந்தப் பனிக் கட்டியாறுகளின் பனி உருகியதால், அவை நதிகளாக ஆயின. அந்த நதிகள் மலைகள் வழியே இறங்கி நிலத்தில் தமக்குப் பாதைகள் அமைத்துக்கொண்டன.

முன்னேறும் சேனையின் வரிசைகளைப் போல், பனிக் கட்டியாறுகள் வடக்கிலிருந்து தெற்கு நோக்கிச் சென்றன. துணைப்படைகள் பிரதான சேனையைச் சந்தித்து அத்துடன்

சேர்வதைப் போல, மலைகளின் கிடங்குகளிலும் பள்ளங் களிலு மிருந்த பனிக்கட்டித் தொகுதிகள், வடக்கிலிருந்து வந்த பனிக்கட்டியாறுகளுடன் சேர்ந்து கொண்டன.

பிரான்ஸிலும் அதன் அண்டை நாடுகளிலும் உள்ள பள்ளத்தாக்குகளில் இங்கும் அங்கும் சிதறிக் கிடக்கும் கற்பாறைகளைக்கொண்டு இந்தப் பனிக்கட்டியாறுகள் சென்ற வழியை நாம் இன்றும் வரையறுத்துக் காட்ட முடியும் சில சமயங்களில், ஜெர்மனி தேசத்தின் காட்டில், பைன் மரங்களிடையே பாசி அடர்ந்த பெரிய கற்பாறை திடீரென்று தென்படுகிறது. அது அங்கே எப்படி வந்தது ? அதை ஒரு பனிக்கட்டியாறு கொண்டு வந்தது.

இதற்கு முன்னுலும், வட பகுதியின் பனிக்கட்டி மண்டலங்கள் தென்முகமாக இயங்கியதுண்டு. ஆனுல் இந்தத் தடவை, முந்தைய தடவைகளைக் காட்டிலும் அதிகமான தூரத்துக்குப் பனிக்கட்டியாறுகள் சென்றன. மேற்கு ஐரோப்பாவில் அவை ஜெர்மனியின் மையத்தி லுள்ள மலைகளை அடைந்தன ; கிட்டத்தட்ட பிரிட்டிஷ் தீவுகள் முழுமையும் அவற்றின் வசப்பட்டன. வட அமெரிக்காவில் அவை பெரிய ஏரிகளுக்கும் தெற்கே சென்றன.

அவை விரைவாக ஓடவில்லை. அவற்றின் வாடை மனிதன் வாழ்ந்த பிரதேசங்களில் உடனடியாக உணரப் படவில்லை. நிலவாசிகளுக்கு முன்னுல் கடல்வாழ் பிராணிகள் இந்த வாடையை உணர்ந்தன.

கடற்கரைகளில் இன்னமும் வெதுவெதுப்பாக இருந் தது. லாரல்களும் மாக்னேலியாக்களும் இன்னமும் காடுகளில் செழுமையாக வளர்ந்தன. பிரம்மாண்டமான யானைகளும் சடைக் காண்டாமிருகங்களும் இன்னமும் பள்ளத்தாக்குகளின் ஓங்கி வளர்ந்த புல்களை மிதித்துக் கொண்டு திரிந்தன. ஆனுல் கடலின் குளிர்ச்சி அதிகரித்துக் கொண்டே யிருந்தது. கடலினுள் ஓடும் நதிகளான கடல்

நீரோட்டங்கள், வட பகுதியிலுள்ள பனிக்கட்டிப பாறைகளி லிருந்து தண்மையைக் கொண்டுவந்தன. சில சமயங்களில், அந்த நீரோட்டங்கள் பனிக்கட்டிப் பாறை களையேகொண்டுவந்தன.

இந்தக் கதகதப்பான கடல்கள் குளிர்கடல்களாக எப்படி மாறின என்பதைக் கடற்கரையோரத்தி லுள்ள படிவு நன்கு எடுத்துக்காட்டுகிறது. வெதுவெதுப்பான சூழ்நிலையில் மட்டும் வாழக்கூடிய பிராணிகள் நிலத்தில் தொடர்ந்து வாழ்ந்தபோதிலும், கடல்வாழ் பிராணிகள் மாறின. அந்தக்காலத்துக்குரிய படிவுகளில், குளிர்நீரில் மட்டுமே வாழக்கூடிய நத்தைவகைகளின் ஓடுகள் பல நமக்குக் கிடைக்கின்றன.

## காடுகளின் போர்

ஆனால், நிலத்திலும் பனிக்கட்டியாறுகளின் வருகை யால் பாதிப்புகள் உண்டாயின. ஆர்க்டிக் மண்டலத்தின் பனிக்கட்டியாறுகள் தென்முகம் நோக்கி நகர்ந்தன என் ருல், அது சாமானியமான விவகாரமல்ல என்பதை நீங்கள் ஊகிக்க முடியும். வடபகுதியின் பிர் மரங்கள் தெற்கு நோக்கி நகர்ந்தன. அவை பின்வாங்கியபொழுது, தெற்கே யிருந்த இலைமிகுந்த காடுகள் பிழைக்கமுடியவில்லை. காடுகளுக்கிடையே ஓர் ஆயிரமாண்டுப் போர் தொடங் கியது என்னலாம்.

இன்றும் காடுகள் போர்புரிந்தவண்ணம் இருக்கின்றன. பிர் மரமும் ஆஸ்பென் மரமும் ஒன்றையொன்று எதிர்த்துப் போராடாத நாளே இல்லை. பிர் மரம் நிழலை விரும்புகிறது. ஆஸ்பென் மரம் ஒளியை விரும்புகிறது. ஆஸ்பென்

---

† கடலினுள் ஆறுகள் என்று சொல்லும் நீரோட்டங்கள் பல உள்ளன. தட்ப வெட்ப நிலை, காற்றடித்தல் முதலிய பல காரணங்களினால் ஓரிடத்திலுள்ள நீரின் நிறை மற்றோர் இடத்து நீரின் நிறையைவிட அதிகமாகும். இதன் காரணமாக ஒரு திக்கிலிருந்து மற்றோர் திக்கிற்குக் கடல்நீர் ஓடி நீரோட்டம் உண்டாகிறது.

சிறிய புதுக்கிளைகளைப்போல் பிர்காட்டில் பதுங்கிக் கொள்கிறது. பிர்மரங்கள் ஆஸ்பென் மரங்கள் வளர முடியாது செய்து விடுகின்றன.

ஆனால் ஜனங்கள் வந்து பிர் மரங்களை வெட்டிய வுடன், ஆஸ்பென் மரங்கள் பிரகாசமான ஒளியில் உயிர்த் தெழுந்து வெகு வேகமாக வளர்கின்றன. சுற்று வட்டார மெல்லாம் மாறுதலடையத் தொடங்குகிறது. பிர் மரங் களின் அடிவாரத்தில் வளர்ந்த பாசிகள்—நிழலை நேசிப் பவை—இறந்து விடுகின்றன. மரம் வெட்டுவோரால் அறுக்காதுவிடப்பட்ட இளம் பிர் மரங்களும் சூரிய வெப்பத்தில் பட்டுப்போகின்றன. அவற்றின் தாயார்க ளான பெரிய பிர் மரங்கள் இருந்தவரை, அந்தத் தாய் மார்களின் கெட்டியான ஆடையின் பாதுகாப்பான நிழலில் இந்த இளமரங்கள் வளர்ந்தன. சூரியனிடமிருந்து பாது காப்புக் கிடைக்காத நிலையில் அவை நோயுற்றுச் சாகின்றன.

இதற்கு மாறாக, ஆஸ்பென் மரங்கள் தமது வெற்றி யைக் கொண்டாடுகின்றன. முன்னுளில் அவை தமக்குப் போட்டியாக வாய்த்த பிர் மரங்களின் கிளைகளினூடே தப்பிவந்த சில கதிர்களைக்கொண்டு உயிர் வாழ்ந்தன. ஆனால் இப்பொழுது, பிர் மரங்கள் வெட்டப்பட்டு விட்டன; ஆஸ்பென்தான் ராஜா. எனவே, விரைவில் பிர் மரக்காடு இருந்த இடத்தில் பிரகாசமான ஆஸ்பென் தோப்பு உண்டாகிறது.

ஆனால் காலம் மாறுகிறது. காலம் ஒரு பேருழைப் பாளி. சிறுகச்சிறுக, அது காட்டு இல்லத்தை மாற்றி அமைக்கிறது. ஆஸ்பென்கள் மேன்மேலும் உயரமாக வளர்கின்றன. அவற்றின் உச்சியிலுள்ள இலைகள் ஒன்றோ டொன்று நெருங்கிப் பந்தல்போல் அமைகின்றன. அந்த மரங்களின் அடிவாரத்தில் ஏற்பட்ட நிழலில், ஆரம்பத்தில் புள்ளிகள் இடுவதுபோல் கதிரொளி விழுந்தது. ஆனால் காலப்போக்கில் அடர்த்தியான நிழல் உண்டாகிவிடுகிறது.

ஆஸ்பென் வெற்றிக்கொடி நட்டதென்பது மெய்; ஆனால் அந்த வெற்றியே அதன் அழிவுக்கு அடிகோலுகிறது.

யாராவது ஒருவன் தன் நிழலாலேயே கொல்லப் பட்டானென்பதற்குச் சான்று ஏதுமில்லை. ஆனால் மரத்தின் வாழ்வில் இத்தகைய நிகழ்ச்சி நடைபெறுகிறது. ஏதோ ஒரு வகையில், சாவிலிருந்து தப்பிய இளம் பிர் மரங்கள் ஆஸ்பென் மரங்களின் நிழலில் செழுமையாக வளர் கின்றன. விரைவில், பிர் மரங்களின் பசுமையான ஊசி இலைகள் பூமிக்குப் பந்தல் போட்டமாதிரி காட்சியளிக் கின்றன. மேலும் சில ஆண்டுகள் சென்றபின், பிர் மரங்கள் ஆஸ்பென் மரங்களின் அளவுக்கு வளர்ந்து விடுகின்றன. காடு இருவகை மரங்களுக்கும் இடையே பங்கு போடப்பட்டிருக்கிறது என்று சொல்லலாம். ஆஸ் பெனின் இளம் பச்சையும் கூரான உச்சியை உடைய பிர் மரத்தின் கரும்பச்சையும் மாறி மாறிக் காட்சி தருகின் றன. பிர் மரங்கள் மேன்மேலும் உயரமாக வளர்கின்றன. இறுதியில் அவற்றின் கெட்டியான கருங்கிளைகள், ஆஸ் பென் இலைகளுக்குக் கதிரொளி கிடைக்காது தடுத்து விடுகின்றன.

அதனால் ஆஸ்பென்களுக்கு இறுதி நேரிடுகிறது. அவை பிர் மரங்களின் நிழலில் சாகத் தொடங்குகின்றன. பிர் மரம் தன் உரிமையை மீண்டும் நிலைநாட்டி விடுகிறது. மீண்டும், பிர் மரக்காடு அதன் பழைய இடத்தில் பொலி வுடன் காட்சிதருகிறது.

மரம் வெட்டுவோன் காடுகளின் வாழ்வில் தலையிடும் பொழுது, காடுகள் இம்மாதிரிதான் போரிடுகின்றன.

பனிக்கட்டியாறுகள் அவற்றின் வாழ்வில் தலையிட்ட பொழுது, இன்னமும் கொடுமையான போராட்டத்தை நடத்தின. சூழ்நிலையின் தண்மையானது, கதகதப்பை விரும்பிய மரங்களை அழித்து, வடபிரதேசத்துக் குரிய காடு கள் உண்டாவதற்கு இடத்தைத் தயார்செய்தது. பைன்,

பிர், பர்ச் ஆகிய மரங்கள், ஓக், லின்டன் மரங்கள் மீது வெற்றிகொண்டன. ஓக், லின்டன் மரங்கள் பின்வாங்கிய பொழுது, எஞ்சி மிஞ்சி இருந்த எவர் கிரீன், லாரல், மாக்னேலியா, காட்டத்தி ஆகியவற்றின் இடத்தை ஆக்கிர மித்துக்கொண்டு அவற்றை இல்லா தொழித்தன.

குளிரும் காற்றும் மிகுந்த இடங்களில் கதகதப்பை நாடும் மென்மையான மரங்களால் தாக்குப்பிடிக்க முடிய வில்லை. எனவே அவை வடதிசையிலிருந்து வந்து தம்மை வென்ற மரங்களுக்கு வழிசெய்துவிட்டு இறந்தன; அல்லது தெற்குத் திசையில் தொலைதூரம் பின்வாங்கின. மலைப் பிரதேசங்களில் தாக்குப் பிடிப்பது அவற்றுக்குச் சுலபமா யிருந்தது. அவை பாதுகாப்பான மலைப்பள்ளங்களில் தஞ்சம் புகுந்தன; முற்றுகையிடப்பட்ட கோட்டையில் தாக்குப்பிடிப்பதுமாதிரி அந்தப்பள்ளங்களில் நிலைகொள்ள முயன்றன. ஆனால் புதிய பனிக்கட்டி யாறுகள் மலைச் சிகரங்களிலிருந்து வந்து அவற்றைத் தாக்கின. அந்தத் தாக்குதலில் மலைப்பகுதியின் பிர்களும், பர்ச்களும் முன் னணிப் பாத்திரம் வகித்தன.

வடக்கேயிருந்து வந்த ஆக்கிரமிப்பாளர்களால் அழிக் கப்பட்ட காடுகளில் வாழ்ந்த பிராணிகளுக்கு என்ன நேர்ந்தது ?

தற்காலத்தில், மரம் வெட்டுவதாலோ காட்டுத் தீயாலோ ஒரு காடு அழிந்தால், அந்தக் காட்டில் வசிப்பவர் கள் அங்கேயே அழிகின்றனர்; அல்லது ஓடிவிடுகின்றனர். பிர்மரக் காட்டை வெட்டிவிட்டால், அதன் சுதேசிப் பிரஜைகளான—இல்லை, அதன் கைதிகளான—பிர்மரப் புள், அணில் முதலியவை அந்தக்காட்டோடு மறைந்து விடு கின்றன.

அவற்றின் நிழல்மிகுந்த பிர்மர இல்லம் இருந்த இடத் தில், ஆஸ்பென்களாலான புதிய காட்டு இல்லம் உண்டா

கிறது. இந்தப் புதியவீட்டில், வேறுவகைப்பட்ட பறவைகளும், பிராணிகளும் களிப்பாக வாழ்கின்றன.

பல ஆண்டுகளுக்குப் பின், பிர் மரம் ஆஸ்பென் மரத்தின்மீது வெற்றி கொள்ளும்பொழுது, ஆஸ்பென்களின் இடத்தில் உண்டாகியுள்ள புதிய பிர் மரக்காடும் காலியாக இருக்காது. அணில், பிர் மரப்புள் அவற்றின் நண்பர்கள் ஆகியோர் மீண்டும் அங்கு குடியேறுவார்கள்.

காடு பிரிக்கமுடியாத முழுமையாகவே இறக்கிறது; பிறக்கிறது. தாவர இனங்களும் பிராணி இனங்களும் தற்செயலாகச் சேர்ந்து வாழ்வதுமாதிரி காடு நடந்துகொள்வதில்லை.

இப்படித்தான் பனியுகத்திலும் நிகழ்ந்தது. வெதுவெதுப்பை நாடிய காடுகளில் வாழ்ந்த உயிரினங்கள் மறைந்தன. கம்பளியானைகள் இல்லா தொழிந்தன. சடைக் காண்டாமிருகங்களும் காட்டு எருதுகளும் தெற்கு நோக்கிச் சென்றன. மனிதனின் பழைய விரோதியான பட்டாக்கத்திப் பற்களை உடைய புலி இறந்தொழிந்தது.

இந்தப் பேருயிரினங்களைப் போலவே, அந்தக் காடுகளில் வாழ்ந்த இதர பிராணிகளும் பறவைகளும்கூட அநேகமாக அழிந்தன. அல்லது தெற்குநோக்கிச் சென்றன. ஏனெனில் ஒவ்வொரு உயிரினமும் தன் காட்டுடன் சங்கிலியால் பிணைப்புண்டிருக்கிறது. அதன் உலகமாகிய அந்தக்காடு மறையும்பொழுது அல்லது நகரும்பொழுது, அது தன் பிரஜைகளில் பலரையும் தன்னுடன் கொண்டு செல்கிறது.

மரங்களும், புதர்ச்செடிகளும், புல்வகைகளும் இறந்தொழிந்தபொழுது, உணவுக்கும் நிழலுக்கும் அவற்றை நம்பியிருந்தபிராணிகள் உணவு இல்லாமலும், தங்குவதற்குத் தகுந்த இடமில்லாமலும் தவித்து இறந்தன. அவை ஒழிந்தபொழுது, அவற்றைத் தின்றுவாழ்ந்த மிருகங்களுக்கும் இறுதி நேர்ந்தது. மேய்ந்துவாழும் பிராணிகள் குன்றி

விட்டால், அவற்றை உண்டுவாழும் விலங்குகள் பட்டினி கிடந்து சாகவேண்டியதுதானே! பழங்காலச் சிறைக்கப்பல்கள் கடலில் மூழ்கியபொழுது, அவற்றில் தத்தம் இருக்கைகளுடன் விலங்கிடப்பட்டிருந்த அடிமைகளும் மூழ்கி இறந்தமாதிரி, காடுகள் அழிந்தபோது, 'உணவுச் சங்கிலி' யால் பிணைப்புண்டிருந்த பிராணிகளும், செடிகளும் இல்லாது ஒழிந்தன.

அங்கிலேயில் தப்பிப்பிழைப்பதற்கு ஒரே ஒரு வழி தான் இருந்தது. அது என்ன? 'உணவுச்சங்கிலி'யை உடைத்துவிட்டு வேறுவிதமான உணவை உட்கொள்ளத் தொடங்கவேண்டும்; வளேகங்கள், பற்கள் ஆகியவற்றின் அமைப்பை மாற்றி அமைத்துக் கொள்ளவேண்டும். குளிரிலிருந்து பாதுகாத்துக் கொள்வதற்கு நீளமான கம்பளி மயிர் வளர்த்துக் கொள்ளவேண்டும்.

ஒரு மிருகம் தன்னே மாற்றிக் கொள்வதென்பது எவ்வளவு கடினம் என்பதை நாம் அறிவோம். அந்த மாறுதலே சாதிக்கப் பாரம்பரியம், மாறுபாடு என்ற இரு வினைஞர்களும் பாடுபடவேண்டும். இந்த இரு வினைஞர்களும் மிக மிக மெதுவாகச் செயல்படுகின்றனர்.

தென்னகப் பிராணிக்கு வடபகுதிக்குரிய காட்டில் வாழ்வது கஷ்டமான பிரச்னையாயிற்று; மேலும், வடபகுதியின் காடுகளுடன் அந்தக் காடுகளின் ரோமமடர்ந்த எஜமானர்களும் வந்திருந்தனர். சடைக் காண்டாமிருகங்களும், மாஸ்டோடன்களும், குகைச் சிங்கங்களும், குகைக் கரடிகளுமே அவை. இந்தப் பிராணிகள் வடபகுதிக்குரிய அக்காட்டில் சொகுசாக வாழ்ந்தன. அவற்றின் அற்புதமான கம்பளிக்கோட்டுகள் கெட்டியாகவும் கதகதப்பாகவும் இருந்தன. யானேக்கும் சடையில்லாத காண்டாமிருகத்துக்கும் காட்டுஎருதுக்கும் தாங்கமுடியாததாக விருந்த குளிரை, மாஸ்டோடனே சடைக்காண்டாமிருகமோ ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லே. தவிர, பல வடக்கத்திப் பிராணிகளுக்குக் குகைகளில் பதுங்கிக் குளிரி

லிருந்து பாதுகாத்துக் கொள்ளும் வித்தை தெரிந்திருந்தது. அவற்றுக்குக் காட்டில் உணவு கிடைக்குமோ கிடைக்காதோ என்ற கவலேயும் கிடையாது; ஏனெனில், அந்தக் காடு அவர்களுக்குப் பழக்கமான காடாகவிருந்தது.

ஆக, அழிவுக்குள்ளாகியிருந்த பழைய காட்டுவாசிகள் இந்தப்புதிய எஜமானர்களேயும் சமாளிக்க வேண்டியிருந்தது. அவற்றில் ஒரு சிலவே தப்பிப்பிழைத்தன என்பதில் வியப்பென்ன?

சரி, மனிதன்? அவன் என்ன ஆனுன்?

மனிதன் அந்தக் கண்டத்திலிருந்து தப்பினுன். அவன் மரித்திருந்திதால், நீங்கள் இந்த நூலேப் படித்துக்கொண்டிருக்க முடியாது.

வெதுவெதுப்பான தேசங்களிலும் தட்பவெப்ப நிலே குளிர்ச்சியானது என்றுலும், அந்த நாடுகளில் வாழ்ந்தவர்கள் கஷ்டப்படவில்லே. முன்னேறிவந்த பனிக்கட்டியாறுகளின் முழுச் சக்தியால் பாதிக்கப்பட்ட இடங்களில் வாழ்ந்தவர்களுக்குக் கஷ்டங்கள் அதிகமாக ஏற்பட்டன.

பனிக்கட்டியாறுகள் நெருங்கியதால், முதன் முதலாகக் கடுங்குளிரை அனுபவித்த அம்மனிதர்கள், உடம்பெல்லாம் நடுங்கிப் பதற, பற்கள் கடகடவென்று தந்தியடிக்க, தவித்தனர்; கதகதப்பை உண்டாக்கிக் கொள்வதற்காகவும் குழந்தைகளேக் குளிரிலிருந்து பாதுகாப்பதற்காகவும் அவர்கள் ஒருவரையொருவர் அணேத்துக்கொண்டு இருந்தனர்.

பசியும் குளிரும் காட்டுவிலங்குகளும் அவர்களே அழித்துவிடக்கூடிய ஆபத்து ஏற்பட்டது. தமக்கும் தம்மைச் சுற்றியுள்ள உலகுக்கும் நேர்ந்த விபத்தைக் குறித்து அவர்களால் சிந்திக்க முடிந்திருந்தால், உலகம் அழிந்துகொண்டிருப்பதாகவே நினேத்திருக்கக்கூடும்.

## உலகத்தின் இறுதி

உலகத்துக்கு இறுதி நேரிடப்போவதாக அடிக்கடி 'சோதிடம்' கூறப்படுகிறது.

இடைக்காலத்தில், நீண்ட வாலே உடைய வால்நட்சத்திரம் ஒருசமயம் தோன்றியபொழுது, ஜனங்கள் சிலுவைக் குறியிட்டுவிட்டு, 'உலகம் அழிவுக் கட்டத்தை அடைந்துவிட்டது' என்றனர்.

பிளேக் நோய் நகரங்களைக் காலிசெய்து கல்லறைகளை நிரப்பியபொழுது, கிலியடைந்த மக்கள், 'உலகம் அழியப் போகிறது' என்று குசுகுசுத்தனர்.

ஆனால் உலகம் அழியவில்லை.

வால்நட்சத்திரம் வருங்கால நிகழ்ச்சியை அறிவிப்பதற்காக வரவில்லை என்றும், அது சூரியனைச்சுற்றிச்செல்லும் தன் போக்கிலேயே போயிற்றென்றும், உலகிலுள்ள மூட நம்பிக்கை கொண்ட மாந்தர்கள் தன்னைப்பற்றி என்ன எண்ணிக்கொண் டிருந்தன ரென்பதைப்பற்றி அது சிறிதும் கவலைப்படவில்லை யென்றும் நாம் இப்பொழுது அறிவோம்.

பஞ்சமும் தொத்துநோய்களும், போரும்கூட உலகத்தின் அழிவைக் குறிப்பனவல்ல என்பதை நாம் அறிவோம். ஒரு விபத்து நிகழ்கிற தென்றால், அதன் காரணத்தை அறிவதுதான் தலைமையான பணி. காரணத்தை அறிந்து விட்டீர்களானால், அதை எதிர்த்து நல்லமுறையில் போரிட முடியும்.

எழுதப் படிக்கத் தெரியாத அறிவிலிகள் மட்டுமா உலகத்தின் அழிவைப்பற்றிச் 'சோதிடம்' கூறுகிறார்கள் ? இல்லை; உலகமும் மனித குலமும் அழியப்போவதாக வருவதுரைக்கும் விஞ்ஞானிகளும் இருக்கிறார்கள். உதாரணமாக, வெப்பமின்மையால் மனிதகுலம் அழிந்துவிடுமென்று சில விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். அவர்கள்

தமது முன்னறிவிப்புக்கு ஆதரவாகப் புள்ளி விவரங்களைத் தருகின்றனர். உலகத்திலுள்ள நிலக்கரிச் செல்வம் நாள் தோறும் குறைந்துகொண்டிருக்கிறது; காடுகளை வெட்டிக் குவிக்கும் வேலை இடைவிடாது நடைபெறுகிறது. எண்ணெய்ச் செல்வமோ பலநூறு ஆண்டுகளுக்கே போதும் போதாததாயிருக்கிறது. உலகத்தில் எரிபொருள் ஏதும் மிச்சமில்லாது போய்விட்டால், தொழிற்சாலைகளி லுள்ள யந்திரங்கள் வேலை செய்யமுடியாது, ரயில்கள் ஓடமுடியாது, வீடுகளிலுள்ள அடுப்புகளும் வீதிகளிலுள்ள விளக்குகளும் அணைந்துவிடும். பெரும்பாலான ஜனங்கள் குளிராலும் பசியாலும் இறந்து விடுவர். எஞ்சியிருப்பவர்கள் ஆதி காலக் காட்டுப் பிராணிகளின் நிலைக்குத் தாழ்ந்து விடுவர். இவ்வாறு, ஒரு பயங்கரமான சித்திரத்தை அவர்கள் வரைந்துகாட்டுகிறார்கள்!

மனிதன் கண்டுபிடித்துள்ள எரிபொருள் செல்வத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால், உலகத்தில் அதிகமான எரிபொருள் இல்லை என்பது உண்மை. இது ஆபத்தான நிலைமைதான். இந்த எரிபொருளெல்லாம் செலவாகி விடக்கூடிய காலம் வரும்.

அதனால் உலகம் அழிந்துவிடுமா?

இல்லை, அழியாது.

ஏனெனில், உலகத்துக்கு வெப்பத்தையும் சக்தியையும் அளிப்பது எரிபொருள் மட்டுமல்ல; சூரியனே சக்தியின் பிரதான தோற்றுவாய். எரி பொருட்களெல்லாம் காலியாவதற்குள், சூரியனின் உதவியால் ரயில்களை ஓட்டுவதற்கும், வீடுகளிலும் வீதிகளிலும் விளக்குகளை எரிப்பதற்கும், யந்திரங்களின் சக்கரங்களைச் சுற்றுவதற்கும், நம் சாப்பாட்டைச் சமைப்பதற்கும் கூட, ஜனங்கள் கற்றுக்கொண்டு விடுவார்களென்பதில் சந்தேகமில்லை. இப்பொழுதே, சில பரீட்சார்த்த மின்சார நிலையங்கள் சூரியனிடமிருந்து சக்திபெறுகின்றன; சில சூரிய அடுப்புகள் செய்யப் பட்டுள்ளன.

ஆனால், உலகத்தைப் புதைப்பதற்கு அவசரப்படும் பிரகிருதிகள் என்ன சொல்கிறார்கள், தெரியுமா? சூரியனும் ஒரு காலத்தில் குளிர்ந்துவிடும் என்கிறார்கள். இப்பொழுதே சில வயதாகாத நட்சத்திரங்களின் வெப்பத்தைவிடச் சூரியனது வெப்பம் குறைவாயிருக்கிறது. லட்சக் கணக்கான ஆண்டுகள் கடந்தபின், சூரியனது உஷ்ணநிலை மிகவும் குறைந்துவிடு மாதலால் பூமியில் குளிராயிருக்கும் இப்பொழுது பனி வளரும் பகுதிகளில் துருவக் கரடிகள் அலைந்து திரியும். அந்தத் தட்பநிலை மனிதருக்கு உகந்த தல்ல.

மற்றொரு பனியுகம் ஏற்பட்டால் அது மோசமாக இருக்குமென்பது உண்மைதான். ஆனால் ஆதிகால மனிதனே பனியுகத்தில் சாகாது பிழைத்தான்! வருங் காலத்தில் ஏற்படவிருக்கும் விஞ்ஞான வளர்ச்சியோ பிரமாதமாக இருக்கப் போகிறது. அதற்கு இன்றைய விஞ் ஞானம் உறைபோடக்கூடக் காணாது. ஆதிகால மனிதனால் சமாளிக்கமுடிந்த பனிப்பிரளயத்தை, இத் தகைய விஞ்ஞானத்தை ஆயுதமாகக் கொண்ட எதிர்கால மனிதனால் தாக்குப்பிடிக்க முடியாதென்று நினைக்கிறீர் களா?

கடுங்குளிர்மீது வெற்றிகொள்வதற்கு அவர்கள் என்ன செய்வார்க ளென்பதைக்கூட நாம் நெடிதுநோக்கி ஊகிக்கலாம். அவர்கள் அணுசக்தியைச் சூரியனது கதிர் களுக்கு உதவியாகப் பயன்படுத்துவார்கள். பொருளின் அணுக்கருக்களிலே பதுங்கியிருக்கும் அந்த அணுசக்தி யோ, வரம்பு இல்லாது கிடைத்துக்கொண்டிருக்கும். அதை எப்படிக் கட்டவிழ்த்து விடுவது என்பதைக் கண்டு பிடிக்க வேண்டியதே நம்மை எதிர்நோக்கும் பிரச்னை.*

நல்லது; நெடுந் தொலைவிலுள்ள வருங்காலத்தைப் பற்றிப் பேசுவதை இத்துடன் நிறுத்திக் கொள்வோம்.

---

*அணுக்கருக்களைச் சிதைத்து அணு சக்தியை விடுவிக்கும் வகையைக் கண்டு பிடிப்பதற்குமுன் இந்நூல் எழுதப்பட்டது.

நெடுந்தொலைவிலுள்ள கடந்த காலத்தில் வாழ்ந்த ஆதி மனிதனிடம் மீண்டும் செல்வோம்.

## புதிய உலகின் தோற்றம்

மனிதன் தன்னைக் காட்டுடன் கட்டிப் போட்டிருந்த தளைகளைத் தகர்த்திருக்காவிடில், அவனது காட்டுஉலகம் அழிந்தபொழுது அவனும் அழிந்திருப்பான்.

ஆனால் இந்த நிலவுலகம் அழிவுக் குள்ளாகவில்லை. அது மாறுதலுக்குத்தான் உட்பட்டது. பழைய உலகம் அழிந்தது ; புதிய உலகம் அமையத் தொடங்கியது.

மாறிய புதுஉலகத்தில் மனிதன் பிழைக்கவேண்டு மானால் அவனும் மாறவேண்டும். அவனது பழைய உணவு மறைந்துவிட்டது. சில புதிய உணவுவகைகளைப் பெறு வதற்கும் உண்பதற்கும் அவன் வழி வகைகளைக் கற்றுக் கொள்ளவேண்டும். கடினமான பிர் மரக் கொட்டை களையும் பைன் மரக் கொட்டைகளையும் கடித்து ஓட்டை விலக்கித் தின்பதற்கு அவனது பற்களால் முடியாது. தென்னகக் காடுகளிலுள்ள சாறுள்ள கனிகளைத் தின்ப தற்கே அவன் பழகியிருந்தான்.

சூழ்நிலையோ மேன்மேலும் தண்மை யடைந்து கொண்டிருந்தது. சூரியன் உலகத்தை நிராதரவாக விட்டுச் சென்றுவிட்டதாகத் தோன்றியது. சூரியனது கதிர்களின் கதகதப்பு இன்றியே வாழ்வதற்கு மனிதன் கற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று.

ஆகக்கூடி, அவன் முற்றிலும் வேறுபட்டவனாக ஆக வேண்டும் ; இந்த மாறுதலும் விரைவில் ஏற்பட வேண்டும்; தவக்கத்துக்கு நேரம் இல்லை.

உயிரினங்களில் மனிதன் மட்டுமே இந்த மாறுதலைச் சாதிக்க முடிந்தது. இதற்கு முன்பே அவன் தன்னை மாற்றிக்கொள்வதற்குப் படித்துக் கொண்டுவிட்டான்

என்பதை நீங்கள் அறிவீர்கள். வேறு எந்தப் பிராணிக்கும் கிடைக்காத இந்தப் பயிற்சி அவனுக்குக் கிடைத்திருந்தது.

மனிதனது எதிரியான பட்டாக்கத்தி போன்ற பற்களை உடைய புலியால் கெட்டியான கம்பளிமயிர்க் கோட்டை உண்டாக்கிக்கொள்ள முடியவில்லை. ஆனால் மனிதனால் முடிந்தது. ஒரு கரடியைக் கொன்று அதன் தோலை உரித்துவிட்டானானால் போதும்; அவனுக்குக் கம்பளிக் கோட்டுக் கிடைத்துவிடும்.

பட்டாக்கத்திப் பற்களை உடைய புலிக்குத் தீ உண் டாக்கத் தெரியாது; மனிதனுக்குத் தெரிந்திருந்தது. அவன் முன்பே நெருப்பின் பயனை அறிந்திருந்தான். ஆகக் கூடி, மனிதன் தன்னை மாற்றிக்கொள்வதற்கும் இயற்கையைத் திருத்துவதற்கும் திறன் பெற்றிருந்தான்.

அதன்பிறகு, பல்லாயிரமாண்டுகள் உருண்டோடி விட்டன வென்றாலும், மனிதன் இயற்கையில் என்ன மாறுதலைச் செய்தான் என்பதையும், தன்னை எப்படி மாற் றிக் கொண்டான் என்பதையும் நாம் இன்றுகூடப் பார்த்து அறியமுடியும்.

## கல்லேடுகளைக் கொண்ட நூல்

இந்தப்பூமியை ஒரு பெரிய புத்தகத்துக்கு ஒப்பிட லாம். அதன் மேலோட்டின் ஒவ்வொரு பாளமும் (அதாவது படிவுகளின் ஒவ்வொரு அடுக்கும்) இந்த நூலின் ஓர்ஏடு ஆகும். இந்தப் படிவுகளின் உச்சிப்படிவு மீதே நாம் வாழ்கிறோம். இந்நூலில் முதலேடுகள் கடலின் அடிவாரத்திலும் கண்டங்களின் அஸ்திவாரங்களிலும் உள்ளன.

அவற்றுக்கும் முன்னால், அந்த முதலேடுகளுக்கும் முற் பட்ட அத்தியாயங்களில் என்ன இருந்தது என்பதை நம்மால் ஊகிக்கவே முடியும். ஆனால் இந்த நூலின் ஏடு

கள் எந்த அளவுக்குப் பிந்தியவையாக உள்ளனவோ அந்த அளவுக்கு எளிதாக அவற்றை நாம் படிக்கமுடியும்.

இந்த ஏடுகளில் சில நெருப்பினுல் பொசுங்கி உருக் குலேந்துள்ளன. பூமிக்குள்ளிருந்து உருகிய கற்குழம்பு மேல்நோக்கிப் பாய்ந்ததையும் அந்தக் குழம்பு இறுகிக் கூம்பியமலேகள் உண்டானதையும் அந்த ஏடுகள் நமக்குத் தெரிவிக்கின்றன. பூமியின் மேலோடு எப்படி உயர்ந்து தாழ்ந்தது என்பதையும், அதன் மூலம் அது எப்படி முதலில் கடல்கள் வியாபிப்பதை அனுமதித்துவிட்டுப் பிறகு அவை பின்வாங்கும்படி செய்தது என்பதையும் வேறு சில ஏடுகள் தெரிவிக்கின்றன.

வெண்மையான கடல்சங்குகளாலான வெள்ளே ஏடு களுக்கு அடுத்தபடி நிலக்கரி போன்ற கருமையான ஏடுகள் உள்ளன. இந்த ஏடுகள் நிலக்கரியாலானவை. ஒருகாலத்தில், இப்பூமியில் வளர்ந்திருந்த பிரம்மாண்டமான காடுகளின் வர லாற்றைஇந்தக்கரிப்படிவுகளிலிருந்து உய்த்துணரலாம். சில இடங்களில், கரியாவதற்கு முன்னிருந்த காடுகளது இலே களின் குறிகளேயும், அந்தக் காடுகளில் வாழ்ந்த பிராணி களது எலும்புகளின் முத்திரைகளேயும் நிலக்கரியில் காண முடியும்.

எனவே, ஏடு ஏடாகப் படிக்கும்பொழுது நாம் பூமி யின் வரலாற்றை அறிந்துகொள்ள முடியும். இப்புத்த கத்தின் கடைசி ஏடுகளில்தான், நமது கதைத்தலேவனுன மனிதன் காட்சிதருகிருன்.

இந்தப் பெரிய புத்தகத்தின் தலேமைப் பாத்திரம் மனி தன் அல்ல என்றே ஆரம்பத்தில் நமக்குத் தோன்றும். பண்டைக்காலத்துப் பேருருப் பிராணிகளான தொல் யானேகளுக்கும், சடைக்காண்டா மிருகங்களுக்கும் அருகில் மனிதன் குட்டிப்பாத்திரமாகவே தோன்றுகிருன். ஆனுல் நாம் படிக்கப்படிக்க, புதிய பாத்திரமான மனிதன் முதலிடத்தை நோக்கி முன்னேறுவதை உணர்கிருேம்.

கடைசியில், மனிதன் இந்தப் பெருநூலின் தலைவனாக இருப்பதுடன், அதன் ஆசிரியர்களிலும் ஒருவனாக இருப்பதைக் காண்கிறோம்.

ஆற்றங்கரையிலுள்ள அந்த வளைவை உற்று நோக்குங்கள். பனியுகம் விட்டுச்சென்ற படிவுகளின் இடையே ஒரு சிறிய கரிய பாளம் புலனாகிறது. இந்தக் குறியை கரியே உண்டாக்கியுள்ளது. இந்தக்கரி இங்கு எப்படி வந்தது? மணலுக்கும் களிமண்ணுக்கும் இடையில் இந்தக் கரிப்பாளம் எப்படி வந்தது? ஒருவேளை இங்கு காட்டுத்தீ ஏற்பட்டிருந்திருக்கலாமோ?

காட்டுத்தீ விட்டுச்சென்ற அடையாளமானால், இந்தக் கரிப்பாளம் விரிந்த பிரதேசத்தில் வியாபித்திருக்கவேண்டும். ஆனால் இங்கு ஒரு சிறிய கரிப்பாளமே இருக்கிறது. சொக்கப்பனை மாதிரியான நெருப்பே இவ்வளவு சிறிய பாளத்தை விட்டுச் சென்றிருக்க முடியும். மனிதன்தான் அத்தகைய நெருப்பை உண்டாக்கியிருக்க முடியும்.

ஆம், உண்மைதான்; அதனால்தான் அந்தப் பாளத்துக் கருகில் இன்னும் மனிதனது கைச்சுவடுகள் சிலவற்றைக் காணமுடிகிறது; கற்கருவிகளையும் வேட்டையில் கொல்லப்பட்ட பிராணிகளது எலும்புகளையும் காணமுடிகிறது.

நெருப்பு, வேட்டைத்தொழில்—இவை இரண்டைக் கொண்டுதான் மனிதன் பனியுகத்தை எதிர்த்துநின்றான்.

## மனிதன் காட்டிலிருந்து கிளம்புகிறான்

கடுங்குளிரான வடவண்டைக் காடுகளில், மனிதனால் சேகரிக்கக்கூடிய உணவுவகை ஏதும் இல்லை. எனவே, அவன் வேறுவகைப்பட்ட பொருளை நாடினான். அவனால் பொறுக்கிச் சேகரிக்கக்கூடியவையாக, குறித்த இடங்களில் நிலையாகவிருந்த பொருட்களுக்குப் பதிலாகத் துரத்துவோனைக் கண்டு ஓடிஒளியும் பொருட்களை நாடினான்.

உலகின் வெதுவெதுப்பான பிரதேசங்களில் வாழ்ந்த மனிதனும், இந்தக் காலத்தில், இறைச்சியை உணவின் பகுதியாக அடிக்கடி உபயோகிக்கத் தொடங்கினன். இறைச்சி அவனுக்கு அதிகமான பலத்தையும் கூடுதலான மனநிறைவையும் அளித்தது. மேலும், புலால் உண்பதால், உணவு தேடுவதற்குத் தேவைப்பட்ட நேரம் குறைந்தது; வேலை செய்வதற்கு அதிக நேரம் கிடைத்தது. தவிர, மனிதனது மூளை வளர்ந்துகொண் டிருந்ததால், அதற்கு இறைச்சியைப்போன்ற புஷ்டிமிகுந்த உணவு தேவையாயிற்று.

மனிதன் தன் கருவிகளை மேம்படுத்த, மேம்படுத்த, வேட்டையாடுதல் அவனது வாழ்வில் மேன்மேலும் முக்கியமான பங்கை வகித்தது.

கதகதப்பான தென்பகுதியிலேயே வேட்டையாடுதல் அவசியமாகிக்கொண்டிருந்த தென்றல், வடபகுதியில், வேட்டையாடாமல் வாழமுடியா தென்ற நிலைமை ஏற்பட்டது. மனிதனது தேவைகளைப் பூர்த்திசெய்வதற்குப் போதுமான சிறுபிராணிகள் இப்பொழுது கிடைக்க வில்லை. அவன் பெரிய பிராணிகளை வேட்டையாட வேண்டியதாயிற்று. வடபகுதியில் பனிக்கட்டி மிகுந் திருந்ததால், வேட்டையாடுதல் கஷ்டமான காரியமாகவும் இருந்தது. எனவே, நீண்டகாலத்துக்குத் தேவையான இறைச்சியை இருப்பில் வைத்திருக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது.

எனவே, மனிதன் எத்தகைய பிராணியை வேட்டையாடத் தொடங்கினன்?

காடுகளில் பலவகைப்பட்ட பெரிய பிராணிகள் இருந்தன. திறந்த வெளிகளில் வளர்ந்த பாசியை உண்டு கலைமான்கள் வாழ்ந்தன. காட்டுப்பன்றிகள் பூமியைப் பெயர்த்தன. ஆனல் பேருருப் பிராணிகள் காட்டில் இல்லை. புதர்கள் வளர்ந்திருந்த சமவெளிகளில் அவை வாழ்ந்தன. காட்

டெருமைக் கூட்டங்கள் ஓங்கிஅடிவைத்து நடந்த பொழுது நிலமே நடுங்கியது; சமவெளி முழுவதும் அவற்றின் இடிமுழக்கம் கேட்டது. கம்பளி மயிரின் பாதுகாப்பை உடைய மாஸ்டோடன்கள், நகரும் மலை களைப்போல் மெள்ள நடந்தன.

இந்தப் பேருருப் பிராணிகளின் இறைச்சி ஆதிமனிதனைக் கவர்ந்தது. அவை அவனைக் கண்டு ஓடின. சதுப்புநில ஒளிமாதிரி அவை அவனைத் தம்பால் ஈர்த்தன.

எனவே, அவற்றைத் துரத்திக்கொண்டு ஓடிய மனிதன் தான் பிறந்து வளர்ந்த காட்டிலிருந்து வெளியேறினன். அவனது குடியிருப்புகள் சமவெளிகளிலும் பள்ளத்தாக்கு களிலும் அமைந்தன. மேன்மேலும் அவன் காட்டி லிருந்து தொலைவிலிருந்த இடங்களுக்குச் சென்றான். உணவுவகைகளைத் தேடிப் பொறுக்கிச் சேகரிப்பவனு யிருந்த காட்டுமனிதன் வாழ்ந்திராத இடங்களில், வாழ முடிந்திராத இடங்களில், காடுகளிலிருந்து நெடுந்தொலைவி லுள்ள இடங்களில், அவனது வேட்டைமுகாம்களின் அடையாளங்களும் அவற்றில் வளர்த்த தீயின் சின்னங் களும் காணப்படுகின்றன.

## விரித்துரைக்கவேண்டிய சொல்

வேட்டையில் கொல்லப்பட்ட பிராணிகளின் எலும்பு கள் ஆதிமனிதனது வேட்டைமுகாம்களில் கிடைக்கின் றன. குதிரைகளின் விலாஎலும்புகள், கால்நடைகளின் கொம்புடன் கூடிய மண்டையோடுகள், காட்டுப்பன்றிக ளின் வளைவான தந்தம்போன்ற பற்கள் ஆகியவை கிடைக் கின்றன. சில இடங்களில், இத்தகைய எலும்புகளின் பெருங்குவியல்களும் கண்டுபிடிக்கப்பட் டிருக்கின்றன; மனிதன் அவ்விடங்களில் நீண்டகாலம் தங்கியிருந்திருக்க வேண்டும்.

குதிரைகள், காட்டுப்பன்றிகள், காட்டெருமைகள் ஆகியவற்றின் எலும்புகளுக்கிடையே, கம்பளி யானை

களின் பிரம்மாண்டமான மண்டையோடுகளும் வில் வளைவான நீண்ட தந்தங்களும் துருவுமணை போன்ற பற்களும் நீண்ட கால்களும் நடுஉடலின் பகுதிகளும் கிடைத்திருப்பது விசேஷமாகும்.

கம்பளியானையைப் போன்ற ஓர் அசுரப்பிறவியைக் கொல்லக்கூடியவன் எவ்வளவு தைரியசாலியாகவும் பல சாலியாகவும் இருக்கவேண்டும்!

அந்த யானையின் ஒவ்வொரு கால் மட்டுமே கிட்டத் தட்ட ஒரு டன் எடையுடையதாயிருந்தது என்றால், அதன் மண்டையோடு மட்டுமே மனிதன் அளவுக்குப் பெரியதாக இருந்ததென்றால், அதன் பிணத்தை வெட்டு வதற்கும் தன் வேட்டைமுகாமுக்குத் தூக்கிச் செல் வதற்கும் அந்த மனிதன் மிகப் பெரிய பலசாலியாக இருந் திருக்கவேண்டு மல்லவா?

இன்று, யானைகளை வேட்டையாடிப் பிடிப்பதற்கு வேடர்கள் விசேஷஆயுதங்களை உபயோகிக்கிறார்கள். ஆதிமனிதனிடம் துப்பாக்கி, பீரங்கி முதலிய கருவிகள் இருந்ததில்லை. அவனிடம் கல்லில் செய்த கத்தி இருந்தது; கூர்செய்த கல்லை நுனியாகக்கொண்ட ஈட்டி இருந்தது. அவ்வளவுதான்.

உணவுகளைத் தேடிச் சேகரித்து வாழ்ந்த மனிதன் வேடனாக மாறுவதற்குள் பல்லாயிரமாண்டுகள் கழிந்தன என்பதும், அந்தக் காலத்தில் அவனது கற்கருவிகளும் மாறு தலடைந்து முன்னைவிடக் கூராயும் மேன்மையாயும் இருந் தன என்பதும் உண்மை. கல்லில் கத்தி அல்லது ஈட்டி முனை செய்வதென்றால், அதன் மேற்பாகத்தைச் செதுக்கி யெடுக்க வேண்டும்; சொரசொரப்பாய் இருப்பதை வழ வழப்பாக ஆக்கவேண்டும். அதன்பின் கூரான முனை யைச் செய்துகொள்ளவேண்டும்.

கல்லைப் போன்ற தகுதியில்லாத பொருளிலிருந்து கத்தி செய்வதற்குப் பெரிய திறமையும் நீண்ட நேரமும் தேவைப்

பட்டன. எனவே, ஒருதடவை அந்தத் கருவியைச் செய்த மனிதன் அதை உபயோகித்தபின் தூக்கி எறிய வில்லை; அதற்கு மாருக, அதைக் கவனமாகப் பாதுகாத் தான். அதன் முனை மழுங்கியபோது அதை மீண்டும் கூராக்கினுன். அவன் தன் வேலையையும் நேரத்தையும் போற்றியதால், அந்தக் கருவியை அரிய பொக்கிஷம்போல் பாதுகாத்தான்.

ஆனுல், நீங்கள் என்ன செய்தாலும், கல் கல்லாகத் தான் இருக்கமுடியும். கூர்நுனியை உடைய ஈட்டியைக் கொண்டு கம்பளியானையைப் போன்ற விலங்கை எதிர்த் துப் பொருத முடியாது. ஏனெனில், கம்பளி யானையின் தோல், எஃகால் செய்த கவசத்தின் தகடுமாதிரி கெட்டி யாக இருந்தது.

எனினும் மனிதன் கம்பளி யானைகளைக் கொன்ருன். ஆதி மனிதரது வேட்டை முகாம்களில் கிடைக்கும் மண்டை யோடுகளும் தந்தங்களும் இந்த உண்மையைப் பறைசாற்றுகின்றன.

இத்தகைய அசுரப் பிறவியை ஆதிமனிதன் எப்படிச் சமாளித்தான் ?

'மனிதன்' என்ற சொல்லை 'மக்கள் தொகுதி' என்று விரித்துரைத்தால்தான் நாம் இதை அறியமுடியும். தனி மனிதனுல் எந்தப் பெரிய மிருகத்தையும் அடக்கியிருக்க முடியாது. ஆனுல் மனிதன் தனியனுக இருந்திருந்தால் இன்றைய நிலையை அடைந்திருக்க முடியுமா? முடியாது. மனிதன் அல்ல; மனிதரின் கூட்டமே தன் கூட்டு பலத் தால் கருவிகளைச் செய்வதற்கும் எரியோம்புவதற்கும் வீடுகள் கட்டுவதற்கும் உலகத்தையே மாற்றி யமைப் பதற்கும் கற்றுக்கொண்டது.

ராபின்சன் க்ரூஸோ தனது விடாமுயற்சியால் தன் தேவைகள் அனைத்தையும் பூர்த்தி செய்துகொண்டான் என்பது கதை. பூர்வீக வேடனும் ராபின்ஸன் க்ரூஸோ

வகையைச் சேர்ந்தவனே என்று சித்திரிக்கும் நூல்கள் உள்ளன. ஆனால் உண்மையில் மனிதன் ராபின்ஸன் க்ருஸோவைப் போல் தன்னந் தனியாக வாழ முற்பட்டிருந்தால், ஜனங்கள் சமுதாயங்களில் வாழாது தனித் தனிக் குடும்பங்களில் வாழ முற்பட்டிருந்தால், அவர்கள் ஒருபொழுதும் ஒரு ஜனசமுதாயமாக ஆகியிருக்க முடியாது ; நாகரிகத்தையும் படைத்திருக்க முடியாது.

உண்மையில் டீபோவின் நூல், *ராபின்ஸன் க்ருஸோவின் வாழ்வை உண்மையாகப் பிரதிபலிக்கவில்லை. ஒரு காலத்தில் உண்மையாக வாழ்ந்த ஒரு மாலுமியின் கதையைத்தான் டீபோ தம் நவீனத்துக்கு அஸ்திவாரமாக எடுத்துக் கொண்டார். அந்த மாலுமி கடலில் சென்று கொண்டிருந்த கப்பலில் கலகத்தைத் தூண்டிவிட்டான். அதனால் அவர்கள் அவனைக் கடலின் இடையில் இருந்த ஜனசஞ்சாரமற்ற சிறு தீவில் விட்டுச் சென்றனர். பல ஆண்டுகட்குப் பின்னர், சில யாத்திரீகர்கள் அந்தத் தீவுக்குச் சென்றனர். அப்பொழுது அந்தத் தீவில் தன்னந் தனியனாக வாழ்ந்த அம் மாலுமியைக் கண்டனர். ஆனால் அந்தக் கிழவன் எப்படி உரையாடுவது என்பதைக் கூடப் பெரும்பாலும் மறந்துவிட்டான். அவன் மனிதனைவிடக் காட்டு விலங்கையே பெரிதும் ஒத்திருந்தான்.

நம் காலத்தில் கூட, நீண்டகாலம் தனிமையில் வாழும் மனிதனால் மனித இயல்புடன் இருக்க முடியாதென்றால், ஆதிமனிதனிடம் நாம் என்ன எதிர்பார்க்கமுடியும் !

மனிதர்கள் சேர்ந்து வாழ்ந்ததாலும் கூட்டாக வேட்டையாடியதாலும் ஒன்றுபட்டுக் கருவிகளை உண்டாக்கியதாலுமே, அவர்கள் மனித இயல்பை அடைந்தனர். ஒரு

---

* ராபின்ஸன் க்ருஸோ: பதினாறு பதினேழாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஆங்கில எழுத்தாளரான டேனியல் டீபோ எழுதிய கதை. இதுவே ஆங்கிலத்தில் தோன்றிய முதல் நாவல் என்பது சிலர் கருத்து. கடற்கொந்தளிப்பில் சிக்கிய கப்பலிலிருந்து தப்பிய க்ருஸோ, ஜனசஞ்சாரமில்லாத தீவை அடைந்து, அங்கு பெறும் அனுபவங்களை விவரிக்கும் நெடுங்கதை.

குலத்தைச் சேர்ந்தவர் அனைவரும்சேர்ந்து பெரும் பிராணிகளை வேட்டையாடினார்கள். பெரும் பிராணியின் மயிரடர்ந்த நடு உடலில் ஒரு ஈட்டி அல்ல, பல ஈட்டிகள் பாய்ந்தன. பல கரங்களையும் பல கால்களையும் உடைய பிராணியைப் போல், மனிதர்கூட்டம் கம்பளி யானைகளை வேட்டையாடியது. பல கரங்கள் மட்டுமல்ல, பல தலைகளும் செயல்பட்டன.

கம்பளியானை மனிதனைவிடப் பன்மடங்கு பெரியது; பன்மடங்கு அதிகமான பலத்தை உடையது. ஆனால் ஜனங்களோ, கம்பளி யானையைவிடப் புத்திசாலிகளாயிருந்தனர்.

கம்பளி யானை மிகவும் அதிகமான எடையை உடையது. எனவே, மனிதனை மிதித்துக் கொல்வதென்பது அதற்கு மிகவும் எளிதான காரியம். நிலத்தால் தாங்க முடியாது என்று சொல்லக்கூடிய அளவுக்கு அதன் எடை இருந்ததைப் பயன்படுத்தியே மக்கள் அதைத் தோற்கடித்தனர்.

அவர்கள் யானை வசித்த சதுப்புநிலத்தைச் சூழ்ந்து கொண்டு அதில் தீ வைத்து வளர்த்தனர். அந்தத் தீயின் ஜ்வாலையில், யானையின் கண்கள் கூசின; அதன் கம்பளி மயிர் பொசுங்கிப் புகைந்தது. தீ துரத்திய வழியில் யானை ஓடியது; இறுதியில் மனிதனது சாமர்த்தியமான திட்டம் வெற்றி கண்டது: தீயால் துரத்தப்பட்ட யானை உளையில் சிக்கியது.

பீதியடைந்து அலறிய கம்பளி யானை, முதலில் ஒரு காலையும் பிறகு இன்னொரு காலையும் உளையிலிருந்து இழுக்க முயன்றது. ஆனால் அது கடுமையாக முயல முயல, மேன்மேலும் கால்கள் உளையில் ஆழ்ந்தன. அதன்பின், அதைக் கொல்வதைத் தவிர, ஜனங்களுக்கு வேறு என்ன வேலை ?

பிரம்மாண்டமான யானையை வேட்டையாடிக் கொல்வது சிரமமான காரியம். ஆனால் அதைத் தம் முகாமுக்கு

இழுத்துச்செல்ல அவர்கள் மேலும் அதிகமாகப் பாடு பட்டார்கள். வெள்ளத்தால் விபத்து ஏற்படக்கூடா தென் பதற்காக, உயரமான ஆற்றங்கரையில் முகாமை அமைப் பதே ஆதிமனிதர்களின் வழக்கம். ஆற்றுநீரைக் குடிப் பதற்குப் பயன்படுத்தியதாலும், ஆற்றின் மணல் திடர் களில் கருவிகளுக்கு வேண்டிய கற்களைத் தேடிப் பொறுக்கியதாலும், அவர்கள் ஆற்றங்கரைமுகாமை விரும்பியதில் வியப்பில்லை.

இதன் பொருள் என்ன? யானையின் பிணத்தைக் குழி வான உளையிலிருந்து உயரமான ஆற்றங்கரைக்கு இழுத்துக் கொண்டு போகவேண்டும். இங்கும் ஒருஜோடிக் கைகள் மட்டும் செயல் படவில்லை; பல டஜன் கைகள் செயல் பட்டன. யானையின் கெட்டியான தோலையும், உறுதியான தசைநார்களையும் பெரிய தசைகளையும், கூராக்கப் பட்ட கற்களால் சிதைத்து வெட்டி அறுத்தார்கள். அசாத்தியப் பொறுமையுடன் இக்காரியத்தைச் செய்தார்கள். அனுபவம் மிகுந்த கிழவர்கள், தலையையும் கால்களையும் விரைவாகத் துண்டிப்பதற்கு மூட்டுகளில் வெட்டும்படி சொல்லி, அம் மூட்டுகளைக் காட்டினார்கள். உடலை வெட்டிய பின், அந்தப் பாகங்களை முகாமுக்குக் கொண்டுசென்றனர்.

பலர் சேர்ந்தாற்போல் கூச்சலிட்டுக்கொண்டு காலை யோ அல்லது நடு உடலுடன் இணைந்திருந்த தலையையோ தரதரவென்று தரையில் இழுத்துச்சென்றனர்.

அவர்கள் முகாமை அடைந்தபொழுது வேர்வையில் நனைந்து மிகவும் களைத்திருந்தனர். எனினும் அவர்கள் எவ்வாறு கொம்மாளம் அடித்தனர்! கம்பளியானை யென்றால், நீண்ட காலமாகக் கிடைத்திராத உயர்ந்த விருந்து கிடைக்கு மென்பதை அறிந்தவர்கள் அல்லவா? மேலும், ஒரு கம்பளியானை பல நாட்களின் உணவுத் தேவையை நிறைவு செய்யுமென்பதையும் அவர்கள் அறிந்திருந்தனர்.

## போட்டியின் முடிவு

மனிதனுக்கும் இதர பிராணிகளுக்கும் இடையே நிகழ்ந்த போட்டி முடிவுற்றது. இறுதியில் மனிதன் வெற்றிபெற்ருன். அவன் பிராணிகளில் மிகப் பெரிய இனத்தையே தோற்கடித்து விட்டான்.

இது ஒரு பந்தயம் என்று சொல்வதைவிட உணவுக்காக நிகழ்ந்த போட்டி என்று கூறுவதே ஏற்புடைத்து. யார் யாரை உண்பது என்ற கேள்வி எழுந்தது. மனிதன் பிற பிராணிகளே உண்பவனுக ஆனுன்; இதர பிராணிகளால் மனிதனே உண்ணமுடியவில்லே.

இதன் விளேவாக, உலகத்தில் மாந்தரின் தொகை வேகமாகப் பெருகியது. ஒவ்வொரு நூற்ருண்டிலும் ஒவ்வொரு ஆயிர மாண்டிலும், ஜனத்தொகை அதிகரித்து வந்ததால், உலகம் முழுவதும் ஜனங்கள் குடியேறிஞர்கள்.

இந்த உண்மையிலிருந்து நாம் உணர்வது யாது? வேறு எந்தப் பிராணிக்கும் நிகழமுடியாத ஒன்று, மனித சமூகத்தில் நிகழ்ந்தது.

உதாரணமாக, மனிதர்களேப்போல் குழிமுயல்களின் எண்ணிக்கை பெருகுவது சாத்தியமா?

சாத்தியமில்லே என்பதை நீங்கள் ஊகிக்கமுடியும். ஏனெனில், கோடானுகோடிக் குழிமுயல்களுக்கு உலகில் உணவு கிடைக்காது. மேலும், குழிமுயல்களின் எண்ணிக்கை அதிகரித்தால், ஓநாய்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கும். குழிமுயல்களின் எண்ணிக்கை மீண்டும் குறைவதற்கு ஓநாய்கள் வழிசெய்துவிடும்.

அதாவது, உலகிலுள்ள பிராணிகளின் தொகை வரையறை இல்லாமல் அதிகரிக்க முடியாது. அவற்றுக்கு ஒரு குறிப்பிட்ட வரம்பைக் கடப்பது கடினமாயிருக்கிறது. ஓரினப் பிராணிகளின் தொகை எதைப் பொறுத்திருக்கிறது? அவை எதை உண்கின்றன என்பதையும்,

எது அவற்றை உண்கின்றன என்பதையும் பொறுத்திருக்கிறது. சில சந்தர்ப்பங்களில், மனிதருக்குப் பெருந்தொல்லையாக ஆகும்அளவுக்குக் குழிமுயல்களின்* எண்ணிக்கை அதிகரிப்பது மெய்தான். ஒரு தடவை, ஐரோப்பாவிலிருந்து ஆஸ்திரேலியாவிற்குள் குழிமுயல்களை இறக்குமதி செய்தபொழுது, அங்கு அம்மாதிரியான நிலைமை ஏற்பட்டது. குழிமுயல்கள் அளவுக்கு மீறிப்பெருகியதால் தோட்டங்களை அவற்றிடமிருந்து பாதுகாக்க முடியவில்லை.

ஆஸ்திரேலியர்கள், தம் தேசத்தில் முழிமுயல் தொகையைக் குறைக்கவும், சீர்குலைந்த சமநிலையை மீண்டும் நிறுவவும் விரும்பினுர்கள். எனவே, குழிமுயல்களின் தொகையைக் குறைக்கக்கூடிய ஒருவகை நரிகளை ஐரோப்பாவிலிருந்து தருவித்தார்கள்.

மனிதன் இயற்கையின் முறையைத் தானே குலைத்து மீண்டும் அதைச் சீர்செய்வதை இந்த உதாரணத்திலிருந்து அறிகிருேம்.

மனிதனைப்பொறுத்தவரை, அவன் தன்போன்ற பிராணிகளுக்கு இயற்கையில் அமைந்த கட்டுப்பாடுகளையும் தளைகளையும் நீண்டகாலத்துக்கு முன்பே நீக்கிவிட்டான். அவன் கருவிகளைச் செய்யவும், புதிய உணவுகளைப் புசிக்கவும் முன்பே தொடங்கிவிட்டான் ; தன்னிடம் மன விரிவுடன் நடந்துகொள்ளும்படி இயற்கையை நிர்ப்பந்தித்தான். முன்ஞல் ஒரு மனிதர்கூட்டத்துக்கே போதுமான உணவு கிடைத்தது என்ருல், அந்த இடத்தில் இப்பொழுது இரண்டு அல்லது மூன்று கூட்டங்கள் வாழ்ந்தன.

---

* குழிமுயல்: இது காட்டு முயலைப் போன்ற தோற்றத்தை உடையது; ஆனுல் பூனையைவிடச் சிறியது. குழிபறித்து அதில் வாழ்வதால்,இதற்குக் குழிமுயல் என்று பெயர். இது தடவைக்கு 6, 7 குட்டிகள் போடுவதாலும், ஆண்டுக்கு ஏழுதடவைகள் குட்டி போடுவதாலும், இந்த இனம் எளிதில் பெருகும். கோஸ்கீரை, முள்ளங்கி முதலியவற்றைத் தின்றுவாழும் பிராணியானதால், இது அளவுக்குமீறிப் பெருகினுல், தோட்டத்துக்கு ஆபத்துதான்!

அவன் பெரும் பிராணிகளை வேட்டையாடத் தொடங்கியபொழுது, இயற்கையில் அவன் வகித்த ஸ்தானம் மேலும் பெரிதாயிற்று.

இப்பொழுது, உண்பதற்காகத் தாவரங்களைத் தானே சேகரிக்கவேண்டிய நிர்ப்பந்தம் அவனுக்கு இல்லை. காட்டெருமையும் குதிரையும் கம்பளியானையும் அவனுக்காகத் தாவரங்களைச் சேர்த்தன. இந்த விலங்குகள் மந்தை மந்தையாகச் சமவெளியில் திரிந்து மலை மலையாய்ப் புல்லை மேய்ந்து தின்றன. நாள்தோறும், ஆண்டுதோறும், அவை மேன்மேலும் கொழுத்துக்கொண்டு வந்தன. எனவே, மனிதன் பல்லாண்டுகளில் சேகரிக்கக்கூடிய ஊட்டத்தையும் சக்தியையும் ஒரு காட்டெருமை அல்லது கம்பளி யானையைக் கொல்வதன்மூலம் அடைந்தான்.

மாந்தருக்கு உணவைச் சேமித்துக்கொள்வதும் அவசியமாயிற்று. பனிப்புயலும் உறை பனிப்புயலும் வீசிய பொழுதும் கடுங்குளிரால் உடம்பு சில்லிட்டுப் போன பொழுதும், வேட்டையாட முடியாது. வருடம் முழுவதும் வெதுவெதுப்பாயிருந்த பழங்காலம் சென்றொழிந்து விட்டது.

ஆனால் ஒரு மாற்றத்தால் இன்னொன்று விளைகிறது. மனிதன் உணவுப்பொருளைச் சேமிக்கத் தொடங்கியபின், அவன் நீண்டகாலத்துக்கு ஓரிடத்திலேயே தங்கவேண்டியதாயிற்று. இடம்விட்டு இடம் செல்வது முன்போல் எளிதாயில்லை. கம்பளியானையின் உடம்பை இழுத்துக் கொண்டு அலையமுடியாதல்லவா ?

மானிடன் வீடு இல்லாத நாடோடியாகக் காலந் தள்ளிய நிலைக்கு முடிவுகண்டதற்கு வேறு காரணங்களும் இருந்தன. முன்னெல்லாம், தன்னைக் கொல்ல வரும் விலங்குகளிடமிருந்து அவன் எந்த மரத்தின்மீதும் பாதுகாப்புத்தேட முடிந்தது. இப்பொழுது அவன் கொடிய விலங்குகளைக் கண்டு அஞ்சவில்லை. ஆனால் அவனுக்கு

இப்பொழுது இன்னொரு பகை உண்டாகிவிட்டது. அதுவே கடுங்குளிர். இந்தப் புதிய பகையிடமிருந்து தன்னைக் காத்துக்கொள்வதற்கு அவன் நம்பகமான மறைவிடம் தேடவேண்டியதாயிற்று.

## மனிதன் இன்னோர் பிரபஞ்சத்தைப் படைக்கிறான்

இந்தக் கடுங்குளிரான பெரிய உலகில் தனக்கே உரித்தான கதகதப்பான சிறிய உலகை மனிதன் நிர்மாணிக்கத் தொடங்கும் காலம் வந்தது.

குகையின் வாயிலிலோ முன்னால் புடைத்துக்கொண்டிருந்த குன்றுச்சிகரத்தின் அடியிலோ, மனிதன் தோல்களாலும் கிளைகளாலும் ஆன தனது சொந்த வானத்தைப் படைத்துக்கொண்டான். இந்த வானத்துக்குக் கீழ், மழை பெய்யாது; பனிகொட்டாது; காற்று அடிக்காது. அவன் தனது சிறிய உலகத்தின் நடுவில் எரியும் கதிரவனை வைத்தான். அந்தச் சூரியன் இரவிலும் வெளிச்சம் தந்தான்; குளிர்காலத்திலும் வெப்பம் அளித்தான்.

பூர்வீக வேடர்களது குடியிருப்புகள் இருந்த இடங்கள் சிலவற்றில், இன்னும் சில ஓட்டைகளைக் காணலாம். மனிதன் உண்டாக்கிய 'ஆகாயமான' குடிசைக் கூரையை நிலைநிறுத்துவதற்காக இந்தத் துளைகளில்தான் கம்புகள் ஊன்றியிருந்தனர். அந்தத் 'தூண்'களால் சூழப்பட்ட மனையின் நடுவில், இன்றும் தீய்ந்த கற்களைக் காண்கிறோம். செயற்கைக் கதிரவனான வீட்டுத்தீயைச்சுற்றி வைக்கப்பட்டிருந்த கற்களே அவை.

அந்தக்குடிசைகளது சுவர்கள் இடிந்து தூள்தூளாகி க்ஷீணித்துவிட்டன. ஆனால், சுவர்களைப் பார்க்கமுடியாவிட்டாலும் அவை இருந்த இடத்தைப் பிழையின்றி அறிந்துகொள்ள நம்மால் முடியும். இந்தச் சிறுஉலகின் (குடிசையின்) உட்புறம் முழுவதுமே அதனைப் படைத்தவன் மனிதனே என்பதை எடுத்துக்காட்டுகிறது.

கல்லில் செய்த கத்திகளும், சுரண்டு கருவிகளும், கல் துகள்களும், சிம்புகளும், பிராணிகளது எலும்புகளும், அடுப்புக் கரியும், சாம்பலும், மண்ணுடனும், மணலுடனும் கலந்து இருக்கின்றன. மனிதனது கை படாத இடத்தில் இத்தகைய கலவையைக் காணமுடியாது.

நீண்டகாலத்துக்குமுன் குடியிருப்பாகப் பயன்பட்ட அந்த மனையின் கட்புலனாகாத சுவர்களைக் (அவை இடிந்து அழிந்துவிட்டதால் புலனாகவில்லை) கடந்து சில அடிதூரம் செல்லுங்கள்; அங்கு மனிதனது கைவேலையின் சின்னம் எதையும் காணமுடியாது. கருவிகள், கரி, சாம்பல், எலும்பு கள் ஆகியவை எதுவும் அங்கே கிடைக்காது.

எனவே, மனிதன் படைத்த இரண்டாவது உலகம் ஆரம்பத்தில் புறஉலகத்திலிருந்து வேறுபட்டதாக, கட் புலனாகாத நான்கெல்லைக்கு உட்பட்டமனையிலேயே அமைந் திருந்தது என்பதை உணர்கிறோம்.

மனிதரது கைவேலையின் அடையாளங்கள் புலப்படும் இடங்களில் பூமியைக் கிளறித் தேடும்பொழுதும் கல்லில் செய்த கத்திகளையும் சுரண்டுகருவிகளையும் பரிசீலிக்கும் பொழுதும், நீண்ட காலத்துக்குமுன் எரிந்த அடுப்பில் எஞ்சியுள்ள கரியைக் கையிலெடுத்து ஆராயும்பொழுதும் நமக்கு ஓர் உண்மை தெளிவாகப் புலனாகிறது. அது என்ன? பழைய உலகம் அழிந்தபோதும், மனிதனுக்குரிய உலகம் அழியவில்லை. இது எப்படிச் சாத்தியமாயிற்று? அவன் தனக்கே உரிய சிறு உலகை அமைத்துக்கொள்வ தில் வெற்றிகண்டதால் இது சாத்தியமாயிற்று.

## அத்தியாயம்—5

# ஆயிரமாண்டுப் பயிற்சிநிலையம்

## கடந்தகாலத்துக்கு முதல்பயணம்

காட்டெருமை, கம்பளியானை ஆகியவற்றை வேட்டையாடிய மக்களின் முகாம்களில் இரண்டு வகையான கற்கருவிகளைக் காண்கிறோம்; ஒன்று பெரியது; இன்னொன்று சிறியது.

பெரிய கற்கருவி கனமானது; முக்கோண வடிவிலுள்ளது; இருபுறங்களிலும் கூரானது. சிறிய கற்கருவி, பெரிய கல்லிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட நீளமான சிம்பு. அந்த மெல்லிய சிம்பின் ஒரு விளிம்பே கூராக்கப்பட்டிருக்கிறது.

இரண்டும் இரண்டு விதமாகப் பயன்பட்டிருக்க வேண்டுமென்பது வெளிப்படை. தனித்தனியான உபயோகமில்லாவிடில் அவை வெவ்வேறு பாணியில் அமைய வேண்டியதில்லை.

அவை எப்படிப் பயன்பட்டன என்பதை நாம் எவ்வாறு கண்டுபிடிப்பது? அவற்றை உற்று நோக்குவதன் மூலமே அவற்றின் பயன்களைப்பற்றி நாம் சிறிது சொல்ல முடியுமென்பது உண்மை. இரண்டுமே கூரானவை. எனவே அவை வெட்டுவதற்கோ பிளப்பதற்கோ பயன்பட்டன என்பது புரிகிறது. ஒன்று இன்னொன்றை விடப் பெரிதாகவும் கனமாகவும் உள்ளது. எனவே, அது முரட்டு வேலைக்குப் பயன்பட்டிருக்க வேண்டும். அதைப் பார்க்கும்பொழுதே, அதை ஆள்வதற்கு நிறையப் பலம் வேண்டுமென்பதும் புலனாகும். ஆனால் அது எத்தகைய வேலைக்குப் பயன்பட்டது என்று கறாராக வரையறுப்பது எப்படி?

கற்காலத்துக்குச் சென்று அந்த ஜனங்கள் நமது கற் கருவிகளை எப்படிப் பயன்படுத்தினார்கள் என்பதை நேரில் கண்டறிவதே சிறந்த வழி.

"நாம் பத்தாண்டுகட்குமுன் சென்று சில நிகழ்ச்சி களைக் காண்போம்" என்று ஆசிரியர் கூறுவதை நாவல் களில் அடிக்கடி படிக்கிறோம். நாவலாசிரியர்களால் அம் மாதிரி சொல்லமுடியும். அவர்கள் தமக்குப் பிடித்தமான முறையில் பிடித்தமான இடங்களுக்குச் செல்லமுடியும். அவர்கள் தமது கதைத் தலைவர்களைப் பற்றி என்ன வேண்டுமானாலும் எழுதலாம். ஆனால், நிஜக் கதையை எழுதும் நாம், அம்மாதிரி செய்ய முடியாது. மேலும் நாம் ஏதோ பத்து இருபது ஆண்டுக்கு முற்பட்ட காலத்துக்குச் சென்றால் போதாது; பத்தாயிரக் கணக்கான ஆண்டுகட்கு முந்தைய காலத்துக்குச் செல்லவேண்டும்.

இத்தனை பிரதிகூலங்கள் இருந்தபோதிலும் நம்மால் கற்காலத்துக்குச் செல்ல முடியும்.

நீங்கள் இந்தப் பயணத்தை மேற்கொள்ள விரும்பினால் இத்தகைய நீண்டபயணத்தில் உங்களுக்குத் தேவைப் படும் சாதனங்களை முதலில் திரட்டிக் கொள்ள வேண்டும். முதன் முதலில் கூடாரத்துணி, கூடாரக் கால்களாக இணைத் துப் பூட்டுவதற்கேற்ற சின்ன மூங்கிற் கழிகள், கூடாரக் கயிறுகளைக் கட்டுவதற்கான முளைகள், முளைகளை அடிப் பதற்கான சம்மட்டி ஆகியவற்றைச் சம்பாதிக்கவேண்டும். இவை அனைத்தும் கைப் பையில் அடங்கவேண்டும். அத்தகைய கூடாரத்துக்கு விலை அதிகம்தான். கூடாரம் மட்டும் இருந்தால் போதாது. சூரிய வெப்பத்திலிருந்து பாதுகாப்புப் பெறுவதற்காக நெட்டியில் செய்த தொப்பி வேண்டும்; ஒரு கோடாரி, ஒரு கெட்டில், ஒரு ஸ்டோவ்-அடுப்பு, ஒரு கிண்ணம், ஒரு தேக்கரண்டி, ஒரு திசை காட்டி, ஒரு நிலப்படம் ஆகியவையும் தேவை. இவை அனைத்தையும் உங்களது பிரயாணப் பையில் வைத்துக் கொள்ளுங்கள் துப்பாக்கி எடுத்துக்கொள்ள மறந்து

விடாதீர்கள். கற்காலத்தில் வேட்டையாடாது வாழ முடியாது. இனி அண்மையிலுள்ள துறைமுகத்துக்குச் சென்று கப்பற்பயண டிக்கட் ஒன்று வாங்கிக்கொள்ளுங் கள்.

நீங்கள் கற்காலத்துக்குப் போகவிருப்பதாக டிக்கட் விற்பவரிடம் சொல்லாதீர்கள். அம்மாதிரி சொன்னீர் களானல், உங்களுக்குக் கப்பற்பயண டிக்கட் கொடுப் பதற்குப் பதிலாக, பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கே டிக்கட் கொடுத்து அனுப்பவேண்டுமென்று அவர் எண்ணுவார்!

"கற்காலத்துக்குச் சென்று திரும்புவதற்கான டிக்கட்" என்று டிக்கட் மீது எழுதியிருக்காது. அது ஒரு சாதாரண கப்பற்பயண டிக்கட்டாகவே இருக்கும்: "மெல்பர் னுக்குச்* செல்வதற்கான டிக்கட்" என்றே அதில் குறிப் பிடப்பட்டிருக்கும்.

சில வாரங்களில் கப்பல் நீங்கள் போக வேண்டிய இடத்துக்கு உங்களைக் கொண்டு போய்ச் சேர்த்துவிடும். இன்றும் கற்கருவிகளை உபயோகிக்கும் ஜனங்கள் ஆஸ் திரேலியாவில் இருப்பதால், நீங்கள் அங்கு போகிறீர்கள். அதாவது, காலவழிப் பயணத்துக்குப் பதிலாக இடவழிப் பயணம் செய்கிறீர்கள். எச். ஜி. வெல்ஸ் காலயந்திரத் தைப் பற்றி விவரிக்கிரு ரல்லவா? கப்பல் அத்தகைய யந்திரமாகப் பயன்படுகிறது.

கற்கருவிகளை உபயோகிக்கும் மக்கள் ஆஸ்திரேலியா வில் வாழ்வதால், கற்கருவிகளின் உபயோகத்தைப்பற்றி அறிவதற்கு அங்கு செல்லுகிறேம். வறட்சியான பாலை வனம் வழியே போகிறேம். ஆங்காங்கே முட்செடிப் புதர்கள் தென்படுகின்றன. இதோ, தேசத்தின் உட்பாகத் துக்கு, ஆஸ்திரேலிய வேடர்கள் வாழும் பிரதேசத்துக்கு, வந்துவிட்டோம். ஆற்றங்கரையில், மரங்களின் அடியில்,

* மெல்பர்ன்: ஆஸ்திரேலியாவில் உள்ள பெரிய நகரங்களில் ஒன்று; விக்டோரியா மாகாணத்தின் தலைநகர்.

தோல்களையும் மரக்கிளைகளையும்கொண்டு அமைக்கப் பட்ட குடிசைகளைக் காண்கிறோம்.

குடிசைகளின் அருகில், குழந்தைகள் விளையாடு கின்றன. ஆடவரும் பெண்டிரும் பூமிமீது அமர்ந்து வேலை செய்துகொண் டிருக்கின்றனர். அடர்த்தியான ரோமமும் நீண்ட தாடியும் உடைய ஒரு கிழவன், வேட் டையில் கொல்லப்பட்ட கங்காரு மிருகத்தின் தோலை உரித்துக் கொண்டிருக்கிறான். அவன் முக்கோண வடி வான கற்கத்தியை உபயோகிக்கிறான். ஆம், நாம் எந்தப் பெரிய கற்கருவியைக் காண்பதற்காக இந்த நீண்ட பிர யாணத்தை மேற்கொண்டோமோ, அதேமாதிரியான கருவிதான் இது. அவன் அருகில் ஒரு மாது நீண்டதும் மெல்லியதும் கூரானதுமான கல்லால் ஆடைக்குத் தோலை வெட்டிக் கொண்டிருக்கிறாள். இதுவும் நமக்கு அறிமுக மான கருவிதான். இம்மாதிரியான குறுகலான நீண்ட கத்திகள், ஐரோப்பாவில் ஆதிமனிதர்களது வேட்டை முகாம்களில் கிடைக்கின்றன.

நம் காலத்தில் வாழும் ஆஸ்திரேலிய சுதேசிகள் ஆதிக் குடிகளாக இருக்கிறார்கள் என்பது இதன் பொருளல்ல. பூர்வகுடிகளின் காலத்துக்குப்பின் ஆயிரக்கணக்கான தலைமுறைகள் கடந்த பிறகு வாழ்வோரே இந்த மக்கள். அவர்கள் உபயோகிக்கும் இந்தக் கற்கருவிகள், கடந்த காலத்தின் மீத மிச்சங்களே. ஆனால், இவை நமக்குப் பல விஷயங்களை உணர்த்துகின்றன, இவர்கள் வேலை செய் வதைப் பார்க்கும்பொழுது, முக்கோணக் கத்தி ஆடவனது கருவி, வேடனது கருவி என்பதை அறிந்துகொள்கிறோம். அவர்கள் விலங்குகளைக் கொல்வதற்கும் அவற்றின் தோலை உரிப்பதற்கும் உடலை நறுக்குவதற்கும் இதைப் பயன்படுத்துகிறார்கள். சின்னக் கத்தியை வீட்டு வேலை செய்யும் பெண்கள் உபயோகிக்கிறார்கள். அதனால் அவர்கள் ஆடைக்குத் தோல்வெட்டுகிறார்கள்; தோல்

பட்டைவார்களை அறுக்கிருர்கள் ; தோலைச் சுரண்டு கிருர்கள்.

ஆதிமனிதன் வேட்டுகை இருந்தபொழுதே, ஆதிக் குடிகளிடையே வேலைப்பிரிவினை ஏற்படத் தொடங்கியது. அதைத்தான், இந்த இரு கருவிகளுக்கிடையே உண்டாகி யிருக்கும் வேலைப்பிரிவினை உணர்த்துகிறது.

வேலை மேன்மேலும் சிக்கலாகிக் கொண்டிருந்தது. அதைத் திறமையாகச் செய்து முடிப்பதற்காக, ஒருவன் ஒரு வேலையையும் இன்னெருவன் வேறு வேலையையும் செய்யவேண்டிய தாயிற்று. ஆடவர்கள் விலங்குகளைக் கண்டு துரத்திக் கொன்றபொழுது, பெண்கள் வாளா விருக்கவில்லை. பெண்கள் குடிசைகளைக் கட்டினுர்கள்; கிழங்குகளைச் சேகரித்தார்கள்; கையிருப்பிலிருந்த பொருட் களைப் பாதுகாத்தார்கள்.

இளைஞருக்கும் முதியோருக்கு மிடையே இன்னெரு வேலைப்பிரிவினை ஏற்பட்டது.

## ஆயிரமாண்டுப் பயிற்சி

எந்த வேலையைச் செய்யவேண்டுமானுலும், அதை எப்படிச் செய்வது என்பதை முதலில் கற்றுக்கொள்ள வேண்டும். இந்த அறிவு விண்ணிலிருந்து இறங்குவதல்ல. இதை யாரிடமிருந்தாவது படித்துக்கொண்டாகவேண்டும்.

ஒரு தச்சன் தானே கோடரியையும் ரம்பத்தையும் இழைப்புளியையும் தன் யுக்தியால் கண்டுபிடித்து உண்டாக்கிக்கொண்டு, அவற்ருல் வேலை செய்யும் முறை யையும் அறிந்து கொள்ளவேண்டு மென்ருல், இவ்வுலகில் ஒரு தச்சன்கூட இருக்கமுடியாது.

பூகோளம் கற்றுக் கொள்வதற்காக, நாம் ஒவ்வொரு வரும் உலகத்தைச் சுற்றிவரவேண்டு மென்றும் அமெரிக் காவை மீண்டும் கண்டுபிடிக்கவேண்டு மென்றும் ஆப் பிரிக்காவை ஆராய வேண்டுமென்றும் எவரெஸ்ட் மலை

முடியை ஏற வேண்டுமென்றும் சகல முனைகளையும் பூசந்தி களையும் எண்ணிக் கணக்கிட வேண்டுமென்றும் ஆகி விட்டால், நாம் ஒவ்வொருவரும் ஆயிரம் மடங்கு அதிக காலம் இவ்வுலகில் வாழ்ந்தாலும் பூகோளத்தை முழுமை யாக அறிந்து கொள்ள முடியாது.

நமது முன்னேற்றம் அதிகரிக்க அதிகரிக்க, நாம் கற்க வேண்டிய விஷயங்களும் பெருக்க மடைகின்றன. செய்தி கள், கண்டு பிடிப்புகள், அறிவு ஆகியவற்றின் சேமிப்பு நிதி தலைமுறைக்குத் தலைமுறை அதிகரிக்கிறது. ஒவ்வொரு தலைமுறையும் அதற்கு முந்தைய தலைமுறையைக் காட் டிலும் அதிகமான அறிவுச்செல்வத்தைப் பிதுரார்ஜித சம்பத் தாகப் பெறுகிறது.

இருநூறு ஆண்டுகட்கு முன்பு, பதினாறு வயதானவர் கள் கூட, பேராசிரியர்களானார்கள். இப்பொழுது அந்த வயதில் பேராசிரியராக முயன்று பாருங்கள் !

உயர்தரப் பள்ளிக்கூடப் படிப்பை முடிப்பதற்கே பன்னிரண்டு ஆண்டுகள் தேவைப் படுகின்றன. எதிர் காலத்தில், இன்னும் அதிகமான ஆண்டுகள் படிக்க வேண் டியதாக விருக்கும். ஏனெனில், ஒவ்வோர் ஆண்டிலும் ஒவ்வொரு விஞ்ஞானத் துறையிலும் புதிய புதிய விஷயங் கள் கண்டு பிடிக்கப் படுகின்றன ; மேலும் விஞ்ஞானத் துறைகளின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டேயிருக் கிறது. பௌதீக இயல் என்பது அண்மைக் காலம் வரை யில் ஒரே துரையாகத்தான் இருந்தது. இப்பொழுது, பூ–பௌதீகம், வான–பௌதீகம் ஆகிய துறைகளும் ஏற் பட்டிருக்கின்றன. ரசாயனம் ஒரு துறையாகத்தான் இருந் தது. ஆனால் இப்பொழுது பூ–ரசாயனம், ஜீவ ரசாயனம், விவசாய ரசாயனம் ஆகிய துறைகளும் ஏற்பட்டுள்ளன. புதிய அறிவின் தூண்டுதலால், விஞ்ஞானமானது ஜீவ னுள்ள செல்களைப் போல் வளர்ந்து பலவாகப் பெருகு கிறது.

இயல்பாகவே, கற்காலத்தில் விஞ்ஞானம் எதுவும் இல்லை. மானிடன் அப்பொழுதே அனுபவங்களைச் சேகரித்துப் போற்றுவதற்கு ஆரம்பித்தான். மனிதனது வேலை இன்று போல் அவ்வளவு சிக்கலாக இல்லை. எனவே, ஜனங்கள் கல்விக்காக அதிக நேரத்தைச் செலவிட வில்லை. ஆனால் அப்பொழுதும் அவர்கள் சில விஷயங்களைக் கற்க வேண்டியதாயிற்று.

காட்டு விலங்குகளை வேட்டை யாடுவதற்கும் அவற்றின் தோலை உரிப்பதற்கும் குடிசை கட்டுவதற்கும் கற்கத்திகள் செய்வதற்கும் திறமை தேவைப் பட்டது. அவர்கள் இந்த நுணுக்கங்களை எங்கே கற்றுக் கொண்டனர்?

மனிதன் தொழில் தெரிந்தவனாகவே பிறப்பதில்லை. அவன் வினையாற்றுவதற்குக் கற்றுக் கொள்ளுகிறான்.

மனிதன் பிராணிகளிடமிருந்து எந்த அளவுக்கு வேறு பட்டிருக்கிறானென்பதற்கு இது ஒரு தெளிவான உதாரண மாகும். ஒரு பிராணியானது தன்னைப் பெற்ற தாய் தந்தையர்களிடமிருந்து தன் மயிர் நிறத்தையும் உடல் வடிவையும் பெறுவதைப் போலவே, தன் கருவிகள் அனைத்தையும் அவற்றைப் பயன்படுத்தும் முறையையும் பாரம் பரியமாகப் பெறுகிறது. பன்றிகள் சகதியைக் கிளறுவது எப்படி என்று கற்றுக் கொள்வதில்லை; அவை கிளறுவதற்கான முகறையுடனேயே பிறக்கின்றன. கொறிக்கும் விலங்கு வரிசையைச் சேர்ந்தவை. மரக்கிளையைக் கரண்டிக் கரண்டிச் சிதைப்பதற்குக் க்ஷ்டப் பட்டுப் படிப்பதில்லை. ஏனெனில் அவற்றின் வாய்க்குள்ளேயே, வெட்டும் கருவிகள் முளைத்திருக்கின்றன. (அதாவது, அவற்றுக்கு உளிபோன்ற கூரான விளிம்புள்ள பற்கள் இருக்கின்றன.) எனவே, பிராணிகளுக்குத் தொழிற்சாலைகளு மில்லை, பள்ளிக் கூடங்களும் இல்லை. ஆனால் மனிதனே தனது கருவிகளைச் செய்கிறான்; அவை அவனுக்குப் பிறவியிலேயே அமைவதில்லை. அதனால், கருவிகளை உபயோகிப்பது எப்படி என்ற அறிவை அவன் தன் பெற்றோரிடமிருந்து

பாரம்பரியமாகப் பெறுவதில்லை; ஆசிரியர்களிட மிருந்தும், வேலை செய்யுங்கால் முதியோர்களிட மிருந்தும் படித்துக் கொள்கிறான்.

இலக்கண விதிகளை அறிந்தவராகவும் கணக்குப் போடக் கூடியவராகவும் மனிதர்கள் பிறக்க முடியுமானால் சோம்பேறி மாணவர்கள் மிக்க மகிழ்ச்சி அடைவார்க ளென்று நாம் துணிந்து கூறலாம். அவ்வாறு பிறவியிலே யே அறிவு அமைந்து விட்டால் அவர்கள் பள்ளிக்கூடம் போகத் தேவையில்லை. ஆனால் அந்த நிலைமையால் அவர் களுக்கு யாதொரு நன்மையும் இல்லை. பள்ளிக்கூடங்கள் இல்லை யென்றால் ஜனங்கள் புதிதாக எதையும் கற்க மாட் டார்கள். அணிலின் தொழில் திறனும் வழக்கங்களும் போல, மானிடரின் தொழில் திறனும் வழக்க ஒழுக்கங் களும் ஒரே தரத்தில் தேக்க மடைந்துவிடும்.

இறுதியாய் அமைந்த வழக்கங்களுடன் ஜனங்கள் பிறப்பெடுக்காதது மனிதகுலத்தின் நற்பேறு ஆகும். அதனால் ஜனங்கள் படிக்கிறார்கள், கற்றுக்கொள்கிறார்கள். ஒவ்வொரு தலைமுறையினரும் மனிதகுலத்தின் பொது அனுபவச் சேமிப்புக்குத் தத்தம் பங்கைச் செலுத்தி, அச் சேமிப்பைப் பெருக்குகின்றனர். அனுபவம் வளர்ந்து கொண்டேயிருக்கிறது. மனிதகுலம் அறிவின் எல்லைகளை மேன்மேலும் பின்னுக்குத் தள்ளிக்கொண்டேயிருக்கிறது. அறிவின் பரப்பை மேன்மேலும் விரிவுபடுத்திக்கொண்டே யிருக்கிறது.

ஒவ்வொரு மாணவனும் பாடம் பயில்கிறான். மனித குலம் முழுமையுமே பள்ளிசென்று படிக்கிறது: மானிடர் அனைவரும் புதியபுதிய விஷயங்களைப்பற்றிக் கற்றுக் கொண்டே இருக்கிறார்கள். இந்த ஆயிரமாண்டுப்பயிற்சிக் கூடம்தான் விஞ்ஞானம், தொழில் நுணுக்கம், கலை ஆகியவற்றைப் படைத்திருக்கிறது. இதுவே மனிதகுல நாகரிகத்தின் தோற்றுவாய்.

மனிதன் கற்காலத்தில், இந்த ஆயிரமாண்டுப் பள்ளியில் பிரவேசித்தான். அனுபவம் மிகுந்த கிழவேடர்கள், சிரமம் மிகுந்த வேட்டைத்தொழிலை இளைஞர்களுக்குக் கற்றுக் கொடுத்தனர்; மிருகங்கள் நிலத்தில் விட்டுச்செல்லும் சுவடுகளை எப்படி இனம் காண்பது என்பதைக் கற்பித்தனர்; விலங்கு பீதியடைந்து ஓடுவதற்கு இடம் தராமல் அதன் அருகில் எப்படிச் சத்தம் செய்யாது செல்வது என்பதை நடைமுறையில் காட்டினர்.

இன்றும் வேட்டையாடுவதற்குத் திறமை தேவை. ஆனாலும் இக்காலத்தில் வேடனாவது எளியகாரியம். இதற்கு ஒரு காரணம் என்னவென்றால், வேடன் தானே தன் கருவிகளைச் செய்து கொள்ளவேண்டியதில்லை. ஆனால் கற்காலத்தில் வேடர்களே தமது கருவிகளான தடிகள், கத்திகள், ஈட்டி முனைகள் ஆகியவற்றைச் செய்து கொள்ள வேண்டியிருந்தது. ஆக, விவரம் தெரிந்தவுடன் கிழவன், இளைஞனுக்குச் சொல்லிக் கொடுக்கவேண்டிய விஷயங்கள் பல இருந்தன.

பெண்களும் தமது வேலையைக் கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. பெண் வீட்டை நிர்வகிப்பதுடன் சிற்பியாகவும், மரம் வெட்டுபவளாகவும் தையற்காரியாகவும் வேலை பார்த்தாள்.

ஒவ்வொரு குலத்திலும், அனுபவம் மிகுந்த கிழவர்களும் கிழவிகளும் இருந்தனர். அவர்கள் நீண்டகால வாழ்வில் கஷ்டப்பட்டு உழைத்து அடைந்த அனுபவத்தை வளரும் தலைமுறைக்குப்புரிய வைத்தனர்.

ஆனால் இங்கு ஒரு கேள்வி எழுகிறது. அவர்கள் எப்படித் தம்து அறிவையும் அனுபவத்தையும் புதிய தலைமுறைக்கு விளங்க வைத்தனர்? செய்து காட்டுவதன் மூலமும் சொல்லிக்கொடுப்பதன் மூலமும் இந்தப்பணியைச் செய்தனர். இதற்கு மொழி தேவைப்பட்டது.

ஒரு பிராணி தன் குட்டி அல்லது குஞ்சுக்கு அதன் உயிர்க்கருவிகளான வளைநகங்களையும் பற்களையும் உபயோ

கிக்கும் வகையைக் கற்பிக்க வேண்டியதில்லை. அதனால் பிராணிக்குப் பேச்சு அவசியமில்லை. ஆனால் மனிதன் பேசுவதற்குக் கற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. அவன் தன் வேலையைச் செய்வதற்கும், அடுத்த தலைமுறையினருக்குத் தன் திறமையையும் அனுபவத்தையும்கொண்டு பயிற்சி அளிப்பதற்கும், மொழி அவசியமாயிருந்தது.

மனிதன் கற்காலத்தில் எப்படிப் பேசினான் ?

## கடந்த காலத்துக்கு இரண்டாவது பயணம்

நாம் மீண்டும் கடந்த காலத்துக்குச் செல்வோமாக. இந்தத் தடவை பயணத்துக்கான சாதனங்களைத் திரட்டுவதற்குக் கஷ்டப்பட வேண்டாம். கப்பற்பயணமும் வேண்டாம். வீட்டில் உட்கார்ந்துகொண்டே கடந்த காலத்துக்குப் போய்வரலாம்.

நாம் ரேடியோ ரிஸீவரின் முள்ளைத் திருப்பும்பொழுது, இருந்த இடத்திலிருந்து பெயராமல் நியூயார்க்குக்கும் அங்கிருந்து பாரிஸுக்கும் அங்கிருந்து மாஸ்கோவுக்கும் அங்கிருந்து பம்பாய்க்கும் வினாடி நேரத்தில் போய்விடுகிறோம். நம்மிடம் டெலிவிஷன் கருவி (தொலைக் காட்சிக் கருவி) இருந்தால், மலைகளுக்கும் கடல்களுக்கும் மகா சமுத்திரங்களுக்கும் அப்பாலுள்ள நாடு நகரங்களில் வாழும் ஜனங்கள் பேசுவதைக் கேட்பதுடன், அவர்களைக் காணவும் முடியும்.

ஆனால், இடத்தால் தொலைவிலுள்ள ஜனங்களின் பேச்சைக் கேட்பதல்ல நமது பிரச்னை; காலத்தால் வேறுபட்ட மக்கள், பல்லாண்டு பல்லாண்டு முன்னால் வாழ்ந்த மக்கள் பேசியதை நாம் கேட்கவேண்டும். எப்படிக் கேட்பது ?

ஈதரில் பிரயாணம் செய்வதைப்போல் காலத்தில் யாத்திரை செல்வதற்கு ஏதாவது சாதனம் இருக்கிறதா ?

இருக்கிறது. பேசும் படம் அத்தகையதுதான்.

வெள்ளித்திரையில் நாம் உலகம் முழுவதையும் காண முடியும் நிகழ்கால உலகை மட்டுமல்ல; கடந்தகால உலகையும் காணமுடியும். ஆனால் சலனப்படம் என்ற கப்பல், அது நிர்மாணிக்கப்பட்ட காலம் வரையில்தான் நம்மை அழைத்துச் செல்லமுடியும். சலனப்படம் அண்மைக் காலத்தில் தோன்றியதாகும். முதல் பேசும் படம் 1927ல் தோன்றியது.

1927க்கும் முன்னால் நாம் நமது பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்தவேண்டுமானால், ஒரு கப்பலிலிருந்து இன்னொன்றுக்கு மாறவேண்டும். ஒவ்வொரு கப்பலும் முந்திய கப்பலைவிட மோசமாகத்தான் இருக்கும். நீராவிக் கப்பலிலிருந்து பாய்மரப் படகுக்கும், பாய்மரப் படகி லிருந்து துடுப்பால் தள்ளும் படகுக்கும் மாறவேண்டும்.

ஊமைப் படங்களை எடுத்துக்கொள்ளுங்கள். இந்தப் பேசாத சலனப்படங்களில் நாம் கடந்த காலத்தைக் காண முடியும்; ஆனால் அந்தக் காலத்தின் குரலைக் கேட்கமுடி யாது.

போனோகிராப்பை எடுத்துக்கொள்ளுங்கள். இந்த ஒலிப்பதிவுக் கருவியில் நாம் குரலை அதன் தொனி பேதங்க ளுடன் கேட்கமுடியும்; ஆனால் அந்தக் குரலுக்குரிய வரைக் காணமுடியாது.

இந்தக் கப்பல்களும் எந்தத் துறைமுகங்களி லிருந்து கிளம்பினவோ அங்குதான் நம்மை அழைத்துச் செல்ல முடியும். 1895க்கு முன் நிகழ்ந்தவற்றை ஊமைச் சலனப் படங்களால் காட்டமுடியாது. போனோகிராப் 1877ல் தான் கண்டுபிடிக்கப்பட்டது; எனவே, அதற்கும் முன் னால் செல்வதற்கு அது பயன்படாது.

அதற்குமுன், குரல்கள் ஒடுங்கியுள்ளன. அவை குறி களிலும் எழுத்துக்களிலுமே பாதுகாக்கப் பட்டுள்ளன. அச்சடித்த நூல்களின் நேரான சீரான வரிகளில்தான் காப் பாற்றப்பட்டுள்ளன.

புகைப்படங்களில் மாருத புன்னகைகளையும் முக பாவங்களையும் காணமுடிகிறது. ஏதாவது பழைய குடும்பத் துக்குரிய படத்தொகுப்பை எடுத்துப் பாருங்கள். பச்சை யான ஸாட்டின் அட்டைகளுக்கிடையே, உலோகக் கொக்கிகளின் பிடிப்பில், பல தலைமுறையினரைக் காண் பீர்கள்.

அதோ அந்த ஏட்டில், ஒரு சிறுமியின் மங்கிய புகைப் படம் தென்படுகிறது. 1870-80 ஆண்டுகளில் சிறுமிகள் உடை உடுத்திய பாணியில் அவள் ஆடை அணிந்திருக் கிருள். அவள் ஒரு கண்கவர் தோட்டத்தின் வேலியின்மீது சாய்ந்துகொண்டு நிற்கிருள். புகைப்படக்காரர்களது அறைகளில்தான் இத்தகைய வேலிகள் இருந்தன.

அதே ஏட்டில், நீண்ட திரையணிந்த மணப்பெண் காணப்படுகிருள். அவளுக்கருகில் மணமகன் கோட்டுடன் காட்சியளிக்கிருன். பருத்துத் தடித்துள்ள அவனுக்குத் தலையில் வழுக்கை விழுந்திருக்கிறது. அவர்களது கைகள் ஒரு சலவைக்கல் தூணை விறைப்பாகத் தொட்டுக்கொண் டிருக்கின்றன. இந்தச் சலவைக்கல் தூணும் புகைப்படக் காரரின் கடையில் இருந்ததுதான். மணமக்களின் திருமண மோதிரங்கள் தெளிவாகப் புலனுகின்றன. மணமகன் மண மகளைவிட முப்பது வயதாவது மூத்தவனு யிருப்பான். மற்ருெரு படத்திலுள்ள சிறுமியைப் போலவே, மண மகளும் கள்ளங்கபடமில்லாத நயனங்களை உடையவ ளாகத் தோன்றுகிருள். அந்த விழிகள் அச்சத்தை வெளியிடுகின்றன.

இன்னொரு படத்தில் அவளையே நாற்பது, ஐம்பது ஆண்டுகட்குப் பிறகு சந்திக்கிறோம். இங்கு அவள் உரு மாறி விட்டாள். கறுப்பு சரிகைக் கைக்குட்டையைத் தலையில் கட்டியிருக்கிருள், நெற்றியில் சுருக்கங்கள் விழுந்திருக்கின்றன. கண்களில் சோர்வும் விரக்தியும் புலப் படுகின்றன. வாய் உள்ளுக்குப் போய்விட்டது. இந்தப் படத்தின் பின்புறத்தில், "என் அன்பார்ந்த பேரக்குழந்

தைக்கு அவளது பிரியமுள்ள பாட்டி அளித்தது" என்று நடுங்கும் கையால் எழுதியிருக்கிறது.

ஆக, படத்தொகுப்பின் ஒரு பக்கத்தில் ஒருத்தியின் வாழ்வு முழுமையும் சித்திரிக்கப்பட் டிருக்கிறது.

இன்னும் முந்திய காலத்துக்குச் சென்ருேமானுல், புகைப்படங்கள் முகபாவத்தையும் தலை நிலையையும் கை அசைவையும் வெளியிடுவதில் மேன்மேலும் தரம் குறை வதைக் காண்கிருேம். இப்பொழுதெல்லாம், நாலுகால் பாய்ச்சலில் குதிரையை விரட்டிச்செல்லும் வீரனையும் தண்ணீரில் நீச்சலடிப்பவனையும் எளிதில் படம் பிடித்து விடுகிருேம். ஆனுல் அந்த நாட்களில், ஒருவனது புகைப் படத்தைப் பிடிக்கவிரும்பினுல், அவனை ஒரு விசேஷ நாற்காலியில் உட்கார்த்திவைப்பார்கள். அவனது தலையும் தோட்களும் ஆடாதிருப்பதற்காக, இடுக்கிகளைப் பயன் படுத்துவார்கள். அதன்பின்பே படம் பிடிப்பார்கள். அவ்வாறு எடுத்த படம் மனிதனது உயிருள்ள புகைப்பட மாக இல்லாமல், உடலமைப்புச்சாத்திரப் பயிற்சிக்கு உதவும் மாதிரிப்படமாகவே இருந்ததில் வியப்பில்லை.

இப்பொழுது 1838 ஐ அடைந்துவிட்டோம். 1838க்கு முன்னுல் புகைப்படம் எடுக்கப்படவில்லை. இன்னும் முன்னுல் இறந்தகாலத்துக்குச் செல்லும்பொழுது, நாம் வேறு சாட்சிகளை நம்பவேண்டி யிருக்கிறது. அவர்கள் புகைப்படக் கருவியைப்போல் விருப்பு வெறுப்பற்றவர் களாகவும் பிழைசெய்யாதவர்களாகவும் இல்லை என்பதைக் குறிப்பிடவேண்டும்.

கடந்த காலத்தை முறையாக அறிவதற்காக, நாம் ஓவியங்களும் பதிவேடுகளும் நூல்நிலையங்களும் கொடுக் கும் வாக்குமூலங்களைக் கேட்கவேண்டும்; அவற்றை ஒப்பு நோக்கிப் பார்க்கவும் வேண்டும்.

எனவே, சாலை மைல்கல்களி லுள்ள எண்கள் ஒன்றன் பின் ஒன்ருகத் தோன்றி மறைவதைப்போல், நூற்றுக்

கணக்கான தேதிகள் விரைவாகத் தோன்றி மறைகின்றன. நாம் 1456-ம் ஆண்டை அடைகிறோம். அதற்கு முன்னல் அச்சடித்த நூல்கள் கிடையாது. அச்சடித்த நூலின் தெளிவான அச்செழுத்துக்குப் பதிலாக, பிரதி எடுத்தவனது பகட்டழகுடன் கூடிய கையெழுத்தே உள்ளது.

பிரதி எடுப்பவனது இறகுபேனு தோற்காகிதத்தில் மெதுவாக எழுதுகிறது. அத்துடன்கூட நாமும் எழுத்து எழுத்தாகப் படித்து அடிமேல் அடிவைத்துக் கடந்த காலத்தினுள் போகிறோம். தோற்காகிதத்தி லிருந்து பாப்பிரஸுக்கும் அதிலிருந்து கோயிற் சுவர்களில் உள்ள பதிவுகளுக்கும் செல்கிறோம். இவ்வாறு மேன்மேலும் கடந்த காலத்தினுள் போய்க்கொண்டே யிருக்கிறோம்.

நாம் கடந்தகாலத்தினுள் செல்லச்செல்ல, அந்தப் பழங்கால மக்களின் எழுத்துக்களைப் புரிந்துகொள்வது மேன்மேலும் கஷ்டமாகிறது; அவை மறைபொருளுக்குரியனவாக உள்ளன. இறுதியில், எழுத்தும் மறைகிறது. அதற்கு முற்பட்ட காலத்து மக்களின் குரல் சிறிதும் கேட்கவில்லை.

எழுத்து அமைவதற்கு முந்திய காலத்து மக்களைப்பற்றி எப்படி அறிந்துகொள்வது ?

மனிதனது சின்னங்களுக்காகப் பூமியைத் தேடுகிறோம். கவனிப்பாரற்றுக் கிடந்த சவக்குழிகளைத் தோண்டுகிறோம். புராதனமான கருவிகளையும் நீண்டகாலத்துக்கு முன்பே இடிந்து அழிந்த வீடுகளின் கற்களையும் எப்பொழுதோ அணைந்துவிட்ட நெருப்புக்களின் கரியையும் ஆராய்கிறோம்.

இந்தக் கடந்தகாலத்திய எச்சங்கள், மனிதன் எப்படி வாழ்ந்தான் என்பதையும் அவன் எப்படி உழைத்தான் என்பதையும் நமக்குத் தெரிவிக்கின்றன. ஆனுல் அவன் எப்படிப் பேசினுன் என்பதையும் எப்படிச் சிந்தித்தான் என்பதையும் அவை எடுத்துரைக்க முடியுமா ?

## சொல் இல்லாத மொழி

ஆதிகால வேடனின் குகைகளில் நாம் அடிக்கடி அவனைச் சந்திக்கிறோம்; அதாவது அவனது எச்சமிச்சத்தைச் சந்திக்கிறோம்.

பிதிக்காந்திரோப்பஸ் வாழ்ந்து லட்சக்கணக்கான ஆண்டுகள் கடந்தபின், நம் கதைத்தலைவன் எத்தகையவனாயிருந்தான் ?

முதன்முதலில், அவனுக்கு இப்பொழுது என்ன பெயரிடுவதென்பதைப்பற்றி நாம் ஓர் உடன்பாடு காணவேண்டும். ஏனெனில் நமது கதாநாயகனது பெயர் அத்தியாயத்துக்கு அத்தியாயம் வேறுபடுவதை நீங்கள் அறிவீர்கள். அவனை விஞ்ஞானிகள் நியன்தர்தால்மனிதன் என்று அழைக்கிறார்கள். கம்பளியானைகளது காலத்தில் வாழ்ந்த மனிதனின் மண்டையோடு நியன்தர்தால் பள்ளத்தாக்கில் கண்டுபிடிக்கப்பட்டதால், அவனுக்கு இந்தப் பெயரை இட்டிருக்கிறார்கள். நாமும் அதே பெயரால் அவனைக் குறிப்பிடுவோம்.

நமது கதைத்தலைவன் உண்மையில் புதிய மனிதனாகி விட்டதால்தான் அவனுக்குப் புதுப்பெயர் கொடுக்க வேண்டியிருக்கிறது. அவனது முதுகுத்தண்டு நிமிர்ந்து விட்டது ; கைகள் முன்னைவிட நன்றாக வளைகின்றன : முகமும் கூடுதலான மனிதத்தன்மையைப் பெற்றிருக்கிறது.

நம் கதாநாயகனது புறத்தோற்றத்தை விவரமாக வர்ணிப்பது நாவலாசிரியரின் மரபு. அவர்கள் அவனைக் கண் கவர் அழகனாகச் சித்திரிப்பதற்கும் தயங்குவதில்லை. அவனது கண்கள் பேரொளி உமிழ்வதாகவும் அவனது எடுப்பான மூக்கு கருடனுடையதை ஒத்திருக்கிறதென்றும் அவனது தலைமயிர் காக்கைச் சிறகைப்போல் கறுப்பாயிருக்கிறதென்றும் அவர்கள் கூறுவார்கள். ஆனால் அவனது மூளையின் அளவைப்பற்றி அவர்கள் யாதும் கூறுவதில்லை.

நம் நிலை வேறு. நமக்கு நம் கதைத்தலைவனது கண்ணழகும் குரலினிமையும் முக்கியமானவை யல்ல; அவனது மூளையின் அளவை அறிவதற்கே அதிக ஆவலாயிருக்கிறோம்; அதுவே மிக முக்கியமான தென்று நாம் கருதுகிறோம்.

நியன்தர்தால் மனிதனின் மண்டையோட்டினைக் கவனமாக அளந்திருக்கிறார்கள். அவனது மூளை பிதிக்காந்திரோப்பஸின் மூளையைவிடப் பெரிது என்பதை அந்தப் புள்ளிவிவரங்கள் ஐயத்துக்கிட மில்லாமல் மெய்ப்பிக்கின்றன.

இடைப்பட்ட ஆயிரமாயிரம் ஆண்டுகளில் மனிதன் செய்த வேலையெல்லாம் வீண்போகவில்லை என்பது வெளிப்படை. அந்த வேலை மனிதனின் முழு அமைப்பையும் மாற்றியது. சிறப்பாக, அவனது தலையையும் கைகளையும் மாற்றியது. ஏனெனில் அவன் கைகளால் தான் உழைத்தான்; தலைதான் உத்திரவிட்டது.

மனிதன் கற்கோடரியுடன் கஷ்டப்பட்டபொழுது, கல்லுக்குப் புதியவடிவு கொடுத்தபொழுது, அவன் தன்னுணர்வு இல்லாமல் தன்னையும் மாற்றிக்கொண்டான். அவனது விரல்கள் மாறின; அவை முன்னைவிடச் சிறப்பாக இயங்கின; அவற்றின் திறமையும் அதிகரித்தது. அவன் தன் மூளையையும் மாற்றியமைத்துக் கொண்டிருந்தான்; அது மேன்மேலும் சிக்கலாகிக்கொண்டேயிருந்தது.

நீங்கள் நியன்தர்தால் மனிதனைப் பார்த்தவுடனேயே அவன் வாலில்லாக் குரங்கு இனத்தவன் அல்ல என்பதை அறிந்துகொள்வீர்கள்.

எனினும், அவனுக்கும் வாலில்லாக் குரங்குக்கும் இன்னமும் எவ்வளவு ஒற்றுமை இருக்கிறது?

குல்லாயிலிருந்து தொங்கும் முகமூடியைப்போல், அவனது தாழ்ந்த நெற்றி, கண்களின்மேல் அமைந்திருக்

கிறது. அவனது பற்கள் முன்னுக்குத் துருத்திக்கொண் டிருக்கின்றன.

நம்கால மனிதனுக்கும் நியன்தர்தால் மனிதனுக்கு முள்ள மிகப் பெரிய வேற்றுமை மோவாயிலும் நெற்றி யிலுமே உள்ளன. நியன்தர்தால் மனிதனது நெற்றி பின் னேக்கிச் சரிந்து அமைந்திருக்கிறது; மோவாயோ அநேக மாக இல்லையென்றே சொல்லிவிடலாம்.

மிகவும் தாழ்ந்த நெற்றியை உடைய அவனது மண்டையோட்டில், நம்கால மனிதனது மூளையிலுள்ள சில பகுதிகள் காணப்படவில்லை. பின்னேக்கிச் சாய்ந் திருக்கும் மோவாயுடன்கூடிய அவனது கீழ்த்தாடை, மனிதனது பேச்சுக்கு ஏற்றதாக இல்லை.

இத்தகைய நெற்றியும் இத்தகைய கீழ்த்தாடையும் உடைய மனிதன் நம்மைப்போல் சிந்திக்கவும் பேசவும் முடியாது.

எனினும், அவன் பேசவேண்டி யிருந்தது. கூட்டு வேலை அதை இன்றியமையாததாக்கியது. ஜனங்கள் கூட்டாக வேலை செய்யும்பொழுது அவர்கள் தமது வேலை யைப்பற்றி ஓர் உடன்பாடு காணவேண்டும். மனிதன் தனது நெற்றி நிமிரும் வரையிலும், தனது கீழ்த்தாடை பெரிதாகும் வரையிலும் காத்திருக்கமுடியாது. அப்படி இருப்பதென்ருல் ஆயிரமாண்டுகள் காத்திருக்கவேண்டும்.

மனிதன் எப்படித் தன் கருத்தைப் புரியவைத்தான்?

அவன் தன் உடம்பு முழுமையையும் பயன்படுத்தித் தன் கருத்தை முடிந்த அளவுக்கு வெளியிட்டான். அவனுக்குப் பிரத்தியேகமான பேச்சுஉறுப்பு இன்னும் அமையாததால், உடம்பு முழுவதின் மூலமாகப் பேசினன். அவனது முகத்தின் தசைகள் பேசின; தோட்கள் பேசின; கால்கள் பேசின; எல்லாவற்றுக்கும் மேலாக, அவனது கைகள் பேசின.

நீங்கள் எப்போதாவது நாயுடன் உரையாடி யிருக்கி றீர்களா? நாய் தன் எஜமானனிடம் ஏதாவது சொல்ல விரும்பினுல் என்ன செய்கிறது? அது அவரை உற்றுப் பார்க்கிறது; மூக்கால் அவரைத் தேய்க்கிறது; பாதங்களை அவரது முழங்கால்கள் மீது வைக்கிறது; வாலை ஆட்டுகி றது; பொறுமையை இழந்து சிணுங்குகிறது; துடிக்கிறது. சொற்களால் பேசுவதற்கு முடியாத காரணத்தால், அது தன் மூக்கின் முகப்பிலிருந்து வாலின் நுனி வரை உடல் முழுவதையும் ஈடுபடுத்திப் பேசவேண்டி யிருக்கிறது.

பூர்வீக மனிதனுக்கும் சொற்களால் பேசமுடியவில்லை. ஆனுல், அவனுக்குக் கைகள் இருந்தன. அவன் தன் கருத்தைப் பிறருக்கு உணர்த்துவதற்கு அவை பெரிதும் பயன்பட்டன. அவன் தன் கைகளால் தானே வேலை செய்தான். அவனது நாக்கு வேலைக்குப் பழக்கப்பட வில்லை.

அவன் "வெட்டு!" என்று சொல்வதற்குப் பதிலாகத் தன் கைகளால் சைகை செய்துகாட்டினுன். "கொடு!" என்று கூறுவதற்குப் பதிலாகத் தனது கையைக் கீழ்மேலாக நீட்டினுன். "இங்கே வா!" என்று சொல்வதற்குப் பதி லாகத் தன்னை நோக்கிக் கையால் சைகை செய்தான். அதேபொழுதில் தன் குரலினுல் கைகளுக்கு உதவி செய்தான்; யாருடன் பேச விரும்பினுனே அவனது கவனத்தைத் திருப்பித் தன் சைகைகளை நோக்கச்செய் வதற்காக அவன் கர்ஜித்தான்; முனங்கினுன்; வீறிட்டலறி னுன்.

நாம் இதை எப்படி அறிந்துகொள்கிறேம்?

நிலத்தில் கிடைக்கும் ஒவ்வொரு கற்கருவியும் கற்கரு வித் துண்டும் கடந்தகாலத்தின் எச்சமிச்சமாகும். ஆனுல் இந்தச் சைகைகளின் மிச்சசொச்சங்களை எங்கே காண் பது? நீண்ட நெடுங்காலத்துக்கு முன்னுல் அழிந்த கை

களின் இயக்கங்களை மீண்டும் கட்புலனுகச் செய்வது எப்படி ?

அந்தப் பூர்வீகமக்கள் நமது முன்னேர்கள் என்பதாலும், இக்காலத்தவராகிய நாம் அவர்களிடமிருந்து சில தன்மைகளைப் பாரம்பரியமாகப் பெற்றிருப்பதாலும், இது சாத்தியமாகிறது. இல்லாவிட்டால் முடியாது.

## சைகைச் சித்திரங்கள்

சில வருஷங்களுக்கு முன்னுல், வடஅமெரிக்கஇந்தியர் ஒருவர் ஐரோப்பாவுக்கு வந்தார். பெனிமோர் கூப்பரின் நூல்களில் காட்சிதரும் அமெரிக்கஇந்தியர் மாதிரி அவர் கைக்கோடரி வைத்திருக்கவில்லை; மான்தோல் பாதரட்சை அணியவில்லை; சிரத்தில் சிறகும் கட்டிக் கொள்ளவில்லை. அவர் நம்மைப்போலவே (அதாவது, ருஷியரைப்போலவே-மொ-ர்) ஆடை அணிந்திருந்தார். அவர் தமது சொந்தமொழியில் பேசியதுடன் ஆங்கிலத்திலும் செம்மையாகப் பேசினுர்.

ஆனுல் இந்த இருமொழிகளைத் தவிர, ஆதிகாலத்திலிருந்து அமெரிக்கஇந்தியர்கள் போற்றிவந்திருக்கும் மொழியையும் அவர் அறிந்திருந்தார்.

அதுதான் உலகத்திலுள்ள சகல மொழிகளிலும் சுலபமானது. நீங்கள் அதைக் கற்கவிரும்பினுல், மொழிப் பயிற்சியில் பெருந்தொல்லை விளைவிக்கும் வேற்றுமை உருபுகளைப் பற்றியும் பெயர்த்திரிபுகளைப் பற்றியும் கவலைப் படவேண்டாம். சொற்களை உச்சரிப்பது எப்படி என்ற சங்கடமும் உங்களுக்கு ஏற்படாது; ஏனெனில், நீங்கள் எதையும் உச்சரிக்கவேண்டியதில்லை. இந்த அமெரிக்க இந்திய யாத்திரிகர் பேசிய மூன்ருவது மொழி ஒலி மொழியல்ல: அது சைகைமொழி.

நீங்கள் இந்த மொழியின் கையகராதி ஒன்றைத் தயாரிக்க முயன்ருல், அது கிட்டத்தட்ட கீழ்க்கண்ட ரீதியில் அமையும்:

## சைகைகளின் அகராதியிலிருந்து ஒரு பகுதி

வில்: ஒரு கை வில்லைப் பிடித்திருப்பதாகப் பாவனை செய்யவேண்டும்; இன்னொரு கையால் கற்பிதமான வில்நாணை இழுக்கவேண்டும்.

வட அமெரிக்க இந்தியரின் குடிசை:—இருபுறங்களை உடைய சாய்வான கூரை. இரண்டு கைகளது விரல்களையும் கோர்த்துக் காட்டவேண்டும்.

வெள்ளைக்காரன்:—தொப்பியின் விளிம்பைச் சுட்டிக் காட்டுவதற்காக, நெற்றிக்குமேல் கையால் சைகை செய்தல்.

ஓநாய்:—இரண்டு செவிகள் மாதிரி ஒரு கையின் இரண்டு விரல்களை முன்னால் நீட்டுதல்.

குழிமுயல்:—ஒரு கையின் இரண்டு விரல்களை முன்னால் நீட்டுவதுடன், இன்னொரு கையால் வில்வளைவாகச் சைகை செய்தல். இந்தச் சைகைகள் குழிமுயலின் இரு செவிகளையும் வளைவான முதுகையும் குறிப்பன.

மீன்:—உள்ளங்கையைத் திறந்து கீழ்நோக்கித் திருப்பிக் கொண்டு, அதை வளைந்துவளைந்து நகரச்செய்தல். மீன் நீந்தும்பொழுது, வலப்புறத்திலும் இடப் புறத் திலும் மாறிமாறி வாலால் அடித்துக்கொண்டு செல் வதை இச் சைகை குறிக்கிறது.

தவளை:—ஒரு கையின் விரல்களை உள்நோக்கியும் கீழ் நோக்கியும் வளைத்துக்கொள்ள வேண்டும்; அதன்பின் அந்தக் கைமேஜைக்குக் குறுக்கே பாயவேண்டும்.

மேகம்:—இரண்டு கை முட்டிகளையும் தலைக்கு மேலே தூக்கிக்கொண்டு நகர்த்தினால், அது மிதக்கும் மேகத் தைக் குறிக்கும்.

வெண்பனி:—தலைக்குமேல் இணைந்துள்ள இரண்டு கை முட்டிகளையும் மெதுவாகப் பிரித்துக் கீழ்நோக்கிக்

கொண்டுவரவேண்டும்; வெண்பனி ஏடுகள் விழு வதைக் குறிக்கும் சைகை இது.

மழை:—தலைக்குமேல் இணைந்த இரு கைமுட்டிகளையும் விரைவாகப் பிரித்துக் கீழ்நோக்கிக் கொண்டுவர வேண்டும்.

நட்சத்திரம்:—தலைக்குமேல் உச்சத்தில் இரண்டு விரல்கள் மாறிமாறி இணைந்து பிரியவேண்டும்; நட்சத்திரம் மினுக்குமினுக் கென்று ஒளிவிடுவதைக் குறிக்கும் சைகை இது.

ஒவ்வொரு சைகையும் கையால் காற்றில் வரைந்த ஓர் ஓவியமாகும். தொன்மையான எழுத்துக்கள் சித்திர எழுத்துக்களா யிருந்தமாதிரி, தொன்மையான சைகைகள் சைகை-ஓவியங்களாக இருந்தன போலும்.

அமெரிக்கஇந்தியர்களின் இக்காலச் சைகைமொழி யைத்தான் பூர்வீகமக்கள் உபயோகித்தார்க ளென்று நாம் சொல்லவில்லை. இன்றைய அமெரிக்கஇந்தியர்களது சைகைமொழியில் உள்ள பல சொற்கள் ஆதிகால மக்களது மொழியில் இருந்திருக்கமுடியாது. உதாரணத் துக்கு, அண்மையில் வழக்குக்குவந்த சில சைகைகளைக் குறிப்பிடுவோம்.

மோட்டார் கார்:—கைகளை வட்டமாகச்சுற்றி இரண்டு சக்கரங்களைப் புலப்படுத்தியபின், காரின் ஓட்டும் சக்கரத்தை இயக்குவதுமாதிரிச் சைகை செய்ய வேண்டும்.

ரயில் வண்டி;—காருக்குச் செய்வதுமாதிரி இரண்டு சக்கரங் களைப் புலப்படுத்தியபின், என்ஜினிலிருந்து புகை வரு வதைக் காட்டும்வகையில், கைகளால் அலைஇயக்கம் காட்டவேண்டும்.

இவை மிகவும் அண்மையில் உண்டான சைகைகள். ஆனால் இவற்றுடன் கூடவே, ஆதிகால மக்கள் ஆட்சிக்குக்

கொண்டுவந்தனவாகத் தோன்றும் பல சைகைகளும் இந்த அகராதியில் உள்ளன. உதாரணம்:

தீ:—அலைபாய்வதைப்போல் கையை மேல்நோக்கி இயக்குதல். இது நெருப்பிலிருந்து கிளம்பி மேல்நோக்கிச் செல்லும் புகையைக் குறிக்கும்.

வேலை:—திறந்த கையால் காற்றைப் புடைத்தல்.

"வேலை" என்று சொல்ல விரும்பியபொழுது, ஆதி கால மக்களும் திறந்த கையால் காற்றை அடித்தார்களோ என்னமோ, யார் கண்டது!

## நமது சைகைமொழி

சைகைமொழி இன்றும் வழக்கில் இருக்கிறது.

நாம் "ஆம்" என்று சொல்லவிரும்பும்பொழுதெல்லாம் "ஆம்" என்று சொல்வதில்லை. அடிக்கடி தலை அசைவின் மூலமே இணக்கத்தைத் தெரிவித்துவிடுகிறோம்.

நாம் "அங்கே" என்றோ "அந்தத் திசைவழியில்" என்றோ சொல்லவிரும்பும்பொழுது, அடிக்கடி ஒரு விரலைச் சுட்டுவதுடன் அமைந்துவிடுகிறோம். அந்த விரலுக்கே 'ஆள்காட்டி விரல்' என்ற தனிப்பெயர் ஏற்பட்டுவிட்டது.

நாம் ஒருவருக்கொருவர் முகமன் கூறும்வகையில் தலை வணங்குகிறோம், நாம் தலையை ஆட்டுகிறோம், தோட்களைக் குலுக்குகிறோம், கைகளை விரிக்கிறோம், புருவத்தை நெரிக்கிறோம், உதடுகளால் உறிஞ்சுகிறோம், விரலால் அச்சுறுத்துகிறோம், மேஜைமீது குத்துகிறோம், அலைபாய்வது போல் கைகளை வீசுகிறோம், தலையைப் பற்றிக்கொள்கிறோம், கைகளால் இதயத்தை அமுக்குகிறோம், கை குலுக்குகிறோம், விடைதரும்வகையில் முத்தமிடுகிறோம்.

இவையெல்லாம் உரையாடல்கள்தாம். இவை ஒரு வார்த்தையும் பேசாது நிகழ்த்தப்படும் சம்பாஷணைகள்.

இந்தச் 'சொற்களில்லாத மொழி'-அதாவது சைகைமொழி—வழக்கிலிருந்து மறையவிரும்பவில்லை.

இந்தச் சைகைமொழியால் சில அனுகூலங்கள் உண்டு. சில சமயங்களில், ஒரு முழுப் பிரசங்கத்தால் வெளியிட முடியாத உணர்ச்சியை ஒரு சைகையால் வெளியிட முடியும். ஒரு நல்ல நடிகன் ஒரு வார்த்தைகூடப் பேசாதிருக்கும்பொழுதே நூற்றுக்கணக்கான வார்த்தைகளால் புலப்படுத்துவதைவிடவும் சிறப்பாகத் தன் புருவங்களாலும் கண்களாலும் இதழ்களாலும் தனது கருத்தையும் உணர்ச்சியையும் வெளியிடமுடியும்.

நாம் இந்தச் சைகைமொழியைத் தவருக உபயோகிக்கக்கூடா தென்பது உண்மையே. வார்த்தைகளால் வெளியிடக்கூடியதைக் கை கால்களால் புலப்படுத்துவது நல்லதல்ல. பார்க்கப்போனல் நாம் ஆதிக்குடிகள் அல்ல. பாதங்களால் பூமியை அறைவதும், நாக்கை நீட்டுவதும், பிறரை விரலால் சுட்டிக்காட்டுவதும், இவைபோன்ற இதர பழக்கங்களும் ஒதுக்கப்பட வேண்டியவையாகும்.

ஆயினும், சில சமயங்களில் "சொல் இல்லாத மொழி"யும் இன்றியமையாதது ஆகிறது.

ஒரு கப்பல் இன்னென்றுக்குக் கொடிகளைக்கொண்டு சைகை செய்வதைப் பார்த்திருக்கிறீர்களா? காற்று இறைந்து சீறும்பொழுது, அலைகள் மோதி வெடிக்கும்பொழுது, ஒரு கப்பலிலிருந்து இன்னெரு கப்பலுக்குச் சொற்கள்மூலம் சேதி அனுப்புவ தென்ருல் எவ்வளவு உரக்கப் பேசவேண்டும்! சில சமயங்களில், துப்பாக்கிகளும் இடிமுழக்கம் செய்வதுண்டு. அம்மாதிரியான சந்தர்ப்பங்களில், மனிதனுக்குக் காது பயன்படுவதில்லை; கண்ணே அவனுக்கு உதவிசெய்கிறது.

நீங்களே இந்தச் சொல்லில்லாத மொழியைப் பயன்படுத்துகிறீர்கள். வகுப்பு நடக்கும்பொழுது, உங்களது ஆசிரியரின் கவனத்தை ஈர்க்கவிரும்பினுல் நீங்கள் கையை

உயர்த்துகிறீர்கள். அம்மாதிரிதான் செய்யவேண்டும். ஏனெனில் முப்பது அல்லது நாற்பது மாணவர்கள் ஏக காலத்தில் பேசினால் ஒருவரும் படிக்கமுடியாது.

எனவே, மறைந்தொழிந்துபோன காலத்தின் மீதமிச்சங்களை நாம் இக்காலத்திலும் காண்கிறோம்.

இந்தச் 'சொல் இல்லாத மொழி' பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாகச் சாகாதிருப்பதாலும், இன்றும் அது அவசியமாயிருப்பதாலும், அது வளமில்லாத மொழியல்ல என்பது வெளிப்படை. பலநாடுகளில் அது இறந்தகாலத்தின் மீதமிச்சமாக நிலைத்திருக்கிறது.

பேசும்மொழி வெற்றியடைந்த தென்பது உண்மை. ஆனால் அது தனக்கு முற்பட்ட சைகைமொழியைப் பூர்ணமாக அழித்துவிடவில்லை. வெல்லப்பட்ட மொழி வென்ற மொழியின் சேவகனாக ஆயிற்று.

இந்தச் சைகைமொழி, பணியாட்கள் அடிமைகள் குழந்தைகள் ஆகியோரது மொழியாகப் பல சமுதாயங்களில் நீடித்திருப்பதும் குறிப்பிடத்தக்கது.

காக்கஸஸ் பிரதேசத்திலுள்ள துருக்கிய கிராமங்களிலும் ஆர்மீனிய கிராமங்களிலும், சைகைகள் மூலம் பெண்கள் பிறரோடு பேசும் பழக்கம் சமீபகாலம்வரை நிலவியது. அவர்கள் தமது குடும்பத்தினரல்லாத ஆடவருடன் பேசக்கூடாது என்று கட்டுப்பாடு இருந்ததால், அத்தகைய ஆடவரிடம் சைகைமூலம் பேசினர்.

ஸிரியாவிலும் வேறுபல இடங்களிலும் சைகைமொழி வழக்கிலிருந்த உண்மை வெளியாகியிருக்கிறது.

உதாரணமாக, பாரசீகத்தில் ஷாவின் அரசவைச் சேவகர்கள் சைகை மூலமே பேசவேண்டியிருந்தது. ஒருவன் தனக்கொத்த நிலையிலுள்ளவனுடன்தான் வாய் மொழியால் பேசுவதற்கு அனுமதிக்கப்பட்டான். எனவே, இந்த அவப்பேற்றினுக்குரிய சேவகர்கள் பேச்சுரிமையை இழந்திருந்தனர் என்பது நூற்றுக்கு நூறு உண்மையாகும்.

## மனிதன் மூளையைச் சம்பாதித்துக் கொள்கிறான்

காட்டிலுள்ள விலங்கு கண்ணையும் காதையும் நீட்டி வைத்துக்கொண்டு நடமாடுகிறது; எந்தத் திசையிலிருந்தாவது ஏதாவது சைகை கண்ணுக்குத் தெரிகிறதா அல்லது காதில் விழுகிறதா என்று உஷாராய்க் கவனிக்கிறது; மரக்கிளையைச் சுரண்டும் ஒலி கேட்டால், அங்கு யாராவது விரோதி பதுங்கியிருக்கலா மென்று அஞ்சுகிறது; பகைவன் கையில் பிடிபடக்கூடா தென்பதற்காக ஓடிவிடுகிறது, அல்லது போராடுவதற்கு ஆயத்தமாகிறது.

இடி முழங்குகிறது; காற்று மரங்களைச்சாடிக் கிளைகளை முறிக்கிறது. புயல் வரப்போவதை அறிந்த பிராணி தன் கூட்டில் அல்லது வளையில் தஞ்சம்புக விரைகிறது.

அழகிய இலைகளின் நாற்றத்துடனும் காளான்களின் மணத்துடனும் இரையின் இலேசான மணத்தையும் பிராணி மோப்பம் பிடிக்கிறது. உடனே அந்த மணத்தின் தோற்றுவாயைக் கண்டு இரையைப் பிடிப்பதற்கு அது முயல்கிறது.

ஒவ்வொரு சலசலப்பும் ஒவ்வொரு மணமும் புல்லில் உள்ள ஒவ்வொரு சுவடும் ஒவ்வொரு கிரீச்சுக்குரலும் ஒவ்வொரு சீழ்க்கை ஒலியும் ஏதாவது ஒன்றை அறிவித்து ஏதாவது ஒன்றைச் செய்யும்படி தூண்டியது.

ஆதிமனிதனும் தனது சுற்றுவட்டாரத்தி லிருந்து வந்த ஒலிகளுக்குச் செவிகொடுத்தான். விரைவில் அவன் வேறுவகைப்பட்ட சைகைகளையும்கூடப் புரிந்துகொள்வதற்குக் கற்றுக்கொண்டான்; அதாவது தன் குலத்தினர் காட்டிய சைகைகளையும் புரிந்துகொள்ளப் படித்துக் கொண்டான்.

மான் ஓடிய தடத்தை வேடன் காண்கிறான். அவன் தன் பின்னால் வரும் இதர வேடர்களுக்குக் கரத்தால் சைகை காட்டுகிறான். அவர்கள் இன்னமும் மானைப்

பார்க்கவில்லை. ஆனால் கிளைத்த கொம்புகளுடனும் நிமிர்ந்த காதுகளுடனும் மான் நிற்பதை நேரில் கண்டவர்கள்போல் தமது ஆயுதங்களை ஆயத்தம் செய்கிறார்கள். அவ்வாறு தயாராகும்படி அவர்களைத் தூண்டுவது முதல் வேடன் காட்டிய சைகையே.

பூமியில் புலப்பட்ட மான்காலடிச்சுவடு ஒரு சைகை யாகும். இந்தச் சுவடுகளைக் கண்டதாக முதல் வேடன் கையை அசைப்பதன் மூலம் உணர்த்துவது சைகையின் சைகையாகும்.

ஒரு வேடன் விலங்கின் தடத்தைக் காணும்பொழுதும் இந்தச் சைகைகளைப்பற்றி இதர வேடர்களுக்கு ஒரு சைகை அனுப்புகிறான்.

ஆக, இயற்கை, மனிதனுக்கு அனுப்பிய சைகைச் செய்திகளுடன் அவற்றைப்பற்றி மனிதன் தன் கூட்டாளிகளுக்கு அனுப்பிய சைகைகளும் சேர்ந்துகொண்டன.

மனிதனது பேச்சு "சைகைகளின் சைகை" யாக உள்ளது என்று ஐவான் பெட்ரோவிச்பாவ்லோவ் தமது நூல்களில் ஒன்றில் குறிப்பிடுகிறார்.

முதலில் சைகைகளாலும் கூக்குரல்களாலுமே மனிதன் தன் சகோதரர்களுக்குச் செய்தியைத் தெரிவித்தான். கண் மூலமும் காது மூலமும் பதிவான இந்தச் செய்திகளை மனிதன் தனது மூளைக்கு அனுப்பினான்; இந்த மூளையை மத்தியத் தொலை பேசி நிலையத்துக்கு ஒப்பிடலாம். "ஒரு பிராணி நெருங்கிக்கொண்டிருக்கிறது" என்பது போன்ற "சைகையின் சைகை" மூளைக்குக் கிடைத்தவுடன், அது ஓர் உத்திரவை அனுப்பியது; கைகள் ஈட்டியை உறுதியாகப் பிடித்துக்கொள்ள வேண்டுமென்றும் கண்கள் கிளைகளிடையே கவனமாக நோக்கவேண்டுமென்றும் கிளையின் கிரீச்சொலியையோ இலைகளின் சலசலப்பையோ தவறாது கேட்பதற்குக் காதுகள் உஷாராயிருக்கவேண்டுமென்றும் அது உத்திரவிட்டது. இன்னமும் 'பிராணி

கண்ணுக்குப் புலனாகவில்லை; அவர்கள் அது கத்துவதையும் கேட்கவில்லை; ஆயினும் அதைச் சந்திப்பதற்கு ஆயத்தமாகிவிட்டனர்.

சைகைகள் அதிகமாக அதிகமாக—அதாவது மூளைக்குக் கிடைக்கும் 'சைகைகளின் சைகைகள்' அதிகரிக்க அதிகரிக்க மனிதனது மண்டையோட்டின் முற்பகுதியிலுள்ள "மத்திய நிலையத்துக்கு" வேலை அதிகமாயிற்று. எனவே, மத்திய நிலையத்தை விரிவுபடுத்துவது அவசியமாயிற்று. மூளையில் புதிய செல்கள் உண்டாகிக் கொண்டே யிருந்தன. இருந்த செல்களுக்கிடையேயுள்ள தொடர்புகள் மேன்மேலும் சிக்கலாயின. மூளை வளர்ச்சியடைந்தது; அதன் அளவு அதிகரித்தது.

எனவே தான், நியன்தர்தால் மனிதனது மூளை, பிதிக்காந்திரோப்பஸின் மூளையைவிடப் பெரிதாயிருக்கிறது. மனிதனது மூளை விருத்தியடைந்துவிட்டது. மனிதன் சிந்தனை செய்வதற்குக் கற்றுக்கொண்டுவிட்டான்.

"சூரியன்" என்ற பொருள்படும் சைகையை அவன் கண்டபொழுதெல்லாம் அல்லது கேட்டபொழுதெல்லாம், அது நள்ளிரவு நேரமாயிருந்தாலும், அவன் சூரியனைப்பற்றி எண்ணினான்.

அவன் ஈட்டியுடன் வரவேண்டுமென்று அவனது கூட்டாளிகள் சைகைமூலம் அறிவித்தபொழுது, அந்த நேரத்தில் ஈட்டி கையில் இல்லையென்றாலும் அவன் அதைப்பற்றிச் சிந்தித்தான்.

மனிதர்கள் கூட்டமாக வேலை செய்ததால் பேசுவதற்குக் கற்றுக்கொண்டனர். பேசுவதற்குக் கற்றபொழுது அவர்கள் சிந்தனைசெய்யவும் பயின்றனர்.

மனிதன் தனது அறிதிறனை இயற்கையிடமிருந்து பரிசாகப் பெறவில்லை; அவன் அதைச் சம்பாதித்துக் கொண்டான்.

## நாக்கு முதலிடத்தை அடைந்தது

கருவிகள் சிலவாகவும் மனிதனது அனுபவம் குறைவாகவும் இருந்தவரையில், எளிய சைகைகளே நடைமுறையில் போதுமானவையாயிருந்தன.

ஆனால் வேலையின் சிக்கல் அதிகரிக்க அதிகரிக்கச் சைகைகளும் சிக்கலானவையாக ஆயின. ஒவ்வொன்றுக்கும் ஒரு சைகை வேண்டியிருந்தது. அந்தச் சைகை தான் பிரதிநிதித்துவப் படுத்திய பொருளைப் பிழையின்றி வர்ணித்துப் புலப்படுத்த வேண்டியிருந்தது.

எனவே சித்திரச்சைகை தோன்றியது. மனிதன் பிராணியையும் ஆயுதத்தையும் மரத்தையும் காற்றில் வரைந்து காட்டினன்.

ஒருவன் முள்ளம்பன்றியைச் சித்தரிக்க விரும்புகிருனென்றால், அவன் முள்ளம்பன்றியை வரைந்து காட்டும் பொழுது, ஒரு விநாடி முள்ளம்பன்றியாகவே ஆகி விடுகிருன் எனலாம். முள்ளம்பன்றி தன் காதுகளை எப்படி நிமிர்த்திக்கொள்கிறது என்பதையும், எப்படித் தன் பாதங்களால் பூமியைத் தோண்டி மண்ணைத் தள்ளுகிறது என்பதையும் எப்படித் தன் தடித்த முள்மயிரைக் குத்திடச் செய்கிறது என்பதையும் அவன் காட்டுகிருன்-எந்தச் சிறிய விஷயத்தைப்பற்றிச் சொல்வதென்ருலும், அவன் அதை உன்னிப்பாகக் கவனித்திருக்க வேண்டும். இக்காலத்து உண்மைக் கலைஞர்கள் மட்டுமே அந்தக் கவனமான பார்வையைப் பெற்றுள்ளனர்.

''நான் தண்ணீர் குடிக்கிறேன்'' என்று நீங்கள் சொல்கிறீர்கள். நீங்கள் கோப்பையில் குடித்தீர்களா, குப்பியில் குடித்தீர்களா, உள்ளங்கையைக் குழித்துக்கொண்டு நீர் ஏந்திப் பருகினீர்களா என்பதை அந்தக் கூற்றிலிருந்து எவரும் ஊகிக்க முடியாது.

மனிதன் தன் கைச்சைகைகள் வாயிலாகவே பேசிய பொழுது, இந்தவழியில் மட்டும் பேசவில்லை. அவன்

உள்ளங்கையைக் குழித்துக்கொண்டு வாயண்டைகொண்டு சென்று தன் நாவால் அதிலிருந்து நீரை நக்கிக் குடிப்பது போல் பாவனை செய்தான். அது நல்ல தண்ணீர் என்பதையும் அது தாகவிடாயைத் தீர்த்தது என்பதையும் இந்தச் சைகை வெளியிட்டது.

"கண்ணி வைத்தல்" அல்லது "வேட்டையாடுதல்" என்று மட்டும் நாம் சொல்கிறோம். ஆதிமனிதனோ தன் சைகைகளால் வேட்டைக்காட்சி முழுமையையும் வர்ணித்தான்.

சைகைமொழி ஒருகாலத்தில் செழுமையானதாகவும் சிறுதிறம் படைத்ததாகவும் இருந்தது. அது உயிரோவியம் போல் இருந்ததால், பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் விளக்கமாகச் சித்திரித்ததால், அதை செழுமையான மொழி என்றோம். ஆனால் சில விஷயங்களை வெளியிடுவதில் அதன் சிறுதிறம் வெளியாகிறது; உதாரணமாக, 'வலது கண்' என்றோ 'இடது கண்' என்றோ சைகை வாயிலாகச் சொல்லமுடிந்ததென்றாலும், 'கண்' என்று மட்டும் சைகை மூலம் தெரிவிப்பது சிரமமாயிருந்தது.

ஒரு பொருளைச் சைகைகள் மூலம் பிசகில்லாமல் வர்ணிக்க முடிந்தது. ஆனால் ஸ்தூலமாயில்லாத கருத்தைக் கற்பிதமான சைகையால் வெளியிடுவது முற்றிலும் அசாத்தியமாக இருந்தது.

சைகைமொழியில் வேறு சில குறைபாடுகளும் இருந்தன. இரவில் அந்த மொழியில் பேசமுடியாது; ஏனென்றால், நீங்கள் உங்களது கைகளை எவ்வளவு வேகமாக இருட்டில் அசைத்தாலும் அதைப் பிறரால் பார்க்க முடியாது.

பகலில்கூடச் சில சமயங்களில் சைகைமொழியில் பேசமுடியவில்லை. திறந்தவெளியில் சைகை மூலம் பேசிக்கொள்ளமுடியும். ஆனால் காட்டில் வேடர்களுக்கிடையே மரங்கள் மதில்போல் அமைந்திருந்த சூழ்நிலையில் சைகைமொழியில் உரையாடமுடியவில்லை.

எனவே, மனிதன் ஒலிகளைநாடவேண்டிய தாயிற்று.

முதலில் அவனுக்கு நாக்கும் குரல்வளையும் நற்பணி புரியவில்லை. ஓர் ஒலியை இன்னொன்றிலிருந்து இனம் பிரித்துக் காட்டுவது கடினமாயிருந்தது. எல்லா ஒலி களுமே கர்ஜனையாகவோ வீறிட்டலறுவதாகவோ சிணுங்க லாகவோ இருந்தன. கொஞ்சகாலமான பின்பே, மனித னுல் நாவை அடக்கி ஆளமுடிந்தது; தெட்டத்தெளிவாக ஒலி எழுப்பும்படி அதைக் கட்டாயப்படுத்த முடிந்தது.

ஆரம்பத்தில், நாக்கு கைகளுக்கு உதவியாகத்தான் செயல்பட்டது. ஆனுல் கச்சிதமாகவும் தெளிவாகவும் ஒலி எழுப்புவதில் அது பயிற்சி பெறப்பெற, இசைக்குழுவின் தலைமை வாத்தியத்துக்குரிய பாத்திரத்தை அடிக்கடி வகிக் கத் தொடங்கியது. இறுதியில், செவியால் கேட்கக்கூடிய பேச்சு முதலிடத்தை அடைந்தது.

வாயினுள் நாக்கு அசைகிறது. எனவே, உடலின் பிற உறுப்புக்களது சைகைகளைப்போல் நாவின் அசைவு களைத் தெளிவாகப் பார்க்கமுடியாது. ஆனுல், நாவின் அசைவுகளுக்கு ஓர் அனுகூலம் உண்டு. அதாவது, அவற்றைக் காதினுல் கேட்கமுடியும்.

முதலில் கேட்கக்கூடிய பேச்சு சைகைமொழி மாதி ரியே இருந்தது. அதுவும் சித்திரவகையினதாக இருந்தது. ஒவ்வொரு பொருளையும் ஒவ்வொரு அசைவையும் தெளி வாகவும் விளக்கமாகவும் வர்ணித்தது.

யீவி குலத்தினரின் மொழியில், அவர்கள் 'நடத்தல்' என்று மட்டும் சொல்வதில்லை. "ஸோ ட்ஸி ட்ஸி" (உறுதி யாக நடத்தல்) என்றும், "ஸோ போக்கோ போக்கோ" (கொழுத்தவனைப்போல் கஷ்டப்பட்டு நடத்தல்) என்றும், "ஸோ பூலா பூலா" (எங்கு போகிறேம் என்று கவனிக்கா மல் விரைவாக நடத்தல்) என்றும், "ஸோ பியா பியா" (கிட்டக்கிட்ட அடி எடுத்துவைத்துத் தளுக்குநடை நடத்தல்) என்றும், "ஸோ கோவு கோவு" (தலையை முன்

னுக்கு நீட்டிக்கொண்டு கூனி நடத்தல்) என்றும் அவர் கள் பேசுகின்றனர்.

இவை ஒவ்வொன்றும் நடத்தல் என்ற செய்கையை விவரமாகவும் பிழையின்றியும் வர்ணிக்கும் சொற்சித்திர மாகும். உறுதியாக நடத்தல், நீண்டு மெலிந்தவனது உறுதியான நடை, காலை வளைக்காது நடப்பவனின் உறுதி நடை என்று விதம்விதமாக வர்ணிப்பார்கள்.

ஒவ்வொரு விதமான நடைக்கும் ஒரு சித்திரவிளக்கம் இருக்கிறது.

சைகைச் சித்திரத்துக்கு உதவியாக சொற்சித்திரம் அமைந்தது.

ஆக, முதலில் சைகை மூலமும் பிறகு சொல் மூலமும் மனிதன் பேசக் கற்றுக்கொண்டான்.

## ஆறும் அதன் தோற்றுவாய்களும்

நாம் கடந்தகாலத்தினுள் பிரயாணம் செய்ததன்மூலம் என்ன கற்றுக்கொண்டோம்?

நீரோட்டத்துக்கு எதிரான திசையில், ஆற்றங்கரை வழியே செல்லும் பிரயாணி, ஆற்றின் தோற்றுவாய்களைக் கண்டுபிடிப்பதைப்போல், நாமும் மானிட அனுபவம் என்ற பேராறு எந்தச் சிற்ருற்றில் தொடங்குகிறதோ அதை அடைந்துவிட்டோம்.

அங்கே, அந்தச் சிற்ருற்றின் தோற்றுவாயில் மனித சமூகம் தோன்றியதையும் மொழியும் சிந்தனையும் உருப் பெறத் தொடங்கியதையும் கண்டோம்.

ஒன்றன்பின் ஒன்ருக உபநதிகள் ஆற்றை அடையும் பொழுது, ஆறு அகன்று ஆழமாகிறது. அதுபோல், மானிட அனுபவம் என்ற ஆறும் மேன்மேலும் ஆழமாகிக் கொண்டும் அகன்றுகொண்டும் இருக்கிறது; ஒவ்வொரு தலைமுறையும் தான் சேகரிக்கும் அனுபவத்தை இந்த ஆற்றில் சேர்ப்பதே இதற்குக் காரணம்.

பல தலைமுறைகள் மறைந்துவிட்டன. பல சமுதாயங்களும் குலங்களும் அழிந்துவிட்டன; அவை எத்தகைய எச்சத்தையும் விட்டுவைக்காது மண்மூடிப் போய்விட்டன; நகரங்களாகவோ கிராமங்களாகவோ நினைவுச்சின்னங்களை விட்டுவைக்காது ஒழிந்துவிட்டன.

காலத்தின் சர்வநாச சக்தியை எதனாலும் எதிர்த்து நிற்கமுடியாதென்றே தோன்றியது. ஆனால் மானிட அனுபவம் மறையவில்லை. அந்த அனுபவம் காலத்தின்மீது வெற்றிகொண்டு, மொழியிலும் தொழில் நுணுக்கத்திலும் விஞ்ஞானத்திலும் தொடர்ந்து வாழ்கிறது. மொழியிலுள்ள ஒவ்வொரு சொல்லும் வேலையின் ஒவ்வொரு அசைவும் விஞ்ஞானத்தின் ஒவ்வொரு கருத்தும் தலைமுறை தலைமுறையாக மனிதர்கள் திரட்டிய கூட்டுஅனுபவமாகும்.

உபநதியின் தண்ணீர் பிரதான நதியை அடையும்பொழுது, அது இல்லாதொழியவில்லை; அதைப்போலவே இந்தத் தலைமுறைகளது வேலையும் இல்லாதொழியவில்லை. மானிட அனுபவம் என்ற நதியில், தொல்காலத்திய மக்களின் வேலையும் இக்காலத்திய மக்களின் வேலையும்ஒரே முழுமையாக ஒன்றுபட்டிருக்கின்றன.

ஆக, நாம் ஆற்றின் தோற்றுவாய்களை அடைந்துவிட்டோம். ஆரம்பங்களுக்கெல்லாம் ஆரம்பமாக இருப்பதைக் கண்டுவிட்டோம். உழைக்கவும், பேசவும், சிந்திக்கவும் அறிந்த மனிதன் தோன்றியதைக் கண்டுவிட்டோம்.

வாலில்லாக்குரங்கின் யுகத்துக்கும் மனிதனது யுகத்துக்கும் இடையிலுள்ள ஆயிரக்கணக்கான ஆண்டுகளை நாம் கவனிக்கும்பொழுது, "உழைப்பே மனிதனைப் படைத்தது" என்று பிரெடரிக் எங்கல்ஸ் கூறிய விவேகம் செறிந்த வார்த்தைகளை நினைவூட்டிக்கொள்ளாதிருக்க முடியாது.

## இரண்டாம் பாகம்

### அத்தியாயம்—I

# ஆளில்லாத வீட்டில்

ஒரு குடும்பத்தினர் ஒரு வீட்டைவிட்டு வெளியேறும் பொழுது அங்கு பல பொருட்களை எறிந்துவிட்டுப் போகிறார்கள். காலி அறைகளில் கிழிந்த காகிதங்களும் உடைந்த கோப்பைகளும் பழைய தகரக்குவளைகளும் கிடக்கின்றன. உடைந்துபோன கரிச்சட்டிகளது துண்டு கள் அடுப்புமீது குவிக்கப்பட்டுள்ளன. புகை போக்கி யில்லாத விளக்கு ஒன்று இந்தப் பாழடைந்த நிலையை வருத்தத்துடன் நோக்குகிறது. லொடலொட்டையாகி விட்ட ஒரு பழைய நாற்காலியும் அறையின் ஒரு பக்கத்தில் இருக்கிறது. அதன் தையல்கள் விட்டிருப்பதால், பல இடங்களில் சிவப்பு மயிர் கொத்துக் கொத்தாகத் துருத்திக் கொண்டிருக்கிறது. ஒரு காலை இழந்துவிட்ட அந்த நாற் காலி, கனவுக்கு இடமில்லாத நிம்மதியான உறக்கத்தில் ஆழ்ந்திருக்கிறது. இவற்றை யெல்லாம் நோக்கிவிட்டு. இந்த வீட்டில் ஜனங்கள் எவ்வாறு வாழ்ந்தார்க ளென்று ஊகித்துச் சொல்லமுடியுமா? முடியாது என்றே கூறி விடலாம்.

இதுதான் பழம்பொருளாராய்ச்சியாளனை எதிர்நோக் கும் பிரச்னை. எப்பொழுதுமே, ஒரு வீட்டுக்குக் கடைசி யில் போவது அவன்தான். வீடு இடியாமலிருக்கும் பொழுது சென்றாலாவது மோசமில்லை என்று கூறலாம். ஆனால் வீட்டில் கடைசியில் குடியிருந்தவர்கள் கிளம்பிப் போய் நூற்றுக்கணக்கான ஆண்டுகள் ஆனபின்பே, பழம் பொருளாராய்ச்சி யாளன் அந்த வீட்டுக்கு வருகிறான். அவன் வீட்டைக் காண்பதில்லை. இடிந்த சுவர்களையும் அஸ்திவாரங்களின் மிச்ச சொச்சங்களையுமே காண்கிறான். எனவே, ஒவ்வொரு மட்பாண்டத் துண்டையும் ஒரு கண்டு பிடிப்பாகக் கருதுகிறான்; எந்தப் பொருளின்

எச்சம் என்ன கிடைத்தாலும் அதைத் தன் நற்பேருகக் கருதுகின்ருன்.

பழைய வீடுகளின் மொழியைப் புரிந்தவனுக்கு அவற்ருல் எவ்வளவோ சொல்லமுடியும்!

இடிந்துபோன பழைய கோபுரங்களும் புல்லடர்ந்த சுவர்களும் பற்பல மக்களைக் கண்டிருக்கின்றன; அநேக சம்பவங்களைப் பார்த்திருக்கின்றன. ஆனுல் மிகத்தொன்மையான வீடுகளான குகைகள் இவற்றுக்கும் முற்பட்டவை. பதினைந்தாயிரம் ஆண்டுகளுக்குமுன் ஜனங்கள் வாழ்ந்த குகைகள் சில உள்ளன!

மலைகள் நிலையானவையாக இருப்பது நமது நற்பேறு ஆகும். மனிதர்கள் கட்டும் வீடுகளது சுவர்கள் இடிந்து விழுவதைப்போல், அவ்வளவு விரைவாக மலைக்குகைகளின் சுவர்கள் இடிந்து விழுவதில்லை.

ஒரு குகையை நோக்குங்கள். ஒருவர்பின் ஒருவராகப் பலர் அதில் குடியேறினுர்கள். முதலில் நிலத்தின்கீழிருந்து வந்த நீர் அந்தக் குகையில் குடிபுகுந்தது. அது தன்னுடன் மணலையும் மண்ணையும் சரளைக் கற்களையும் கொண்டுவந்து சேர்த்தது.

அந்தத் தண்ணீர் குகையிலிருந்து நீங்கியது. அதன்பின், ஜனங்கள் அதில் குடியேறினுர்கள். மண்ணிலே கிடைக்கின்ற திருத்தமுருத தீக்கற்கருவிகள்* அவர்களைப்பற்றி நமக்கு எடுத்துரைக்கின்றன. அந்தக் கூரான கருவிகளைக் கொண்டு, பூர்வகுடிகள் கொல்லப் பட்ட விலங்குகளை அறுத்தார்கள்; இறைச்சியை எலும்புகளிலிருந்து பிரித்தார்கள். எலும்புகளை உடைத்து அவற்றினுள் இருந்த மஜ்ஜையை எடுத்தார்கள். இதிலிருந்து நாம் அறிவது என்ன? இந்தக்குகைக்கு வந்தவர்கள் அதற்குமுன்பே வேடர்களாக இருந்தனர் என்பதே.

பல ஆண்டுகள் கழிந்தன, ஜனங்கள் அந்தக் குகையை விட்டுச் சென்றனர். வேறு சிலர் அங்கு வந்து வசித்தனர்.

---

*தீக்கல் : சக்கி முக்கிக்கல் (Flint)

குகையின் சுவர்களைத் தேய்த்து மழமழப்பாக்கினர்- குகைக் கரடிகளே இந்தப் புதிய குடிகள். குகைக்கரடி தன் மயிரடர்ந்த முதுகால் தன் இல்லத்தின் கற்சுவர்களைத் தேய்த்து மழமழப்பாக்கியது. குகையில் நாம் இன்றும் அந்தக் குகைக்கரடியைக் காணலாம். அதாவது அகன்ற நெற்றியையும் குறுகிய முகறையையும் உடைய அதன் மண்டை யோட்டைக் காணலாம்.

அடுத்த அடுக்கில் நாம் மீண்டும் மனிதர் குடியிருப்பின் மீதமிச்சங்களைக் காண்கிறோம். நெருப்பு வளர்த்த இடத்தில் கரியும் சாம்பலும் உள்ளன ; தனித்தனியான எலும்புகளும் கற்கருவிகளும் எலும்புக் கருவிகளும் உள்ளன. மீண்டும், இந்தக் குகையில் ஜனங்கள் வாழ்ந்தன ரென்பதை இந்தச் சான்றுகளிலிருந்து அறிகிறோம். அந்த ஜனங்களை நாம் பார்க்கவில்லை ; ஆயினும் அவர்களைப்பற்றி நாம் பல விஷயங்களைக் கூறமுடியும். அவர்கள் விட்டுச் சென்ற பொருள்களைப் பரிசீலனை செய்வதன்மூலம் இது சாத்திய மாகிறது.

பார்த்துப் பழகாத கண்ணுக்கு இவையெல்லாம் துண்டு துண்டாகவும் உடைசலாகவும் உள்ள கற்கள் தாம் ; அவை ஒன்றுக்கொன்று வேற்றுமை உள்ளவை என்று கூடத்தோன்றாது. ஆனால் நீங்கள் அவற்றை உன்னிப் பாகக் கவனித்தீர்களானால், அவற்றில் எதிர்காலத் துச் சம்மட்டியையும் எதிர்காலத்துக் கத்தியையும் எதிர்காலத்து ரம்பத்தையும் தோல் தைக்கும் ஊசியையும் காணமுடியும். ஒரு கருவி, கத்தியைப்போல் கூரான விளிம்பை உடையதாயிருக்கிறது, இன்னொன்றின் முனை கூராயிருக்கிறது. மற்றொன்றின் ஒரு விளிம்பில் பற்கள் அமைந்துள்ளன.

இவைதான் நம் கருவிகளின் முன்னோர்கள். இவற்றில் மிகவும் தொன்மையானது வட்டவடிவமாகக் கல்லில் செய்த சம்மட்டியாகும். அதனால்தான் அவர்கள் கல்லை

உடைத்தனர். கருவிகளுக்குத் தேவையான சிம்புகளை உடைத்தெடுத்தனர்.

ஆனால் சம்மட்டி இருக்கும் இடத்தில் பட்டடையும் இருக்கவேண்டும்.

குகையின் அடியிலுள்ள குப்பையை நன்றாகக் கிளறித் துருவி ஆராய்ந்தால், சம்மட்டித் தாத்தா கிடந்த இடத்துக்குச் சற்றுதூரத்தில் பட்டடைப் பாட்டியும் கிடப்பதைக் காணலாம்.

சம் மட்டித் தாத்தா கல்லினால் அமைந்தது.

பட்டடைப் பாட்டி எலும்பினால் அமைந்தது.

இந்த "எலும்பாலான கிழவி" நம் காலத்துப் பட்டடைகளிலிருந்து மிகவும் வேறுபட்டிருக்கிறாள். ஆயினும் அந்தப் பட்டடையைக் கண்ணும் கருத்துமாய் நோக்குங்கள். அது தன் வேலையை நன்கு செய்த தென்பதை நீங்கள் உய்த்துணர்வீர்கள். அதன்மீது சம்மட்டியடி பட்டதால் சின்னங்களும் கீறல்களும் நிறைய இருக்கின்றன. அவர்கள் சம்மட்டியால் அடித்துக் கருவியை உருவாக்கியபொழுது, பட்டடை அதை நன்றாகத் தாங்கியது என்பது வெளிப்படை.

இந்தக் கருவிகள் நமக்கு அறிவுறுத்துவது என்ன ?

குகையின் புதிய எஜமானர்கள் ஆதி மனிதர்களைவிட வெகுதூரம் முன்னேறியிருந்தன ரென்பதை அவை தெரிவிக்கின்றன. இடையில் உருண்டோடிய ஆயிரக்கணக்கான ஆண்டுகளில், மனித உழைப்பு, பலவகைப்பட்டதாயும் சிக்கலானதாயும் ஆகிவந்தது.

முன்காலத்தில், சகல காரியங்களுக்கும் ஒரே வகையான கூரான கருவிதான் பயன்பட்டது, இப்பொழுது அவர்கள் ஒரு கருவியால் வெட்டுகின்றனர்; இன்னொன்றால் பிளக்கின்றனர்; மற்றொன்றால் சுரண்டுகின்றனர்; வேறொன்றால் புடைக்கின்றனர். கூரான நுனியை உடைய கருவி

தோல் தைக்கும் ஊசியாகும். ஆடை தைத்தபொழுது அதனால் தோலில் துளைகள் செய்தனர். விளிம்பில் பற்களை உடையது துருவு கருவியாகும். அதைக்கொண்டு அவர்கள் இறைச்சியைத் துண்டு போட்டனர் ; தோலைச்சுரண்டினர். கூரான விளிம்பை உடையது ஈட்டிமுனையாகும்.

மனிதர்கள் முன்னைவிட அதிகமாகச் சிரமப்பட்டுக் கூடுதலாக வேலை செய்தனர் என்பது வெளிப்படை. கடுங் குளிர் அவர்களை வதைத்தது. எனவே, கரடித் தோலில் ஆடைகள் செய்துகொள்வதைப் பற்றியும் குளிர்காலத் துக்கு இறைச்சியை இருப்பில் சேமித்துக் கொள்வதைப் பற்றியும் கதகதப்பான இல்லங்களை அமைத்துக்கொள் வதைப் பற்றியும் அவர்கள் சிந்திக்க வேண்டியதாயிற்று. இவையனைத்தையும் செய்வதற்கு எவ்வளவு சிறந்ததாயினும் ஒரு கருவியால் முடியாது. எனவே, அவர்கள் பல கருவி களைச் செய்து கொண்டனர்.

ஆக, நமது முன்னோரின் வீட்டில் நமது கருவிகளின் மூதாதையரைக் காண்கிறோம்.

ஆனால் காலத்தால் பாதுகாக்கப் பட்டவற்றையே நாம் பார்க்கிறோம். பொருட்களைப் பேணுவதில் காலம் கெட்டிக்காரன் அல்ல. அழியமுடியாதனவும் வலிமை மிகுந்தனவுமான பொருட்களையே, கல்லாலும் எலும்பாலும் செய்தவற்றையே, அது நமக்குக் காப்பாற்றி அளித்திருக் கிறது.

மரத்தாலும் தோல்களாலும் செய்யப்பட்டவை காலத்தால் அழிக்கப் பட்டுவிட்டன. அதனால்தான், தோல்தைக்கும் ஊசி நமக்குக் கிடைத்திருக்கும் பொழுதே அதன் உதவியுடன் தைக்கப்பட்ட தோலாடை நமக்குக் கிடைக்கவில்லை. கருங்கல்லில் செய்த ஈட்டிமுனை நமக்குக் கிடைத்திருக்கிறது ; ஆனால் அதை எந்த மரக்கட்டையின் முனையில் கட்டியிருந்தார்களோ அந்தக் கட்டை நமக்குக் கிடைக்கவில்லை.

ஆனால் நாம் நமது தேட்டத்தைத் தொடர்ந்து நடத்துவோம்.

உச்சிமட்டத்திலிருந்து அடிமட்டத்தை நோக்கிக் குடைந்துகொண்டு செல்வதுதான் வழக்கம். முதலில் மேலேயுள்ள அடுக்குகளை அகற்றுகின்றனர்; அதன்பின் மேன்மேலும் கீழே அகழ்ந்துகொண்டு போகின்றனர்; பூமியின் அடிவாரத்துக்கே—வரலாற்றின் அடிவாரத்துக்கே—செல்கின்றனர். பழம்பொருளாராய்ச்சியாளன் தன் புத்தகத்தைப் பின்னுக்கிப் படிக்கிறான் எனலாம். அதாவது அவன் கடைசி அத்தியாயத்தில் ஆரம்பித்து முதல் அத்தியாயத்தில் முடிக்கிறான்.

நாம் இதற்குமாறான முறையில் நமது கதையைச் சொன்னோம். நாம் தாழ்வான அடுக்குகளிலிருந்து தொடங்கினோம்; குகையின் வரலாற்றை முதல் அத்தியாயங்களிலிருந்து ஆரம்பித்தோம். இப்பொழுது, நாம் மேல்தட்டுகளை நோக்கி வந்துகொண்டிருக்கிறோம்; நம் காலத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறோம்.

குகையில் அடுத்தபடி என்ன நிகழ்ந்தது ?

மீண்டும் மீண்டும் மக்கள் குகையில் குடியேறினார்களென்றும் வெளியேறினார்களென்றும் படிவுகளைப் பரிசீலனை செய்வதன்மூலம் அறிந்துகொள்கிறோம். குகையில் ஜனங்கள் இல்லாதபொழுது, கரடிகளும் கழுதைப்புலிகளும் அதில் வசித்தன. குகையில் மண்ணும் புழுதியும் குவிந்தன; கூரையிலிருந்து கற்கள் விழுந்தன. பல்லாண்டுகளுக்குப்பிறகு இன்னொரு மனிதர்கூட்டம் அந்தக் குகையைக் கண்டுபிடித்தபொழுது, அதன் பழைய எஜமானர்களைப்பற்றி அவர்களிடம் எடுத்துரைப்பதற்கு யாதுமில்லாமலிருந்தது.

ஆண்டுகள் ஓடின; நூற்றாண்டுகள், ஆயிரமாயிரம் ஆண்டுகள் உருண்டோடின. ஜனங்கள் திறந்தவெளியில் வீடு கட்டிக்கொண்டனர். அதன்பின், இயற்கை ஆயத்தம்

செய்து அளித்த அக்குகைகளை ஜனங்கள் குடியிருப்புக்குப் பயன்படுத்தவில்லை.

இடையர்கள் மட்டும், மலைச்சரிவுகளின் பசும்புல்லில் கால்நடைகளை மேயவிட்டபொழுது, அக்குகைகளில் குறுகிய காலத்துக்குத் தங்கினார்கள். எதிர்பாராதவிதமாக மலைகளிடையே சிக்கிய பிரயாணிகளுக்கும் இந்தக்குகைகள் சிறிது காலத்துக்கு அடைக்கலம் அளித்தன.

கடைசியில் நாம் குகையின் வரலாற்றில் இறுதி அத்தியாயத்துக்கு வருகிறோம். மீண்டும் ஜனங்கள் குகைக்கு வந்தனர். ஆனால் இந்தத்தடவை அவர்கள் குகையில் வசிப்பதற்காக வரவில்லை. நீண்டகாலத்துக்கு முன்னால் அங்கு மக்கள் எப்படி வாழ்ந்தனர் என்பதைக் காண்பதற்கே வந்தனர்.

இந்தப் பழம்பொருளாராய்ச்சியாளர்கள் குகையில் ஒவ்வொரு அடுக்காக அகழ்ந்தெடுத்தார்கள். அவற்றிலிருந்து குகையின் வரலாறு முழுவதையும் முதலிலிருந்து முடிவுவரையில் படித்தார்கள்.

அவர்கள் அங்கு கிடைத்த கருவிகளை ஒப்பிட்டுப் பார்த்தனர்; தலைமுறை தலைமுறையாக, மனிதனது திறமை கூடிவந்ததையும் மானிட அனுபவம் பெருகி வந்ததையும் கண்டார்கள். அந்த ஆயிரக்கணக்கான ஆண்டுகளில் மனிதனது உற்பத்திக்கருவிகள் மாறவில்லையென்றாலும் அவை மேன்மேலும் செம்மையடைந்து கொண்டிருந்தன. அரைகுறையாகக் கூரடைந்திருந்த கோடரிக்குப் பதிலாக, கூரான ஈட்டிமுனை, துறப்பணம், தோல்தைக்கும் ஊசி ஆகியவற்றைத் தீக்கல்லின் மெல்லிய சிம்புகளால் செய்தனர். கற்கருவிகளுடன், எலும்பிலும் கொம்பிலும்கூடக் கருவிகள் செய்தனர். கல்வேலைக்குமட்டும் பயன்படுத்தப்பட்ட சம்மட்டியுடன், எலும்பு, தோல், மரம் ஆகியவற்றில் வேலை செய்வதற்கான கருவிகளும் உண்டாயின. ஒரேகல்லிலிருந்து, செதுக்குவதற்கானஉளியையும் தோலைச்

சுரண்டிச்சுத்தம் செய்வதற்கான துறவுக்கருவியையும் மரத்தில் துளையிடுவதற்கான துறப்பணத்தையும் மனிதன் செய்தான். ஆக, மனிதனது செயற்கைப் பற்களும் வளை நகங்களும் மேன்மேலும் கூரடைந்தன; விதவிதமான வடிவுகொண்டன.

## நீண்ட கை

மனிதன் ஒரு ஈட்டிக்கம்பைச் செய்து அதன் முனையில் கல்லால் செய்த கூரான ஈட்டிக்கத்தியைக் கட்டிய பொழுது, அவனது கையின் நீளம் அதிகமாயிற்று.

இது அவனது பலத்தையும் துணிவையும் அதிகமாக்கியது.

முன்னாளில், மனிதன் ஒரு கரடியைச் சந்தித்தானென்றால், கிலியடைந்து ஓடினான். அந்த மயிரடர்ந்த குகைக் கரடியை எதிர்த்து நிற்பதற்கு அவன் விரும்பவில்லை. அவன் சிறு பிராணிகளை எளிதாகத் தோற்கடித்துக் கொன்றான். ஆனால் தன்னந்தனியனாகக் கரடியை எதிர்த்துப் போராட அவன் துணியவில்லை. கரடியின் பாதங்களினிடையே சிக்கிவிட்டால் உயிரோடு மீளமுடியாதென்பதை அவன் நன்கறிந்திருந்தான்.

மனிதன் ஈட்டியைக் கையில் எடுக்கும்வரை இந்த நிலைமை நீடித்தது. ஈட்டி அவனுக்குத் தைரியத்தை அளித்தது. இப்பொழுது அவன் கரடியைக் கண்டால் ஓடவில்லை. அதற்குமாறாக, கரடியைநோக்கி முன்னேறி அதைத் தாக்கத் துணிந்தான்.

கரடி தன் முழுஉயரத்துக்கு எழுந்துகொண்டு, வேடனைத்தாக்க முற்பட்டது. ஆனால் அதன் பாதங்கள் அவனை அடைவதற்குள், ஒரு கூரான முனை கரடியின் மயிரடர்ந்த மார்பில் நுழைந்தது. எவ்வாறு எனில், ஈட்டி, கரடியின் காலைவிட நீளமாயிருந்ததால்.

காயமடைந்த கரடி சினங்கொண்டது. ஈட்டியைத் தாக்கத் தாவியது. ஆனால் இதன் விளைவாகக் கல்லாலான

முனை கரடியின் தசைக்குள் மேலும் மேலும் ஊடுருவியது. அந்த வேளையில், மரத்தால் செய்த ஈட்டி உடைந்துவிட்டால், வேடனுக்கு ஆபத்துத்தான். கரடி அவனைத் தன் பாதங்களால் பற்றிப் பிருண்டிவிடும்; வளைநகங்களாலும் பற்களாலும் வேடனது முகத்தையும் தோளையும் கிழித்துவிடும்.

ஆனால் கரடிக்கு வெற்றிகிட்டுவது அரிதாகவே இருந்தது; ஏனெனில் இப்பொழுதெல்லாம் மனிதன் வேட்டையாடுவதற்குத் தனியே செல்வதில்லை. அவன் உதவி வேண்டுமென்ற பொருளில் கூக்குரலிட்டவுடன், அவனது கூட்டாளிகள் விரைந்து ஓடிவந்தனர்; அவர்கள் கரடியை நாலாபுறத்திலும் சூழ்ந்தனர்; கற்கத்திகளை உபயோகித்து அதைக்கொன்றனர்.

முன்னால் கரடியைப்போன்ற உணவுப்பொருட்கள் கிடைக்குமென்று மனிதன் கனவும் கண்டதில்லை. இப்பொழுது ஈட்டியின் உதவியால் அவை கிடைத்தன. இப்பொழுதும், குகைகளில் தட்டையான கற்களை அடுக்கி அமையப்பெற்ற சேமிப்பு அறைகளைக் காண்கிறோம். அவற்றில் ஏராளமான கரடி எலும்புகள் இருப்பதையும் காண்கிறோம். ஜனங்கள் கரடி இறைச்சியை நிறையச் சேமிக்க முடிந்ததென்றால், வேட்டைத்தொழில் நன்கு நிகழ்ந்திருக்கவேண்டும்.

மனிதன் எப்பொழுதுமே கரடியைப்போன்ற பிராணிகளைமட்டும் வேட்டையாடவேண்டியிருந்தால், ஈட்டி மட்டும் அவனது காரியங்களுக்குப் போதுமானதாயிருந்திருக்கும். ஆனால் விரைவாக இயங்கிய இதர பிராணிகளையும் அவன் வேட்டையாடவேண்டியதாயிற்று.

அவர்கள் சமவெளியில் அலைந்தபொழுது, காட்டுக்குதிரைகளின் கூட்டத்தையும் காட்டெருமைக் கூட்டத்தையும் அடிக்கடி கண்டனர். அவர்கள் சப்தம் செய்யாது முன்னேறி நெருங்கியபோதிலும், சலசலப்பைக்

கேட்டவுடன் அவ்விலங்குகள் அதிர்ச்சியடைந்து காற்று வேகத்தில் ஓடின.

குதிரைகளையும் காட்டெருமைகளையும் வேட்டை யாடும் அளவுக்கு மனிதனது கை வளரவில்லை.

ஆனால், வேட்டையிலிருந்தே மனிதனுக்கு ஒரு புதிய வலுவான பொருள் கிடைத்தது. அதுவே எலும்பு.

கல்லில் செய்த உளியால் அவன் எலும்பிலிருந்து ஒரு இலேசான, கூரான முனையை உருவாக்கினான். அதை ஒரு குட்டையான மரக்கட்டையில் கட்டினான். இவ்வாறாக, ஒரு புதிய கருவியை உண்டாக்கினான். இதுவே எறிபடை.

ஓடிய குதிரையின்மீது கனமான ஈட்டியை எறிய முடியவில்லை. ஆனால் எறிபடையைக் குறிபார்த்து வீசி எறியமுடியும். எறிபடையால் ரொம்பதூரம் போகவும் முடியும். எனவே, மனிதனின் கை வளர்ந்துவிட்டது. இலேசான கருவியான எறிபடையால் ஓடிய குதிரையை அடைவதற்கு அவனால் முடிந்தது.

ஓடும் குதிரை நிலைப்பட்ட இலக்கு அல்ல. இயங்கும் இலக்கின்மீது குறிவைத்து எறிபடையை வீசுவது கஷ்டம். அதற்கு வலுவான கரமும் தெளிந்த பார்வையும் தேவை.

வேடன் இளம்பருவத்தி லிருந்தே எறிபடை வீசுவதற்குக் கற்றுக்கொண்டான். எனினும் வேட்டையாடிய பொழுது, நூற்றுக்குப் பத்துப்பதினைந்து எறிபடைகள் தாம் இலக்கைத் தாக்குவதில் வெற்றியடைந்தன.

ஆயிரமாயிரம் ஆண்டுகள் கழிந்தன. குதிரைக் கூட்டங்களும் காட்டெருமை மந்தைகளும் அரிதாயின. அவற்றில் அநேகம் மனிதனுக்கு இரையாகிவிட்டன. எனவே, வேடர்கள் அடிக்கடி வெறுங்கையுடன் திரும்ப வேண்டியதாயிற்று. இன்னும் சேய்மையிலுள்ள இலக்கை

யும் அடையக்கூடிய புதிய ஆயுதத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். மனிதனது கைகள் மேலும் நீளமாகவேண்டும்.

மனிதன் புதிய ஆயுதத்தை உண்டாக்கினான். அவன் ஓர் இளமரத்தை வெட்டினான்; அதை வில்லாக வளைத்தான்; அதைப் பச்சைத் தோல் வாரினால் இழுத்துக் கட்டினான். அந்த வாரே வில்நாணாகப் பயன்பட்டது.

வேடனுக்கு வில் கிடைத்துவிட்டது.

அவன் வில்நாணை மெதுவாகப் பின்னோக்கி இழுத்த பொழுது, அது அவனது விறைப்பான தசைகளிலிருந்து சக்தியைப் பெற்றுச் சேகரித்துக்கொண்டது. அதன்பின் அவன் நாணை விடுத்தபொழுது, அது தான் சேமித்த சக்தி முழுவதையும் உடனடியாக அம்புக்குக் கொடுத்தது. அம்பு வெளியில் பாய்ந்து, கழுகு தன் இரையை நோக்கிப் பறப்பதைப்போல் பறந்தது.

கையால் எறியப்பட்ட எறிபடையைக் காட்டிலும் அம்பு அதிகதூரம் சென்றது.

எறிபடையும் அம்பும் சகோதர சகோதரிமாதிரி ஒப்புமை உடையவை. ஆனால் சகோதரி சகோதரனைவிடப் பல்லாயிரம் ஆண்டு இளையவள்.

மானிடர்கள் அம்பு செய்வதற்குப் பல்லாயிர மாண்டுகளாயிற்று. அவர்கள் முதலில் எறிபடையையே வில்லுடன் உபயோகித்தார்கள்; அப்பொழுது அவர்கள் வில்லைப் பெரிதாக ஓராள் உயரத்துக்குச் செய்யவேண்டியதாயிற்று.

ஆக, மனிதன் தன் பலவீனமான குட்டைக் கையைப் பலம் மிகுந்த நீண்ட கரமாக ஆக்கினான். கலைமானுடைய கொம்பிலிருந்தோ கம்பளி யானையின் தந்தத்திலிருந்தோ கூர்நுனியான ஆயுதத்தைச் செய்தபொழுது, அந்தப் பிராணிகளுக்கு எதிராக அதை உபயோகித்தான். உலகில் மனிதன் ஒருவனே இத்தகைய காரியத்தைச் செய்திருக்கிறான். வேறு எந்த உயிரினமும் இவ்வாறு செய்ததில்லை.

எறிபடையைக் குறிபார்த்து எய்த கை, வில்நாணை நெகிழவிட்ட கை, சாமானியமான கை அல்ல; அது மகா புருஷனின் கை.

இளம் பருவத்திலிருந்த அந்த மகாபுருஷன் வேட்டையாடியபொழுது, அவன் ஒரு பிராணியைமட்டும் துரத்திக் கொண்டு போகவில்லை; பிராணிகளது கூட்டங்களையே துரத்தி வேட்டையாடினான்.

## உயிர்ப்புள்ள நீர்வீழ்ச்சி

பிரான்ஸ் தேசத்தில் ஸோலுட்ரி என்ற இடத்தில் ஒரு செங்குத்தான பாறை இருக்கிறது. அதன் அடிவாரத்தில், பிரம்மாண்டமான எலும்புக்குவியலைப்பழம் பொருளாராய்ச்சியாளர்கள் அகழ்ந்தெடுத்திருக்கிறார்கள். அந்தக் குவியலில் கம்பளியானைகளது எலும்புகளும் பூர்வீகக்கால் நடைகளது எலும்புகளும் குகைக்கரடிகளது மண்டையோடுகளும் உள்ளன.

ஆனால் அந்தக் குவியலில் குதிரை எலும்புகளே பெரும்பான்மையாக உள்ளன. சில இடங்களில் பல அடி ஆழத்துக்குக் குதிரைஎலும்புக் குவியல்கள் உள்ளன. இங்கு லட்சக்கணக்கான குதிரைகளது எலும்புகள் இருப்பதாகப் பழம் பொருளாராய்ச்சியாளர்கள் கணக்கிட்டிருக்கின்றனர்.

இந்தக் குதிரைக் கல்லறை எவ்வாறு அமைந்தது ?

விஞ்ஞானிகள் அதை ஆராய்ந்தபொழுது, பல எலும்புகள் உடைந்தும் சீர்குலைந்தும் பொசுங்கியும் இருப்பதைக் கண்டனர். அவை இந்தக் குவியலைச் சேர்வதற்குமுன் பூர்வீகச் சமையற்காரர்களிடம் பழகியிருக்க வேண்டுமென்பது வெளிப்படையாகப் புலப்பட்டது. மேலும் விஞ்ஞானிகள் தொடர்ந்து ஆராய்ச்சி நடத்தியபொழுது, அது குதிரைகளின் கல்லறை அல்லவென்றும், அடுக்களைக் கழிவுப்பொருட்களால் அமைந்த குன்று என்றும் தெரிய வந்தது.

இத்தகைய பெருங்குவியல் ஓராண்டில் சேர்ந்திருக்க முடியாது. அதனால், ஜனங்கள் இந்த இடத்தில் பல்லாண்டு கள் தொடர்ச்சியாக வாழ்ந்திருக்கவேண்டு மென்பது தெரிய வந்தது.

ஆனால் கழிவுப்பொருட்களின் குவியல் இந்த இடத்தில் அமைந்ததன் காரணம் என்ன? குதிரைகளை வேட்டை யாடிய பண்டைக்கால மக்கள், மேடான இடங்களை விடுத்துவிட்டு இந்த இடத்திலா முகாமை அமைத்திருப் பார்கள்?

இப்படித்தான் நிகழ்ந்திருக்க வேண்டும்: சமவெளியில் குதிரைக் கூட்டத்தைப் பார்த்த வேடர்கள், புதர்களிலும் உயர்ந்த புல்லிடையிலும் ஒளிந்து கொண்டு எச்சரிக்கை யுடன் முன்னேறினார்கள். ஒவ்வொரு வேடனிடமும் பல எறிபடைகள் இருந்தன. எத்தனை குதிரைகள் எங்கிருந்து எந்தத்திசையில் முன்னேறின என்பதை முன்னாலிருந்த வேடர்கள் இதரர்களுக்குச் சைகை மூலம் தெரிவித்தனர்.

வேடர்கள் குதிரைக்கூட்டத்தைச் சுற்றி வளையம் போல் அமைந்து அதனை நெருங்கினர். முதலில், அக்குதிரை கள் சமவெளியில் இங்கும் அங்கும் துண்டுதுண்டாகக் கறுப்பாகத் தோன்றின. இப்பொழுது அவை தெளிவாகப் புலனாயின. அவற்றின் பெரிய தலையும் ஒல்லிக்கால்களும் வளைந்த கழுத்தின் பிடரிமயிரும் நீண்ட கம்பளிமயிர் உடலும் தெளிவாகத் தெரிந்தன.

அவை விரோதியின் வருகையை உணர்ந்து அஞ்சின: ஓடுவதற்கு ஆயத்தமாயின. ஆனால் காலம் கடந்துவிட்டது. நீண்ட அலகினை உடைய சிறகு இல்லாப்பறவைகளது கூட்டம்போல் எறிபடைகள் பறந்துவந்து குதிரைகளைத் தாக்கின.

எறிபடைகள் குதிரைகளின் விலாப்புறங்களிலும் முது கிலும் கழுத்திலும் ஊடுருவின. அவை எங்கே ஓட முடியும்? மூன்று பக்கங்களில் எதிரிகள் சூழ்ந்துவிட்டனர்.

திடீரென்று உயிர்த்தெழுந்த இந்தச் சமநிலத்தில், ஒரே ஒரு வெளிப்போக்குத்தான் இருந்தது. வேடர்களிடமிருந்து, தப்ப முனைந்த குதிரைகள் வெறித்தனமாகக் கனைத்துக் கொண்டு அந்த வெளிப்போக்கு வழியில் ஓடின. ஆனால் வேடர்கள் அதைத்தான் விரும்பினார்கள். அவர்கள் குதிரைகளை மேன்மேலும் அந்த வழியே செங்குத்துப் பாறையின் விளிம்புக்கு விரட்டினார்கள்.

குதிரைகள் பீதியில் நிலைகலங்கின. எங்கே போகிறோம் என்பதைப் பார்க்காது தலைகால்புரியாது ஓடின. வால் காற்றில் பறக்க, விலாப்புற மெல்லாம் நுரையாக, அவை உயிர்ப்புள்ள நதியைப்போல் பாய்ந்து ஓடின. இந்த நதி மேடாகிய நிலத்தைநோக்கி ஓடியது. திடீரென்று செங் குத்தான பாறையின் விளிம்பு அவற்றை எதிர்ப்பட்டது! முன்னணிக் குதிரைகள் விளிம்பை அடைந்து விட்டன. அவை ஆபத்தை உணர்ந்தன; பின்னங்கால்களை மட்டும் ஊன்றிநின்று பெருமூச்செறிந்தன. ஆனால் அவற்றால் நிற்கமுடியவில்லை. பின்னால் ஓடிவந்த குதிரைகள் அவற்றை நெருக்கி உந்தித்தள்ளின.

எனவே, அந்த உயிராறு நீர்வீழ்ச்சியைப்போல் செங் குத்துப்பாறையின் உச்சியிலிருந்து விழுந்தது. அடிவாரத் தில், இரத்தத்தில் தோய்ந்த சவங்களே எஞ்சின.

வேட்டை முற்றுப்பெற்றது. பாறையின் அடிவாரத் தில், தீ வளர்த்தார்கள். கிழவிகள் வேட்டைப்பொருளைப் பங்கிட்டனர். கூட்டத்தினர் அனைவருக்கும் அதன்மீது உரிமை உண்டு. ஆனால் தைரியமும் சாமர்த்தியமும் மிகுந்தவர்களுக்குச் சிறந்த இறைச்சி கிடைத்தது.

## புதிய ஜனங்கள்

கடிகாரத்தின் மணிமுள்ளைப் பார்த்தோமானால், அது அசையாதிருப்பதாக நமக்குத் தோன்றுகிறது. ஆனால் ஓரிரண்டு மணிநேரம் கழிந்தபின்பு மணிமுள் நகர்ந்துள்ளது என்பதை நாம் தீர்க்கமாக உணர்கிறோம்.

மக்கள் வாழ்விலும் அதுபோலத்தான். நம்மிலும் நம்மைச்சுற்றிலும் மாறுதல்கள் நிகழ்ந்துகொண்டே யிருப்பதை நாம் எல்லாநேரத்திலும் கவனிப்பதில்லை. வரலாற்றின் மணிமுள் அசையாதிருப்பதாக நமக்குத் தோன்றுகிறது. பல்லாண்டுகள் கழிந்தபின்பே, அந்த முள் நகர்ந்துள்ளது என்பதையும் அத்துடன் நாமும் மாறியிருக்கிறோம் என்பதையும் நம்மைச்சுற்றியுள்ளதனைத்தும் மாறியுள்ளன என்பதையும் நாம் திடீரென்று உணர்கிறோம்.

இந்தக் காலத்தில் வாழும் நமக்கே சிலசமயங்களில் புதுமை புலனாகவில்லை யென்றால், பத்தாயிரக்கணக்கான ஆண்டுகட்குமுன் வாழ்ந்த நம் முன்னோர்களைப்பற்றிக் கேட்கவேண்டுமா ? புதுமையை, மாறுதலை, உணர்ந்து கொள்வதற்கு அவர்களால் முடிந்ததில்லை.

பழசையும் புதுசையும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு, நம்மிடம் நாட்குறிப்புகளும் புகைப்படங்களும் பத்திரிகைகளும் புத்தகங்களும் உள்ளன. இம்மாதிரி ஒப்பிட்டுப் பார்ப்பதற்கேற்ற சாதனம் எதுவும் நம் முன்னோர்களிடம் இருந்ததில்லை. வாழ்வு என்பது மாறுதலற்றதாக, அசைவற்றதாக அவர்களுக்குத் தோன்றியது. ஏனென்றால், கடிகார முகப்பில் எண்கள் இல்லாவிட்டால், முட்கள் நகர்வதைக் கணிக்கமுடியா திருப்பதைப்போல, பழைமையையும் புதுமையையும் ஒப்பிடாமல் மாறுதலை உணர்வது அசாத்தியமாகும்.

தன் கற்கருவிகளைச் செய்த ஒவ்வொரு வினைஞனும் தனக்கு அந்த வேலையைக் கற்றுக் கொடுத்தவரின் முறைகளைச்சிறிதும் வழுவாமல் பின்பற்றினான்.

அவர்கள் வீடுகட்டியபொழுது, பெண்கள் தமது பாட்டிமார்கள் வைத்த முறையிலேயே அடுப்புக் கற்களை வைத்தனர். வேடர்கள் மரபுநெறி பிழையாமல் காட்டு விலங்குகளை வேட்டையாடினர்.

எனினும், ஜனங்கள் தமது கருவிகளையும் வீடுகளையும் வேலை முறையையும் தமக்கே தெரியாமல் மாற்றிக்கொண்டனர்.

ஒவ்வொரு புதிய கருவியும் ஆரம்பத்தில் பழைய கருவி மாதிரிதான் இருந்தது. முதலில் உண்டான எறிபடை ஈட்டியிலிருந்து அதிகம் வேறுபட்டிருக்கவில்லை. முதலில் செய்த அம்பு எறிபடையைப் பெரிதும் ஒத்திருந்தது. ஆனால் அம்பும் ஈட்டியும் வெவ்வேறு வகையான ஆயுதங்களாயின. வில் அம்பு சகிதமாக வேட்டையாடுவது, ஈட்டியுடன் வேட்டையாடுவதிலிருந்து வேறுபட்டிருந்தது.

மாறுதலுக்கு உட்பட்டவை மனிதனது கருவிகள் மட்டுமல்ல. மனிதனும் மாறினன். பழம் பொருளாராய்ச்சிக்காக அகழ்ந்தெடுத்தபோது கிடைத்த எலும்புக் கூடுகளிலிருந்து இது துலாம்பரமாகிறது. முதன் முதலில் குகையை உபயோகித்த மனிதனையும், பனியுகத்தின் இறுதியில் குகையிலிருந்து வெளியேறிய மனிதனையும் நீங்கள் ஒப்பிட்டுப் பார்த்தீர்களானால், இருவரும் வெவ்வேறானவர்களென்பது புலப்படும். முதலில் குகையினுள் பிரவேசித்த நியன்தர்தால் மனிதனிடம் வாலில்லாக் குரங்கின் மரபை நினைவூட்டும் அம்சங்கள் இருந்தன.

அவனது முதுகு வளைந்திருந்தது; விகாரமாக நடந்தான்; முகத்தில் நெற்றியோ மோவாயோ இல்லையென்றே சொல்லலாம். ஆனால் கிரோ—மாக்னன் மனிதன் நல்ல வளர்ச்சி பெற்று இருந்தான்; நிமிர்ச்சிக்கு உரியவனாகவும் இருந்தான். தோற்றத்தில், நமக்கும் அவனுக்கும் அதிக வேற்றுமை இல்லை.

நியன்தர்தால் மனிதனும் கிரோ—மாக்னன் மனிதனும் பெரிய அளவுக்கு வேறுபட்டிருப்பதால், அவர்கள் வெவ்வேறு இனத்தவர் என்றே சில பழம் பொருளாராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். கிரோ—மாக்னன் மனிதர்கள் நெடுந்தொலைவிலிருந்த ஓர் இடத்திலிருந்து வந்து நியன்

தர்தால் மனிதர்களைத் தோற்கடித்து அழித்தனரென்று கூறுகிறார்கள்.

சில பழம்பொருளாராய்ச்சியாளரின் கொள்கை இது. கிரோ—மாக்னன் மனிதர்கள், பழைய நியன்தர்தால் மனிதர்களது வழித்தோன்றல்களே என்பதை அவர்களுக்கு உணர்த்துவது அசாத்தியம் என்பது வெளிப்படை.

## வீட்டு வரலாற்றின் முதல் அத்தியாயம்

மனிதன் மாறியதைப்போல் அவனது மனையும் மாறியது.

நாம் வீட்டின் வரலாற்றை எழுதவேண்டுமானால், குகையைப் பற்றிய கதையுடன் ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பத்தில், மனிதன் தன் வீட்டைக் கட்டவில்லை. அவன் அதைக் கண்டான். அதை இயற்கையே அமைத்திருந்தது.

ஆனால் இயற்கைக்கு வீடுகட்டும் திறமை குறைவு தான். பிரகிருதிதேவி மலைகளை நகர்த்தி அவற்றில் குகைகளை உண்டாக்கியபொழுது, அவற்றில் யாராவது வசிக்கப் போகிறார்களா இல்லையா என்பதைப்பற்றி அவள் கவலைப் படவில்லை.

எனவே, ஜனங்கள் தமது உபயோகத்துக்காகக் குகையைத் தேடியபொழுது, அவர்களுக்கு முற்றிலும் தகுதியான குகை கிடைப்பது அரிதாயிருந்தது. குகையின் கூரைகள் மிகவும் உயரமாக இருந்தன; அல்லது சுவர்கள் இடிந்துவிழும் போலிருந்தன; அல்லது குகையின் வாயில் மிகவும் தாழ்வானதாக இருந்ததால், தவழ்ந்துதான் குகையினுள் செல்லமுடிந்தது.

குகைக்குத் தகுதியான உருவமளிக்கக் குழுவினர் அனைவரும் முனைந்தனர். அவர்கள் தரையையும் சுவர்களையும் சுரண்டிச் சுத்தம் செய்தனர். மரக்கிளைகளின் கொத்துக்களையும் கற்சுரண்டிகளையும் சேர்த்துக்கட்டி அவற்றைத்தேவைப்பட்ட இடங்களில் கொடுத்துச் சுவர்

களை மட்டமாக்கினர். அதேபோலத் தரையையும் உயர்வு தாழ்வு அற்றதாகச் செய்தனர்.

அவர்கள், நுழைவாயிலுக்கு அருகே, அடுப்புக்காகப் பள்ளம் தோண்டி அதன் விளிம்புகளில் சமதளக் கற்களைப் பதித்தனர். பெண்கள் குழந்தைகளுக்காகப் படுக்கைகளை ஆயத்தம் செய்வதில் ஈடுபட்டனர். படுக்கையைத் தயாரிப்பதற்காக அவர்கள் பூமியில் ஒரு பள்ளம் தோண்டினார்கள்; அதில் இறகுப் படுக்கைக்குப் பதிலாக அடுப்பிலிருந்து எடுத்த கதகதப்பான சாம்பலைப் பரப்பினார்கள்.

தொலைக்கோடியான மூலையில், கரடி இறைச்சி முதலிய பொருட்களை வைப்பதற்காகப் பொருட்கிடங்கை அமைத்தார்கள்.

இவ்வாறாக, அவர்கள் இயற்கையன்னை படைத்த குகையைக் கண்டு, அதைத் தமது உழைப்பால் குடியிருப்பதற்கேற்ற இடமாக மாற்றினார்கள்.

காலம் செல்லச்செல்ல அவர்கள் தமது இருப்பிட அமைப்பில் அதிகமாகக் கவனம் செலுத்தினார்கள். ஓரிடத்தில், இயற்கையில் அமைந்த பாறை முன்னுக்குப் புடைத்துக் கொண்டிருந்ததால், அந்த மேற்கட்டியைக் கூரையாகப் பயன்படுத்தக் கருதிச் சுவர் எழுப்பினார்கள். மற்றொரு இடத்தில் இயற்கையிலேயே சுவர்கள் மாதிரி அமைந்திருப்பதைக் கண்டால், அவற்றின் மீது கூரை அமைத்தார்கள்.

இத்தகைய புராதனக் குடியிருப்புகளில் ஒன்று இன்றும் தென்பிரான்ஸிலுள்ள மலைகளிடையே காணப்படுகிறது. அந்த வட்டாரத்து மக்கள் அதற்குப் 'பேயின் அடுப்பு' என்ற விநோதமான பெயரை இட்டிருக்கின்றனர். பேய்தான் இத்தகைய பெரிய மலைக்குகையில் அடுப்பு எரித்துக் குளிர்காய்ந்திருக்க முடியுமென்று அவர்கள் எண்ணினார்கள். அவர்கள் நம் முன்னோர்களது கதையை நன்கு அறிந்திருந்தார்களானால், அந்தப் "பேயின் அடுப்பு" பேயால் அமைக்கப் பட்டதல்ல வென்பதையும்

மனிதராலேயே அமைக்கப்பட்ட தென்பதையும் அறிந் திருப்பார்கள்.

இங்கே, ஒரு காலத்தில் பூர்வீகமக்கள் முன்னுக்குப் புடைத்துக் கொண்டிருந்த பெரும் பாறையைக் கண்டனர். அதிலிருந்து கீழே விழுந்த இரண்டு பாறைகள் இருபுறங் களிலும் இருசுவர்கள்போல் நின்றன. முன்னுக்குப் புடைத்துக்கொண்டிருந்த பகுதி கூரையாகவும், உடைந்து விழுந்தவை இரண்டு சுவர்களாகவும் இருப்பதைக்கண்ட அந்த ஜனங்கள் மேலும் இரண்டு சுவர்களைக் கட்டினார் கள். தட்டையான பெருங்கற்களால் ஒரு சுவரை அமைத் தனர். ஒன்றோடொன்று பின்னிப் பிணைக்கப்பட்ட கிளை களால் இன்னொன்றை அமைத்து இதன்மீது தோலைக் கட்டித் தொங்கவிட்டனர். இந்த இரண்டாவது சுவரைப் பற்றி நாம் சொல்வது வெறும் ஊகமே. ஏனெனில், காலத்தால் அது அழிக்கப்பட்டு விட்டது.

இந்த நான்கு சுவர்களுக்குள் அமைந்த குடிசையைப் பாதுகாப்பான நில அகழுக்கு ஒப்பிடலாம். இதன் அடி யில், தீக்கல்லின் துண்டு துணுக்குகளும் எலும்பிலும் கொம்பிலும் செய்த கருவிகளும் பாதுகாக்கப்பட்டன.

இந்தப் 'பேயின் அடுப்பு' என்பது பாதி வீடு, பாதிக் குகை ஆகும். இதிலிருந்து உண்மையான வீட்டுக்குச் செல்ல நெடுந்தூரம் போகவேண்டாம்.

மனிதன் இரண்டு சுவர்களைக் கட்டுவதற்குக் கற்றுக் கொண்ட பிறகு, நான்கு சுவர்களைக் கட்டுவதற்குப் பயிற்சிபெற அதிகக்காலம் தேவைப்படவில்லை.

வானத்தின் கீழ் அமைந்த முதல் வீடுகளை நாம் பார்க் கிறோமென்பது உண்மை. அவை நம் காலத்து வீடுகளை விட வளைகளையே அதிகமாக ஒத்திருக்கின்றன. பூர்வீக மக்கள் பூமியில் பெரிதாகவும் ஆழமாகவும் ஓர் இடத்தைத் தோண்டினார்கள். அந்த அகழின் சுவர்கள் விழாமலிருக்க வேண்டுமென்பதற்காக, அவற்றைக் கற்களையும் கம்பளி யானையின் பெரிய எலும்புகளையும் கொண்டு பலப்படுத்தி

ஞர்கள். அந்த அறையைப் பனிக்காற்றிலிருந்து பாதுகாப் பதற்காகக் கிண்ண வடிவுக்கூரை அமைத்தார்கள். வளைக் கப்பட்ட கம்புகளில் மரக்கிளைகளை வைத்துப் பின்னி, அவற்றின்மீது மண்ணை அப்பிக்கூரை அமைத்தனர்.

அந்த வீடு விசித்திரமானதாகத் தோற்றம் அளித்தது. வெளியிலிருந்து நோக்கினுல், கூரைமட்டுமே புலனுயிற்று. அதுவும் வட்டவடிவமான சிறுகுன்றுபோல் தோன்றியது. கூரையிலிருந்த ஓட்டைதான் வீட்டுக்கு நுழைவாயிலாக வும் வீட்டின் புகைபோக்கியாகவும் பயன்பட்டது.

சுவர் ஓரத்தில், கம்பளியானைகளது தாடை எலும்புகள் கிடந்தன. அவற்றையே அவர்கள் பெஞ்சிகளாகப் பயன் படுத்தினுர்கள். பூமாதேவியே படுக்கையாகப் பயன்பட் டாள். அவர்கள் தரையில் ஒரு சதுரவடிவமான பாகத்தை மிதித்துத் துவைத்துச் சமப்படுத்தினுர்கள். அதில் அவர் கள் படுத்து உறங்கினர். மரக்கட்டையைத் தலைக்கு வைத்துக் கொண்டனர்.

எலும்புப் பெஞ்சிகளையும் மண் படுக்கைகளையும் உடைய இந்த வீட்டில், மேஜைகள் கல்லினுல் செய்யப் பட்டிருந்தன. அடுப்புக்கு அருகில், அதிகமான வெளிச்சம் உள்ள இடத்தில் அவர்கள் தட்டையான சமதளக்கற்களைக் கொண்டு வேலைக்கான மேஜையை அமைத்தனர். இத்த கைய வேலை மேஜைமீது கருவிகளும் பொருளின் துண்டு துணுக்குகளும் பூர்த்தியாகாத செய் பண்டங்களும் இருப் பதை இன்றும் காணலாம். மேஜைமீது எலும்பாலான பல உருண்டை மணிகள் கிடக்கின்றன. சில மணிகளில் வேலை பூர்த்தியாகி விட்டது. அவை பளபளப்பாக்கப் பட்டுள்ளன; அவற்றின் நடுவில் ஓட்டையும் போட்டிருக் கிறது. வேறு சில மணிகளில் வேலை பூர்த்தியாகவில்லை. தொழிலாளி நீண்ட எலும்புத்துண்டில் அடையாளங்களை வெட்டியிருக்கிருன். ஆனுல் உருண்டை மணிகளுக்கான துண்டுகளை வெட்டி எடுக்கும் வேலை முடியவில்லை.

அவனது வேலைக்கு ஏதோ இடையூறு நேர்ந்திருக்கிறது. அவனும் அவனுடன் இருந்தவர்களும் அந்த இடத்தை விட்டுச் செல்லவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆபத்துப் பெரிதாயிருந்திருக்க வேண்டு மென்பது வெளிப் படை. இல்லா விட்டால், கலைத்திறனுடன் செய்த ஈட்டி முனைகளையும், காதுகுத்தப் பட்ட எலும்பு ஊசிகளையும், பல்வேறு வேலைகளுக்குப் பயன்பட்டவையும் தீக்கல்லில் செய்யப் பட்டவையுமான வெட்டுக் கருவிகளையும் விட்டு விட்டுச் சென்றிருக்க மாட்டார்கள்.

இவற்றை யெல்லாம் செய்வது எளிதான காரியமாய் இருந்ததில்லை. இவை ஒவ்வொன்றையும் செய்வதற்குப் பலமணி நேரவேலை தேவைப் பட்டது. உதாரணத்துக்கு, மனிதகுல வரலாற்றில் முதன்முதலாகச் செய்யப் பட்ட ஊசி யான எலும்பு ஊசியை எடுத்துக்கொள்ளுங்கள். அது சின்னஞ்சிறிய பொருளாகத் தோன்றுகிறது. ஆனால் அதைச் செய்வதற்கு மிகப்பெரிய திறமை தேவைப் பட்டது. ஒரு குடியிருப்பில், எலும்பு ஊசிகளது உற்பத் திக்கான தொழிற்சாலையையே ஆராய்ச்சியாளர்கள் கண்டு பிடித்தார்கள். எலும்பு ஊசி உற்பத்திக்குத் தேவையான சகல சாதனங்களும் அரைகுறையாகச் செய்த எலும்பு ஊசிகளும் அங்கு இருந்தன. அனைத்தும் முறையாகப் பராமரிக்கப் பட்டிருந்தன. எலும்பு ஊசிகளுக்குக்கிராக்கி இருந்தால், நாளைக்கே அத் தொழிற்சாலையில் வேலை தொடங் கலாம். ஆனால் இம்மாதிரியான வேலையைப் புரிந்த தொழி லாளிகள் இக் காலத்தில் கிடைப்பார்களா என்பது சந்தேகம்தான்.

அவர்கள் இம்மாதிரிதான் ஊசி செய்தனர் ; வெட்டும் கருவி ஒன்றால் குழிமுயலின் எலும்பிலிருந்து வட்டவடிவ மான சிறிய சிம்பை வெட்டி எடுத்தனர். அதன்பின், விளிம்பில் பற்களை உடைய தட்டைக் கற்கருவியால் அந்தச்சிம்பின் ஒரு முனையைக் கூராக்கினார்கள். அடுத்த படி, இன்னொரு முனையில் கூர் நுனியை உடைய கல்துண்டி

ஞல் துளைபோட்டார்கள். இறுதியாக, அந்த ஊசியைக் கற்பலகைக் கல்லில் தேய்த்துப் பளபளப்பாக்கினுர்கள்.

ஒரு ஊசியைச் செய்வதற்கு எத்தனை கருவிகள் தேவைப் பட்டன என்பதையும் எவ்வளவு உழைப்பு அவசியமாயிற்று என்பதையும் எண்ணிப் பாருங்கள்.

ஊசி செய்யும் அளவுக்கு உயர்ந்த திறனுடைய தொழிலாளர்கள், சில குழுக்களிலேயே இருந்தனர். எனவே எலும்பு ஊசி அரிய பொக்கிஷங்களில் ஒன்ருக ஆயிற்று.

பூர்வீக வேடர்களது இருப்பிடங்களில் ஒன்றை உற்று நோக்குவோம்.

அதோ, பனிபெய்துள்ள சமநிலத்தின் நடுவில் பல சிறு குன்றுகளிலிருந்து புகை கிளம்பி வருகிறது. நாம் அவற்றில் ஒன்றை நெருங்குகிருேம். புகையினுல் கண்கள் நோவுற்று வருந்துவதைப் பொருட் படுத்தாமல், கூரையிலுள்ள ஒட்டை வழியே குடிசைக்குள் ஊர்ந்து செல்கிருேம்.

நாம் மாயமந்திர ஆடை அணிந்திருப்பதாகவும், அதனுல் நம்மைப் பிறர் காணமுடியாதென்றும் கற்பனை செய்து கொள்வோம். அந்தப் பள்ளத்தில் புகையடர்ந்து இருட்டாக இருக்கிறது. இரைச்சலும் அதிகம். அங்கு வயது வந்தவர்கள் குறைந்த பட்சமாகப் பத்துப்பேர் இருக்கிருர்கள். குழந்தைகளின் எண்ணிக்கை இன்னும் அதிகமாக இருக்கவேண்டுமென்று ஊகிக்கிருேம்.

நமது கண்கள் புகைக்குப் பழக்கப்பட்டவுடன், அங்கு உள்ளவர்களின் முகத்தையும் உடம்பையும் தெளிவாகப் பார்க்க முடிகிறது. அவர்களிடம் வாலில்லாக் குரங்கின் அம்சம் ஏதுமில்லை. அவர்கள் நெட்டையாகவும் நல்ல உடற்கட்டு உடையவர்களாகவும் பலசாலிகளாகவும் இருக்கின்றனர். அவர்களது விசாலமான முகத்தில் கண்கள் நெருங்கி அமைந்திருக்கின்றன. அவர்களது கரிய உடம்பில் சிவப்பு மையால் ஏதேதோ வடிவங்களைக் குத்திக் கொண்டிருக்கிருர்கள்.

பெண்கள் தரையில் அமர்ந்து தோல், ஆடைகளைத் தைத்துக் கொண்டிருக்கின்றனர். குழந்தைகளுக்கு வேறு விளையாட்டுக் கருவிகள் இல்லாமையால் அவை குதிரையின் கால் எலும்பையோ மான் கொம்பையோ வைத்துக் கொண்டு விளையாடுகின்றன.

அடுப்புக்குப் பக்கத்தில் கற்பலகைக் கற்களால் அமைந்த மேஜையின்மீது ஒரு தொழிலாளி கால்மேல் கால் போட்டுக் கொண்டு அமர்ந்திருக்கிறான். அவன் எலும்பால் செய்த கூர்முனையை மரத்தினாலான எறிபடையில் கட்டிக் கொண்டிருக்கிறான். அவனுக்கருகில் அமர்ந்திருக்கும் இன்னொரு தொழிலாளி, தட்டையான எலும்புத்துண்டில் ஏதோ ஒரு சித்திரத்தைச் செதுக்கிக் கொண்டிருக்கிறான்.

நாம் அவனருகில் சென்று அவன் என்ன செதுக்கு கிறான் என்பதைப் பார்ப்போம்.

அந்த எலும்புத்தகட்டின்மீது சில மெல்லிய கீறல்களால் மேயும் குதிரையின் உருவத்தை வரைந்து கொண்டிருக் கிறான். வியக்கத்தக்க திறமையுடனும் பொறுமையுடனும் அவன் அதன் அழகான கால்களையும் கீழ்நோக்கி நீண்ட கழுத்தையும் அதன் பிடரி மயிரையும், பெரிய தலையையும் வரைகிறான். குதிரை ஜீவனுள்ளதாகத் தோன்றுகிறது. அது அடி எடுத்து வைக்கப்போகிறது என்றே தோன்று கிறது. கால்களின் அசைவையும் தலையின் திருப்பத்தை யும் கலைஞன் நேரில் பார்த்துக் கொண்டே வரைவதாக நாம் மயங்குகிறோம்.

குதிரையின் சித்திரம் முற்றுப்பெற்று விட்டது. ஆயினும் அவன் மேலும் வரைந்து கொண்டிருக்கிறான். குதிரை வடிவத்தின் குறுக்கே இரண்டு மூன்று கீறல்களைக் கீறுகிறான். விநோதமான சித்திரம் தோற்றமளிக்கத் தொடங்குகிறது. இந்தப் பூர்வீகக்கலைஞன் என்ன செய் கிறான்? நம் காலத்துக்கலைஞனும் கண்டால் பொறாமைப் படக்கூடிய அளவுக்குச் சித்திரத்தை வரைந்தவன் அதை ஏன் கெடுக்கிறான்?

சித்திரம் மேலும் சிக்கலானதாகிறது. கடைசியில், குதிரை உடலின் மீது குடிசையின் வடிவத்தைக்கண்டு நாம் வியப்படைகிறோம். இந்தக்குடிசைக்குப் பக்கத்தில், மேலும் இரண்டு மூன்று குடிசைகளைக் கலைஞன் வரைகிறான். ஒரு குடியிருப்பே அமைந்து விட்டது.

இந்த விநோதமான சித்திரத்தின் பொருள் என்ன ?

இது தற்செயலாக அமைந்த சித்திரமா ? கலைஞன் மனம் போன போக்கில் வரைந்ததால் இது உண்டாயிற்றா ?

இல்லை, பூர்வீக மக்களின் குகைகளில் இத்தகைய விநோதமான சித்திரங்கள் பல இருக்கின்றன.

இதோ, ஒரு கம்பளியானையின்மீது இரண்டு குடிசைகள் வரையப்பட்டிருக்கின்றன. இங்கே. காட்டெருமையின் சித்திரத்தின்மீது மூன்று குடிசைகள் வரையப்பட்டிருக் கின்றன. இதோ ஒரு காட்சியே சித்தரிக்கப் பட்டிருக் கிறது. சித்திரத்தின் நடுவில் காட்டெருமையின் சரீரம். அதில் பாதிபாகத்தைப் புசித்து விட்டனர். அதன் தலையும் முதுகுத் தண்டும் கால்களுமே எஞ்சியுள்ளன. வளைவான நீண்ட முகறையுடன் கூடிய மயிரடர்ந்த தலை, முன்னங் கால்களுக்கிடையே கிடக்கிறது. அதன் அருகே இரண்டு வரிசைகளில் ஜனங்கள் நிற்கின்றனர்.

இவ்வாறாக, பிராணிகளும் ஜனங்களும் இருப்பிடங் களும் வரையப்பட்ட பல புதிரான சித்திரங்கள் உள்ளன. அவை எலும்புத்தகடுகளிலும் கற்பலகைக் கற்களிலும் செங்குத்துப் பாறைகளின் பக்கங்களிலும் வரையப்பட் டுள்ளன. ஆயினும், அவற்றில் அநேக சித்திரங்கள் குகை யின் சுவர்களில் உள்ளன. நாம் குகைக்குச் சென்று ஆராய்ந்தபொழுது, அதன் சுவர்களில் சித்திரங்களைக்காண வில்லையே என்று கூறுவீர்கள். ஆனால் ஜனங்கள் உண்ப தற்கும் உறங்குவதற்கும் உழைப்பதற்கும் உரிய இடமா யிருந்த நுழைவாயிலுக்குத்தான் சென்றோம். குகையினுள் போகவில்லை.

நாம் இப்பொழுது குகைக்குள் செல்வோம். அதன் மூலைமுடுக்குகளையும் வளைந்து வளைந்து செல்லும் பாதை களையும் பரிசீலனை செய்வோம். பாறையில் பல வெடிப்பு களும் பிளவுகளும் உள்ளன. அவற்றில் சில, பல அடி நீளம் உள்ளவை; வேறு சில பல நூறு அடி நீளம் உள் ளவை. குகையின் சுவர்களிலும் கூரையிலுமுள்ள இந்தப் பிளவுகளையும் நாம் கவனமாக ஆராய்வோம்.

## நிலத்துக்கடியில் சித்திரக் காட்சிசாலை

நாம் குகைக்குள் ஆராய்ச்சி நடத்துவதற்கு ஒரு விளக்கை எடுத்துக்கொண்டு போகவேண்டும். குகையி னுள் செல்லும்பொழுது ஒவ்வொரு திருப்பத்தையும் ஒவ் வொரு முச்சந்தியையும் மனத்தில் பதியவைத்துக் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால், நிலத்துக்கடியி லுள்ள சுற்றிச்சுழலும் வழியில் திக்குத்தெரியாது விழிக்க நேரிடும்.

பாறையினுள் அமைந்த ஊடுவழி மேன்மேலும் குறுக லாகிக் கொண்டே யிருக்கிறது. வளைவான கூரையிலிருந்து தண்ணீர் சொட்டுகிறது. நமது விளக்கை உயரத்தில் தூக்கிப் பிடித்துக்கொண்டு சுவர்களைக் கவனமாகப் பரி சீலனை செய்கிறோம்.

நிலத்துக்குக் கீழாகச்செல்லும் நீரோட்டங்கள் பிரகாச மான படிகங்களால் குகையை அலங்கரித்திருக்கின்றன. ஆனால் இங்கு மனிதனது கைவேலை யாதும் தென்பட வில்லை.

நாம் தொடர்ந்து நடக்கிறோம். "இங்கே பார்!" என்று திடீரென்று யாரோ ஒருவன் கூப்பிடுகிறான் போலிருக் கிறது!

இங்கே சுவரில் கறுப்புச் சாயத்தாலும் சிவப்புச் சாயத் தாலும் காட்டெருமை வரையப்பட்டிருக்கிறது. அது முன்னங் கால்களை மடக்கிக்கொண்டு விழுந்திருக்கிறது.

அதன் வளைவான முதுகில் எறி படைகள் பாய்ந்திருக்கின் றன.

பத்தாயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன் வாழ்ந்த கலைஞனது இந்தப் படைப்பை உற்றுநோக்கியவாறு நீண்டநேரம் நிற்கிறோம்.

மேலும் கொஞ்சதூரம் போனபின், இன்னோர் ஓவி யத்தைக் கண்டுபிடிக்கிறோம். ஏதோ ஒருவகைப்பட்ட அரக்கன் சுவரில் நடனமாடிக்கொண்டிருக்கிறான். அவன் பிராணியைப் போலுள்ள மனிதன் என்றும் சொல்லலாம், மனிதனைப்போலுள்ள பிராணி யென்றும் சொல்லலாம். அவனுக்குத்தாடி இருக்கிறது. அவனது தலையின்மீது நீளமான வளைந்த கொம்புகள் இருக்கின்றன. அவனது முதுகில் கூனல் விழுந்திருக்கிறது; அவனுக்கு மயிரடர்ந்த வாலும் உண்டு; அவனது கை கால்கள் மனிதனுடைய தாகவே இருக்கின்றன. கையில் வில் ' ஏந்தியிருக்கிறான்.

சித்திரத்தை மேலும் நுணுக்கமாக ஆராய்கிறோம். இது காட்டெருமைத் தோலை உடுத்திய மனிதனது சித்தி ரம் என்பது விளங்குகிறது.

இதற்கு அப்பால் இன்னொரு படம் இருக்கிறது; அதற் கும் அப்பால் மற்றொன்று உள்ளது. மீண்டும் ஒரு படம். இவ்வாறாக.........

இது என்ன விசித்திரமான சித்திரக்காட்சி சாலை ?

இந்த நாட்களில் கலைஞர்கள் நல்ல வெளிச்சம் உள்ள நிலையங்களில் வேலை செய்கிறார்கள். நாம் அவர்களது சித்திரங்களைக் காட்சி சாலையில் தொங்க விடும்பொழுது, அங்கும் நல்ல வெளிச்சம் படங்கள்மீது விழுவதற்கு ஏற் பாடு செய்கிறோம்.

மனிதனது காட்சிப் புலனுக்கு எட்டாத இருண்ட நிலவறையில் சித்திரக்காட்சி சாலையை வைக்கும்படி ஆதி மனிதனைத் தூண்டியதுதான் யாது ?

அவன் தன் படங்களைக் காட்சிப்பொருளாகக் கருதி வரையவில்லை என்பது வெள்ளிடைமலை.

ஆனால், பூர்வீகக் கலைஞன் அவற்றை ஏன் வரைந்தான்? நடனமாடுவோர் பிராணிவேடம் தரித்திருப்பது ஏன்? அதன் பொருள் என்ன?

## புதிரும் விடையும்

"பல வேடர்கள் ஒரு நடனத்தில் பங்கெடுக்கின்றனர். ஒவ்வொருவனும் தன் தலையில் காட்டெருமைத் தலையின் தோலை அணிந்திருக்கிறான் அல்லது அதை ஒத்திருக்கும்படியான முகமூடியை—கொம்புகளுடன் கூடியது—அணிந்திருக்கிறான். ஒவ்வொருவனும் வில் அல்லது ஈட்டியைக் கையில் வைத்திருக்கிறான். நடனமாடுவோர் காட்டெருமை வேட்டையைப் பிரதிநிதித்துவப் படுத்துகின்றனர். அவர்களில் ஒருவன் களைத்தவுடன், அவன் கீழே விழப்போவதுபோல் நடிக்கிறான். அப்பொழுது இன்னொருவன் அவன் மீது மழுங்கலான அம்பை ஏவுகின்றான். அவர்கள் அவனது கால்களைப் பிடித்து வட்டத்துக்கு வெளியே இழுத்து வருகிறார்கள்; அவர்கள் அவனது உடலுக்கு நேராகக் கத்திகளை ஆட்டுகிறார்கள். அதன் பின் அவர்கள் அவனை விட்டுவிடுகிறார்கள். காட்டெருமை முகமூடி அணிந்த இன்னொருவன் வட்டத்தில் முன்னவனது இடத்தை மேற்கொள்ளுகிறான். சில சமயங்களில் நடனமானது ஒரு வினாடிநேர ஓய்வுகூட இல்லாமல் இரண்டு அல்லது மூன்று வாரங்களுக்கு நீடிக்கிறது."

இவ்வாறு பூர்வீக வேடரின் நடனத்தை வர்ணிக்கின்றனர்.

ஆனால் இதை யார் எங்கே கண்டிருக்க முடியும்?

நம் காலத்திய யாத்திரீகர் ஒருவரது குறிப்புக்களில் நாம் இந்த வர்ணனையைத் தற்செயலாகக் கண்டோம். பூர்வீகக் கலைஞன் குகைச்சுவர்களில் வரைந்திருக்கும் வேடர் நடனச் சித்திரத்துக்கு இது விளக்கமாக அமைந்திருக்கிறது.

அந்த யாத்திரிகர் இந்த நடனத்தை எங்கே கண்டார்? வடஅமெரிக்காவின் சமவெளியில். அங்கே அமெரிக்க இந்தியக்குடிகள் இன்றுவரையிலும் பண்டைக்கால வேடர்களது பழக்கங்களைப் போற்றி வந்திருக்கின்றனர்.

நம்மைத் திகைப்புக்குள்ளாக்கிய ஓவியத்தின் பொருளைப்புரிந்து கொள்வதற்குக் குறிப்புக் கிடைத்துவிட்டது. ஆனால் அதுவே இன்னொரு கேள்வியைக் கிளப்புகிறது.

வாரக்கணக்கில் நீடிப்பதாயுள்ள இந்த இயற்கைக்கு ஒவ்வாத நடனத்தின் நோக்கம் என்ன?

நாம் நடனத்தைக் கலையாகவேனும் பொழுது போக்காகவேனும் கருதுகின்றோம். ஆனால் அமெரிக்க இந்தியர்கள் கலையன்பினால் உந்தப்பட்டோ களிப்புற்றுப் பொழுது போக்கவோ, மூன்று வாரகாலத்துக்கு நடனமாடுகிறார்கள் என்பதை, சுருண்டு விழும்வரையில் ஆடுகிறார்கள் என்பதை நம்புவது கடினம். மேலும் அந்த ஆடலே நடனத்தைக் காட்டிலும் ஒருவகைச் சமயச்சடங்கையே அதிகமாக ஒத்திருக்கிறது.

நம் சமுதாயத்தில் ஆடலாசிரியர் நடனத்துக்குப் பொறுப்பு வகித்து அதை நடத்திவைக்கிறார் அமெரிக்க இந்தியர் சமூகங்களிலோ மாயமந்திரவாதி நடனத்தை நடத்தி வைக்கிறார். மாய மந்திரவாதி தம் குழாயிலிருந்து எவ்வழியே புகையை ஊதுகிறாரோ, அவ்வழியே ஆடுவோரும் நகர்கின்றனர். இவ்வாறு விலங்கின் தடத்தைப் பின்பற்றுவதாகப் பாவனை செய்கின்றனர். இப்பொழுது ஒருதிசையிலும், சிறிது நேரத்துக்குப்பின் இன்னொரு திசையிலும் புகையை ஊதுவதன் மூலம், மந்திரவாதி நடனமாடுவோரை வடக்கிலும் கிழக்கிலும் தெற்கிலும் மேற்கிலும் இயங்கும்படி செய்கிறார்.

நாட்டியத்தை நடத்தி வைப்பவர் மந்திரவாதி என்பதால் இது நடனம் அல்லவென்பதும் இது ஒரு மாயமந்திரச் சடங்கு என்பதும் தெளிவாகிறது.

ஆடுவோர் தமது விநோதமான இயக்கங்களின் மூலம், காட்டெருமையை வசியப்படுத்த முயல்கின்றனர். மாய மந்திர சக்தியின் மூலம் பிரேரி*யிலுள்ள காட்டு மிருகத்தைத் தம்பால் ஈர்க்க முயல்கின்றனர்.

குகைச்சுவரில் வரையப்பட்டுள்ள நடனமாடுவோன் சித்திரத்தின் பொருள் இப்போது விளங்குகிறது. அவன் நடனமாடுவோன் என்பதைவிட மாயமந்திரச் சடங்கைச் செய்யும் மந்திரவாதி என்பதே அதிகமாகப் பொருந்தும். நிலவறைக்குச்சென்று, பந்தங்களின் வெளிச்சத்தில் ஓவியம் வரைந்த கலைஞன் வெறுங்கலைஞன் மட்டுமல்ல அவன் மந்திரவாதியாகவும் இருந்தான்.

காட்டு விலங்குகளைப்போல் முகமூடி தரித்தவர்களாகவும் காயம்பட்ட காட்டெருமையாகவும் வேடர்களைச் சித்தரிப்பதன்மூலம் அவன் ஒரு வசிய சக்தியை உண்டாக்கிக் கொண்டிருக்கிறான்; அவர்களது வேட்டைத்தொழிலில் நற்பேறு கிட்டவேண்டுமென்பது அதன் நோக்கம்.

நடனம் உதவி செய்யுமென்று அவன் உறுதியாக நம்புகிறான். நமக்கு அது அர்த்தமற்ற அபத்தமாகத் தோன்றுகிறது.

நாம் வீடுகட்டத்தொடங்கும்பொழுது, தச்சர் கொல்லர் ஆகியோரின் செயல்களைப் பின்பற்றி நடனமாடுவதில்லை. பள்ளிக்கூட ஆசிரியர் தமது மாணவர்களுக்காக ரூல்த்தடியைக்கையில் வைத்துக் கொண்டு நடனமாடத் துணிந்தால், நாம் உடனே அவரைப் பைத்தியக்காரர் விடுதிக்கு அனுப்பிவிடுவோம். ஆனால் நமக்குப் பைத்தியக்காரத்தனமாகத் தோன்றுவதே, நமது முன்னோர்களால் முக்கியமான பணியாகக் கருதப்பட்டது.

நாம் ஓர் ஓவியத்தின் புதிருக்குவிடை கண்டுவிட்டோம். நடனமாடுவோன் சித்திரம் குகையின் சுவரில் வரையப்பட்டிருப்பதின் காரணத்தைக்கண்டு விட்டோம். ஆனால்

---

பிரேரி: நெடும்புல் வகைகள் நிறைந்த பிரதேசம். இதில் மரங்கள் இல்லை.

நாம் பார்த்த இதர ஓவியங்களும் இதேபோல் புதிரானவை தான்.

ஓர் எலும்புத் தகட்டின்மீது கூரான கருவியால் கீறிய சித்திரக்கதையைக் கண்டோமே, ஞாபகமிருக்கிறதா? நடனமாடுவோரின் நடுவில் காட்டெருமையின் உடல் கிடந்தது. அதைச்சுற்றி வேடர்கள் நின்றனர். காட்டெருமையின் உடலில் தலையையும் முன்னங் கால்களையும் தவிர, மீதி அனைத்தையும் உண்டுவிட்டனர்.

இந்த ஓவியத்தின் பொருள் என்ன?

இந்தக் கேள்விக்கு விடை காண்பதற்கு நாம் அமெரிக்கா செல்ல வேண்டாம். ஆனால் ருஷியாவின் வட கோடிக்குச் செல்லவேண்டும்.

சைபீரியாவில், வேடர்கள் கரடியைக் கொன்றவுடன் 'கரடி விழா' நடத்தினார்களென்பதை இன்றும் அங்குள்ள மக்கள் மறக்கவில்லை. அந்த வேடர்கள் கரடியை வீட்டுக்குள் கொண்டுசென்று நன்மதிப்புக்குரிய இருக்கையில் ஆசாரத்தோடு கிடத்தினர். அதன் தலையை அதன் பாதங்களிடையே வைத்துவிட்டு, அந்தத்தலைக்கு முன்னால் பர்ச் மரப்பட்டையை மாவாக்கி அதில் சுட்ட பல சிறுமான் வடிவங்களை வைத்தனர். அதன் முகறையைச் சிரியமரப் பட்டைக் கிண்ணங்களால் அலங்கரித்து அதன் கண்களில் காசுகளை வைத்தனர். அதன்பின் அந்த வேடர்கள் அக்கரடியின் உடலை நெருங்கி அதன் முகறையில் முத்தமிட்டனர்.

இது விழாவின் துவக்கம்தான். அந்த விழா பல நாட்களுக்கு நீடித்தது. அதாவது, பல இரவுகள் தொடர்ந்து நிகழ்ந்தது. ஒவ்வோர் இரவிலும் எஞ்சிமிஞ்சியிருந்த கரடி உடலின் முன்னால் வேடர்கள் திரண்டனர் அதற்குத் தலைகுனிந்து வணங்கிவிட்டுக் கரடியின் குறைபாடான நடையைப் பின்பற்றி நடனமாடத் தொடங்கினர்.

ஆடலும் பாடலும் முடிந்தபின் அவர்கள் விருந்துண்டனர்; அதாவது அக்கரடியின் இறைச்சியைப் புசித்தனர். அதன் தலையையும் முன்னங்கால் பாதங்களையும் தொடாது விட்டுவைத்தனர்.

இப்பொழுது, எலும்புத்தகட்டின்மீது வரையப்பெற்றுள்ள ஓவியம் நமக்குப் புரிகிறது. இது "காட்டெருமை விழா" வைக் குறிக்கும் ஓவியமாகும். காட்டெருமை விழா என்பது எருமை நடனம் மாதிரி ஒரு நாட்டிய நிகழ்ச்சி. காட்டெருமையைச் சூழ்ந்துள்ள ஜனங்கள், தமக்கு இறைச்சி அளித்ததற்காக அந்த விலங்குக்கு நன்றி தெரிவிக்கிறார்கள்; எதிர்காலத்திலும் தமக்கு அருள்புரிய வேண்டுமென்று அதனிடம் இறைஞ்சுகிறார்கள்.

நாம் மீண்டும் அமெரிக்க இந்தியர்களிடம் சென்றோமானால், அவர்களிடையிலும் இதேமாதிரியான வேட்டுவ விழாக்களைக் காணலாம்.

ஹாய்சோல் குலத்தைச் சேர்ந்த வேடர்கள், தம்மால் கொல்லப்பட்ட மானின் கால்களைக் கிழக்கு நோக்கிக் கிடத்துகிறார்கள். அதன் வாய்க்கு முன்னால் பல உணவு வகைகளை உடைய கோப்பையை வைக்கிறார்கள். ஒருவர் பின் மற்றொருவராக, வேடர்கள் மானினிடம் சென்று அதைத் தலையிலிருந்து வால்வரையில் தமது வலக்கரத்தால் தட்டிக் கொடுக்கிறார்கள்; அதன்மூலம் அதைக் கொல்வதற்கு அனுமதி அளித்ததற்காக நன்றி தெரிவிக்கிறார்கள்.

இவ்வாறு செய்யும்பொழுது, "அண்ணனே, சாந்தி அடைக!" என்று கூறுகின்றனர். "நீ உன் கொம்புகளை எங்களுக்குக் கொடுத்தாய். அதற்காக நாங்கள் உனக்கு நன்றி கூறுகிறோம்" என்று மந்திரவாதி மானை நோக்கியவாறு கூறுகிறான்.

அத்தியாயம்—2.

# நம் முன்னேர்களுடன் பேட்டி

நாம் சிறுவராயிருந்தபோது, அரசகுமாரர்களையும் அரச குமாரிகளையும் பற்றிப் பல கற்பிதமான கதைகளைப் படித் திருக்கிறோம். ஆயிரத்தோர் இரவுகள் என்ற அரபுக்கதை களை வாசித்திருக்கிறோம். மனிதராக உருமாற்றப்பட்ட விலங்குகளைப் பற்றியும் விரும்பியபோதெல்லாம் மிருக வடிவு எடுக்கக்கூடிய மனிதரைப் பற்றியும் படித்திருக் கிறோம்.

இந்தக் கதைகளை நம்புவதென்றால், உலகம் முழுவ தும் நல்லனவும் தீயனவுமாகப் பல புரியாத உயிரினங்கள் கண்ணுக்குத் தெரிந்தோ மறைந்தோ வாழ்வதாக நாம் முடிவு செய்யவேண்டும். இந்த உலகத்தில், தீயநெறியில் நிற்கும் மந்திரவாதியோ கொடுமையே அறமாகக்கொண்ட சூனியக்காரியோ நம்மைச் சபித்துவிடாமலிருக்க வேண்டு மென்பதற்காக, நாள்தோறும் கண்காணிப்பாக இருத்தல் அவசியமென்றும் முடிவு செய்வோம்.

நாம் நமது கண்களையே நம்பமுடியாது. எந்த நேரத் திலும் ஒரு விகாரமான தவளை அழகிற்சிறந்த அரசகுமாரி யாக மாறிவிடலாம்; அல்லது அந்த சந்தமான ஓர் இளை ஞன் பயங்கரமான பாம்பாக மாறிவிடலாம். ஒவ்வொன் றும் அதற்கே உரிய பிரத்தியேகமான விதிகளின் வழியில் செயல்படுவதாகிவிடும்; மாண்டவர் உயிர்பெற்று எழுவர் ; வெட்டுண்ட தலைகள் உரையாடும்; வெள்ளத்தினுள் மூழ்கி உயிர் நீத்தவர்கள் வலைஞர்களைத் தண்ணீரினுள் ஈர்த்துவிடுவர்.

நாம் கற்பிதமான கதைகளைப் படிக்கும்பொழுது இவற்றையெல்லாம் அநேகமாக நம்பிவிடுகிறோம். ஆனால் புத்தகத்தை மூடியவுடன் நாம் யதார்த்த உலகத்துக்கு வருகிறோம். இங்கே மந்திரவாதிகளுமில்லை, சூனியக்காரி

களுமில்லை; இங்கே அனைத்தும் இயற்கை விதிகளிலிருந்து பிழையாமல் செயல்படுகின்றன. கற்பிதமான கதைகள் எவ்வளவு கவர்ச்சியாக இருந்தபோதிலும், நாம் பேய் பூதங்களும் மோஹினிகளும் நிறைந்த அந்த உலகத்தில் வாழ்வதற்கு விரும்பமாட்டோம். ஏனெனில், அந்த உல கத்தில் பகுத்தறிவு திறனற்றதாகி விடுகிறது. ஒருவன் வசிய வித்தைகளிலிருந்தும் வினை வைப்புகளிலிருந்தும் தப்ப வேண்டுமானால் அதிர்ஷ்டசாலியாகப் பிறந்திருந்தால்தான் சாத்தியம்.

ஆனால் உலகம் அம்மாதிரி இருப்பதாகவே நம் முன் னோர்கள் நம்பினர். அவர்கள் கற்பிதமான உலகத்தை உண்மை உலகிலிருந்து வேறுபடுத்திப் பார்க்கவில்லை. கட்டுலனாகாத சக்திகள் உலகத்தை நடத்திச் செல்கின் றனவென்றும் அவற்றின் சபலசித்தத்தில் தோன்றும் நல்ல எண்ணங்களுக்கும் தீய எண்ணங்களுக்கும் ஏற்றவாறு அனைத்தும் நிகழ்கின்றனவென்றும் நம் மூதாதையர் எண்ணினார்கள்.

நாம் கல்தடுக்கி விழுந்துவிட்டால், நமது அஜாக்கிர தையைத்தான் கடிந்துகொள்கிறோம். பூர்வீக மனிதனா யிருந்தால், விழுந்தது தன்குற்றம் என்று எண்ணமாட்டான். தான் இடறிவிழ வேண்டுமென்பதற்காக ஏதோ ஒரு பேய் கல்லைக் கொண்டுவந்து போட்டதாகச் சொல்வான்.

ஒருவன் வாள்வெட்டினால் இறந்தானென்றால், அவன் வெட்டுக்காயத்தால் இறந்தானென்று நாம் கூறுகிறோம். ஆனால் பூர்வீக மனிதனாயிருந்தால் அவன் வேறுவிதமாகச் சொல்வான். மந்திரமிடப்பட்ட வாளால் குத்தப்பட்ட தால், அவன் இறந்தான் என்று கூறுவான்.

யாரோ 'கண் வைப்பதன்' மூலம் நோய்கள் உண்டா கின்றன என்றும், வெள்ளிக்கிழமையன்று புதிய அலுவல் எதையும் ஆரம்பிக்காமலிருப்பது உத்தமம் என்றும் நாம் பயணம் புறப்பட்டுச் செல்லும்பொழுது, நமக்கு முன்னால் குழிமுயல் (நம் நாட்டில் பூனை—மொர்) குறுக்கே போனால்

எடுத்த காரியம் கை கூடாதென்றும் நம்புகிறவர்கள் இன்னமும் இருக்கிறார்கள்.

நாம் அத்தகையோரை நோக்கி நகைக்கிறோம். இக் காலத்தில் இத்தகைய மூட நம்பிக்கைகளைத் தழுவுவதை மன்னிக்கமுடியாது.

ஆனால் நமது முன்னோர்கள் பேய் பூதங்களிடமும் மாயமந்திரத்திடமும் நம்பிக்கை வைத்திருந்தனர் என்பதற் காக அவர்களைக் குறைகூறக்கூடாது. அவர்கள் தம்மைச் சுற்றி நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அறிவதற்கும் விளக்குவதற் கும் நேர்மையோடு முயன்றனர். ஆனால் அவர்களது அறிவு சுருங்கிய அளவிலேயே இருந்ததால், பிழைபடாத, விளக்கத்தைக் காண அவர்களால் முடியவில்லை.

இன்றும் அத்தகைய குலங்கள் இருக்கின்றன; நாக ரிகத்தின் வீச்சுக்கு உட்படாதவை அவை.

## பாதிரியும் ஆடும் ராணிபடமும்

ஒரு சமயம், நியூகினி தீவில் வாழ்ந்த மோது-மோது குலத்தினரிடையே ஒரு கொள்ளைநோய் பரவியது. பலர் இறந்தனர். ஒவ்வொரு வீட்டிலும் உற்றாரை இழந்தவர் கள் கண்ணீர் பெருக்கிக் கதறியழுதனர். குலத்தினர் அனை வரும் கிலியடைந்தனர்.

இத்தகைய பயங்கரமான கொள்ளை நோய் எங்கிருந்து வந்திருக்க முடியும்?

சுதேசிகள் இதைப்பற்றி ஆரத்தீரச் சிந்தனை செய்தனர். இறுதியில், வெள்ளைக்காரர்களான பாதிரியாரும் அவரது குடும்பமும் வந்த பின்பே, நோய் பேயாட்டமாடத் தொடங்கியதென்பது ஞாபகத்துக்கு வந்தது. வெள்ளைக் காரர்களின் வருகையே கொள்ளைநோய்க்குக் காரணம் என்று கருதினர்.

இதுவே உண்மையான காரணமென்று அவர்கள் நம்பினர். எனவே, ஈட்டிகளையும் எறிபடைகளையும்

எடுத்துக்கொண்டு பாதிரியாரின் வீடுநோக்கிச் சென்றனர். அந்த வீட்டைச் சூழ்ந்துகொண்டு, "வெள்ளைக்காரர்கள் ஒழிக! அவர்கள் நமக்கு எதிராகச் சூனியம் வைத்துவிட்டார்கள். அவர்கள் கொள்ளை நோயைக்கொண்டு வந்துவிட்டார்கள்" என்று ஊளையிட்டனர்.

பாதிரியார் பயந்து நடுங்கினார். அவரது முகத்தில் சவக்களை கட்டியது. வீட்டுக்கதவருகே வந்து நின்றார். "அன்பார்ந்த சகோதர சகோதரிகளே......" என்று தொடங்கினார்.

ஆனால் காட்டுத்தனமான கூச்சலுக்கிடையே அவரது பேச்சு எவர்காதிலும் விழவில்லை. தம் பேச்சுக்குச் செவி கொடுக்கும்படி செய்வதற்குள் அவர் ரொம்பக் கஷ்டப்பட்டுவிட்டார். அவர் தம் வாழ்நாளிலேயே என்றும் அன்றுபோல் அவ்வளவு ஆற்றொழுக்காகவும் கவர்ச்சியாகவும் பேசியதில்லை. அவர் நிகழ்த்திய கோயிற் பேச்சுகளைக் காட்டிலும், அன்று அவர் நிகழ்த்திய பேருரையே சொற்சித்திரங்களிலும் கேட்போர் நெஞ்சைப்பிணிக்கும் வாதத்திறனிலும் உயர்ந்ததாக இருந்தது. ஏனெனில், கோயில் மேடையில் பேசியபொழுதெல்லாம் அவர் பிறரது ஆத்மாக்களை ரட்சிக்க முயன்றார்; இப்பொழுது அவரது உயிருக்கே ஆபத்து வந்துவிட்டது.

கூச்சல் ஓய்ந்தது. சுதேசி ஜனங்கள் செவிகொடுக்கத் தொடங்கினார்கள். அவர் அவகாசம் பெற்றுவிட்டார்; எனினும் நிலைமை இன்னமும் ஆபத்தானதாகவே இருந்தது. திடீரென்று, தோட்டவேலிக்குப் பின்னால் ஒரு வெள்ளாடு தோன்றியது, பாதிரியாருடைய அதிர்ஷ்டம் தான். அந்த வெள்ளாடு கூட்டத்தினரை வெறித்து நோக்கியது; அவர்களும் ஆட்டை முறைத்துப் பார்த்தனர், அமைதி நிலவியது. சுதேசிகளது மூளை மீண்டும் வேலை செய்யத்தொடங்கியது.

வெள்ளைக்காரனும் கொள்ளைநோயும் வந்தபொழுது வெள்ளாடும் வந்தது. ஒருவேளை, அதுவே வியாதியைக் கொண்டுவந்திருக்கலாமல்லவா ?

"வெள்ளாட்டைக்கொல்! அதுதான் குற்றவாளி!" என்று எவனே கூச்சலிட்டான்.

வெள்ளாட்டுக்கு அந்திக்காலம் வந்துவிட்டது. பல கரங்கள் தோட்டத்துவேலியை உடைத்தெறிந்தன. பாதிரியார் வாய்திறவாது பார்த்துக்கொண்டிருந்தார். அவர் ஆட்டைப் பாதுகாப்பதற்கு ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை. தம் ஈட்டிகளால் ஆட்டைத் தீர்த்துக்கட்டிய பிறகு கூட்டத்தினர் மனமகிழ்ச்சியோடு வெற்றிக் கூச்சல் போட்டுக்கொண்டு சென்றனர்.

சிலநாட்கள் கழிந்தன. குற்றம்புரிந்த வெள்ளாட்டைத் தகுதியான முறையில் தண்டித்த பின்பும், கொள்ளை நோயின் பேயாட்டம் குன்றவில்லை. நோய்க்கு வேறு காரணம் இருக்கவேண்டுமென்று ஜனங்கள் எண்ணினர்கள். தாம் கொன்ற ஆட்டைத்தவிர மேலும் இரண்டு வெள்ளாடுகளைப் பாதிரியார் கொணர்ந்திருப்பதை அவர்கள் ஞாபகப்படுத்திக் கொண்டனர்.

எனவே அவர்கள் மீண்டும் பாதிரிவீட்டுக்கு முன்னல் கூடி அந்த இரண்டு தாடிக்காரக் குற்றவாளிகளையும் ஒப்படைக்க வேண்டுமென்று கோரினர்கள். இந்தத்தடவை அவர்களுக்குப்பணிந்து போகக்கூடாதென்று பாதிரியார் தீர்மானித்தார். இன்று அவர்கள் ஆடுகளைக் கேட்கிறார்கள்; நாளைக்குப் பசுவைக்கேட்பார்கள். அதன்பின் வேறு என்னவெல்லாம் கேட்பார்களோ, யார் கண்டது ?

எனவே, அவர் வெள்ளாடுகளை ஒப்படைக்க மறுத்தார். அவை ஒரு பாவமும் அறியாதவை என்று ஆணையிட்டுக்கூறுவதற்கு அவர் சித்தமாயிருந்தார்.

அப்படியானல், இனியாரைக் குற்றம் சொல்வது ?

கூட்டத்திலிருந்த சிலர் சாளரத்தின் வழியே வீட்டினுள் நோக்கினர்கள். அங்கே, போஜன அறையின் சுவரில் ஓர் உருவப்படம் தொங்கியது. அது ஒரு பெண்ணின் படம். அவள் மாலை நேரத்துக்குரிய உயர்தரமான ஆடை

களை உடுத்தியிருந்தாள். தோட்கள் திறந்தமேனிக்கு இருந்தன; மார்புமீது பல நட்சத்திரங்கள் மின்னின. அவளது தலையின் உச்சியில் சிறிய கிரீடத்தை அணிந்திருந்தாள். அக்காலத்தில் இங்கிலாந்தின் அரசியாக இருந்த விக்டோரியா மகாராணியின் படம் அது.

இந்த மாதிரியான படங்கள் ஆயிரக்கணக்கில் அச்சாகி லண்டன் நகரின் ஒவ்வொரு கடையிலும் மதுக்கடையிலும் தொங்கின. ஆனால் இங்கே, மோது-மோதுக்கள் வாழும் இந்த நாட்டில் ராணியின் உருவப்படம் என்பது அருமையான புதுமையாகும்.

சகல சுதேசிகளும் அப்படத்தை உற்றுப்பார்த்தனர். இப்பொழுது அவர்களுக்கு விஷயம் விளங்கிவிட்டது. அந்தப்படம்தான் குற்றவாளி என்பது தெளிவாகிவிட்டது! மோ-மோது இனத்தவருக்குப் பயங்கரமான அவப்பேற்றைக் கொண்டுவந்த படம் அதுவே.

அவர்கள் மீண்டும் கூப்பாடுபோடத் தொடங்கினார்கள். ஈட்டிகளை ஆட்டிக்கொண்டு வீட்டினுள் நுழைந்தனர். அந்தக்கலவரம் எப்படி முடிந்தது என்பதை நாம் அறியோம். ஒருவேளை, இங்கிலீஷ் அரசியின் படம் அவர்களுக்குத் திருப்தி அளித்திருக்கலாம். ஒருவேளை அவர்கள் வேறு புதிய சாமான் எதையாவதுகண்டு அதனைத் தம் ஆத்திரத்துக்கு இலக்காக்கி யிருக்கலாம். பாதிரியாரின் படுக்கையறையில் உபயோகிக்கும் மிதியடிகளையோ இளஞ் சிவப்பு ரோஜாமலர்கள் பொறிக்கப்பெற்றதும் காப்பி குடிப்பதற்குப் பயன்பட்டதுமான சீனமண்பாண்டத்தையோ, துர்க்குறியாக ஊசலாடும் கடிகாரத்தையோ அவர்கள் கண்டிருக்கலாம்; அவற்றில் ஒன்றின் மீது அவர்களது ஆத்திரம் திரும்பியிருக்கலாம்.

அந்த விவரங்கள் முக்கியமானவையல்ல. இயற்கையின் விதிகளைப்புரிந்து கொள்ளாத ஜனங்கள், நிகழ்ச்சிகளின் காரணங்களை எப்படித் தட்டுத்தடுமாறி அனுமா

னிக்கிருர்கள் என்பதை விளக்குவதற்கே இந்த நிஜக் கதையை நாம் உரைத்தோம்.

உலகத்தில் அனைத்தும் ஒன்ருேடொன்று தொடர்பு கொண்டிருப்பதை ஜனங்கள் அனுபவத்திலிருந்து புரிந்து கொள்கின்றனர். ஆனுல் காரணகாரியத் தொடர்பின் தன்மையைப் புரிந்துகொள்ளாத நிலையில், அவர்கள் சில பொருட்களுக்கு இதரபொருட்களை ஆட்டிப்படைக்கும் மாயமந்திர சக்தி—இயற்கை கடந்த சக்தி—இருப்பதாக நம்புகிருர்கள்.

ஆப்பிரிக்காவில் சுற்றுப்பயணம் செய்த லெவிப்ருல் என்ற பிரெஞ்சு விஞ்ஞானி கூறும் கதையைக் கேளுங்கள்: "லோவாங்கோவில் கடற்கரையோரத்தில் வாழும் மக்கள் வழக்கத்துக்கு மாருன பாய்மரக்கட்டினை உடைய பாய் மரப்படகையோ வழக்கத்தைவிட அதிகமான புகை போக்கிகளை உடைய நீராவிக்கப்பலையோ கண்டால் பர பரப்படைகிருர்கள். மழைநீர் புகாத மேல்கோட்டோ விநோதமாகத்தோன்றும் தொப்பியோ அசைந்தாடும் நாற் காலியோ புதிய கருவியோ கண்ணில்பட்டால், உடனே அவர்கள் மிகப்பெரிய அளவுக்கு ஐயம் கொள்கின்றனர்.

அதாவது, ஒவ்வொரு புதிய பொருளும் ஒரு மாயமந் திரக் கருவியாகவே அவர்களுக்குத் தோன்றியது.

ஒருவன் தன்னைக் கேடு சூழ்வதைத் தவிர்ப்பதற்காக முதலையின் பற்களால் அமைந்த கழுத்தணியையோ யானை வால் மயிரால் செய்த காப்பையோ தாயித்தாக அணிய வேண்டுமென்று அவர்கள் கருதினர். அந்தத் தாயித்தை அணிந்தவனுக்குத் தீங்கு நேரிடாமல் அது காப்பாற்றுவதாக அவர்கள் நம்பினர்.

பூர்வீக மக்களது உலகஅறிவு லோவாங்கோ மக்க ளுடையதைவிட அதிகமா யிருந்ததில்லை. எனவே அவர் களும் மாயமந்திரத்திலும் மனோவசியவித்தையிலும் நம்பிக்கை வைத்தனர். பழம் பொருட்களை அகழ்ந்தெடுத்த

போது கண்டெடுக்கப்பட்ட தாயித்துக்களும் குகையினுள் வரையப்பட்டுள்ள மாயவித்தைச் சித்திரங்களும் இதை நிரு பிக்கின்றன.

## நம் முன்னோர்கள் உலகைப்பற்றி என்ன எண்ணினர்?

இவ்வுலகத்தின் விதிகளில் எதையும் அறிந்திராதவ னுக்கு இதில் வாழ்க்கை நடத்துவது கடினம். கண்ணுக் குப்புலப் படாத சக்திகளின் பிடிப்பில் சிக்கித்திக்கற்ற வனுகத் தவிப்பதாகவே அவனுக்குத் தோன்றும். எந்தப் பொருளும் தாயித்தாகப் பயன்படலா மென்றும் எவனும் மந்திரவாதியாக இருக்கலா மென்றும் அவன் அஞ்சுவான். இறந்தவரது ஆவிகள் இங்கு அங்கு என்னுதபடி எங்கும் நிம்மதியில்லாமல் சஞ்சரிப்பதாகவும் உலகில் வாழ் வோரைப் பழிவாங்க விரும்புவதாகவும் அவன் எண்ணு வான். வேட்டையில் கொலையுண்ட காட்டு விலங்கு மீண்டும் வந்து தன்னைக்கொன்று வேடர்களைப்பழி வாங்கலா மென்று அவன் கருதுவான். தீமையை விலக்கு வதற்காக, இந்த ஆவிகளுக்கு நிவேதனம் செய்து பிரார்த் தனை நிகழ்த்தி அவற்றைத் திருப்தி செய்தல் அவசிய மென்று அவன் நம்பினுன்.

அறியாமை அச்சத்துக்கு அன்னை.

பண்டைக்கால மனிதன் அறியாமை இருளில் தடுமாறி னுன். எனவே அவன் உலகத்தின் எஜமானனுக நடந்து கொள்ளவில்லை. அவன் பீதியுற்றவனுக, கையறு நிலையி லுள்ளவனுக, இறைஞ்சி இரக்கும் நிலையிலுள்ளவனுக நடந்து கொண்டான்.

உண்மையில், அவன் தன்னை இயற்கையின் எஜமான னுகக்கருதிக் கொள்ளக் கூடிய காலம் வரவில்லை. அவன் உலகத்திலுள்ள இதர பிராணிகளை விடப் பலசாலியாக ஆகி விட்டா னென்பதும் கம்பளி யானையை வென்று விட்டான்

என்பதும் மெய். ஆனால் இயற்கையின் சக்திகளை ஆளத் தெரியாத அவன், அந்த வலுவான சக்திகளுக்கு முன் சிறு திறமுடையவனாகவே இருந்தான்.

ஒருதடவை வேட்டையில் அவப்பேறு ஏற்பட்ட தென்றால் பலவாரங்கள் பட்டினிகிடக்க வேண்டிய தாயிற்று. ஒரு பனிப்புயல் வீசியடித்தால், அவனது வேட்டை முகாம்கள் உறைபனியில் புதைந்தன.

இயற்கையோடு போராடுவதற்கும், சிறிது சிறிதாகவும் படிப்படியாகவும் அந்தப் போரின் வெற்றியை நோக்கி முன்னேறுவதற்கும் மனிதனுக்குச் சக்தி அளித்தது எது?

அவன் தன்னந்தனியனாக இல்லாது இருந்ததே அவனுக்கு அந்தச் சக்தியை அளித்தது.

திரள்திரளாக வாழ்ந்த மக்கள், இயற்கையின் பகை யான சக்திகளை எதிர்த்துப் போராடினார்கள். அவர்கள் ஒரு பெருங்குழுவாகச் செயல் பட்டார்கள். அந்தக் கூட்டு உழைப்பின் மூலம் அனுபவத்தையும் அறிவையும் திரட் டினார்கள்.

தாம் இந்தக்காரியத்தைச் செய்வதை அவர்களே அறிந்திருக்கவில்லை: அல்லது தமக்கே உரித்தான முறையில் இதை அறிந்திருந்தார்களென்று சொல்லலாம்.

மனித சமூகம் என்றால் என்ன என்பதைப்பற்றி அவர் களுக்கு ஒரு கருத்துக்கிடையாது. ஆயினும் தாம் ஒரு வரோடொருவர் பிணைக்கப் பட்டிருப்பதாக அவர்கள் எண்ணினர். ஒரு குலத்தைச் சேர்ந்தவர்களைப் பலகரம் படைத்த ஒரு பேருருவாளனாகவே கருதினர்.

அவர்களை இறுகப் பிணைத்தது எது? உறவின் முறையே அவர்களை இணைத்துச் சேர்த்தது. அவர்கள் குலங்களாக (Tribe) வாழ்ந்தனர்; குழந்தைகள் தம் தாய் மார்களுடன் வசித்தன; அவர்களது குழந்தைகளும் தமது சகோதர சகோதரிகளுடனும் அத்தை மாருடனும் மாமன்

மாருடனும் தாய்மார்களுடனும் பாட்டிமார்களுடனும் சேர்ந்து வாழ்ந்தன. இவ்வாறு குலம் என்பது தோன்றியது.

பொதுவான முன்னோர்களது வழித்தோன்றல்களைக் கொண்ட குலத்தையே பண்டைக்கால வேடன் சமுதாய மாகக் கருதினான். முன்னோர்களே ஜனங்களை ஒரு சேரப் பிணைத்தனர். முன்னோர்கள் தாம் அவர்களுக்கு வேட்டை யாடவும் கருவிகள் செய்யவும் கற்றுக்கொடுத்தனர். முன்னோர்கள் தாம் அவர்களுக்குக் குடியிருப்பும் நெருப்பும் தந்து உதவினர்.

ஒருவன் தன் முன்னோர்களது சித்தத்தை நிறைவேற்ற வேண்டுமானால் வேலை செய்ய வேண்டும், வேட்டையாட வேண்டும். முன்னோர்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பவனைத் தீமை நெருங்காது; அபாயம் அணுகாது. மூதாதையர்கள் தமது வழித் தோன்றல்களுடன் வாழ்ந்தனர். அவர்கள் கண்ணுக்குத் தெரியவில்லை என்பது மெய். ஆயினும் அவர் கள் வேட்டையிலும் வீட்டுவாழ்விலும் பங்கு எடுத்தனர். அவர்கள் அறியாதது யாதுமில்லை. காணாதது எதுவுமில்லை. அவர்கள் கொடியோரை ஒறுத்தனர்; நல்லவர்களை ஆதரித் தனர்.

எனவே, பொதுவான முன்னோருக்குக் கீழ்ப் படிந்து அவரது சித்தத்தை நிறைவேற்றுவதற்காகவே, பொதுநலம் நாடிக் கூட்டுப்பணி புரிய வேண்டுமென்று பண்டைக்கால மனிதன் கருதினான்.

வேலையைப்பற்றியும் பண்டைக்கால மனிதனதுகருத்து வேறு. நம் கருத்திலிருந்து மாறுபட்டது. காட்டெருமை வேடனுக்கு உணவு அளிப்பது எது என்று நம்மைக் கேட் டால், வேட்டைதான் என்று நாம் விடைதருவோம். ஆனால் காட்டெருமையே தனக்கு உணவு அளிப்பதாகப் பண்டைய வேடன் கருதினான். நம்மிடமும் இந்தப் பழங் கருத்தின் எச்சத்தைக் காணலாம். உதாரணமாக, பசுவின் அனுமதி பெறாமலேயே, அதன்பாலைக் கறக்கும்பொழுதே, பசு பால் "தருகிறது" என்று கூறுகிறோம்.

காட்டெருமை, கம்பளியானே, கரடி முதலிய காட்டு விலங்குகளைத் தன் ரட்சகர்களாகவே பூர்வீக வேடன் கருதினான். வேடன் விலங்கைக் கொன்றதாக அவன் எண்ணவில்லை. விலங்கு தனது தோலையும் இறைச்சியையும் வேடனுக்கு வழங்கியதாக அவன் எண்ணினான். காட்டு விலங்கின் இணக்கமில்லாமல் அதனைக்கொல்ல முடியாதென்று அமெரிக்க இந்தியர்கள் நம்புகின்றனர். காட்டெருமை தன்னைத்தானே படையலாக வழங்குவதால் தான், தன்னைக் கொல்வதற்குச் சம்மதம் தெரிவிப்பதால் தான் அது கொல்லப்படுகிறது என்பது அவர்களது அபிப்பிராயம். காட்டெருமை, குலத்தின் ரட்சகனாகவும் பாது காவலனாகவும் விளங்குவதாகப் பண்டைய மக்கள் கருதினர். ஆக, அவர்களது மனத்தில் இருகருத்துக்கள் உதித்தன ; முன்னோர் குலத்தைப் பாதுகாப்பதாக ஒரு கருத்து ; தீனிபோடும் பிராணி குலத்தை ரட்சிப்பதாக இன்னொன்று. தம்மைச் சூழ்ந்த உலகத்தைப் பற்றித் தெளிந்த ஞானம் பெறாத அவர்களது மனத்தில் இந்த இருகருத்துக்களும் படிப்படியாகக் கலந்து ஒன்றாயின.

"நாம் காட்டெருமையின் குழந்தைகள்" என்று வேடர்கள் கூறினர். தாம் காட்டெருமையின் வழித் தோன்றல்களென்று அவர்கள் உண்மையாகவே நம்பினர். பண்டைக்காலக் கலைஞன் காட்டெருமையை வரைந்து அதன்மீது மூன்று குடிசைகளை அமைத்தபொழுது, "காட்டெருமையின் குழந்தைகளுடைய முகாம்" என்று கருதியே அவ்வாறு வரைந்தான்.

மனிதன் தன் வேலையில் காட்டு விலங்குகளுடன் தொடர்பு கொண்டிருந்தான். இரத்த பாசத்தைத் தவிர வேறு எந்தத் தொடர்பையும் அவனால் கற்பனை செய்ய முடியவில்லை. அவன் காட்டு விலங்கைக்கொன்ற பொழுது, அதை 'அண்ணா' என்று விளித்துத் தன்னை மன்னிக்க வேண்டுமென்று மன்றாடினான். அதன் தோலை அணிந்து கொண்டு அதைப்போலவே நடித்தான்.

மனிதன் இன்னும் தன்னை 'நான்' என்று குறிப்பிட்டுக் கொள்ளவில்லை. அவன் குலத்தின் ஓர் அம்சமாகவே, குலத்தின் கருவியாகவே தன்னைக் கருதினான். ஒவ்வொரு குலத்துக்கும் அதற்கே உரிய பெயர்—குலமரபுச்சின்னம்—இருந்தது. அது ஒரு பிராணியின் பெயராகவே—குலத்து மூதாதையாகவும் ரட்சகனாகவும் கருதப்பட்ட பிராணியின் பெயராகவே—இருந்தது. ஒரு குலம் 'காட்டெருமை' என்றும் இன்னொன்று 'கரடி' என்றும் பிறிதொன்று 'மான்' என்றும் அழைக்கப்பட்டன. அவை குலத்தின் வழக்கங்களைக் குல மரபுச்சின்னத்தின் கட்டளைகளாகக் கருதின. அவர்களுக்குக் குல மரபுச்சின்னத்தின் கட்டளைகள் மீறக் கூடாத சட்டங்களாக விருந்தன.

## நம் முன்னோர்களுடன் பேட்டி

நாம் மீண்டும் பண்டைக்கால மனிதனது குகைக்குச் செல்வோம். கணப்பின் அருகில் அவனோடு அமர்ந்து அவனது பழக்கங்களையும் நம்பிக்கைகளையும் குறித்து உரையாடுவோம். நம் ஊகங்கள் சரியா தப்பா என்பதை அவனே சொல்லட்டும்; நமக்காகவே செய்த மாதிரி குகைச் சுவர்களிலும், எலும்பாலும் கொம்பாலும் செய்த தாயித்துகளிலும், அவன் வரைந்துள்ள சித்திரங்களை நாம் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறோமா என்பதை அவனே எடுத்துச் சொல்லட்டும்.

ஆனால் அந்தக் குகையின் எஜமானனை எப்படிப் பேசச் செய்வது?

அவனது கணப்பின் சாம்பல் காற்றில் பறந்தொழிந்து நெடுங்காலமாகி விட்டது. அந்தக் கணப்பின் அருகில் அமர்ந்து தீக்கல்லாலும் கொம்பாலும் கருவிகள் செய்தவர்கள், தோல் ஆடைகளைத் தைத்தவர்கள் ஆகியோரின் எலும்புகள் க்ஷீணித்து நாசமாகி ரொம்பக்காலமாகி விட்டது. காய்ந்துபோய் மஞ்சளான மண்டையோடு கிடைப்பதே அரிதாக உள்ளது.

அந்த மண்டையோட்டினை எப்படிப் பேசச் செய்வது ?

நாம் குகையில் பொருள்களைத் தேடி ஆராய்ந்த பொழுது, பழங்கருவிகளது துண்டுகளும் உடைசல்களும் கிடைத்தன. அவற்றைக்கொண்டு அந்தப் பழங்கருவிகளது அமைப்பையும் அவற்றை மக்கள் உபயோகித்த விதத்தையும் நம்மால் புரிந்துகொள்ள முடிந்தது.

ஆனால் பழங்குடிகளது பேச்சின் எச்சமிச்சங்களை எங்கே காணமுடியும் ?

நாம் பேசும் மொழிகளில் தான் அவற்றைக் காண வேண்டும்.

பண்டைய மக்களது பேச்சின் எச்சத்தைக் கண்டெடுப்பதற்கு, மண் வெட்டி தேவையில்லை. நாம் பூமியைக் குடையத் தேவையில்லை; அகராதியைத்தான் குடைந்து பார்க்கவேண்டும். மொழியிலுள்ள ஒவ்வொரு சொல்லும் கடந்த காலத்தின் மிச்சமாக உள்ள அரும்பொருளாகும். அது வேறு விதமாக இருக்க முடியாது; ஏனென்றால், மொழியின் வாயிலாகவே, ஆயிரக்கணக்கான தலைமுறையினர் நம்மிடையே வாழ்கின்றனர்.

மொழியைப் பயில்வதும் அதில் ஆராய்ச்சி நடத்துவதும் சுலபமானவையாகத் தோன்றுகிறது. மேஜைக்கு முன் அமர்ந்து அகராதியினுள் மூழ்கி விட்டால் போதுமென்று தோன்றுகிறது.

மொழிப்பயிற்சிக்கும் மொழி ஆராய்ச்சிக்கும் உரிய வழி அது அல்ல.

பூர்வீகச் சொற்களைத் தேடும் ஆராய்ச்சியாளர்கள் மலைகள் மீது ஏறியும் கடல்களைக் கடந்தும் உலகெங்கும் அலைகின்றனர். பிறமொழிகளில் இல்லாதொழிந்த சில சொற்களை மலைச்சிகரங்களின் பாதுகாப்பில் வாழும் சிறு நாட்டு மக்களிடையே காணமுடியும்.

ஒவ்வொரு மொழியும் மனித குலத்தின் சாலையில் அமைந்த ஒரு குடியிருப்பு போன்றது. ஆஸ்திரேலியாவிலும்

ஆப்பிரிக்காவிலும் அமெரிக்காவிலும் வாழும் ஆதிக் குடிக ளான வேடர்களது மொழிகள், நீண்டகாலமாக நமக்குத் தெரிந்துள்ள முகாம்களைப் போன்றவை. எனவே ஆராய்ச்சி யாளர்கள் கடலைக் கடந்து பாலினீஷியத் தீவுகளுக்குச் செல்கிறார்கள். அந்தப் பாலினிஷிய மக்களது பேச்சி லிருந்து இதற்குமுன் கிடைக்காத பழஞ்சொற்களும் பழம்பொருளும் கிடைக்குமாவென்று பார்க்கிறார்கள்.

சொல் வேட்டையாடும் ஆராய்ச்சியாளர்கள் வடக்கி லுள்ள துந்திர வெளிகளுக்கும் போகிறார்கள்; தெற்கி லுள்ள பாலைநிலங்களுக்கும் போகிறார்கள்.

வடகோடியில் வாழும் இனங்களது மொழிகளில் சில வற்றின் மிகத் தொன்மையான சில சொற்களும் வழக்கி லுள்ளன. மனிதன் தனித்தன்மையைப்பற்றி உணர்வு பெறாத காலத்துக்குரியவை அவை; அதாவது, 'என் வீடு', 'என் ஆயுதம்' என்ற சொற்றொடர்களை மக்கள் அறியா திருந்த காலத்து வார்த்தைகள் அவை.

வீடுகள், கருவிகள் ஆகியவற்றின் எச்சமிச்சங்களுக் காகப் பழம்பொருளாராய்ச்சியாளர்கள் தொன்மையான குடியிருப்புகளைக் குடைவதுபோல், நாம் பண்டைய பேச் சின் மீத மிச்சங்களைக் கண்டெடுப்பதற்காக மேற் சொன் னவை போன்ற மொழிகளைத் தான் துருவித்துருவி ஆராய வேண்டும்.

யாரும் நினைத்த மாத்திரத்தில் பழஞ்சொல்லாராய்ச்சி யாளனாக முடியாது. நீண்ட காலப்பயிற்சியும் விஞ்ஞான அறிவும் இல்லாவிடில் இந்த ஆராய்ச்சியில் வெற்றி கிட் டாது. ஏனெனில், அரும்பொருட் காட்சியில் பழம் பொருட் கள் இருப்பதைப்போல், பழஞ்சொற்கள் எவ்வித மாற்றமு மின்றி மொழியில் தங்கியிருக்கா. ஆயிரமாயிரம் ஆண்டுக ளில் சொற்கள் பன் முறை மாறியிருக்கின்றன. அவை ஒரு மொழியிலிருந்து இன்னொன்றுக்குப் போயிருக்கின்றன; ஒன்று இன்னொன்றாக மாறியிருக்கிறது. அவற்றின் முதலெ ழுத்தும் கடை விகுதியும் மாறியிருக்கின்றன. சில சமயங்க

ளில், எரிந்துபோன மரத்தில் வேர் மட்டும் மிஞ்சியிருப்பது போல், சொல்லின் பழைய பகுதி மட்டுமே மிஞ்சியிருக்கிறது. இந்தப்பகுதியைக் கொண்டே, அச்சொல் எங்கிருந்து வந்தன என்பதை நாம் கண்டு பிடிக்க வேண்டியிருக்கும்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளில் சொற்கள் மாறியதுடன் அவற்றின் பொருளும் மாறியுள்ளன. அடிக்கடி பழைய சொல் புதுப்பொருள் பெறுவதுண்டு.

இன்றும் அதே நிலை தான். நாம் ஒரு புதிய பொருளைப் படைத்தால், அதற்கு எப்போதும் புதிய பெயர் கண்டு பிடித்துச் சூட்டுகிறோமா? இல்லை. சில சமயங்களில் ஒரு பழைய சொல்லைத் தேர்ந்தெடுத்து அதை முத்திரைவைப்பது மாதிரி புதிய பொருளுடன் ஒட்டி விடுகிறோம்.

உதாரணமாக, ஆங்கிலத்தில் இறகு என்று பொருள் படும் சொல்லால் (Quill) பேனாவைக் குறிப்பிடுகிறார்கள். ஏனென்றால் பல்லாண்டுகட்கு முன், இறகு, பேனாவாகப் பயன்பட்டது. இன்னொரு உதாரணமாக எந்திரச்சம்மட்டி* யைக் குறிப்பிடலாம். இது தோற்றத்தில் சம்மட்டியைச் சிறிதும் ஒத்திருக்கவில்லை. குறிதவறாது சுடும் வீரனைக் குறிப்பிடும் ருஷியச் சொல் வில்லாளி என்று பொருள் படும். ஆனால் இக்காலத்து வீரன் குண்டுகளைச் சுடுகிறான்; அம்புகளை அல்ல. அவற்றைத் துப்பாக்கியிலிருந்து சுடுகிறான்; வில்லிலிருந்து அல்ல.

கைப்பிரதி என்பது கையால் எழுதுவதைக் குறிக்கும் சொல்; ஆனால் கையால் எழுதாமல் டைப் அடிக்கும் யந்திரத்தின் முன் உட்கார்ந்து அதைக்கொண்டு எழுதினாலும், அப்பிரதியைக் கைப் பிரதி என்கிறோம். டைப் எந்திரம் முதன் முதலில் செய்யப்பட்ட பொழுது, அதற்கு 'எழுதும் எந்திரம்' என்றே பெயரிடப்பட்டது. உண்மையில் அது எழுதுவதில்லை; அச்சு அடிக்கும் கருவியே அது.

---

* எந்திரச் சம்மட்டி: நீராவி சக்தியால் இயங்குவது. மேலும் கீழுமாக இயங்கும் நிலைக்குத்தான எந்திரத்தண்டை உடையது. தண்டின் அடியில் உலக்கைபோல் இடிக்கும் எந்திரம் உள்ளது. இதற்குக் கீழே பட்டடை உள்ளது.

இவ்வாறு நாம் பல பழைய வார்த்தைகளையே புதிய பொருளுடன் ஆள்கிறோம்.

இவையெல்லாம் அண்மைக்கால நிகழ்ச்சிகள்; மொழியின் மேலடுக்குகளில் நிகழ்ந்தவை. எனவே இந்தச் சொற்களின் பழைய பொருளைக் கண்டு பிடிப்பது எளிதாயிருக்கிறது. ஆனால் இன்னும் ஆழமாக ஆராய்ந்தோமானால், பழைய சொற்பொருளைக் கண்டு பிடிப்பது கஷ்டமாயிருக்கிறது. சொல்லின் மறைந்தொழிந்த பொருளைக் காண்பதற்கு, மொழிகளில் பிரத்தியேக பாண்டித்தியம் பெற வேண்டும்.

மார் என்பவர் அத்தகைய நிபுணராயிருந்தார். அவர் புராதன மொழிகளையும் நவீன மொழிகளையும் ஆராய்ந்தார்; நாம் ஆளும் பல சொற்களுக்கு முன்னுளில் வேறு பொருள் இருந்ததை நிரூபித்தார். பல மொழிகளில், கலைமான் என்றோ நாய் என்றோ முன்னுளில் பொருள் தந்த சொற்கள் இன்று குதிரையைக் குறிப்பனவாக இருப்பதை அவர் கண்டார். அந்த ஜனங்கள் குதிரைச் சவாரி செய்வதற்கு முன்னுல், நாய் அல்லது கலைமான் பூட்டிய வண்டிகளில் சவாரி செய்து கொண்டிருந்ததே இதற்குக் காரணம். சில மொழிகளில், கோதுமை என்று இப்பொழுது பொருள் படுவனவாக உள்ள சொற்களுக்கு முன்னுளில் 'ஓக்மரக் கொட்டை' என்று பொருள் இருந்ததையும் அவர் கண்டார். ஜனங்கள் கோதுமை பயிரிடுவதற்கு முன், ஓக்மரக் கொட்டைகளை உடைத்துத் தின்றதே இதற்குக் காரணம்.

சிங்கத்தைப் 'பெரிய நாய்' என்றும் குள்ள நரியைச் 'சிறிய நாய்' என்றும் குறிப்பிடுகின்ற மொழிகளும் உள்ளன. 'சிங்கம்' 'குள்ளநரி' ஆகிய சொற்களுக்கு முன்னுல் 'நாய்' என்ற சொல் தோன்றியதே இதற்குக் காரணம்.

## புராதனப் பேச்சின் துண்டுப் பகுதிகள்

மொழிகளில் ஆழ்ந்த ஆராய்ச்சி நடத்திய அறிஞர்கள், மிகத் தொன்மையான காலத்தில் பேசப்பட்ட மொழியின்

மீத மிச்சங்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இவற்றைப் பற்றி மிஸ்சானிநோவ் தமது நூல் ஒன்றில் விவரிக்கிறார்.

உதாரணமாக, ஊகாகிர்கள் என்ற ஆதிக்குடியினரது மொழியில் உள்ள ஒரு சொல்லை அப்படியே மொழி பெயர்த்தால் 'மனிதன்—கலைமான்—கொல்' என்று வரும். இந்தச் சொல்லை உச்சரிப்பதே சிரமம். இதன் பொருளை உணர்வது அதை விடக் கடினமானது.

கொன்றது யார், கொல்லப்பட்டது யார் என்பதே விளங்கவில்லை. மனிதன் கலை மானைக் கொன்றானா? அல்லது கலைமான் மனிதனைக் கொன்றதா? அல்லது மனிதனும் கலை மானும் சேர்ந்து வேறு ஒரு பிராணியைக் கொன்றனரா? அல்லது மூன்றாவது உயிரனத்துப் பிராணி கலைமானையும் மனிதனையும் கொன்றதா? விளக்கம் இல்லை.

ஆனால் ஊகாகிர் இந்த வார்த்தையைப் புரிந்துகொள் கிறார். ''மனிதன் கலைமானைக் கொன்றான்'' என்று சொல்லவிரும்பும்பொழுது அவன் இந்தச்சொல்லை உப யோகிக்கிறான்.

இத்தகைய விநோதமான சொல்லை அவர்கள் எப்படி ஆக்கினார்கள்?

மனிதன் தன்னை 'நான்' என்று குறிப்பிடத்தொடங்கு வதற்கு முன்னால், வேலை செய்வதும் வேட்டையாடுவதும் கலைமானைத் துரத்திக்கொல்வதும் தானே என்ற உணர்வு அவனுக்கு உண்டாவதற்கு முன்னால், இந்தச்சொல் தோன்றியது. அந்தக்காலத்தில், அவன் தானோ தன்குலமோ கலைமானைக்கொன்றதாக நினைக்கவில்லை. கண்ணுக்குப் புலப்படாத மாயச்சக்தியே அதைக்கொன்றதாக எண்ணி னான். இயற்கைக்குமுன் மனிதன் பலவீனனாகவும் கதி யற்றவனாகவும் இருந்த காலம் அது. இயற்கை அவனுக்குக் கீழ்ப்படியவில்லை.

இன்று, புரியமுடியாத சிலசக்திகளின் சித்தத்தால், கலை மான் கொல்லப்பட்டது. 'மனிதன்–கலைமான்–கொல்'

நிகழ்ந்தது; ஆனுல் நாளைக்கு, வேட்டை வியர்த்தமாகி அவர்கள் வெறுங்கையுடன் வீட்டுக்குத் திரும்பலாம்.

"மனிதன்—கலைமான்—கொல்" என்பதில் வினைக்குரியவன் யார் ஏன்பதைப்பற்றிய குறிப்பு இல்லை. வினைக்குரியவன் தானு அல்லது கலைமானு என்பதைப் பண்டைக்கால மனிதன் எப்படி அறியமுடியும். அவனுக்கும் கலைமானுக்கும் மூதாதையாக உள்ளவன். கட்புலனுகாத ரட்சகன், கலைமானை மனிதனுக்கு வழங்கியதாகவே அவன் எண்ணினுன்.

பழம்பொருளாராய்ச்சியில் செய்தமாதிரியே, மொழித்துறையிலும் பழைய அம்சங்களிலிருந்து அண்மைக்காலத்து அம்சங்களுக்கு வந்தோமேயானுல், புரியமுடியாத சக்திகளின் கருவியாக மனிதன் தன்னைக்கருதிய காலத்தின் மீதமிச்சங்களை இன்றும் காணலாம்.

சூகோட்டுகளின் மொழியிலிருந்து இந்த வாக்கியத்தைத் தருகிறோம்:

"மனிதன் மூலம் இறைச்சி நாய் கொடுக்கிறது"

இந்த வாக்கியம் நமக்குப்புரியவில்லை. மனிதன் வேறு விதமாகச் சிந்தனைசெய்த பூர்வீக காலத்தில் உருவான வாக்கியம் இது. இதை சூகோட்டுகளின் மொழியிலிருந்து தேடி எடுத்துக் கொடுத்திருக்கிறோம்.

"மனிதன் தன் நாய்க்கு இறைச்சிகொடுக்கிறுன்" என்று சொல்வதற்குப்பதிலாக, "மனிதன்மூலம் இறைச்சி நாய் கொடுக்கிறது" என்றனர்.

மனிதன்மூலம் இறைச்சியைக் கொடுப்பது யார்?

அது ஒரு அறியமுடியாத சக்தி. அது மனிதனைக் கருவியாகப் பயன்படுத்தி அவன்மூலம் செயல்படுகிறது.

டக்கோட்டாவிலுள்ள (அமெரிக்க) இந்தியர்கள் 'நான் பின்னுகிறேன்' என்றுரைப்பதற்குப் பதிலாக "என் மூலம் பின்னிக்கொண்டு" என்கிறுர்கள். மனிதன் பின்னல்வேலை செய்பவனுக இல்லாமல் பின்னலுக்கான

கொக்கியாகப் பயன்படுவதைப்போல், அவர்கள் 'என் மூலம், பின்னிக்கொண்டு' என்கிறார்கள்.

பண்டையப் பேச்சின் மீதமிச்சங்கள் ஐரோப்பிய மொழிகளிலும் பாதுகாக்கப்பட்டுள்ளன. ''அது குளிரா யிருக்கிறது'' என்ற பொருளில், 'இல் பெயிட் பிராயிட்' என்று பிரெஞ்சுக்காரர்கள் கூறுகிறார்கள். ஆனால் அந்த வாக்கியத்தின் சொல்லுக்குச் சொல் சரியான பொருள் கூறுவதென்றால், ''அவன் குளிரை உண்டாக்குகிறான்'' என்ற பொருளே கிடைக்கும். மீண்டும், உலகை நடத் திச் செல்லும் அந்த 'அவன்'தான்.

ஆனால் நாம் ஏன் பிறமொழிகளில் தேடவேண்டும்? நமது மொழிகளிலேயே பழைய பேச்சு முறைகளின் மீத மிச்சங்களை நிறையக் காணலாம். பழைய பேச்சுமுறை கள் பழைய சிந்தனை முறைகளின் வெளியீடுகளாகும்.

''அது மழை பெய்கிறது,'' ''அது தெளிவடைகிறது.'' ''அது சில்லிட்டுப்போகச் செய்கிறது'' என்ற வாக்கியங் களில், யாதென்று புரியமுடியாத அந்த 'அது' அடிபடு கிறது.

நாம் அத்தகைய அறியமுடியாத சக்திகளை நம்புவ தில்லை. ஆனால் அவற்றில் நம்பிக்கை வைத்த புராதன மக்களின் மொழிகளுடைய மீதமிச்சங்களை நமது மொழி களில் பாதுகாக்கிறோம்.

உதாரணமாக, 'கடிகாரம் கண்டுபிடிக்கப்பட்டது' என்கிறோம்; காணாமற்போன கடிகாரத்தைக் கண்டுபிடித் தது நாம். ஆனால் ஏதோ தெய்வீகத் திருவருளால் கண்டு பிடிக்கப்பட்டமாதிரி பேசுகிறோம்.

ஆக, பேச்சின் அடுக்குகளை ஒன்றன்பின் ஒன்றாகக் குடைந்தெடுத்து ஆராயும்பொழுது நாம் பூர்விக மனிதர் களது சொற்களையும் சிந்தனைகளையும் அறிந்துகொள்கி றோம். பூர்விக மனிதன் புரியமுடியாத உலகில் வாழ்ந்

---

* இது ஆங்கிலம் முதலிய மொழிகளில் உள்ள வழக்கு. தமிழில் இல்லை. (மொர்.)

தான். வேலை செய்வதும் வேட்டையாடுவதும் அவனே என்ற எண்ணம் அவனிடம் உண்டாகவில்லை. யாரோ தன் மூலம் வேலை செய்வதாகவும் தன்மூலம் கலைமானைக் கொல்வதாகவும் அவன் எண்ணினான். கட்டுலடங்காத சக்தியின் விருப்பத்துக்கு இணங்கவே அனைத்தும் நிகழ்ந்தன என்பது அவன் கருத்து.

ஆனால் காலச்சக்கரம் உருண்டோடியது. மனிதனது சக்தி பெருகப்பெருக, உலகத்தைப்பற்றியும் தன்னைப் பற்றியும் அவன் மேன்மேலும் அதிகமாக அறிந்துகொண்டான். "நான்" என்ற சொல் தோன்றியது. மனிதனே செயல்படுகிறான், போராடுகிறான், பொருட்களையும் இயற்கையையும் தன் சித்தத்துக்கு உட்படுத்துகிறான் என்ற கருத்துத் தோன்றியது.

"அது மனிதன்மூலம் கலைமானைக் கொன்றது" என்று நாம் இப்பொழுது சொல்வதில்லை. "மனிதன் கலைமானைக் கொன்றான்" என்றே கூறுகிறோம்.

எனினும், நமது மொழிகளில் கடந்தகாலத்தின் சாயல்கள் இங்கும் அங்கும் தென்படுகின்றன. "அவனுக்கு அதிர்ஷ்டம் இல்லை", என்றும் "அது அவனுக்கு ஏற்பட்டது" என்றும் "வகுத்த வகையை மீறமுடியாது" என்றும் கூறுகிறோம்.

அதிர்ஷ்டத்தை நிர்ணயிப்பது யார்? அதை அவனுக்கு ஏற்படுத்தியது எது? வகையை வகுத்தவன் எவன்?

ஊழ், விதி!

இந்த ஊழ் அல்லது விதி என்பதும் பண்டைக்கால மனிதனை அச்சுறுத்திய 'கட்டுலடங்காத' சக்தியும் ஒன்றே. 'ஊழ்' என்ற சொல் இன்னமும் நம்மொழியில் இருக்கிறது. ஆனால் அந்தச்சொல் மறைந்துபோகும் காலம் வரவிருப்பதை நாம் இப்பொழுதே ஊகிக்கமுடியும்.

விதைத்து விவசாயம் செய்யும் விவசாயியின் தன்னம்பிக்கை அதிகரித்துக் கொண்டிருக்கிறது. விளைச்சல்

பெருகுமா சுருங்குமா என்பது தன் வேலையைப் பொறுத்திருப்பதை அவன் உணர்கிறான். வறண்டுகிடந்த நிலங்களை வளப்படுத்திப் பயிரிடுவதற்கு எந்திரங்கள் உதவி செய்கின்றன. பயிர்களது வளர்ச்சிக்கு விஞ்ஞானம் உதவி செய்கிறது.

மேன்மேலும் அதிகமான துணிச்சலுடன் மாலுமி கடற்பிரயாணம் செய்கிறான். கடலின் அடிவாரத்திலுள்ள மணலை அவனால் பார்க்கமுடியும். புயல் எப்பொழுது அடிக்குமென்பதை அவனால் முன்கூட்டியே தெரிந்து கொள்ளமுடியும்.

'அது அவனது தலைவிதி' என்றும் 'அவன் துக்கிரிப் பிறவி' என்றும் பேசுவது குறைந்து வருகிறது.

அறியாமையால் அச்சம் உண்டாகிறது. அறிவால் ஆற்றல் பெருகுகின்றது.

இயற்கையின் விதிகளை அறிந்து அதன் சக்திகளை ஆள்வதற்குத் தெரியாதபொழுது, ஜனங்கள் இயற்கையின் அடிமைகளாக, கட்புலனாகாத சக்தியின் அடிமைகளாகத் தம்மைக்கருதினர்.

இயற்கையின் விதிகளையும் தம் வாழ்வின் விதிகளையும் அவர்கள் கற்றுக்கொண்டபின், அவர்கள் ஊழின் எஜமானராகவும் சுதந்திர புருஷர்களாகவும் மாறத்தொடங்கினார்கள்.

### அத்தியாயம்—3

## மகாவசந்தம்

### பனிவயல்கள் பின்வாங்கின

ஒவ்வோர் ஆண்டிலும் பனிஉருகத் தொடங்கும் பொழுது, காட்டிலும் வயலிலும் கிராமத்துத் தெருவிலும் நடைபாதை அருகே உள்ள சாக்கடையிலும் தண்ணீர் ஓடுவதை (ருஷியர்களாகிய) நாம் காண்கிறோம். எங்கு

நோக்கினும், வாய்க்கால்களும் சிறிய நீர்வீழ்ச்சிகளுமாகக் காட்சிதருகின்றன. அவற்றில் விரைந்து இரைச்சலிட்டுக் கொண்டும் குமிழி விட்டுக்கொண்டும் தண்ணீர் ஓடுகிறது. மண்ணோடு கலந்து அரைகுறையாக உருகிய பனிக்கட்டி யினடியிலிருந்தே இந்தத் தண்ணீர் ஓடிவருகிறது. வசந்த காலத்தில் வீட்டினுள் தங்கமறுத்து வெளியே ஓடும் சிறுவர் சிறுமிகளைப்போல், இந்தத் தண்ணீர் உறைபனியை உடைத்துக்கொண்டு ஓடிவருகிறது. கற்களின்மீது தாவிக் குதித்து வீதிகளின் குறுக்கே விரைந்தோடும் அதன் மெல் லொலி களிப்பூட்டுகிறது.

கதிரொளி பாயும் சரிவுகளிலிருந்தும் வயல்களிலிருந்தும் வெளியேறும் பனி குட்டைகளிலும் சாக்கடைகளிலும் வேலிகளின் நிழலிலும் அடைக்கலம் தேடுகின்றது. சில சமயங்களில் அது வேலிகளின் நிழலில் ஒதுங்கி மேமாதம் முதல் தேதிவரை கதிரொளிக்கு இலக்காகாது தற்காத்துக் கொள்வதில் வெற்றி அடைகிறது.

எங்குநோக்கினும், இயற்கை முழுமையும் மாறுதல் உற்றிருப்பதைக் காண்கிறோம். சில நாட்களுக்குள், வெறுமையாகக் காட்சிதந்த குன்றுச்சரிவுகள் பச்சைப் பாவாடை உடுத்தித் தரிசனம் தருகின்றன. வெறுங்கிளை களில் இலைகள் உண்டாகிவிடுகின்றன.

குளிர்காலத்தில் சேகரமான பனி உருகுவதால் ஒவ் வொரு வசந்தகாலத்திலும் இந்த நிகழ்ச்சி நிகழ்கிறது.

பூமியென்ற கோளத்தின் முடியைப் போர்த்தியிருந்த பிர்மாண்டமான பனியுகத்தின் பனி ஏடு உருகத்தொடங் கியபொழுது என்ன நிகழ்ந்ததென்று எண்ணுகிறீர்கள்?

பனிக்கட்டியின் அடியிலிருந்து சின்னஞ்சிறு வாய்க் கால்களும் நீரோட்டங்களும் ஓடவில்லை; அதற்குமாறாக அகன்ற ஆறுகள், ஆழமான ஆறுகள் ஓடின. இந்த நதி களில் பல, இன்றும் இடைவழியில் தம்மைச் சேரும்உப

நதிகள், ஓடைகள் முதலியவற்றின் தண்ணீரோடும், கடலில் கலக்கின்றன.

உலகின் வடபகுதியில் வெறுமையாகக் கிடந்த பள்ளத்தாக்குகளில் பெருங்காடுகளைத் தோற்றுவித்த அந்த நிகழ்ச்சியை மகாவசந்தம் என்று குறிப்பிடவேண்டும். அது இயற்கையின் மகத்தான எழுச்சியாக இருந்தது.

ஆனால் இளவேனிற் பருவம் ஒரே மூச்சில் வந்துவிடுவதில்லை. ஏப்ரல் மாதத்தில், வானம் வெளுத்துக் கதிரவனது கதகதப்பான உஷ்ணம் நமக்கு ஊட்டம் அளிப்பதும், அதைத்தொடர்ந்து திடீரென்று குளிர்காற்று வீசுவதும், நாம் கண்கூடாகக் கண்டு அனுபவித்தவைதாம். அடுத்த நாள் காலையில் விழித்தெழுந்து வெளியில் நோக்கினால், மீண்டும் இயற்கை வெள்ளைக்கலை உடுத்தியிருப்பதைக் காண்போம்; கூரைகளை வெண்பனி போர்த்தி யிருப்பதைப் பார்ப்போம். வசந்தம் வந்ததற்கான அறிகுறியே தென்படாது.

மகாவசந்தமும் ஒரே மூச்சில் கடுங்குளிர்மீது வெற்றி கொள்ளவில்லை. பனிக்கட்டியாறுகள் வேண்டா வெறுப்பாகப் பின்வாங்குவனபோல் பையப் பைய நகர்ந்தன. அவை பலநூற்றாண்டுகளுக்குத்தாக்குப் பிடித்தன.

சில சமயங்களில் சிறிதுதூரம் பின்வாங்கிய பனி வயல்கள், தம் சக்திகளைத் திரட்டிக்கொள்வன போல் கொஞ்ச காலம் அசையா திருந்துவிட்டு மீண்டும் முன்னேறத் தொடங்கின. அவற்றுடன் சிறிதே இளகிய பனியுடன் கூடிய கடுங்குளிரான சமவெளியான துந்திரப் பூமியும் தன் விசுவாச மிகுந்த தோழனான கலைமானுடன் முன்னேறியது.

எனவே அந்தப் பள்ளத்தாக்குகளில் வரைந்த புல் அழிந்தது. பாசியும் பாசிக்காளானும் மண்டின. புல்லைத் தின்று வாழ்ந்த காட்டெருமைகளும் குதிரைகளும் தென் திசையில் பின் வாங்கின.

வெப்பத்துக்கும் குளிருக்குமிடையே நிகழ்ந்த போராட்டம் நீண்டகாலம் நீடித்தது. ஆனல் இறுதியில் வெப்பத்துக்கே வெற்றி கிட்டியது. வெப்பத்தில் கரைந்த பனி வயல்களின் அடியிலிருந்து பெருமுழக்கம் செய்யும் நதிகள் பாய்ந்தோடின. உலகத்தின்பனி முடி மிருதுவாகிச் சுருங்கத் தொடங்கியது. பனிவயல்களின் தொலைவான விளிம்பு வடக்கு நோக்கிப் பின்வாங்கியது. அத்துடன் துந்திர பூமியின் தென்கோடி எல்லையும் பின்வாங்கியது. பாசியும் பாசிக்காளானும் மண்டியிருந்த இடத்தில், இங்கும் அங்கும் இருந்த வளர்ச்சி குன்றிய பச்சை மரங்களைத்தவிர வேறு எந்த மரமும் இல்லாதிருந்த அவ்விடத்தில், இப்பொழுது, பனிவயல்கள் பின்வாங்கிய உடன் பருமனைபைன் மரங்களைக்கொண்ட அடர்த்தியான காடுகள் தோன்றின.

சூழ்நிலை மேன்மேலும் கதகதப்பாகிக் கொண்டு வந்தது.

ஆஸ்பன், பர்ச் ஆகிய மரங்களின் பிரகாசமான முடிகள், பைன் மரங்களது 'ஊசி' இலைகளிடையே அடிக்கடி உயர்ந்து ஓங்கி வளர்ந்தன.

அவற்றைத் தொடர்ந்து, அகன்ற இலைகளை உடைய ஓக் மரங்களும் லின்டன் மரங்களும், வலுவான சைனியம் போல், வடக்கு நோக்கி முன்னேறின.

"பைன் சகாப்தம்" முடிந்து "ஓக் சகாப்தம்" பிறந்தது. ஒரு காட்டு இல்லம் இன்னென்றுக்கு வழிவிட்டு விலகியது. இந்தக் காட்டு இல்லங்கள் ஒவ்வொன்றும் தனித்தனியான குடிபடைகளை உடையவையா யிருந்தன.

அகன்ற இலைக்காடுகளும் அவற்றுடன் கூடவளரும் புதர்ச்செடிகளும் காளான்களும் வந்தபோது, இம் மாதிரியான காட்டு உணவை விரும்பும் காட்டு விலங்குகளும் வடக்கு நோக்கிவந்தன. காட்டுப்பன்றியும் எல்க் என்ற பெரிய மான்வகையும் காட்டு எருதும் கவைக் கொம்புகளுடன் கூடிய உயரிய மான்வகையும் வந்தன. பழுப்புக்

கரடி தேனைத்தேடி மரக்கிளைகளை ஒடிக்கத் தொடங்கியது. ஓநாய்கள் உதிர்ந்த இலைகள்மீது ஓசை செய்யாது அடி வைத்துக் குழிமுயல்களைத் தொடர்ந்தன. மழுங்கலான மூக்கும் தட்டையான பாதங்களும் உடைய பீவர்கள் காட்டு நீரோட்டங்களுக்கு அணைகட்டுவதில் ஈடுபட்டன. பறவைகளின் பெருங் கூட்டங்களது கானம் காடெங்கும் கேட்டது. காட்டு வாத்துக்களும் அன்னப்பட்சிகளும் காட்டு ஏரிகளுக்குமேல் பறந்து கூச்சலிட்டன.

## பனிச்சிறையில்

இயற்கையில் இந்த மாறுதல்கள் அனைத்தும் நிகழ்ந்த போது இவற்றில் அக்கறை கொள்ளாத பார்வையாளனாக விருக்க மனிதனால் முடியவில்லை. நாடக அரங்கில் காட்சி ஜோடனைகள் மாறுவதைப்போல், அவனைச் சுற்றியிருந்த, அனைத்தும் மாறிக்கொண்டிருந்தன. நாடக அரங்குக்கும் இதற்கும் உள்ள வேற்றுமை என்னவெனில், இங்கு ஒவ்வொரு அங்கமும் நிறைவு பெறுவதற்குப் பல்லாயிர மாண்டுகள் ஆயின ; மேலும் இந்த அரங்கு கோடானு கோடி சதுர மைல்களுக்கு வியாபித்திருந்தது.

இந்த உலக அரங்கில் மனிதன் ஒரு பார்வையாளனாக இருக்கவில்லை ; அவனே அதில் ஒரு நடிகனாகவும் பங்கு கொண்டான்.

காட்சி மாறிய பொழுதெல்லாம் அவன் தன்னை மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று ; வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்ளாமல் அவனால் பிழைத்திருக்க முடியாது.

துந்திரப்பூமி தெற்கு நோக்கி வியாபித்தபொழுது, அது தன்னுடன் சங்கிலியால் பிணைக்கப் பட்டவை மாதிரி இருந்த தனது கைதிகளான கலைமான் முதலியவற்றையும் கொண்டு வந்தது. இந்தச் சங்கிலியின் ஒரு முனையில் கலைமான் இருந்த தென்றால் இன்னொரு முனையில் பாசியும் பாசிக்காளானும் இருந்தன.

மரமில்லாதவையும் குளிர் மிகுந்தவையும் உறை பனி நிறைந்தவையுமான துந்திரச் சமவெளிகளில் கலைமான் திரிந்தது. அது பாசியையும் பாசிக்காளானையும் தின்று வாழ்ந்தது. மனிதனும் கலைமானுடன் வந்தான்.

பனி உறைந்திராத சமவெளிகளில் மனிதன் குதிரைகளையும் காட்டெருமைகளையும் வேட்டையாடினான். துந்திரச் சமவெளியில், அவன் கலைமானையே வேட்டையாடவேண்டியதாயிற்று.

துந்திராவில் அவன் வேட்டையாடுவதற்கு வேறு என்ன பிராணி இருந்தது?

கம்பிளியானை இனம் பூண்டற்றுப் போய்விட்டது. ஆயிரக் கணக்கான கம்பிளியானைகளை மனிதன் கொன்று விட்டான். அந்த யானைகளது எலும்புகளை மலைமலையாகத் தன் வேட்டை முகாம்களைச் சுற்றிக்குவித்து விட்டான். குதிரை இனத்தையும் பெரிய அளவுக்கு அழித்து விட்டான். எஞ்சியிருந்த குதிரைகளும் காய்ந்த பாசிக்காளானை விரும்பாது, செழிப்பான புல்லை உடைய தென்பகுதிக்குப் போய் விட்டன.

துந்திராவில் மிஞ்சியிருந்த ஒரே 'ரட்சகன்' கலைமான் தான். மனிதன் கலைமான் இறைச்சியை உண்டான்; கலைமான்தோலை உடுத்தினான்; கலைமான் கொம்பினால் ஈட்டிகளும் எறிபடைகளும் செய்து கொண்டான். ஆக மனிதன் தன் வாழ்வைக் கலைமானுடைய வாழ்வுடன் இணைத்துக் கொண்டான்.

கலைமான் சென்ற இடத்துக்கு மனிதனும் போனான். பெண்கள் தமது வேட்டை முகாம்களில் விரைவாகக் குடிசைகளை அமைத்தனர்; அவற்றைத் தோலால் மூடினர். எந்த இடத்திலும் நீண்டநாள் வசிக்கப் போவதில்லை என்பதை அவர்கள் அறிந்திருந்தனர். தன்னை மொய்க்கும் ஈக்கள் சகிதமாகக் கலைமான் வேறு மேய்ச்சல் நிலங்களுக்குச் சென்றபொழுது, ஜனங்களும் தம்முகாமைக் கலைத்துவிட்டு அதனோடு செல்லவேண்டியதாயிற்று. பெண்கள் குடிசை

களைப்பிரித்து முதுகில் ஏற்றிக்கொண்டு துந்திராவில் கஷ்டப்பட்டு நடந்தனர்; களைத்துச் சோர்ந்து, இடறி விழுந்து எழுந்தவாறு நகர்ந்தனர். அவர்களுக்குப் பின்னால், ஆடவர்கள் ஈட்டிகளையும் எறிபடைகளையும் எடுத்துக் கொண்டு நடந்தனர். வீட்டுவிவகாரங்களைப் பற்றி அவர் களுக்குக்கவலை யில்லை; எனவே அவர்கள் பாரம் தூக்க வில்லை.

இப்பொழுது, துந்திரா பின்வாங்கி விட்டது. அத்துடன் கலைமானும் பின்னடைந்து விட்டது. சதுப்பாயிருந்த நிலத்தில், நுழைய முடியாத அளவுக்கு அடர்த்தியான காடுகள் உண்டாயின. அவை மேன்மேலும் வடக்கு நோக்கி வியாபித்தன.

அப்பொழுது, மனிதருக்கு என்ன நேர்ந்தது?

சிலவேடர் குலங்கள், முன்யோசனை இல்லாமல், கலை மான் கூட்டத்துடன் ஆர்டிக் கடற்கரையை நோக்கிச் சென்றன. இதுவே மிக்க சுலபமான காரியமாயிருந்தது; ஏனெனில் மனிதன் பனிப்பிரதேச இயற்கைக்கே பழக்கப் பட்டிருந்தான். கடுங்குளிர் முப்பத்தி ஐந்தாயிரம் ஆண்டு கள் நீடித்தது. இந்தக்காலத்தில், மனிதன் காட்டு விலங்கு களின் கதகதப்பான தோலை அணிவதற்குக் கற்றுக் கொண் டிருந்தான். வெளியே எவ்வளவு குளிராயிருந்தாலும், அவன் நிலத்தைக் குடைந்து அமைத்துக் கொண்டிருந்த இல்லத்தில், காற்றடித்து அணையாது பாதுகாக்கப் பட்ட அடுப்பு நன்றாக எரிந்தது.

இருந்த இடத்திலேயே தங்குவதைவிட ஆர்டிக் பிரதேசத்துக்குச் செல்வதே சுலபம். ஆனால் எளிய வழியே எப்பொழுதும் சிறந்த வழியாயிருக்கு மென்று சொல்ல முடி யாது. கலைமானுடன் வடக்கே சென்ற மனிதர்களுக்குப் பேரிழப்பு ஏற்பட்டது. முதலாவதாக, அவர்கள், அதிகக் காலம் பனியுகத்தில் வாழ வேண்டியதாயிற்று. கிரீன்லாந் திலுள்ள எஸ்கிமோக்கள் இன்றும் பனிவயல்களில்தான்

வாழ்கிருர்கள். அவர்கள் கடுமையானதாகவும் கஞ்சத் தனம் கொண்டதாகவும் உள்ள இயற்கையுடன் இடை விடாப் போராட்டம் நடத்திக் கொண்டிருக்கிருர்கள்.

இருந்த இடத்திலேயே தங்கிய ஜனக் கூட்டங்களது நிலைமை முற்றிலும் வேறுவிதமாயிருந்தது. முதலில் அவர் களுக்குத் தம்மைச் சுற்றி உயர்ந்துவளர்ந்த காடுகளில் வாழ் வது கடினமாகவே இருந்தது. ஆயினும், அவர்கள் தமது முன்ஞேர்களை ஆயிரமாயிரம் ஆண்டுகளாகக் கட்டுப்படுத்தி யிருந்த பனிச்சிறையிலிருந்து தப்பி விட்டார்கள்.

## வனத்தை எதிர்த்து மனிதன் நடத்திய போர்

முன்ஞல் சமநிலமாக விருந்த இடத்தில் வளர்ந்த காடு கள் நம்காலத்துக் காடுகளிலிருந்து வேறுபட்டவை யாகும். அவை ஆயிரக்கணக்கான மைல்கள் அடர்த்தியாக வளர்ந் திருந்தன. ஏரிகள், ஆறுகள் ஆகியவற்றின் கரைகள்வரை யில் மரங்கள் இருந்தன. சில இடங்களில், காடு கடற்கரை யையும் தொட்டது. அந்தக்காட்டினுள் நுழைந்து செல் வது கடினமா யிருந்தது.

தனக்குப் பழக்கமில்லாத இந்தக் காட்டில் வாழ்வது மனிதனுக்கு மிகவும் கஷ்டமாயிருந்தது. அவன் வசிப்ப தற்கு இடமில்லாமல் திணறித் திக்குமுக்காடிஞன்; காட்டின் மென்மயிர் அடர்ந்த பாதங்கள் (உறுத்தும் இலை கள்—மொர்) அவனை மிதித்துத் துவைத்தன. அவன் சதா காலமும் காட்டோடு போராட வேண்டியிருந்தது; மரங் களை வெட்டி அப்புறப்படுத்தி இடம்பெற வேண்டி யிருந்தது.

துந்திர நிலத்திலோ சமநிலத்திலோ குடியிருப்பு அமைப்பதற்கான இடம் அவனுக்கு எளிதில் கிடைத்தது. சுற்றுமுற்றும் நிறைய இடம் இருந்தது. ஆனல் காட்டி லோ அவன் இடத்தை உண்டாக்கிக் கொள்ளவேண்டிய தாயிற்று. இங்கு ஒவ்வொரு அங்குல நிலத்தையும் மரங் களும் புதர்களும் வசப்படுத்திக் கொண்டிருந்தன.

பகைவனது கோட்டையைத்திடீரென்று தாக்கித் தரை மட்ட மாக்குவதைப்போல, அவன் காட்டை எதிர்த்துச் சமர் செய்ய வேண்டியதாயிற்று.

ஆயுதங்களில்லாமல் அமர் நிகழ்த்த முடியாது. மரங்களை வெட்டுவதற்குப் புதிய ஆயுதம் தேவைப்பட்டது. எனவே மனிதன் கனமானதும் முக்கோண வடிவமானதுமான கற் சம்மட்டியை நீண்ட கோடாரிக் கைப்பிடியில் கட்டினன்.

காட்டில் மரங்கொத்திப் புள் கொத்தும் ஒலிமட்டுமே இதற்குமுன் கேட்டது; இப்பொழுது முதல் கோடாரியின் ஒலி எதிரொலித்தது. அந்த ஒசை பறவைகளையும் விலங்கு களையும் அதிர்ச்சியுறச் செய்தது.

கல்லின் கூரான விளிம்பு மரத்தினுள் ஆழப்பதிந்தது. அந்தக் காயங்களிலிருந்து கெட்டியான பால் சொட்டியது. மரம் வெட்டியின் காலடியில், மரங்கள் முனங்கிக் கொண்டே விழுந்தன.

ஜனங்கள் பொறுமையோடும் விடாமுயற்சியோடும் நாள்தோறும் மரங்களை வெட்டினர்கள்; காட்டு உலகில் தமக்கோர் இடம் செய்து கொண்டார்கள்.

இடம் செய்து கொண்டபின் வெட்டுண்ட மரங்களது அடிக்கட்டைகளையும் குறும்புதர்களையும் எரித்தார்கள்.

இவ்வாறு மனிதன் காட்டுடன் போராடி வெற்றி கண்டான். ஆனல் அவன் தோல்வியுற்ற விரோதியை அத்துடன் விட்டுவிட வில்லை. மனிதர்கள் விழுந்த மரங் களது கிளைகளை வெட்டினர்கள். (மரத்தின் நடு உடலான) அடிமரத்தின் ஒரு முனையைக் கூராக்கி நிலைகுத்தாக நிறுத்தி மரக்கொட்டாப் புளியால் அடித்துப் பூமியினுள் இறங்கச் செய்தார்கள். இதேபோல், இரண்டாவது, மூன்ருவது, நான்காவது கால்களையும் நட்டார்கள். அதன் பின் ஒருவேலி அமைத்தனர். வேலியில் கிளைகளைப் பின்ன லாகக் கட்டினர்கள். இவ்வாருக மரங்களிடையே மிலாறு களால் அமைந்த குடிசை உண்டாயிற்று. அதுவும்

காட்டின் ஒரு பகுதியாகவே தோன்றியது. காட்டிலிருப்பதைப் போலவே இந்தக் குடிசையிலும் பின்னிப்பிணைந்த கிளைகளுடன் கூடிய அடிமரங்களிருந்தன. ஆனால் இந்தக் குடிசையின் அடிமரங்கள் ஒழுங்கில்லாமல் நிற்கவில்லை. அவை ஒரு திட்டமான முறையில் நின்றன; மனிதன் உண்டாக்கிய முறை இது.

காட்டு உலகத்தில் தனக்கோர் இடம் பெறுவதற்கு மனிதன் கஷ்டப்பட்டான். உணவு பெறுவதற்கு இதையும் விட அதிகமாக அவன் சிரமப்பட வேண்டியதாயிற்று.

முன்னால் சமநிலங்களிலும் பிரேரிகளிலும் கூட்டம் கூட்டமாகச் சஞ்சரித்த விலங்குகளை அவன் வேட்டையாடினான். அவற்றைச் சேய்மையிலிருந்தே காண்பது எளிதாயிருந்தது. சிறு குன்று ஒன்றின் சிகரத்தில் ஏறி நின்று நோக்கினால் போதும்; சுற்றியுள்ள நிலம் முழுமையும் அடுக்கணிக்காட்சி போல் புலனாயிற்று.

காட்டிலோ, நிலைமை வேறு. காட்டு வீட்டில் குடிபடைகள் நிறைய இருந்தன. ஆனால் அவற்றைப்பார்க்க முடியவில்லை. அவற்றின் குரலும் விளியும் கூச்சலும் சலசலப்பும் காட்டு மாளிகையின் ஒவ்வொரு தளத்திலும் நிறைந்திருந்தன. ஆனால் அந்த ஓசைகளைத் தொடர்ந்து சென்று அக்குடிகளைக் கண்டுகொள்வது கஷ்டமாயிருந்தது.

காலடியிலிருந்து சலசலப்பு ஓசை கேட்டது; தலைக்கு மேல், ஏதோ ஒன்று பறந்தது; மரக்கிளைகளது இலைகளை ஏதோ ஒன்று உராய்ந்தது......

இந்தச் சலசலப்புகளுக்கும் மணங்களுக்கும் இடையே புள்ளிகள் அடர்ந்த அடிமரங்களது நடுவிலுள்ள இந்தப் பல் வேறு புள்ளிகளுக்கிடையே, அந்த வேடர்கள் யாது செய்வது என்று அறியாது திகைப்புற்றார்கள்.

ஒவ்வொரு காட்டுப்பிராணியும் வனப்புள்ளும் ஒரு பிரத்தியேகமான பாதுகாப்பு நிறத்தைப் பெற்றிருந்தன. பறவைகளின் இறக்கைகள் மரப்பட்டைமாதிரி இருந்தது. காட்டின் அரை இருளில், விலங்குகளின் பழுப்புநிறமான மென்மயிர்த்தோல் உதிர்ந்த இலைகளது பழுப்பு நிறத்தோடு வேறுபடுத்த முடியாதபடி ஐக்கியப்பட்டிருந்தன.

விலங்கின் அடிச்சுவட்டைக் கண்டு அதைத்தொடர்வதே கஷ்டம். அப்படித் தொடர்ந்தபோதும், ஒரே எறிகலத்தால் அதனை வீழ்த்தவேண்டியதாயிற்று. குறி தவறினால், எச்சரிக்கையான பிராணி மரங்களிடையே பதுங்கியது. எனவே வேடன் எறிகலத்துக்குப்பதிலாக விரைவாகச்சென்று இலக்கை உறுதியாகத் தாக்கவல்ல அம்பைக் கைக்கொள்ள வேண்டியதாயிற்று.

அம்புகள் நிறைந்த உறையை முதுகில் கட்டித் தொங்கவிட்டுக்கொண்டு வில்லேந்திய வேடன், அடர்த்தியான காட்டினுள் ஊடுருவினான்; காட்டுப்பன்றிகளைத் துரத்தினான்; இரைச்சலிட்ட காட்டுவாத்துக்களை அம்புக்கு இரையாக்கினான்.

## நான்கு கால் நண்பன்

ஒவ்வொரு வேடனுக்கும் ஒரு சிறந்த நண்பன் உண்டு. அந்த நண்பனுக்கு நான்கு பாதங்களும் இரண்டு மிருதுவான பெரிய காதுகளும் மோப்பம் பிடிக்கும் அவா மிகுந்த கரிய நாசியும் உள்ளன.

எஜமானன் வேட்டையாடும்பொழுது, அவன் இரையைக் கண்டுபிடிப்பதற்கு இந்த நான்கு கால் நண்பன் உதவுகிறான். எஜமானன் பகலுணவைப் புசிப்பதற்கு அமரும்பொழுது, இந்தத்தோழன் அவனருகில் அமர்ந்து "என் பங்கு எங்கே?" என்று வினவுவதுபோல் அவனது கண்களை நோக்குகிறான்.

விசுவாச மிகுந்த இந்த நான்கு கால்நண்பன், ஓரிரண்டு ஆண்டுகளாக அல்ல, ஆயிரமாயிரம் ஆண்டுகளாக வேட

னுக்குத் தொண்டுபுரிந்து வந்திருக்கிறான். எப்படியென்றால் துப்பாக்கிகொண்டு வேட்டையாடத் தொடங்குவதற்கு ரொம்பக்காலத்திற்கு முன்பே, இறகுடன்கூடிய இலேசான அம்பினால் இரையை வேட்டையாடிக் கொன்ற காலத்திலேயே, மனிதன் நாயைப் பழக்கிவிட்டான்.

முற்றா நிலக்கரியை உடைய காட்டுச் சதுப்பு நிலங்களில் மனிதரது வேட்டை முகாம்களின் மீதமிச்சங்களுக்கு அருகில், நாய்களது முகாம்களின் எச்சசொச்சங்களும் அகப்படுகின்றன. மனிதரது குடியிருப்புக்கருகில் கண்டு பிடிக்கப்பட்டுள்ள அடுக்கலைக் குப்பைமேடுகளில், நாயின் பற்களால் கடிபட்டு வடுப்பட்ட விலங்கெலும்புகள் உள்ளன. எனவே அந்த நாட்களிலும், நாய் உணவை உட்கொண்ட வேடனருகில் அமர்ந்து, எலும்புகளைப் போடும்படி கெஞ்சிக்கேட்டு வாங்கிக் கடித்தது என்பது வெளிப்படை.

நாய் தனக்குப் பயன்பட்டிராவிட்டால், வேடன் அதற்குத் தீனி போட்டுப் பாதுகாத்திருக்கமாட்டான். நாயைப் பழக்கியதன் மூலம் அவன் ஒரு துணைவனை அடைந்தான். காட்டுவிலங்குகளின் அடிச்சுவடுகளைப் பின்தொடர்ந்து செல்வதற்கு அதற்குக் கற்றுக்கொடுத்தான்.

மனிதன் நாயைத் தேர்ந்தெடுத்துப் பழக்கியது தகுதியான நடவடிக்கையே. காட்டுப்பன்றியின் சுவடுகளை அவனால் பார்க்கமுடியாதபொழுதே, மானின் காலடிஓசை அவனது காதில் விழுவதற்குமுன்பே, நாய் உஷாராகியது; பூமிவழியே மோப்பம் பிடித்துக்கொண்டு ஓடியது.

இலைகளில் கமழ்ந்த அந்த மணம் யாது? இவ்வழியே எந்தப்பிராணி சென்றது? இரண்டு மூன்று தட்வைகள் சுவாசித்தவுடன், நாய் பிராணியின் அடிச்சுவடுகளைக் கண்டு கொள்கிறது. அக்கம்பக்கத்தில் எதையும் காணாத பொழுதே, எதையும் கேட்காதபொழுதே, தனது மிகமுக்கியமான புலனான வாசனை உணர் புலனை வழிகாட்டியாகக்

கொண்டு, காட்டுவழியே நம்பிக்கையுடன் ஓடுகிறது நாய். அதைப் பின்தொடர்வதைத் தவிர மனிதனுக்கு வேறு சிரமம் ஏதுமில்லை.

மனிதன் நாயைப் பழக்கியவுடன், முன்னைவிடப் பல சாலியானான். தன் நாசியைவிடச் சிறப்பாக மணங்களை இனங்கண்டு கொண்ட நாயின் நாசியை அவன் பயன் படுத்தினான்.

அவன் நாயின் நாசியுடன் அதன் கால்களையும் பயன் படுத்தினான். குதிரைக்குச் சேணம் பூட்டுவதற்கு நெடுங் காலத்திற்கு முன்பே, நாய்கள் மனிதனைச் சறுக்குவண்டியில் இழுத்துக் கொண்டு சென்றன.

சைபீரியாவில் கிராஸ் நாயார்ஸ்கின் அருகில், புராதன வேட்டை முகாமுக்குப் பக்கத்தில், நாய்களது எலும்பு கள் அவற்றின் சேணத்துத் துண்டுகளுடன் கண்டெடுக் கப்பட்டுள்ளன.

ஆக, நாய் மனிதன் வேட்டையாடுவதற்கு உதவிய துடன், வேடனைத் தன்னுடன் இழுத்துக்கொண்டும் சென் றது.

எனவே, மனிதனது வாழ்க்கை வரலாற்றில் அவனது நண்பனான நாயை முதன்முதலாக இப்பொழுது சந்திக் கிறோம்.

நாய்களைப்பற்றி எத்தனை கதைகள் எழுதப்பட்டுள்ளன. மலைப் பிரதேசத்தில், பிரயாணிகளது உயிரைக் காப்பாற்றிய நாய்களைப் பற்றியும் போர்க்களத்தில் படுகாயமுற்று விழுந்த எஜமானர்களைத்தூக்கிச் சென்ற நாய்களைப்பற்றி யும் வீட்டு வாயிலில் மட்டுமல்லாமல் நாட்டெல்லையிலும் காவல்காத்த நாய்களைப் பற்றியும் பலகதைகள் எழுதப் பட்டிருக்கின்றன! வீட்டிலும் வேட்டையிலும் போர்க் களத்திலும் விஞ்ஞான ஆராய்ச்சிசாலையிலும் நாய் மனி தனுக்கு விசுவாசத்துடன் தொண்டு புரிகிறது.

## மனிதன் நதியுடன் போராடுகிருன்

எல்லோருமே அடர்ந்த காட்டினுள் செல்லவில்லே. சிலர் ஆறுகள், ஏரிகள் ஆகியவற்றின் கரைகளே நோக்கிச் சென்றனர்.

அங்கே தண்ணீருக்கும் காட்டுக்கும் இடையே யிருந்த குறுகலான நிலப்பகுதியில் அவர்கள் மிலாறுகளேக் கொண்டு குடிசைகளேக் கட்டினர்.

காட்டிலிருந்ததைவிட ஆற்றங்கரையில் திறந்த வெளி பெரிதாயிருந்தது. ஆனுல் அங்கு வாழ்க்கை நடத்துவது மிகவும் சிரமமாயிருந்தது. அடுத்திருந்த நதி அமைதியற்ற தாயிருந்தது. வசந்தகாலத்தில் அதில் வெள்ளம் பெருகிக் கரைகள்மீது வழிந்தோடியது. நதியில் விழுந்த மரங்க ளோடும் மிதக்கும் பனிக்கட்டிகளோடும் மனிதன் அமைத்த குடிசைகளேயும் வெள்ளம் அடித்துக்கொண்டு சென்றது. வெள்ளத்திலிருந்து தம்மைத் தற்காத்துக் கொள்வதற்காக, ஜனங்கள் மரங்களில் ஏறிக்கொண்டனர் ; அங்கே, ஆற்றின் வெறி எப்பொழுது அடங்கும் என்று நோக்கியவாறு காத் திருந்தனர். நதிவெள்ளம் மீண்டும் தன் படுகைக்குள் ஒருங்கியவுடன் அவர்கள் ஆற்றங்கரையில் அழிந்துபோன குடிசைகளேப் புதுப்பித்துக் கொண்டனர்.

ஆரம்பத்தில், வெள்ளம் வந்த போதெல்லாம் அவர்கள் அதிர்வுற்றுத்திகைத்தனர். ஆனுல் ஆற்றையும் அதில் வெள்ளம் பெருகுவதையும் வடிவதையும் உன்னிப்பாகக் கவனித்து வந்ததன்மூலம், வெள்ளத்தை அறிவால் வெல்ல முயன்றனர்.

அவர்கள் பலமரங்களே வெட்டி ஒன்ருகக் கட்டிக்கரை யோரமாகக் கிடத்திஞர்கள். அந்தக் கட்டின்மீது இன்ஞெரு கட்டு மரங்களேக் கிடத்திஞர்கள். இவ்வாறு படிப்படியாக ஓர் உயரமான மேடையை அமைத்தார்கள். மரங்களால் அமைந்த அந்த அகன்ற மேடைமீது அவர்கள் குடிசைகளேக்கட்டிக் கொண்டனர். இப்பொழுது வெள்

ளத்தைக்கண்டு அவர்கள் அஞ்சவில்லை. நதிவெள்ளம் வெறியோடு கரைபுரண்டு வந்தபோதிலும், அதனால் அவர் களது வீடுகளின் அஸ்திவாரத்தின்மீதுகூட தண்ணீரைத் தெறிக்க முடியவில்லை.

இது மனிதனுக்குக் கிடைத்த மகத்தான வெற்றி. தாழ்ந்த கரையை உயர்ந்த கரையாக மாற்றுவது என்பது விளையாட்டான விஷயமல்ல. மரங்களால் அமைந்த அந்த மேடையிலிருந்துதான், நதிகளைக் கட்டுப்படுத்துவதற்கு நாம் அமைக்கும் அணைகளும் செய்கரைகளும் தோன்றின.

ஆற்றோடு நிகழ்ந்த இப்போரில் மனிதன் நீண்ட காலத் துக்குக் கஷ்டப்பட்டு உழைத்தான். அப்படியானால் அவன் ஏன் நதிக்கரையில் குடியேற விரும்பினான்? ஆறு அவனை எப்படி ஈர்த்தது?

நாள் கணக்காக நதிக்கரையில் அமர்ந்து நெட்டி மித வையைப் பொறுமையோடு நோக்கும் மீனவனிடம் இக் கேள்வியைக் கேளுங்கள். நதியின் மீன்வளமே மனிதனை வசிகரித்தது.

வேடன் எப்படி மீனவனானான்? மீன் பிடித்தலுக்குத் தேவையான கருவிகள் வேறு வகைப் பட்டதாயிற்றே? மீன் பிடிக்கும் முறைகளும் வேட்டையாடும் முறையி லிருந்து மாறுபட்டவை அல்லவா?

நிகழ்ச்சித் தொடரில் ஒரு இடை முறிவு தென்பட் டால், நாம் காணாமற் போன கண்ணியைக் கண்டு பிடிக்க முயலவேண்டும்.

வேடன் ஒரே நாளில் மீனவனாக முடியாது. அதாவது அவன் மீன் பிடிக்கத் தெரிந்து கொள்வதற்கு முன் ஆரம் பத்தில் மீன் வேடனாகவே இருந்திருக்க வேண்டும். அப்ப டித்தான் நிகழ்ந்தது. ஈட்டி மாதிரியான ஒரு கருவியையே மீனவன் முதலில் பயன்படுத்தினான். அவன் இடுப்பளவு தண்ணீரில் நடந்து சென்று குன்றுகளிடையே மீன்கள் பதுங்கியிருப்பதைக் கண்டவுடன் அவற்றைத் தன் ஈட்டி

போன்ற கருவியால் கொன்றான். அதன் பின், அவன் இன்னொரு வழியிலும் மீன்களைப் பிடிக்க முயன்றான். அதற்கு முன்பே, வலைவைத்துப் பறவை பிடிப்பதற்கு அவன் கற்றிருந்தான். எனவே, தண்ணீரிலும் வலையை உபயோகித்தான்.

இவ்வாறாக, மனிதன் கொஞ்சம் கொஞ்சமாக, மீன் பிடி கருவிகளைத் தேடிக்கொண்டான். ஈட்டிகள், எறி படைகள் ஆகியவற்றுடன் வலைகளை நீரோட்டம் அடித்துக்கொண்டு போகாதிருப்பதற்காகப் பயன் பட்ட கற் பாரங்களும், மீன் பிடிப்பதற்காக எலும்பில் செய்த கொக்கிகளும் பூமியில் புதைந்திருந்ததைப் பழம் பொருளாராய்ச்சியாளர்கள் கண்டு பிடித்துள்ளனர்.

## நமது கப்பல்களின் தாத்தா

அறுபது ஆண்டுகட்கு முன்னால், ஆப்பிரிக்காவில் சில தொழிலாளர்கள் கால்வாய் வெட்டிக் கொண்டிருந்தனர். அவர்கள் முற்றா நிலக்கரியையும் மணலையும் வெட்டி எடுத்த போது மனிதனின் மண்டையோடு ஒன்றையும் சில கற் கருவிகளையும் கண்டனர்.

இது பழம் பொருளாராய்ச்சியாளரின் கவனத்துக்கு வந்தது. இதற்குமுன், இச்சதுப்பு நிலத்தில் முற்றா நிலக் கரியைத் தவிர வேறொன்றும் கிடைக்காதென்று எண்ணினார்கள். ஆனால், இப்பொழுது, அரும் பொருட்காட்சி யகத்தின் பெட்டியைத் திறந்து பொருட்களை எடுப்பதைப் போல், கற்கோடரி, கற்கத்தி, மீன்பிடிக்கும் கொக்கி, அம்புநுனி, விளிம்பில் அறுக்கும் பற்களை உடைய எறிகலம், எலும்புத்துண்டில் சிற்றளவில் செதுக்கப்பட்ட திமிங்கலம் (இது ஒரு தாயித்து) ஆகியவற்றைப் புதைபொருளாராய்ச்சி யாளர்கள் எடுத்தனர்.

இந்தக் கற்கருவிகளையும் எலும்புக் கருவிகளையும் எடுத்த பிறகு, அவர்கள் ஒரு முழுப்படகையே கண்டு வியப்பம் உவகையும் கொண்டனர். அது எவ்விதமான

சேதமும் அடையாதிருந்தது. உடனடியாக அதில் ஏறித் துடுப்பால் தள்ளி ஆற்றைக் கடப்பதற்குத் தகுதியானதாக இருந்தது.

அது நம்காலத்துப் படகுகளைப் போல் இல்லை. நமது படகுகள், நீராவிக் கப்பல்கள், டீஸல்-விசைப்படகுகள் ஆகியவற்றின் பிதா மகனை இப்படகு மிகப்பெரிய ஓக் மரத்தைக் கொண்டு அமைக்கப்பட்டிருந்தது. அதை நோக்கும் பொழுதே, ஓக் மரத்தின் உட்பாகத்தில் கற்கோடரி எப்படி வேலை செய்தது என்பதைப் பார்ப்பதாகத் தோன்றுகிறது. மரத்தின் நார் ஓட்டத்துக்கு ஒத்த வகையில் கோடரி வெட்டியபொழுது, அது கணிசமாகப் பலன் அளித்தது. ஆனால் நார் ஓட்டத்துக்கு எதிரான போக்கில் கோடரி வெட்டியபொழுது, விபரீதம் நிகழ்ந்தது. வெட்டிய இடத்தில் மரம் நானுபுரங்களிலும் சிதைந்தது. கற்கருவியின் பற்கள் வெறித்தனமாகக் கண்ட கண்ட இடத்தில் கடித்து விட்டனபோல் தோன்றியது. கணுக்களும் கிளைகளும் இருந்த இடங்களில், கோடரியால் வெட்ட முடியவில்லை. எனவே, மனிதர்கள் கோடரியைக் கீழே வைத்துவிட்டு நெருப்பின் உதவியை நாடினார்கள்.

படகின் பின்பகுதி முழுவதும் பொசுங்கியுள்ளது; கரியின் கருமையான ஓட்டுடன் காட்சி தருகிறது. இந்நாளில் கப்பல் செய்வதை விடவும் அந்நாளில் படகு செய்வது கடினமாயிருந்த தென்பது வெளிப்படை.

முற்று நிலக்கரியின் இடையே படகுக்கு அருகில் அதைச் செய்வதற்கு உதவிய கோடரியையே பழம் பொருளாராய்ச்சியாளர்கள் கண்டனர். கோடரியின் விளிம்பு கூராகவும் பளபளப்பாகவும் இருந்தது. அருகில் சாணைக்கல் ஒன்றும் கண்டு பிடிக்கப்பட்டது. அதனால், கற்சம்மட்டியால் வெட்டுவதற்கு அறிந்ததுடன் கூராக்குவதற்கும் பளபளப் பாக்குவதற்கும் கூட அக்காலத்தில் அறிந்துவிட்டனர் என்பது புலனாகிறது.

உறுதியான ஓக்மரத்தை மழுங்கலான கோடரியைக் கொண்டு வெட்டியிருப்பார்க ளென்று கற்பனை செய்ய முடியாது. மேலும் ஓக்மரத்திலிருந்து படகை அமைப் பதும் சிரமமான, நாட்பட்ட வேலையாக விருந்தது.

வேலைமுடிந்து, படகைத் தண்ணீரில் இறக்கியவுடன், மனிதர்கள் தமது கொக்கிகளையும் எறிகலங்களையும் ஈட்டி போன்ற கருவிகளையும் வலைகளையும் எடுத்துக்கொண்டு மீன்பிடிக்கப் புறப்பட்டனர்.

அது பெரிய ஏரியாக விருந்தது; அதில் ஏராளமான மீன்கள் இருந்தன. ஆனால் அவர்கள் கரையிலிருந்து ரொம்பதூரம் போகவில்லை.

தண்ணீரில் செல்வது அவர்களுக்குப் புதிய அனுபவம். தண்ணீரின் வழிமுறைகளை அவர்கள் எப்படி அறிய முடியும்? அதன் திடீர் மாறுதல்களை அவர்கள் எப்படி ஊகிக்க முடியும்? ஒருசமயம், அது அமைதியாகவும் சாந்த மாகவும் பணி விணக்கமாயும் இருந்தது; சிறிது நேரத்துக் கெல்லாம் அது சினங்கொண்டு சீறியது; பேரிரைச்சலுடன் பெரிய அலைகள் பாய்ந்தன.

புயலால் கூட மூழ்கடிக்க முடியாத ஓக்மரப்படகு அலைகள்மீது எழுந்தெழுந்து அமிழ்ந்து துள்ளியது; இலே சான பலகையைப்போல் சுற்றிச்சுற்றிச் சுழன்றது. அவர் கள் பீதியடைந்து படகைக் கரையை நோக்கிச் செலுத் தினர். கடைசியில் அவர்கள் நிலத்தை அடைந்தனர். நிலம் ஆடுவதில்லை; பேரலைகளைத் தோற்றுவிப்பதில்லை. எனவே, தாயை இறுகப்பற்றிக் கொள்ளும் குழந்தையைப் போல், மனிதன் தன்னைப் பெற்றெடுத்த தாயான நிலத்தோடு ஒட்டிக் கொண்டான்.

அடிவானத்தைத் தொடும் அளவுக்கு வியாபித்திருக் கும் வஞ்சகமான நீர்ப்பரப்புக்குள் நெடுந்தொலைவு செல் வதற்குப் பதிலாக, மனிதன் மீன்கள் கரைக்கு வருவதை எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

முன்னெச்சரிக்கையோடு, படிப்படியாக, நீர்ப்பரப்பின் மீது வெற்றிகொள்ளத் தொடங்கினான் மனிதன்.

நிலத்தின் எல்லேகளுக்குட்பட்டதாகவே உலகம் அவனுக்கு அமைந்திருந்த காலம் ஒன்று உண்டு. அப்பொழுது, ஒவ்வொரு நீரோட்டக் கரையிலும் "இதைக் கடந்து செல்லக்கூடாது" என்ற அறிவிப்புடன் ஒரு சுவர் இருந்தமாதிரி அவன் நடந்துகொண்டான்.

எனினும், இறுதியில் இந்தக் கட்புலனாகாத சுவரைக் கடப்பதில் மனிதன் வெற்றிகண்டான் புதிய உலகமான இந்தத் தண்ணீர் உலகத்தின் விளிம்பருகேயே அவன் இன்னமும் இருந்தான் என்பது மெய். ஆனல், எப்படியோ, நீர்வழிப்பயணத்தைத் தொடங்கிவிட்டான். தொடங்குவதுதான் மிகக்கடினமான காரியம். அவன், கரையிலிருந்து தன்னைத் திருகியிழுத்துக்கொண்டு நீர்மேல் நீண்ட தூரம் செல்லும் காலம் வந்துகொண்டிருந்தது. இலேசான படகில் அல்ல, கனமான கப்பலிலேயே, திறந்த வெளியாகவுள்ள திரைகடலில் சென்று, தன் நாட்டுக்கு நெடுந்தொலேவில் தன்னைப்போன்ற மக்கள் வாழும் நாடுகள் இருப்பதைக் கண்டுபிடிக்கும் காலம் வந்துகொண்டிருந்தது.

## முதல் வினைஞர்கள்

கோடரி, சம்மட்டி, இழைப்புளி, திருப்புளி ஆகிய கருவிகளை முதன் முதலாகக் கையிலெடுத்து வேலே செய்யத் தொடங்கியிருக்கும் இளம் வினைஞர்களே,

ரசாயன நிபுணர்களாகவும் உலோக வேலேக் கலைஞர்களாகவும் வருங்காலத்தில் பணியாற்றப்போகும் இளைஞர்களே,

கடைசல் யந்திரங்களையும் ஆகாய விமானங்களையும் அமைக்கப்போகிறவர்களே,

வீடுகளையும் கப்பல்களையும் கட்டப்போகிறவர்களே,

கருவிகளையும் உழைப்பையும் நேசிக்கும் உங்களுக்காக இப்புத்தகம் எழுதப்படுகிறது.

வேலையின் கஷ்டங்களை, பொருட்கள்மீது கருவி செயல்படும்பொழுது ஏற்படும் சிரமங்களை, இந்தச் சிரமங்களை நீக்குவதில் ஏற்படும் இன்பத்தை நீங்கள் அறிவீர்கள்.

நீங்கள் ஒரு மரக்கட்டையைப் பொறுக்கி எடுக்கும் பொழுதே, நீங்கள் செய்யவிருக்கும் பொருளைப்பற்றி ஒரு திட்டமான சித்திரத்தை மனத்தில் கொண்டிருக்கிறீர்கள். அதைச்செய்வது எளிது என்றுதான் தோன்றுகிறது. இங்கே அறுத்து, அங்கே துளையிட்டு, இப்படி வெட்டினுல் காரியம் முடிந்துவிடும் என்று கருதுகிறீர்கள். ஆனுல் அந்த மூலப்பொருள் பணிவிணக்கமாக நடந்து கொள்வதில்லை. அது தன்னுள் நுழையும் கத்தியின் அலகைத் தன் சக்தி அனைத்தையும் திரட்டி எதிர்க்கிறது.

ஒன்றன்பின் ஒன்ருகக் கருவிகளை உபயோகிக்கிறீர்கள். கத்தியால் துணிக்கமுடியாத பொழுது, கோடரியைப் பயன்படுத்துகிறீர்கள். கோடரியாலும் வேலையைச் சமாளிக்கமுடியாதபொழுது, ரம்பத்தின் அலகிலுள்ள டஜன் கணக்காண சின்னஞ்சிறிய கூரிய கத்திகள் (பற்கள்) மரத்தை அறுக்கின்றன.

விரைவில் நீங்கள் விரும்பிய வடிவம் உருப்பெறுகிறது. மரக்கட்டையில் உபரியாகவிருந்த பொருள் துண்டு துணுக்காகவும் சீவலாகவும் மரப்பொடியாகவும் மாறுகிறது.

நீங்கள் வெற்றியடைகிறீர்கள். ஆனுல் அந்த வெற்றி உங்களுக்குமட்டும் உரியதல்ல. யுகம்யுகமாகப் புதுப் புதுக்கருவிகளைக் கண்டு பிடித்துச் செய்தும் சீர்திருத்தியும், புதியபுதிய பொருட்களைத் தேடியும் புதிய வேலை முறைகளை ஆராய்ந்து அறிந்தும் பணியாற்றிய சகல தொழிலாளர்களுக்கும் அந்த வெற்றியில் பங்கு உண்டு.

இந்த நூலில், கத்தி, கோடரி, சம்மட்டி ஆகிய கருவிகளைப் படைத்த முதல்வினைஞர்களை நீங்கள் சந்தித்தீர்கள். அவர்கள் வேலை செய்வதைக்கண்டீர்கள். அவர்களது வேலை, உங்களுடையதைப் போலவே கஷ்டமானதாகவும் அதே சமயத்தில் களிப்பூட்டுவதாகவும் இருந்தது.

அந்தப் பூர்வீகத்தச்சர்களும் புராதனமான சிற்பிகளும் பண்டைக்காலத்துப்பள்ளம் தோண்டியவர்களும் காட்டு விலங்குத்தோலை உடுத்தினர்கள். அவர்களுக்கு ஒரு சிறிய படகு செய்வதற்கே பலமாதங்கள் பிடித்தது. இந்நாளில் உருவச்சிலையைச் செய்வதைவிடவும் அந்நாளில் மட்பாண்டம் செய்வது கடினமாயிருந்தது. ஆனல் இந்தத்தச்சர்கள், பள்ளம்தோண்டுவோர், குயவர்கள் முதலியோரே இன்று உலகத்தை மாற்றி அமைத்துக்கொண்டிருக்கும் கட்டிட அமைப்பாளர்கள், ரசாயன நிபுணர்கள், உலோக வேலைக்கலைஞர்கள் முதலியோரின் தொழில்முறை முன்னேர்களாவார்கள்,

உதாரணமாகப் பண்டைக்காலத்துக் குயவனது வேலையைக் கவனிப்போம். அவன் தான் முதன்முதலில், இயற்கை நிலையில் கிடைத்திராத ஒரு பொருளைக் களிமண்ணிலிருந்து உண்டாக்கினன். அதன்மூலம் அவன் இரட்டை வெற்றி அடைந்தான். களிமண்மீது வெற்றிபெற்றதுடன் தீயின்மீதும் வெற்றிபெற்றான். அதற்கு முன்பும் ஜனங்கள் நெருப்பை உபயோகித்தனரென்பது உண்மை. குளிர் காய்வதற்கும் காட்டுவிலங்குகளுக்குக் கிலியூட்டுவதற்கும் அது பயன்பட்டது; (குடியிருப்பு அமைப்பதற்காக) மரங்களை வெட்டியபொழுது அடிக்கட்டைகளையும் குறும் புதர்களையும் எரிப்பதற்கும் அது பயன்பட்டது. மனிதன் படகு செய்தபொழுது, நெருப்பு கோடரிக்கு உதவிசெய்தது. மேலும், ஜனங்கள் நெருப்பை உண்டாக்குவதற்கும் கற்றுக்கொண்டிருந்தனர்; இரண்டு மரக்கட்டைகளை ஒன்றோடொன்று தேய்த்தபொழுது, நெருப்பு உண்டாயிற்று.

ஆனல் இப்பொழுது, மனிதன் நெருப்புக்கு ஒரு புதிய சிக்கல்மிகுந்த வேலையைக் கொடுத்தான்; அதாவது ஒரு பொருளை இன்னென்ருக மாற்றும் வேலையைக் கொடுத்தான்.

தீயின் பயன்களை உன்னிப்பாகக் கவனித்துத் தெரிந்து கொண்டமனிதன், களிமண்ணைச் சுடுவதற்கும் உணவுப் பொருளை வேகவைப்பதற்கும் ரொட்டி சுடுவதற்கும் தாதுப்பொருளை உருக்குவதற்கும் அதனைப் பயன்படுத்திஞன்.

இன்று ஒரு பொருளை இன்னென்ருக மாற்றும்பணியில் ஈடுபட்டுள்ள நெருப்பு இல்லாத பாக்டரியைக் காண்பது கடினம்.

தாதுப்பொருளிலிருந்து இரும்பையும், மணலிலிருந்து கண்ணுடியையும் மரத்திலிருந்து காகிதத்தையும் பெறுவதற்கு நெருப்பு உதவுகிறது. ஏராளமான ரசாயன நிபுணர்களும் உலோகவேலைக் கலைஞர்களும், பாக்டரி உலைகளில் எரியும் நெருப்பை மேற்பார்வையிடுகிருர்கள். இந்த உலைகளெல்லாம், ஆதிகாலக்குயவர்கள் அமைப்பில் குறைபாடான கூம்புவடிவப்பானைகளைச் செய்வதற்கு உதவிய சிறந்த அடுப்புத்தீயின் வழித்தோன்றல்களாகும்.

## தானியமணி சொல்லும் கதை

பழம் பொருளாராய்ச்சியாளர்கள் ஒரு வேட்டை முகாமில் வேறுபல பொருட்களிடையே அநேக மட்பாண்டங்களையும் கண்டனர்.

அவை குறுக்கும் நெடுக்குமான கோடுகளை உடைய எளியகோலத்தால் அழகுபடுத்தப் பட்டிருந்தன. இந்தக் கோலம், அவர்கள் எப்படிப் பானைகளுக்கு உருக்கொடுத்துச் சுட்டார்கள் என்பதை அறிந்துகொள்வதற்கு உதவுகிறது.

அவர்கள் முடைந்த கூடையில் ஈரக்களிமண்ணை அப்பி அதனைத் தீயில் எரித்தனர். பிரம்புக்கூடை எரிந்து

போயிற்று; பானை மிஞ்சியது. பிரம்புக்கூடையின் பதிவு ஏற்பட்டதால் பானையின் வெளிப்புறத்தில் குறுக்கும் நெடுக்குமாகக் கோடுகள் அமைந்தன.

பிற்பாடு, கூரையின் உதவியில்லாமல் பானைகளை உருவாக்கியபொழுது, குயவர்களே இந்தக் குறுக்குநெடுக்குக் கோடுகளான கோலத்தைப் பானையின்மீது கீறினார்கள் ஏனெனில் தமது பாட்டிமார்களும் அவர்களது பாட்டிமார்களும் சுட்டுப்பயன்படுத்திய பானைகளை ஒத்திருந்தால் தான், தமது பானைகள் நல்லமுறையில் பயன்படுமென்று அவர்கள் நம்பினர்.

ஒவ்வொரு பொருளிலும் புரியமுடியாத சக்திகள் மறைந்திருப்பதாக அக்காலத்து வினைஞர்கள் கருதினார்கள். மட்பாண்டத்தின் சக்தி அதன் கோலத்தில் மறைந்திருக்கலாமென்று நினைத்தார்கள். கோலத்தை மாற்றினால், பசியும் துன்பமும் துயரமும் நிகழுமென்று அஞ்சினார்கள்.

சில சமயங்களில் 'திருஷ்டி விழுவதைத்' தவிர்ப்பதற்காகக் குயவர்கள் பானையின்மீது நாய்வடிவத்தைக் கீறினார்கள். பானையையும் அதிலுள்ள பண்டத்தையும் காவலுன நாய் கண்காணிப்பாகப் பாதுகாக்க வேண்டுமென்றே இவ்வாறு செய்தனர்.

குறுக்கும் நெடுக்குமான கோடுகளாலான கோலத்தை உடைய மட்பாண்டங்கள் பல இடங்களில் கண்டு பிடிக்கப் பட்டிருக்கின்றன. அவற்றில் ஒன்று, பிரான்ஸ் தேசத்தில் கோம்பின் நகருக்கருகில் கண்டுபிடிக்கப் பட்டது; இது அலாதியான புகழை அடைந்துவிட்டது. ஏனெனில், இந்தப்பானையின் மீதிருந்த கோலத்தைப் பழம் பொருளாராய்ச்சியாளர்கள் ஆராய்ந்தபொழுது, அதில் ஓட்ஸ்தானியம் ஒன்றின் முத்திரையைக் கண்டனர்.

அவர்கள் இதைக்கண்டவுடன் பரபரப்பு அடைந்தனர். ஏனெனில் இது ஓர் ஓட்ஸ்தானியத்தின் பதிவாகமட்டுமில்லாமல், மனிதனது வாழ்வில் நிகழ்ந்த மகத்தான மாறுதல்களுக்குச் சின்னஞ்சிறு சான்றாக விளங்குகிறது.

தானியம் இருந்த இடத்தில், விவசாயம் நடைபெற்றிருக்க வேண்டும். ஓட்ஸ்தானிய முத்திரையுடன் கூடிய பானை கண்டெடுக்கப்பட்ட இடத்திலேயே தானியத்தைப் பொடி செய்வதற்கான சொரசொரப்பான கருவிகளும் பயிரிடுவதற்கு நிலத்தைப் பண்படுத்தும் கல்லாலான மண்வெட்டிகளும் கிடைத்தன.

நமது வேடர்களும் மீனவர்களும் விவசாயிகளாகவும் ஆகத்தொடங்கிவிட்டனரென்பது இதிலிருந்து புலனாகிறது.

குலத்தினர் (Tribe) அனைவருமே வேட்டையிலும் மீன் பிடிப்பதிலும் ஈடுபடவில்லை என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். ஆடவர்கள் வேட்டைக்குச் சென்றபொழுது, பெண்களும் குழந்தைகளும் தமது குடியிருப்பைச் சுற்றி நிலத்தை ஆராய்ந்தனர்; தாம் வைத்திருந்த ஜாடிகளிலோ, கூடைகளிலோ உண்ணத்தக்கனவாக அவர்கள் கண்டவற்றைச் சேகரித்தனர். அவர்கள் கடற்கரையோரத்தில் சிப்பிகளைக் கண்டு எடுத்தனர். காடுகளில் உணவுக் காளான்களையும் கனிகளையும் கொட்டைகளையும் சேகரித்தனர். அவர்கள் ஓக்மரக்கொட்டைகளைக்கூட விலக்கவில்லை. அவற்றையும் மாவாக்கி அதைக்கொண்டு ரொட்டி சுட்டனர். அதனால்தான் சில மொழிகளில், "ஓக்மரக்கொட்டை" என்று பொருள்படும் சொல் தானியம் என்ற பொருளில் இன்னும் வழங்கப்படுகிறது.

அவர்கள் காட்டுத்தேனீக்களின் கூட்டைக் கண்டு பிடித்தபோது பேரின்பம் அடைந்தனர். ஒரு குன்றின் உச்சியில் உள்ள சித்திரம், ஒரு பெண் தேன் எடுப்பதைக் காட்டுகிறது. அவள் மரத்தின்மீது ஏறி ஒரு கையால் தேன்கூட்டைக் காலிசெய்கிறாள். இன்னொரு கையில் ஜாடியைப் பிடித்துக்கொண்டிருக்கிறாள். தேனீக்கள் அவளைச்சுற்றி ரீங்காரம் செய்கின்றன: அவை ஆத்திரத்துடன் அவளை மொய்க்கின்றன. ஆனால் அவள் அவற்றைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. கூட்டிலிருந்து தேன் அடைகளை எடுத்துக்கொண்டேயிருக்கிறாள்.

ஒவ்வொரு தடவையும் பெண்களும் குழந்தைகளும் தேனையும் காட்டுக்கனிகளையும் திரட்டிக்கொண்டு வந்தனர்.

அருமையான விருந்துதான்! ஆனால் வீட்டுநிர்வாகிகள் வருமுன் காப்போர்களாக நடந்துகொண்டனர். குழந்தைகளை வெளியே விரட்டிவிட்டு, ஜாடிகளிலும் குப்பிகளிலும் பானைகளிலும் பத்திரப்படுத்த முடிந்தவற்றைப் பத்திரப்படுத்தினர். வேட்டையை நம்பமுடியாது. அது மோசம்செய்யும் நாட்களில் பயன்படுமென்றே பொருட்களைச் சேமித்து வைத்தனர்.

இவ்வாறாக, சீதோஷ்ண நிலை மீண்டும் தணிந்தபின், ஜனங்கள் மறுபடியும் உணவுச் சேகரிப்போராக மாறினார்கள். இது பிற்போக்கான நடவடிக்கை என்று நீங்கள் கருதலாம். உண்மையில் அது மகத்தான முன்னேற்றமாயிருந்தது; ஜனங்கள் சேகரிப்பிலிருந்து விதைப்புக்கு முன்னேறினார்கள். சேகரிப்போனைப் பயிரிடுவோனிடமிருந்து பிரிக்கும் எல்லைக் கோட்டைத் தாண்டினார்கள்.

பெண்கள் காட்டுக்கனிகளைச் சேகரித்தார்களல்லவா? அவற்றுடன் தாமாக உண்டாகியிருந்த ஓட்ஸையும் கோதுமையையும் கூடக் கொண்டு வந்தனர். அந்தத் தானியங்களை ஜாடிகளிலும் பாண்டங்களிலும் கொட்டியபொழுது, சில தானியங்கள் தவறிப்போய் நிலத்தில் விழுந்தன. அவற்றில் சில முளைத்தன. தானியம் தன்னைத்தானே விதைத்துக் கொண்டது.

முதலில் ஜனங்கள் தற்செயலாகவே விதைத்தார்கள்; அதாவது சிலவிதைகளைத் தவறவிட்டார்கள். பிற்பாடு அவர்கள் குறிக்கோளுடன் விதைகளைத் தெளிக்கத் தொடங்கினர்; விதைக்கத் தொடங்கினர்.

தானியத்தைப் புதைப்பதைப் பற்றியும் அது புத்துயிர் பெறுவதைப் பற்றியும் பல சமுதாயங்களில் கற்பிதமான கதைகளும் புராணக்கதைகளும் வழங்குகின்றன.

ஒரு வாலிபனும் ஒரு வனிதையும் உயிரோடு இருந்த பொழுதே நரக லோகத்துக்குச் சென்றனரென்றும் அங்கிருந்து அற்புதச்செயலால் பூமிக்குத் திரும்பி வந்தன ரென்றும் சில கதைகள் கூறுகின்றன.

அந்தப் பண்டைக்காலத்தில், நிலத்தைப் பண்படுத்தித் தானியத்தை விதைத்த பெண்கள், தாம் புரியமுடியாத தெய்வீகத்தன்மையைப் புதைப்பதாகவும், அது பொன் னிறக்கதிர்களுடன் திரும்பி வருமென்றும் நம்பினுர்கள். அவர்கள் இலையுதிர் காலத்தில் தானியக்கதிர்களைச் சேகரித்த பொழுது, கீழ் உலகிலிருந்து தெய்வீகத்தன்மை மீண்டு வந்ததைக் கொண்டாடினுர்கள்.

அவர்கள் கடைசிக் கதிரை நிலத்திலே நிறுத்திவைத்து அதைச்சுற்றி ஆடிப்பாடினுர்கள். அது ஓர் ஆடல் மட்டு மல்ல. அது மாயமந்திரச் சடங்காகவும் இருந்தது. அந்தப் பெண்கள் தானியத்தைப் புகழ்ந்தும் துதித்தும் பாடினுர்கள். எப்பொழுதும் இதேபோல் அருள் சுரக்க வேண்டுமென்று பூமியை இறைஞ்சினுர்கள்.

## புதுமையில் பழமை

இந்த நூற்ருண்டின் துவக்கத்தில் கூட, அறுவடை விழா பல இடங்களில் கொண்டாடப் பட்டது. அறுவடை முடிந்தபின், ஜனங்கள் இந்த விழாவைக் கொண்டாடி னுர்கள்.

அவர்கள் தாம் அறுத்த கடைசித் தானியத்தை எடுத்து அதன்மீது ஒரு கைக்குட்டையையும் ஒரு பாவாடையை யும் வைத்தனர். அதன் பின் கைகோர்த்துக் கொண்டு அதைச்சுற்றி ஆடினர். ஆடியபொழுது, அடுத்த கிராமத் தில் கூடக்கேட்கும் அளவுக்கு உச்சஸ்தாயியில் பாடி னுர்கள்;

இன்றே அறுவடைநாள்—இறைவா!
எங்கள் தம் பண்ணையிலே!
நன்றே புரந்தருள்க—உன்னை
நலம் வேண்டி வாழ்ந்ததுமே!

இங்கே ஒரு வயலில்—நாங்கள்
அறுவடை செய்கின்றோம்;
அங்கே உழுகின்றோம்—உன்னை
அருள் வேண்டி வாழ்ந்ததுமே!

இந்தப் பாட்டின் ஒலிகள் அதிதமானவையாகவும் இரக்கத்தை உண்டாக்குவனவாயும் உள்ளன. பொழுது மறையும் நேரத்தில், சிறுவர்களும் சிறுமிகளும் கிராமத்தைச்சுற்றிச் சென்றபொழுது பாடிய உல்லாசமான கிராமியப் பாடல்களிலிருந்து மேற் சொன்னபாட்டு முற்றிலும் வேறுபட்டதா யுள்ளது.

உண்மையில், ஆதி விவசாயிகள் காலத்திலிருந்து வழி வழியாக வந்துள்ள புராதனமான சடங்கே இந்த அறுவடை விழா.

இம்மாதிரியான பல சடங்குகள் உருமாறி, குழந்தைகளது விளையாட்டுகளாகவும் பாட்டுக்களாகவும் நீடிக்கின்றன. குழந்தைகள் கை கோர்த்துக் கொண்டு பாடுகின்றன:

கதிர்மணிகள் வளரும்
காட்சி யென்ன அழகு!
கதிர் மணிகள் வளரும்
காட்சி யென்ன அழகு!

பாடலோடு கூடிய இந்த விளையாட்டும் ஒரு காலத்தில் சடங்காக இருந்தது. அதன்பின் காலப் போக்கில் அது தனது பழைய மாயமந்திரப் பொருளை இழந்து விட்டது. அதன் களியாட்டத் தொனி மட்டுமே மிஞ்சியிருக்கிறது.

கிறிஸ்துமஸ் மரத்தையே எடுத்துக் கொள்ளுங்கள்! இது ஒரு காலத்தில் புனிதமான மரமாகக் கருதப்பட்டது.

*கிறிஸ்துமஸ் என்பது உலகமெங்கும் கிறிஸ்துவர்கள் இயேசு கிறிஸ்து பிறந்தநாள் என்று கருதும் டிசம்பர் 25-ம் நாளில் கொண்டாடும் விழா. வீட்டிலோ பொது இடத்திலோ ஒரு மரத்தை நிறுத்தி அணி செய்து அதில் பரிசுகளைத் தொங்கவிடுவர். அதுவே கிறிஸ்துமஸ் மரமாகும். மோர்.

உறங்கிய மரங்களையும் வயல்களையும் உயிர்த்தெழச்செய்வ தற்காக, குளிர்காலத்துக்குப்பின் வசந்தகாலம் மீண்டும் வரச்செய்வதற்காக, ஜனங்கள் பிர்மரங்களைச் சுற்றி ஆடினார்கள்.

கிறிஸ்துமஸ் மரத்தை அணி செய்ய விரும்பும் நம் காலத்துச் சிறுவர்கள் அதைப் புனிதமான மரமாகக் கருதுவதில்லை. ஓர் உல்லாசமான விழாவின் பகுதியாகவே அவர்கள் அதைக் கருதுகின்றனர்.

பண்டைக்காலத்துச் சடங்குகள், மனோவசிய வித்தைகள், பேயோட்டு மந்திரங்கள் முதலியவற்றில் பல, குழந்தைகளுடனேயே பொழுதைக் கழிக்க விரும்பும் கிழவர்களைப் போல், தமது முதுமைப் பருவத்தைக் குழந்தைகளிடையே கழிக்கின்றன :

மழையே! மழையே! போ! போ! போ!
மற்றோர் நாளில் வா! வா! வா!

இந்தப் பாட்டைப் பாடும்பொழுது, தாம் மேகங்களை விரட்ட முடியுமென்றோ மழையை மீண்டும் தருவிக்க முடியுமென்றோ சிறுவர்கள் சிறிதும் எண்ணுவதில்லை. அவர்கள் பாட விரும்புவதாலேயே இதைப்பாடுகின்றனர்.

வயதானவர்கள் கூட பண்டைக்காலத்தில் வேறு பொருளுடன் விளங்கிய பாட்டுக்களைப் பாடுகிறார்கள், விளையாட்டுகளில் ஈடுபடுகிறார்கள்.

இத்தாலியிலும் பிரான்ஸிலும் அவர்கள் இப்பொழுதும் கார்னிவலின் இறுதிச்சடங்கை விழாவாகக் கொண்டாடுகிறார்கள். ஜனங்கள் வீதிகளில் திரண்டு பெரிய ஊர்வலமாகச் செல்கின்றனர் கல்லறைக்குழி தோண்டுவோர். பலவகை நிறங்களாலான கந்தல்களை உடுத்திய கார்னிவலின் உருவத்தைத் தூக்கிக்கொண்டு போகிறார்கள். அவர்கள் மௌனமாகச் செல்கின்றனர். ஒவ்வொருவரும் சட்டைப் பையில் ஒரு குப்பியையும் கையில் ஓர் எக்காளத்தையும் எடுத்துச் செல்கின்றனர். அடிக்கடி, ஊர்வலம் நிற்கிறது.

அப்பொழுது அந்தக் கல்லறைக்குழி தோண்டுவோர் சில மடக்கு ஒயினைக் குடித்து உற்சாகம் பெறுகின்றனர்.

கார்னிவலின் மனைவியைப் பிரதிநிதித்துவப் படுத்தும் பெண் ஊர்வலத்துக்குத் தலைமை தாங்குகிறாள். அவள் அழுவதாகப் பாசாங்கு செய்கிறாள் ; மிகுந்த துயரத்துக்குள்ளானவளாகக் காட்டிக் கொள்கிறாள். அதைக் கண்டு கூட்டத்தினர் கடகடவென்று சிரிக்கின்றனர்.

ஊர்வலம் ஒருபொது இடத்துக்குச் செல்கிறது! அங்கு ஒரு சொக்கப்பனை எரிந்து கொண்டிருக்கிறது. கல்லறைக் குழிதோண்டுவோர் கார்னிவலை நெருப்பினுள் எரிகின்றனர். அந்த உருவம் எரியும் பொழுது, முரசுகளைக் கொட்டுகிறார்கள். அதன்பின், களியாட்டம் ஆரம்பமாகிறது.

வீதிகளில் முகமூடி தரித்த களியாட்டக்காரர்கள் திரள்கின்றனர். ஒவ்வொரு பூங்காவிலும், பாண்டுவாத்தியம் இன்னிசை பொழிகிறது; உல்லாசமான ஜோடிகள் சுழன்று சுழன்று நடனமாடுகின்றனர்.

இவ்வளவு சிறப்பாகக் கார்னிவலின் ஈமக்கிரியையைக் கொண்டாடுவதேன் ? இந்தக் கார்னிவல் என்பவர் யார் ?

களிதுள்ளக் குதித்தாடும் கல்லறைக் குழிதோண்டுவோரையோ, கார்னிவலின் 'விதவை' யாக நடித்தவளையோ நீங்கள் வினவினால், 'அது ஒரு பழைய வழக்கம்' என்று அவர்கள் பதிலளிப்பார்கள். ஆனால் இந்தப் பழக்கம் எங்கிருந்து வந்தது என்பதை அவர்களால் சொல்ல முடியாது. இந்தப் பண்டிகை தோன்றிப் பல்லாயிரம் ஆண்டுகளாகிவிட்ட படியால், இதன் பொருளை ஜனங்கள் அறவே மறந்து விட்டனர்.

இந்தப் பண்டிகையின் பழைய தாத்பரியம் இதுதான். கார்னிவல் சாவின் சின்னம். குளிர்காலத்தில் மரணதேவன் பூமியை வெண் போர்வையால் மறைத்து விடுகிறான். அவன் உலகத்தைத் தனது நிரந்தரமான உடமையாக ஆக்கிக் கொண்டு விட்டானா இல்லையா என்ற கேள்விக்கு யார்தான்

பதில் சொல்லமுடியும்? குளிர்காலத்துக்குப்பிறகு வசந்தம் உறுதியாகத் திரும்பிவரும் என்பதைப் பண்டைக்கால மனிதன் அறிந்திருக்கவில்லை; ஏனெனில் அவனுக்கு இயற்கை விதிகளைப்பற்றி ஒன்றுமே தெரியாது. ஒவ்வொரு ஆண்டு வசந்தமும் ஓர் அற்புத நிகழ்ச்சியாகவே அவனுக்குத் தோன்றியது. வசந்தத்தில் இயற்கை புத்தெழுச்சி கொள்வதை இயற்கை மீறிய நிகழ்ச்சியாக அவன் கருதினான். இந்த அற்புதம் நிகழச் செய்வதற்காக அவன் மாயமந்திரச் சடங்குகள் மூலம் தன்னால் இயன்றதனைத்தும் செய்தான்.

குளிர்காலத்தை அடக்கம் செய்து வசந்தகாலம் புத்துயிர் பெறச்செய்வதே, மரங்களில் இலைகளும் வயல்களில் மலர்களும் நிறையச் செய்வதே இந்த ஆட்டங்கள், நடனங்கள் ஆகியவற்றின் குறிக்கோள். அதனால்தான் அவர்கள் குளிர்காலத்துக்கு ஈமக்கிரியை செய்தார்கள்.

இந்தப் பழைய சடங்குகளும் மூடநம்பிக்கைகளும் உல்லாசப்பண்டிகைகளாக உருமாறி நம்மிடையே உலவுகின்றன.

அவை வேறு பலவழிகளிலும் நம்மிடையே நீடிக்கின்றன.

தேவாலயங்களில் ஈஸ்டர்* வழிபாடு நிகழும் பொழுது, பண்டைய மாயமந்திரப் பாட்டுக்களின் எதிரொலிகளைப் பிரார்த்தனைப் பாடல்களில் கேட்கலாம். பண்டைக்காலத்து விவசாயிகளது பாடல்களைப்போலவேஇந்தப் பிரார்த்தனைப் பாடல்களும் சாவையும் உயிர்த்தெழுதலையும் பற்றிப்பேசுகின்றன. ஆலயத்துக்கு வெளியே விளையாட்டுக்களாக மிஞ்சியிருப்பதே இன்றும் ஆலயத்தினுள் சமயச் சடங்காக நீடித்திருக்கிறது.

---

* ஈஸ்டர்: இயேசுஉயிர்த்தெழுந்ததைக் கொண்டாடும் கிறிஸ்தவப் பண்டிகை. இது மார்ச் மாதம் 21-ம் நாளிலோ அதன் பிறகோ வரும். நிறைமதிக்கு அடுத்த முதல் ஞாயிற்றுக்கிழமையில் கொண்டாடப்பெறும். மொர்.

## விந்தையான சேமிப்புவிடுதி

பெண்கள் நிலத்தை வெட்டித் தானியத்தை விதைத்த பொழுது, ஆடவர்கள் வேட்டைக்குச் சென்றனர். பக லெல்லாம் வேட்டையாடிவிட்டுக் கிடைத்த பொருளு டன் வீட்டுக்குத் திரும்பினர்.

மாலையில், தந்தைமார்களும் அண்ணன்மார்களும் வீடு நோக்கி வருவதைக்கண்ட சிறுவர் சிறுமியர், அவர்களை நோக்கி ஓடினார்கள். வேட்டையில் நற்பேறு கிட்டியதா என்பதை முதலில் அறிவதற்கு அவர்கள் துடித்தனர். அவர்கள் காட்டுப்பன்றியின் இரத்தமான முகறையையும் அதன் வாயிலிருந்து துருத்திக்கொண்டிருந்த வளைவான நீண்ட பற்களையும், மானின் கவைக்கொம்புகளையும் அகல விரித்த கண்களால் வெறித்துப் பார்த்தனர். ஆனால், பீதி யடைந்த ஆட்டுக்குட்டிகளையோ இன்னமும் கொம்பு முளைக்காத பருவத்தில் இருந்த நிராதரவான இளங்கன்று களையோ வேடர்கள் கொல்லாமல் கொண்டுவந்தபொழுதே, சிறுவர்கள் மிகுதியாக மனமகிழ்ந்தனர்.

வேடர்கள் அந்த நான்குகால் கைதிகளை உடனடியாகக் கொல்லவில்லை. அவற்றைப் பட்டியில் அடைத்து வைத் தனர்; அவை வளரவேண்டுமென்பதற்காகத் தீனி போட்ட னர். தம் குடியிருப்பின் அருகில் ஆட்டுக்குட்டிகளும் மாட்டுக்கன்றுகளும் கத்தியபொழுது, வேடர்களுக்கு மன நிறைவு உண்டாயிற்று. ஏனெனில், வேட்டையில் வெற்றி கிடைக்காதபொழுதும், இறைச்சிப்பஞ்சம் ஏற்படு வதற்கு இடமில்லையல்லவா? பட்டியில் அடைபட்டிருந் தவை இருப்பிலுள்ள இறைச்சியாக விருந்தது. இதில் ஒரு விசேஷம் என்னவெனில் இந்த இறைச்சி நாள் தோறும் அதிகமாகிக்கொண்டே யிருந்தது.

முதலில், இறைச்சிக்காகவும் தோலுக்காகவுமே ஜனங் கள் கால்நடைகளைப் பராமரித்தனர். அவர்கள் கால்நடை வளர்ப்பின் அனுகூலங்களை உடனடியாக

உணரவில்லை. வேடர்கள் கால்நடைகளை வேட்டை விலங்குகளாகவே கருதினர். வேட்டை விலங்குகளைக் கொல்வதே அவர்களுக்கு வழக்கம். பசுவையும் ஆட்டையும் கொல்வதற்குப் பதிலாக அவற்றை வாழவிடுவதால் ஆதாயம் அதிகம் என்பதை அவர்களால் எளிதில் புரிந்து கொள்ள முடியவில்லை.

பசுமாட்டைக் கொன்ருல், ஒரு தடவைதான் புசிக்கலாம். ஆனுல் அதன் பாலைப் பல்லாண்டுகள் பருக முடியும். ஆம், அதனைக்கொல்லாதிருந்தால், இறுதியில் அதனிடமிருந்து அதிகமான இறைச்சியையும் பெறமுடியும்; எவ்வாறெனில் ஒவ்வொரு பசுவும் ஆண்டுக்கொரு கன்று ஈன்று புறந்தரமுடியும்.

செம்மறியாடு விஷயத்திலும் இது பொருந்தும். அந்த ஆட்டைக்கொன்று தோலை உரிப்பது எளிது. ஆனுல் ஒரு தோல்கிடைத்தால் போதாது. ஆட்டைக்கொன்று தோலை உரிக்கும் முறையைக் கடைப்பிடிக்காமல், அதன் ரோமத்தைமட்டும் கத்தரித்துக் கொள்வதனுல் ஆதாயம் அதிகம். ரோமத்தைக் கத்தரித்தபின், ரோமம் மீண்டும் வளர்கிறது. எனவே, ஒரே செம்மறியாட்டிலிருந்து பன்முறை ரோமம் அறுத்துக் கொள்ளலாம்; ஒரு தோலுக்குப் பதிலாகப் பல தோல்கள் (ரோமத்தில் நெய்த கம்பளம்–மொர்.) கிடைக்கின்றன.

எனவே, நான்குகால் கைதிகளைக் கொல்லாமல், அவற்றுக்கு உயிர்ப் பிச்சை அளித்து, அதற்குப் பதிலாக அவற்றிடம் இறை வசூலிப்பதால் லாபம் அதிகம்.

ஆனுல் ஜனங்கள் இதை உடனடியாக உணரவில்லை. போரார்வம் மிகுந்த வேடன் சமாதானத்தை நேசிக்கும் இடையனுக மாறுவதற்குள் பல்லாண்டுகள் கடந்தன.

இவற்றிலிருந்து நாம் என்ன புரிந்து கொள்கிறோம்?

அவர்கள் சேகரித்த தானியத்தைப் பூமியினுள் மறைத்து வைத்தார்கள். ஒரு கதிர்மணிக்குப் பலமணிகள் வீதம்

பூமி திருப்பிக் கொடுத்தது. அவர்கள் தமது வேட்டை விலங்குகளைக் கொல்லாது விட்டனர்; பதிலுக்கு அவை அளவில் வளர்ந்தன ; எண்ணிக்கையில் பெருகின.

மனிதனது சுதந்திரம் அதிகமாயிற்று; அவன் முன்னை விடக்குறைவாகவே இயற்கையைச் சார்ந்து இருந்தான். முன்னுளில், காட்டு விலங்கை வேட்டையாடிக் கொல்ல முடியுமா என்பதைப் பற்றியும் கூடை நிறையத்தானியத்தைச் சேகரிக்க முடியுமா என்பதைப் பற்றியும் உறுதியாக யாதும் கூறமுடியாத நிலையில் அவன் இருந்தான், இயற்கையின் மறைபொருளான சக்திகள் அவனுக்கு உணவு அனுப்பலாம் அல்லது அனுப்பாதிருக்கலாம். ஆனுல் இப்பொழுது, அவன் இயற்கைக்கு உதவி செய்வதற்குக் கற்றுக் கொண்டு விட்டான்; தானியத்தைப் பயிரிடுவதற்குப் பயின்று விட்டான். இனி வேடர்கள் காட்டு விலங்குகளைத் துரத்திக் கொண்டு அலைய வேண்டியதில்லை.

அவர்களது வீடுகளைச் சுற்றியிருந்த துண்டு நிலங்களில் பயிர் வளர்ந்தது. அருகாமையிலிருந்த மேய்ச்சல் பூமியில் ஆடுகளும் பசுக்களும் மேய்ந்தன.

மனிதன் ஒரு விந்தையான சேமிப்பு விடுதியைக்கண்டு பிடித்து விட்டான். சரியாகச் சொல்வதென்றுல், அவன் ஒரு விந்தையான சேமிப்பு விடுதியைத் தன் உழைப்பால் உண்டாக்கி விட்டான்.

இப்பொழுது அவனுக்குப் பயிர்த்தொழிலுக்கும் மேய்ச்சலுக்கும் நிலம் தேவைப்பட்டது. அவன் இந்த நிலத்தைக் காட்டிடமிருந்து மீட்கவேண்டியிருந்தது; மேலும் நிலத்தை வெட்டி உழவு சால்களை அமைக்க வேண்டியிருந்தது. இந்தக் காரியங்கள் கைகூடுவதற்காக அவன் எவ்வளவு வேலை செய்ய வேண்டியிருந்தது!

மனிதன் உடல்குலுங்காது உலவுவதன் மூலம் சுதந்திரத்தை அடையவில்லை. அவன் கடினமாக உழைத்து ஆயிரக்கணக்கான இடர்கள்மீது வெற்றி காண்பதன் மூலமே, இயற்கையிடமிருந்து விடுதலை பெற்றுன். புதிய வேலையில்

இன்பமும் இருந்தது, துன்பமும் இருந்தது. பயிரும் புல்லும் சூரிய வெப்பத்தில் உலர்ந்து எரிந்து விடலாம். மழை விதைத்த விதையை அடித்துக்கொண்டு போய் விடலாம்.

பூர்வீக வேடன், காட்டெருமையையோ கரடியையோ இறைச்சி அளிக்கும்படி இறைஞ்சினான். பூர்வீக விவசாயி தன் பயிரைக் காத்தருளும்படி பூமியையும் வானத்தையும் தண்ணீரையும் வேண்டிக் கொண்டான். ஜனங்கள் புதிய தெய்வங்களைச் சிருஷ்டித்துக் கொண்டார்கள். இவையும் பழைய தெய்வங்கள் மாதிரி இருந்தன. பழைய மரபுவழி பிழையாத மக்கள், புதிய தெய்வங்களைப் பிராணி உருக் கொண்டவையாகவோ பிராணியின் தலையை உடைய மனிதர் போன்றவராகவோ கற்பனை செய்தனர். ஆனால் இந்தத் தெய்வங்களுக்குப்புதிய பெயர்களும் புதிய தொழில் களும் ஏற்பட்டன. அவர்கள் ஒரு தெய்வத்தை வானம் என்றும் இன்னொன்றைச் சூரியன் என்றும் பிறிதொன் றைப் பூமியென்றும் அழைத்தார்கள். ஒளியும் இருளும் வெப்பமும் மழையும் அவற்றிட மிருந்து கிடைப்பதாக அவன் கருதினான்.

நமது கதாநாயகனை மனிதன் என்ற மகாபுருஷன் வளர்ந்து விட்டான் ; அவனது சக்தி பெருகிவிட்டது. ஆனால் அவன் இன்னும் தன் பலத்தை அறிந்து கொள்ள வில்லை. தனது உழைப்பே தனக்கு உணவளிக்கிறது என் பதை அவன் உணரவில்லை. தனக்கு விண்ணுலகமே தினசரி உணவு அளிப்பதாக அவன் முன்போலவே நம்பினான்.

## அத்தியாயம்—4

# மூவாயிரம் ஆண்டுகளுக்குப்பின்

வரலாற்றின் மணிமுள்ளை மூவாயிரம் ஆண்டுகள் முன்னால் நகர்த்துவோமாக. அதன்மூலம், 1941க்கு ஏறத்-

தாழ நாற்பது நூற்றுண்டுகள் முற்பட்ட காலத்தை அடைகிறோம்.

நாற்பது நூற்றுண்டுகள்! தனிமனிதனது வாழ்வைப்பற்றிப் பேசும்பொழுது, இது மிகவும் நீண்டகாலமாகும். ஒரு நாட்டின் வாழ்வைக் குறித்துப்பேசும் பொழுதும், நான்காயிரம் ஆண்டு என்பது நெடுங்காலம்தான். ஆனால் நாம் தனிமனிதனது வாழ்வைப்பற்றி இங்கு பேசவில்லை. மனிதன் என்ற சொல்லைப் பொதுப்பெயராகவே, மனிதகுலத்தினைக் குறிப்பதாகவே இந்நூலில் ஆள்கிறோம்.

மனிதன் தோன்றிக் குறைந்தபட்சம் பத்து லட்சம் ஆண்டுகளாகிவிட்டன. இத்துணைக் காலமாக வாழ்ந்து வரும் மனிதனுக்கு நான்காயிரம் ஆண்டுகள் என்பது நெடியகாலமாகாது.

ஆக—மணிமுள் நகர்ந்துவிட்டது. சூரியனைப் பூமி பல்லாயிரம் தடவை சுற்றி விட்டது. இந்த இடைக் காலத்தில், அதற்கு என்ன நேர்ந்தது?

பூமியின் சில பகுதிகள் வெறுமையாகி யிருப்பதை முதற்பார்வையிலேயே நாம் குறித்துக்கொள்கிறோம். பண்டைக்காலத்தில், கருமையாகக் காட்சிதந்த அடர்த்தியான காடுகளிடையே பனிமுடிகள்தாம் பளிச்சென்று தெரிந்தன. ஆனால் இப்பொழுது, காடுகளின் அடர்த்தி குறைந்துவிட்டது. இடைஇடையே வெற்று நிலங்கள் தென்படுகின்றன. ஆங்காங்கே, காடுகளின் இடையே பிரகாசமான அகன்ற வயல்கள் புலப்படுகின்றன. ஆறுகள், ஏரிகள் ஆகியவற்றின் கரைகள் மேன்மேலும் அகன்றுள்ளன; கரையோர நிலத்தில் நாணல்களும் புதர்களும் மண்டிக்கிடக்கின்றன.

அங்கே, ஆற்றின்வளைவுக்கருகிலுள்ள குன்றில் என்ன தெரிகிறது? குன்றுச்சரிவில் மஞ்சள் நிறமான கைக்குட்டையை விரித்திருப்பதுபோல் தோன்றுகிறதல்லவா?

அது மனிதனது கைவேலையால் மாறிய நிலமாகும். தானியக்கதிர்களிடையே மாதர்களின் வளைந்த முதுகுகள் தென்படுகின்றன. அவர்கள் அரிவாளை விரைவாகச்செயல் படுத்திக் கதிர்களை அறுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

நாம் நீண்டகாலத்துக்கு முன்பே சம்மட்டியிடம் அறிமுகம் செய்துகொண்டோம். ஆனால் இப்பொழுது தான் முதல்தடவையாக அரிவாளைச் சந்திக்கிறோம். அது நம் காலத்து அரிவாளிலிருந்து முற்றிலும் வேறுபட்டிருக் கிறது. அது கல்லாலும் மரத்தாலும் செய்யப்பட்டிருக் கிறது. மரத்தாலான கைப்பிடியில் கல்லாலான பற்களைப் பொருத்தியிருக்கிறார்கள்.

இது ஒரு வயல், உலகில் முதன்முதலில் ஏற்பட்ட தானிய வயல்களில் இது ஒன்று. மனிதன் கைபடாத இயற்கையின் இடையே இம்மாதிரியான மஞ்சள் நிறக் கைக்குட்டைகள் (தானிய வயல்கள்-மொர்.) சிற்சிலவே உள்ளன. இந்தப் பூர்வீக வயலில், தானியத்திடையே ஏராளமாகக் களைமண்டிக் கிடக்கிறது. களைகளை எடுப் பதைப்பற்றி ஜனங்கள் இன்னும் அறிந்துகொள்ளவில்லை. ஆனால் தானியக்கதிர்கள் நன்றாயிருக்கின்றன. * பொன்மய மான கடல் உலகெங்கும் வியாபிக்கும்நாள் வந்துகொண் டிருக்கிறது.

சேய்மையில், நதியின் அருகே உள்ள பசும்புல்வெளி யில், வெள்ளையாகவும் மஞ்சளாகவும் பன்னிறப்புள்ளி உடையனவாகவும் சில சின்னஞ்சிறு வடிவங்கள் புலனா கின்றன. அவை கூட்டமாகவும் தனித்தனியாகவும் அங் கும் இங்கும் நகர்கின்றன. அவற்றில் சில வடிவில் பெரி யவை; வேறுசில உருவில் சிறியவை. பசுக்கள், வெள் ளாடுகள், செம்மறியாடுகள் ஆகியவற்றின் மந்தையே அது. மனிதனது உழைப்பால் மாறியுள்ள இந்தப் பிராணி களின் எண்ணிக்கை அதிகமில்லை. ஆனால் தம்மையே நம்பி வாழவேண்டிய நிலையிலுள்ள காட்டுவிலங்கு உற

*பொன்மயமான கடல் : பொன்னிறக் கதிர்களை விளைவிக்கும் பயிர்த்தொழில்.

வினர்களைவிட விரைவாக அவை பெருகுகின்றன. சம வெளிகளிலுள்ள காட்டெருமைகளைவிட அதிகமான பசுக்களும் எருதுகளும் சில ஆயிரம் ஆண்டுகளுக்குள் இவ்வுலகில் உண்டாகிவிடுமென்பது உறுதி.

வயல்கள், மந்தைகள்......அப்படியானால், அண்மையில் ஒரு குடியிருப்பு இருக்கவேண்டும். அதோ, ஆற்றின் செங்குத்தான கரையில், குடியிருப்பு இருப்பதைக் காண்கிறோம். இது பழைய வேடர் முகாம்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டிருப்பதை உடனடியாக உணர்கிறோம். அடி மரங்களாலும் பின்னிப் பிணைந்த கிளைகளாலும் ஆன குடிசைகளுக்குப் பதிலாக, இருபுறச் சரிவுக்கூரையை உடைய மரத்தாலான வீடுகளை இங்கு காண்கிறோம். சுவர்களில் களிமண்ணைப் பூசியிருக்கிறார்கள். கதவுக்குமேல், கூரையின் அடியிலிருந்து ஒரு விட்டம் துருத்திக் கொண்டிருக்கிறது. அதன்மீது கொம்புகளுடன்கூடிய காளைமாட்டு முகம் செதுக்கப்பட்டிருக்கிறது. எருதுதான் வீட்டைப் பாதுகாக்கும் தெய்வம். குடியிருப்பைச்சுற்றிக் கரை அமைத்து உயரமான வேலியால் அரண் செய்துள்ளனர்.

இங்கே, புகை, சாணம், புதுப்பால் ஆகியவற்றின் மணங்களை நுகர்கிறோம். நாம் சிறுவர்களாயிருந்தபோது பழமையான கிராமங்களில் நுகர்ந்த அதே மணங்கள்தாம். வீடுகளைச் சுற்றிலும் சிறுவர்கள் விளையாடிக் கொண்டிருக்கின்றனர். பன்றிகள் தமது குட்டிகளுடன் சேற்றில் புரள்கின்றன. அந்த வீட்டின் கதவு திறந்திருக்கிறது; அதன் வழியே நோக்கினால், நெருப்புத் தெரிகிறது. ஒரு கிழவி நெருப்பில் ரொட்டி சுட்டுக்கொண்டிருக்கிறாள். அவள் தணல் மீது ரொட்டிச் சிட்டங்களை வைத்து அவற்றை ஒரு மட்பாண்டத்தால் மூடுகிறாள். நமது அடுப்புக்குப்பதிலாக அவள் மட்பாண்டத்தை உபயோகிக்கிறாள்! அருகேஉள்ள நிலைக்கால் தட்டில் அழகு செய்யப்பட்ட மரக்கிண்ணங்களும் மரக்குவளைகளும் இருக்கின்றன.

நாம் இக்கிராமத்திலிருந்து கிளம்பி நதிக்கரைக்குச் செல்வோம். ஆற்றுநீரின் விளிம்பில், பாதிஅளவு தண்ணீர் நிறையப்பெற்ற படகு குலுங்கிக் கொண்டிருக்கிறது. நதிக்கரை வழியாக அதன் தோற்றுவாயான ஏரிக்குச்செல்கிறோம். அங்கு இன்னொரு கிராமத்தைக் காண்கிறோம். ஆனால் இது வேறு வகையான கிராமம்.

இந்தக் கிராமம் ஏரியின் கரையில் இல்லை. ஏரிக்குள் தீவுபோல் அமைந்திருக்கிறது.

ஏரியின் அடித்தளத்தில் ஆழ ஊன்றும் வகையில் கம்பங்களை அடித்திருக்கிறார்கள். விட்டங்களால் கம்பங்களை இணைத்திருக்கிறார்கள். விட்டங்கள் மீது பலகைகளைப் பரப்பிப் பொருத்தியுள்ளனர். சிறியபாலம் ஒன்று கிராமத்தைக் கரையுடன் இணைக்கிறது. வீடுகளது சுவர்களில், வலைகள் காய்வதற்காகத் தொங்கவிடப்பட்டுள்ளன.

ஏரியில் ஏராளமான மீன்கள் இருப்பது வெள்ளிடைமலை. ஆனால் இந்தக் கிராமமக்கள் மீனைமட்டும் உண்ணுவதாக எண்ணக்கூடாது. வீடுகளிடையே முகடுகளை உடைய வட்டமான களஞ்சியங்கள் உள்ளன. அவை பின்னிப்பிணைந்த கிளைகளால் அமைந்தவை. அவர்கள் அவற்றில் தானியத்தைச் சேமித்து வைத்திருக்கிறார்கள். களஞ்சியத்தின் அருகே உள்ள மாட்டுக்கொட்டகையில் பசு கத்துவதும் காதில் விழுகிறது.

நாம் சித்திரித்துள்ள இந்தப் பண்டைய கிராமம் நீண்ட காலத்துக்கு முன்பே இல்லாதொழிந்துவிட்டது. வீடுகள் இருந்த இடம் தண்ணீரில் மூழ்கிவிட்டது. இந்த வீடுகளின் மீதமிச்சங்கள் ஏரியின் அடித்தளத்தில் உள்ளன. நாம் அவற்றை எப்படிக் காண்பது? காணமுடியாது போலத்தான் தோன்றுகிறது. ஆனால் சில சமயங்களில் ஏரிநீர் பின்வாங்குகிறது; அப்பொழுது, தான் பல நூற்றாண்டுகளாகப் பாதுகாத்துள்ள பொருட்களை ஏரி நமக்குக் காட்டுகிறது.

## ஏரி சொல்லும் கதை

ஸ்விட்ஸர்லாந்தில், 1853 ஆம் ஆண்டில் ஒரு பெரிய வறட்சி ஏற்பட்டது. ஏரிகளில் தண்ணீர்குறைந்து பின் வாங்கி ஒடுங்கியதால், அவற்றின் சேறுன அடித்தளத்தைக் காணமுடிந்தது.

ஸூரிச் ஏரியின் கரையிலுள்ள ஓபர்மீலன் நகரத்து மக்கள், வறட்சி ஏற்பட்டதைப் பயன்படுத்திக்கொண்டு ஏரிநிலத்தின் ஒரு பகுதியை மீட்கவேண்டுமென்று முடிவு செய்தனர்.

இதன்பொருட்டு, அவர்கள் ஏரியின் தண்ணீர்வற்றிய பகுதியைத் தண்ணீர் உள்ள பகுதியிலிருந்து அணை போட்டுப் பிரிக்கவேண்டியதாயிற்று. அதற்கான வேலை தொடங்கியது. நீர்வற்றிய பகுதி காய்ந்தவுடன், அதிலிருந்தே அணைக்கு மண்வெட்டினார்கள். இதற்கு முன்னால், ஞாயிற்றுக்கிழமைகளில் உல்லாசமாக ஆடைதரித்த நகரவாசிகள் சிவப்புப்படகுகளிலும் நீலப்படகுகளிலும் இன்பமாய்ப் பொழுது போக்கிய இடத்தில், மண்வெட்டி ஏற்றும் கங்காணிகள் குதிரைகளை விரட்டும் கூச்சல் கேட்டது.

ஒருநாள், மண் வெட்டுவோரில் ஒருவனது மண்வெட்டி, பாதிகெட்டுப் போன கம்பத்தின் மீது மோதியது. அதன்பின் மேலும் சில கம்பங்கள் மண்ணினுள்ளே காணப்பட்டன. இதே இடத்தில் முன்னால் ஒருதடவை ஜனங்கள் ஏதோ வேலை செய்திருந்தனர் என்பது வெட்ட வெளிச்சமாகியது. ஒவ்வொரு நடவையும் மண்வெட்டி எடுத்த மண்ணில் கற்கோடரிகளும் மீன்பிடி கொக்கிகளும் மட்பாண்ட உடைசல்களும் இருந்தன. உடனே பழம் பொருளாராய்ச்சியாளர்கள் தம் வேலையைத் தொடங்கினர். அவர்கள் ஏரியின் அடித்தளத்தில் கிடைத்த ஒவ்வொரு கம்பத்தையும் ஒவ்வொரு பொருளையும் நன்கு ஆராய்ந்தனர்.

அதன் அடிப்படையில், ஸூரிச் ஏரியில் ஒரு காலத்தில் விளங்கிய கிராமத்தைப் பற்றிப் புத்தகம் எழுதினர்.

இப்பொழுது அம்மாதிரியான பல கிராமங்கள் கண்டு பிடிக்கப் பட்டுள்ளன. அண்மையில், நியூசா தல் என்ற இன்னொரு ஸ்விஸ் ஏரியில் பழம் பொருளாராய்ச்சியாளர்கள் தமது ஆராய்ச்சிகளை நடத்தினர்கள். அவர்கள் அந்த ஏரியின் அடித்தளத்தில் பலவாறு வெட்டி, அதில் பல அடுக்குகள் இருப்பதைக் கண்டனர். அவற்றை வெவ் வேருக இனம் கண்டு கொள்வது எளிதாயிருந்தது. அடி யில் மணல் இருந்தது. அதற்கு அடுத்த அடுக்கு வண்ட லால் ஆனது ; இந்த வண்டலில் வீடுகளின் மீதமிச்சங்களும் அந்த வீடுகளில் வாழ்ந்த மக்களுக்குச் சொந்தமான வீட்டுப் பாத்திரங்களும் கருவிகளும் இருந்தன. அதற்கு அடுத்த அடுக்கு மணலால் ஆனது. இதே மாதிரியான அடுக்குத் தொடர் மீண்டும் மீண்டும் புலப்பட்டது. ஓர் இடத்தில் மட்டும், இரண்டு மணல் அடுக்குகளுக்கிடையே, கெட்டி யான கரி அடுக்குக் காணப்பட்டது.

இந்த அடுக்குகள் எவ்வாறு உண்டாயின ?

தண்ணீர் மணலைக் கொண்டு வந்திருக்கலாம் ; ஆனல் அந்தக்கரி எங்கிருந்து வந்தது ?

இங்கு நெருப்பு செயல்பட்டிருக்க வேண்டுமென்பது தெளிவு.

அந்த அடுக்குகளை ஆராய்ந்ததின் மூலம், விஞ்ஞானிகள் ஏரியின் முழுவரலாற்றையும் அறிந்து கொண்டார்கள். நீண்ட நெடுங்காலத்துக்கு முன்னுல், ஜனங்கள் இந்த ஏரிக்கு வந்து அதன் கரையில் தமது குடியிருப்புகளை அமைத்துக் கொண்டார்கள். பிற்பாடு, ஏரியில் தண்ணீர் பெருகிக்கரைகளை நிரப்பியது.

நீரில் மூழ்கிய கிராமத்தைத் துறந்துவிட்டு ஜனங்கள் வேறு இடத்துக்குச் சென்றனர். கட்டிடங்கள் கெட்டுப் போய் நொறுங்கி விழுந்தன. முன்னுல் எந்தக் கூரைகளில்

பறவைகள் அமர்ந்து கலகல வென்று ஒலி செய்தனவோ அதே கூரைகளின்மேல் சிறு மீன்கள் நீந்தின. கூரிய பல்லை உடைய பைக் மீன் தனது துடுப்புகளை மந்தமாக அடித்துக் கொண்டு திறந்த கதவுகள் வழியே நீந்தியது. நண்டுகள் அடுப்பின் அருகே இருந்த நிலைக்கால் தட்டின் அடியில் தமது தொட்டறி உறுப்பை நீட்டின.

ஆனால் ஏரி அசையா நிலையில் இருக்கவில்லை. தண்ணீர் சிறுகச் சிறுகக்குறைந்து, கரையருகே யிருந்து பின்வாங்கி யது. முன்னால் எந்த மணல் மீது கிராமம் அமைந்திருந்ததோ அந்த மணல் இப்பொழுது காய்ந்தது. ஆனால் அங்கே கிராமம் இருந்ததற்கான சின்னங்கள் எதுவும் இல்லை. அக் கிராமத்தின் இடிபாடுகள் மணலின் அடியில் ஆழப்புதைந் திருந்தன.

ஜனங்கள் மீண்டும் ஏரிக்கு வந்தனர். கோடரிகள் வெட்டும் ஓசை பெருகியது. மஞ்சள் நிறமான மணலில் வெண்மையான சுருள் சீவல்கள் சிதறின. ஏரிக்கரையில் உறுதியான புது வீடுகள் ஒன்றன்பின் ஒன்றாய்த் தோன்றின.

இவ்வாறாக, 'இன்று தோற்பவர் நாளை வெல்வர்' என்ற உண்மைக்கு எடுத்துக் காட்டாக, மனிதனுக்கும் ஏரிக்கு மிடையே நீடித்த போராட்டம் நிகழ்ந்தது. மனிதர் படைப் பதும் ஏரிதுடைப்பதுமாக இந்த நிகழ்ச்சி தொடர்ந்தது.

இறுதியில், இந்தப் போராட்டத்தில் சலிப்புற்ற ஜனங் கள், ஏரிக்கரைமீது வீடுகட்டிக் கொள்வதை நிறுத்தினர். முளை அடிப்பதுபோல், நீண்ட கம்பங்களை ஏரியின் அடித் தளத்தினுள் ஊன்றி, அவற்றின்மேல் அவர்கள் வீடு கட்டத்தொடங்கினர். தமது வீட்டுத்தளத்தின் ஓட்டை கள் வழியே அவர்களால் தமக்கு அடியிலுள்ள ஆழமான நீர்ப்பரப்பைக் காண முடிந்தது. ஆனால் இப்பொழுது அவர்கள் அதைக்கண்டு அஞ்சவில்லை. தண்ணீர் மட்டம் எவ்வளவுதான் உயர்ந்தாலும் தமது வீட்டு அடித்தளத்தை எட்ட முடியாதென்பதை அவர்கள் அறிந்திருந்தனர்.

ஆனல் ஜனங்களுக்குத் தண்ணீரைத் தவிர இன்னெரு பகை இருந்தது. அதுவே நெருப்பு.

பழைய நாட்களில், ஜனங்கள் குகைகளில் வாழ்ந்த போது, அவர்கள் நெருப்பைக் கண்டு அஞ்சவில்லை. குகையின் கற்சுவர்களைத் தீப்பிடித்துக் கொள்வதில்லை. ஆனல் மரத்தாலான வீடுகள் தோன்றிய வுடனேயே, பெருந்தீக் களும் உண்டாயின.

பல்லாயிரம் ஆண்டுகளாக மனிதனுக்குப் பணிந்து அடங்கியிருந்த அந்தச் செந்தழல் விலங்கு திடீரென்று தனது கூரிய நகங்களைக் காட்டத் தொடங்கியது.

நியூசதல் ஏரியின் அடிப்பரப்பில் காணப்பட்ட கரி அடுக்கு, பண்டைக் காலத்துப் பெருந்தீ விட்டுச் சென்ற சின்னமாகும்.

ஏரிமீது அமைந்த கிராமத்தில் அந்தப் பெருந்தீ பரவிய பொழுது, ஜனங்கள் பீதியுற்றனர். அவர்கள் தமது குழந்தைகளை அணைத்துக் கொண்டு தண்ணீரினுள் குதித்தனர். பட்டிகளில், நிர்க்கதியான பிராணிகள் பதறின, கதறின. ஆனல் அவற்றைப் பற்றி எண்ணுவதற்கு ஜனங்களுக்கு நேரமில்லை. மரத்தால் அமைந்த கட்டிடங்களைக் கொண்ட அந்தக்கிராமம், பெரியதோர் சொக்கப்பனையைப் போல், நானுபுறங்களிலும் தீப்பொறிகளைச் சிதறிக் கொண்டு எரிந்தது.

அந்தக் கிராமத்தில் வாழ்ந்த மக்களுக்கு அப்பெருந்தீ பயங்கரமான உற்பாதமாய் முடிந்தது. ஆனல் அவர்களது வீடுகளை எரித்த அதே அக்கினி, நமக்காகவும் நமது அரும் பொருட்காட்சி யகங்களுக்காகவும் மதிப்பிடற்கரிய பொருட்களை,—மரத்தாலான வீட்டுப் பாத்திரங்கள், மீன் பிடிவலைகள் ஆகியவற்றைப் பாதுகாத்தது. செடிகளின் விதைகளைக் கூடப் பாதுகாத்தது.

அழிக்கும் சக்தியான அக்கினி, தன்னல் எளிதில் எரிக்கக் கூடிய பொருட்களை நமக்காக எப்படிப் பாதுகாத்தது ? இந்த அற்புதம் எவ்வாறு சாத்தியமாயிற்று ?

இதோ விளக்கம் தருகிறோம். அந்தப் பொருட்களைத் தீப்பற்றியவுடன் அவை தண்ணீரில் விழுந்தன. தண்ணீர் நெருப்பை அணைத்து அவற்றைப் பாதுகாத்தது. அப் பொருட்கள் தீங்கு அடையாமல் ஏரியின் அடித்தளத்தில் விழுந்தன. இப்பொழுது இன்னோர் ஆபத்து அவற்றை எதிர் நோக்கியது. அதாவது, அவை தண்ணீரில்கிடந்து கெட்டு அழுகி விடக்கூடிய அபாயம் உண்டாயிற்று.ஆனால் அவற்றுக்கு இந்த விபத்தும் நேரிடவில்லை; எப்படி யென்றால், அவை முன்னால் தீப்பிடித்துக் கொண்ட பொருட்களானதால், அவற்றின்மீது கரியாலான ஓடு உண்டாகி யிருந்தது; அது அவை கெட்டுப் போகாது காப்பாற்றியது.

தண்ணீரோ நெருப்போ தனியாகச் செயல் பட்டிருந் தால், அந்தப்பொருட்கள் அழிவுக்குள்ளாகி யிருக்கும். ஆனால் தண்ணீரும் நெருப்பும் சேர்ந்து செயல்பட்டு, ஆயிரக்கணக்கான ஆண்டுகட்டு முன்னர் நெய்யப் பட்ட லினன் துணிபோன்ற எளிதில் அழியும் பொருட்களையும் பாதுகாத்துள்ளன.

## முதல் நெசவுத்துணி

ஆரம்பத்தில் நெசவு வேலை விசைத்தறியில் நிகழவில்லை. முதல் துணி கையாலேயே பின்னப் பட்டது.

இப்பொழுதும் எஸ்கிமோக்கள் நெய்வதற்குப்பதி லாகப் பின்னுகிறார்கள். அவர்கள் நீண்ட நூல்களான ஊடு இழைகளைச் சட்டத்தில் இழுத்துக் கட்டுகிறார்கள். அவற்றினூடே, மேலும் கீழுமாக முன்னும் பின்னும் குட்டைநூல்களான பாவு இதழ்களை விரல்களால் இழுத் துப் பின்னுகிறார்கள். அவர்கள் தறியின் ஓடத்தை உபயோகிப்பதே யில்லை.

குறுக்கே நூல்கள் இழுத்துக் கட்டப் பட்டுள்ள இந்தச்சட்டத்தில் நமது விசைத்தறிகளின் அங்க அடை யாளங்களைக் காண்பது கஷ்டம்தான். எனினும் நான்கு

சிறுகம்புகளால் அமைந்த இந்த எளிய சட்டங்களே விசைத் தறிகளின் நேரான தோற்றுவாய்களாகும்.

ஏரியின் அடிப்பரப்பில் கண்டெடுக்கப் பட்ட பொசுங்கிக்கறுத்த கந்தல், மனிதனது வாழ்வில் நிகழ்ந்த மிக முக்கியமான ஒரு சம்பவத்தைப்பற்றி நமக்கு எடுத்துரைக்கிறது. முன்னால் விலங்குகளின் தோலை உடுத்திய மனிதன், அந்தத் தோல்களைத் தைப்பதுடன் அமைந்து விடாமல், நாரியல் பொருளிலிருந்து துணி உண்டாக்கத் தொடங்கி விட்டான்.

முன்பே பெண்களுக்கு வேலை அதிகம். இப்பொழுது, நீலநிறப்பூக்களை உடைய ஆளிச்செடிகளின் வயல்களிலும் அவர்கள் பாடுபட வேண்டியிருந்தது. அரிவாள் பிடித்து அறுவடை செய்த கைகளுக்கு ஓய்வு அளிப்பதற்குக்கூட நேரமில்லை. உடனேயே, அவர்கள் ஆளிச் செடிகளை வேரோடு பிடுங்கும் வேலையில் ஈடுபட்டனர். அந்த முற்றிய பயிர்களைக் காயவைத்தார்கள்; காய்ந்தபின் அவற்றை அழுக வைத்தார்கள். மீண்டும் அவற்றைக் காயவைத்தனர். அத்துடன் வேலை முடியவில்லை. அதன் பின், உலர்ந்த தண்டுகளை நசுக்கி நாரைப் பிரித்தெடுத்தார்கள். இறுதியில், ராட்டினத்தைச் சுழற்றி நார்களை நூலாக மாற்றினார்கள். இந்த வேலைகளெல்லாம் முடிந்த பின்பே, அவர்களால் நெய்ய முடிந்தது.

பெண்கள் துணி தயாரிப்பதற்காக மிகவும் பாடுபட்டார்கள். ஆனால் அதற்குப்பதிலாக அவர்களுக்குக் களிப்பூட்டும் கைக்குட்டைகளும், பிரகாசமான வர்ண விளிம்பையும் அழகான குஞ்சங்களையும் உடைய சட்டைகளும் தூசாடைகளும் (Apron) கிடைத்தன.

## முதல் சுரங்கத்தொழிலாளரும் உலோகத் தொழிலாளரும்

இன்று ஒவ்வொரு வீட்டிலும் இயற்கையில் கிடைக்காத செயற்கையான பொருட்களால் செய்த பல பாண்டங்களைப் பார்க்கிறோம்.

செங்கல்லோ பீங்கானே வார்ப்பு இரும்போ காகிதமோ இயற்கையில் கிடைப்பதில்லை. வார்ப்பு இரும்பையோ பீங்கானையோ பெற விரும்பும் மனிதன், இயற்கையில் கிடைக்கும் பொருட்களை அடையாளம் கண்டுகொள்ள முடியாத அளவுக்கு மாற்றி அமைத்துவிடுகிறான். வார்ப்பு இரும்பு இரும்புக்கனியைச் சிறிதும் ஒத்திருக்க வில்லை. மெல்லிதான, ஒளிகசியும் பீங்கான் கிண்ணத்தில் அதன் மூலப்பொருளான களிமண்ணை யாரால் இனங் காட்ட முடியும்?

கான்கிரீட், ஸெல்லுலாயிட், பிளாஸ்டிக், நார்ப்பட்டு, செயற்கை ரப்பர் ஆகிய பொருட்களைத்தான் பாருங்க ளேன்! நீங்கள் எங்காவது கான்கிரீட் மலையைப் பார்த்திருக் கிறீர்களா? நாரிலிருந்து பட்டு நூலைத்தயாரிக்கும் பட்டுப் பூச்சியை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?

மனிதன் பொருளைப்பற்றிய நுட்பதிட்ப அறிவினைப் பெற்றபொழுது, இயற்கையின் தொழிற்சாலைக்குள் மென் மேலும் ஊடுருவினான். கல்லைக்கல்லால் தேய்த்துப் பள பளப்பாக்குவதில் தொடங்கிய மனிதன், இன்று பூதக்கண் ணுடியில் மட்டுமே புலனாகக்கூடிய சிறிய துகள்களான மூலக்கூறுகளைக் கொண்டு செயல்படுகின்றான்.

பொருளின் விஞ்ஞானமான ரசாயன இயல் தோன்று வதற்கு நெடுங்காலத்துக்கு முன்பே, இந்த வேலை தொடங் கியது. தான் செய்வது என்ன என்பதை அறியா மலேயே, மனிதன் தட்டுத்தடுமாறிக்கொண்டு பொருளை மாற்றுவதற்குக் கற்றுக்கொண்டான்.

பூர்வீகக் குயவர்கள் தாமே உணரவில்லை யென்றா லும், களிமண்ணைச் சுட்டபொழுது பொருளையே மாற்றி அமைத்தார்கள். அது எளிதில் கைகூடவில்லை. பொருள் நுண்ணிய துகள்களாலான அமைப்பு; அந்தத் துகள்களை வார்ப்படத்தின் மூலம்மாற்றமுடியாது; கல்லின் வடிவத்தை மாற்றுவதுமாதிரி, பொருளின் அமைப்பை மாற்ற

முடியாது. அதற்குக் கையின் சக்தி தேவையில்லை; பொருளைப் புனர்நிர்மாணம் செய்யக்கூடிய வேறு சக்தி தேவை.

மனிதன் தனக்கு உதவி செய்வதற்காக நெருப்பை எடுத்துக்கொண்டபோது, இந்தச் சக்தியைக் கண்டுபிடித்தான். நெருப்பு அவனது களிமண்ணைச் சுட்டுப்பளபளப் பாக்கியது. அவனது மாவை ரொட்டியாக மாற்றியது; செம்பை உருக்கியது.

பல்லாயிரமாண்டுகளாகக் கல்லால் கருவிகளைச்செய்த மனிதன் திடீரென்று உலோகத்தில் கருவிகளைச் செய்யத் தொடங்கியது ஏன்? அந்த உலோகத்தை அவன் எங்கே கண்டெடுத்தான்?

நாம் காட்டிலோ வயல்களிலோ நடந்து செல்லும் பொழுது, தூயசெப்புத்துண்டுகள் கிடப்பதைக் காண்ப தில்லை. செப்புக்கட்டி இன்று காண்பதற்கரிதான பொரு ளாகி விட்டது; ஆனால் எப்பொழுதும் இதே நிலை இருந்ததில்லை. சில ஆயிரமாண்டுகளுக்கு முன்னால், இன்றுள்ளதை விட அதிகமாகச் செம்பு காணப்பட்டது. அங்கும் இங்கும் செப்புக்கட்டிகள் கிடந்தன. ஆனால் ஜனங்கள் அந்த உலோகத்தைப் பொருட்படுத்தவில்லை: ஏனெனில், அவர்கள் தமது கருவிகளைத் தீக்கல்லால் செய்தனர்.

தீக்கல்லுக்குப் பஞ்சம் ஏற்பட்டபோதே அவர்கள் செப்புக்கட்டிகளைக் கவனிக்கத் தொடங்கினர். அவர்கள் தீக்கல்லைக் கவனமில்லாமல் பயன்படுத்தியதாலேயே அது கிடைப்பதற்கரிதாயிற்று. அவர்கள் வேலை செய்தபொழுது, வீணாகப்போன தீக்கல்துண்டு துணுக்குகள் ஏராளமாகக் குவிந்தன. அவற்றை அவர்களால் பயன்படுத்த முடிய வில்லை. அந்தக் குவியலை இக்காலத்தச்சனது வேலை நிலை யத்தில் சீவல்களும் துணுக்குகளும் குவிந்திருப்பதற்கு ஒப்பிடலாம்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப்பின், தீக்கல் செல்வம் குறிப்பிடத்தக்க அளவுக்குக் குறைந்தது. நாம் நமது கருவிகளைத் தீக்கல்லால் செய்வதென்று இன்று முடிவு செய்தோமானால், தேவைப்படும் அளவுக்குத் தீக்கல் கிடைக்காது; ஏனெனில் நமது முன்னோர்கள் போதுமான அளவு விட்டு வைக்கவில்லை.

உலகத்தில் தீக்கல்லுக்குப் பஞ்சம் ஏற்பட்டது. அது மாபெரும் விபத்தாயிருந்தது. இன்று மிகக்குறைந்த அளவுக்கே இரும்பு கிடைத்ததென்றால், நமது மில்கள், பாக்டரிகள் ஆகியவற்றில் என்ன நிலை ஏற்படுமென்று எண்ணிப்பாருங்கள்! நாம் இரும்புக்கனியத்தைப் பெறுவதற்கு மேன்மேலும் ஆழமாகப் பூமியைக் குடைந்துகொண்டு செல்வோம்.

பண்டைக்காலத்திலும், அப்படித்தான் செய்தார்கள். அவர்கள் சுரங்கங்களைத் தோண்டத்தொடங்கினார்கள். அவையே உலகில் முதன்முதலாக அமைந்த சுரங்கங்கள். சுண்ணாம்புக்கல் அடுக்குகளில், முப்பது அடிமுதல் அறுபது அடிவரை ஆழமுள்ள பூர்வீகச் சுரங்கங்கள் பல இடங்களில் காணப்படுகின்றன. சுண்ணாம்புக் கல்லும் தீக்கல்லும் பெரும்பாலும் சேர்ந்தே கிடைத்தன.

அந்தக்காலத்தில் நிலத்தின் அடியில் போய் வேலை செய்வதென்பது பேராபத்தாயிருந்தது. அவர்கள் கயிற்றேணி மூலமாகவோ ஒன்றோடொன்று இணைக்கப்பட்ட கம்புகளைக்கொண்டோ சுரங்கத்தினுள் இறங்கவேண்டியிருந்தது. அங்கு இருட்டாகவும் புகையாகவும் இருந்தது. அவர்கள் கீலில் எரிந்த பந்தத்தின் உதவியாலோ சிறிய எண்ணெய் விளக்கின் உதவியாலோ வேலை செய்தார்கள். இந்தக்காலத்தில், சுரங்க வழிகளில் மரத்தாலான விட்டங்களைக் கொடுத்துப் பிணைத்து அந்த வழிகளைப் பலப்படுத்தியிருக்கிறோம். ஆனால் அந்தக்காலத்தில் சுரங்கப்பாதைகளின் சுவர்களையும் வில்வளைவுக் கூரைகளையும் பலப்படுத்துவதைப் பற்றி மனிதன் யாதும் அறியாதிருந்தான். அடிக்

கடி சுரங்க விபத்து நிகழ்ந்து ஜனங்கள் புதையுண்டனர். சில பூர்வீகத் தீக்கல் சுரங்கங்களில், சுண்ணும்புக்கல் குவியல்களின் அருகில் சுரங்கத்தொழிலாளரின் எலும்புக் கூடுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அந்த எலும்புக் கூடுகளின் அருகில் மான் கொம்பினுல் செய்யப்பட்ட பிக்காசுகளும் (குத்தித்தோண்டும் கருவிகள்) இருந்தன.

ஓரிடத்தில் இரண்டு எலும்புக்கூடுகள் கண்டெடுக்கப்பட்டன; ஒன்று வயதான மனிதனுடையது; இன்னென்று சிறுவனுடையது. ஒரு தந்தை தன்மகனுடன் வேலை செய்வதற்குச் சுரங்கத்தினுள் சென்றிருக்க வேண்டும். ஆனுல் அவர்கள் வீட்டுக்குத் திரும்பமுடியாது போயிற்று.

காலப்போக்கில், தீக்கல் கிடைத்தற் கரியதாகியது. ஆனுல் மனிதனுக்குத் தீக்கல் தேவை. அவன் தனது கோடரிகளையும் கத்திகளையும் நிலம் பண்படுத்தும் கருவிகளையும் தீக்கல்லாலேயே செய்தான்.

தீக்கல்லுக்குப்பதிலாக வேருெரு பொருளைக் கண்டு பிடிக்கவேண்டியதாயிற்று.

அந்த நிலையில், செம்பு உதவிக்கு வந்தது. ஜனங்கள் அதை ஆராயத்தொடங்கினுர்கள். இந்தப் பச்சை நிறக்கல் எத்தகையது என்பதையும் அது எதற்காவது பயன்படுமா என்பதையும் அறிய முற்பட்டார்கள்.

அவர்கள் செப்புக்கட்டியையும் ஒருவகைக்கல் என்றே கருதினுர்கள். எனவே, கல்லில் வேலை செய்வதைப்போலவே, செப்புக் கட்டியிலும் வேலைசெய்ய முயன்ருர்கள். அதாவது செப்புக்கட்டி ஒன்றை எடுத்து அதைச் சம்மட்டியால் அடித்து உடைக்க முயன்ருர்கள். அவர்கள் செப்புக்கட்டியைச் சம்மட்டியால் அடிக்க அடிக்க அதன் கடினத்தன்மை அதிகமாகிக்கொண்டேயிருந்தது. அதன் உருவமும் மாறியது. சம்மட்டி அடிகள் மிதமிஞ்சி விழுந்தபோது, செம்பு மணி மணியாக உருப்பெற்றுச் சிதறியது.

இவ்விதமே மனிதன் முதலில் உலோகத்தை அடித்து உருவாக்கினான். இது காய்ச்சி அடிக்கும் முறையல்ல என்பது உண்மை. காய்ச்சாது அடிப்பதிலிருந்து காய்ச்சி அடித்து உருவாக்கும் முறைக்கு முன்னேறியது பெருஞ் சாதனையாகும்.

செப்புக்கட்டியோ செப்புத் துணுக்கோ தீயில் தவறி விழுந்திருக்கலாம். அல்லது, களிமண்ணைச் சுடுவதைப் போல, செப்புக்கட்டியையும் சுட்டுப்பார்க்கலாமென்ற நோக்குடன் மனிதன் பரீட்சை செய்திருக்கலாம். தீ அணைந்தபோது, உருகித் தனிப்பொருளாகப் பிரிந்த செம்பு சிறிய தட்டைவடிவில் அடுப்புக்கற்கள் மீது கிடந்தது.

தம் கையால் தாமே உண்டாக்கிய இப்பொருளைக் கண்டு ஜனங்கள் வியந்தார்கள். அதை ஓர் அற்புதமாகக் கருதினார்கள். தாங்கள் அல்ல, தீயின் ஆவியே பசுமை பாய்ந்த நீலக்கல்லைப் பிரகாசமான சிவப்புச் செம்பாக மாற்றியதென்று அவர்கள் எண்ணினர்.

அவர்கள் அந்தச் செப்புத்தகட்டைச் சிறுசிறு துண்டுகளாக உடைத்தனர். அந்தத் துணுக்குகளைக் கல்லில் செய்த தமது கோடரிகளிலும் பிக்காசிகளிலும் கத்திகளிலும் சம்மட்டியாலடித்து இறுக்கினார்கள்.

இவ்வாறாகத் தன் விந்தையான சேமிப்பு விடுதியில், அனு—நாதம் எழுப்பும் பிரகாசமான உலோகத்தை மனிதன் கண்டான். அவன் கனியத்தைத் தீயினுள் எறிந்தான்; அது அவனிடம் செம்பாகத் திரும்பி வந்தது.

இந்த அற்புதம் மனிதனது உழைப்பால் உண்டானதே.

## தொழில்முறைக் கால அளவை

ஆண்டு, நூற்றாண்டு, ஆயிரமாண்டு என்ற அளவைகளைக்கொண்டு காலத்தைக் கணக்கிடுவது நமக்கு வழக்கமாகஉள்ளது. ஆனால் பண்டைக்கால மனிதனது வாழ்வைப் படிப்பவர்கள் வேறு விதமான காலண்டரை, வேறு வகை

யான கால அளவையை உபயோகிக்க வேண்டும். ''இத்தனை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னுல்'' என்று கூறுவதற்குப் பதிலாக, நாம் ''பழைய கற்காலத்தில்'' என்றும் ''புதிய கற்காலத்தில்'' என்றும் ''செம்புயுகத்தில்'' என்றும் ''வெண்கல யுகத்தில்'' என்றும் கூறுகிறோம். இது வருடாந்திரக் காலஅளவை அல்ல; இது தொழில் முறைக் கால அளவையாகும். இந்தக்கால அளவையின் உதவியுடன், நீங்கள் மனிதன் தன் பிரயாணத்தில் எந்தக் கட்டத்தை அடைந்தான் என்பதை உடனடியாக உணர முடியும்.

'வருஷாந்திர'க் காலண்டரில், நீண்டகால அளவைகளும் உண்டு; குறுகியகால அளவைகளும் உண்டு; நூற்றுண்டு, வருடம், மாதம், நாள், மணி ஆகிய அளவைகளிலிருந்து இதை அறியலாம்.

தொழில்முறைக் காலண்டரிலும், நீண்டகால அளவைகளும் குறுங்கால அளவைகளும் உண்டு. உதாரணமாக நாம் ''கற்காலத்தில் சம்மட்டிக்குரிய காலகட்டம்'' என்றோ ''கற்காலத்தில் கல்லைக்கல்லால் தேய்க்கும் காலகட்டம்'' என்றோ கூறலாம்.

வருடாந்திரக் காலண்டரும் தொழில்முறைக் காலண்டரும், எப்போதும் ஒத்துப்போவதில்லை. இன்றும் கற்கருவிகளைக் கொண்டு உழைக்கும் மக்கள் வாழும் இடங்கள் உள்ளன. இன்றும் பாலினீஷியாவில், தண்ணீரின் அடித்தளத்தினுள் கம்பங்களை நட்டு அவற்றின்மீது வீடுகளைக் கட்டிக் கிராமங்களை அமைத்துக்கொண்டு வாழ்கிறார்கள்.

இதன் பொருள் என்ன? எல்லா ஜனங்களும் தமது வேலையில் ஒரே விகிதத்தில் முன்னேற்றம் அடையவில்லை. ஆஸ்திரேலியா உலகத்தின் இதர பகுதிகளிடமிருந்து துண்டிக்கப் பட்டிருந்தது. மனித அனுபவத்தின் பிரதானமான ஓட்டத்திலிருந்து ஒதுங்கியிருந்ததால், ஆஸ்திரேலியா பின் தங்கியது.

ஐரோப்பியர்கள் நிலைமை அவ்வாறு இல்லை. ஐரோப்பாக் கண்டத்தில் எங்கோ ஓரிடத்தில் செம்புக் கோடரிகளோ மட்ஜாடிகளோ உற்பத்தியானால், அந்தத் தொழில் முறைகள் ஒரு குலத்திலிருந்து இன்னொரு குலத்துக்குப் பையப் பையப் பரவின.

ஜனங்கள் செம்புக்குப் பதிலாக அம்பரை*ப் பெறுவதற்காகவும் தோலுக்குப் பதிலாக ஆளிச்செடி நாரைப் பெறுவதற்காகவும், ஒரு கிராமத்திலிருந்து இன்னொன்றுக்கு ஆறு வழியே தோணிகளில் சென்றனர். ஒரு குலத்தினரிடம் தீக்கல் அதிகம் இருக்கும்; இன்னொன்றிடம் மீன்கள் அதிகம் இருக்கும் ; மற்றொன்று மட்பாண்டத் தொழிலில் கீர்த்தி அடைந்திருக்கும். எனவே, ஏரியினுள் பந்தல் மேல் வீடுகட்டி வாழ்ந்தவர்களிடம் பண்டங்களைப் பரிவர்த்தனை செய்வதற்காகப் புதியவர்கள் வந்தனர். இம்மாதிரி, அவர்கள் பண்டங்களைப் பரிவர்த்தனை செய்துகொண்டபொழுது அனுபவங்களையும் பரிமாறிக் கொண்டனர். புதிய வேலை முறைகளையும் ஒருவருக் கொருவர் தெரிவித்துக் கொண்டனர்.

வெவ்வேறு குலத்தினர் வெவ்வேறு மொழிகளைப் பேசியதால், ஜனங்கள் அடிக்கடி பழைய சைகை மொழியைப் பயன்படுத்த வேண்டியதாயிற்று. ஆயினும், பரிவர்த்தனைக்காக வந்தவர்கள் அன்னியப் பொருட்களைப் பெற்றுக் கொண்டதுடன், தம்முணர்வில்லாமலேயே சில புதிய சொற்களையும் அறிந்து கொண்டனர்.

இவ்வாறாக, பல்வேறு குலங்களது மொழிகள் கலந்து ஐக்கியப் பட்டன. சொற்கள் கலந்தபொழுது, கருத்துக்களும் கலந்து ஓர் உருப்பெற்றன ; ஏனெனில் கருத்துக்

*அம்பர் : ஒருவகைத் திமிங்கிலத்தின் குடலிலிருந்துவரும் மெழுகுபோன்ற பொருள். சிலசமயங்களில் அதன் உடலிலிருந்து கழிவுப்பொருளாக வெளிப்பட்டு நீரில் கட்டிகட்டியாக மிதந்து கரையில் ஒதுங்கும். செத்துப்போன திமிங்கிலத்திலிருந்தும் இதை எடுப்பார்கள். இது நறுமணப்பொருட்களைச் செய்வதில் பயன்படுகிறது. மொர்.

களைச் சொற்களிலிருந்து பிரிக்க முடியாது. ஒவ்வொரு குலத்திலும் அதன் தெய்வங்களுடன் பிறகுலங்களது தெய்வங்களும் இடம் பெற்றன. பலவிதமான நம்பிக்கைகளும் கலந்தன. எதிர் காலத்தில் நாடு முழுவதையும் தழுவக் கூடியதாக ஒரு நம்பிக்கை பலவற்றின் கலப்பிலிருந்து உருப்பெறவிருந்தது.

தெய்வங்கள் அங்கும் இங்கும் சஞ்சாரம் செய்தன. புதிய இடங்களில் அவற்றுக்குப் புதிய பெயர்கள் ஏற்பட்டன. எனினும், அவற்றை எளிதில் இனம் கண்டு கொள்ள முடிகிறது.

பூர்வீக ஜனசமுதாயங்களின் சமயங்களை ஆராயுங்கால், பாபிலோனியர் தொழுத தம்மூஸ், எகிப்தியர் தொழுத ஓசைரிஸ், கிரேக்கர்கள் தொழுத அடோனிஸ் ஆகிய மூன்றும் ஒரே தெய்வம்தான் என்பதைத் தெரிந்து கொள்கிறோம். இந்தத் தெய்வங்களெல்லாம், இறந்தபின் உயிர்த்தெழும் தெய்வமாக விவசாயிகளால் வணங்கப்பட்ட பழைய தெய்வம்தான்.

சில சமயங்களில், இந்தத் தெய்வங்கள் எங்கிருந்து எங்கு போனார்கள் என்பதை நிலப்படத்தில் சுட்டிக்காட்ட முடியும். உதாரணமாக, அடோனிஸ் என்ற தெய்வம் ஸெமிட்டிக் மக்கள் வாழ்ந்த ஸ்ரியாவிலிருந்து கிரீஸுக்கு வந்தது. 'அடோனிஸ்' என்ற பெயரே இதனை மெய்ப்பிக்கிறது. ஸெமிட்டிக் மொழியில், அடோனிஸ் என்ற சொல் 'பிரபு' என்று பொருள்படும். சொற்பொருளை அறிந்திராத கிரேக்கர்கள் அதை இடுகுறிப் பெயராகவே ஆண்டனர்.

இவ்விதமாக, பொருட்கள், சொற்கள், நம்பிக்கைகள் ஆகியவற்றின் பரிவர்த்தனை தொடர்ந்து நிகழ்ந்தது.

இந்தப் பரிவர்த்தனை எப்போதுமே சமாதானமாக நிகழ்ந்தது என்றும், ஒருபோதும் மோதல்களால் நடைபெறவில்லை என்றும் சொல்ல முடியாது. செம்பையோ துணி

யையோ தானியத்தையோ பலாத்காரமாகப் பறித்துக் கொள்ள "வந்தவர்களால்" முடிந்தது என்றால், அவ்வாறு செய்வதற்கு அவர்கள் தயங்கவில்லை. பலாத்கார மில்லாம லேயே, வியாபாரம் என்பது சூதாக இருந்தது. பலாத் காரமும் சேர்ந்து கொண்டபொழுது, அது அப்பட்டமான கொள்ளையாக ஆயிற்று. உள்ளூர்வாசிகளும் வெளியூரி லிருந்து வந்தவர்களும் ஆயுதங்களை ஏந்திப் போராடித் தகராறுக்கு முடிவு கண்டார்கள்.

இங்கிலையில், கிராமங்கள் கோட்டைகளைப் போல் தோற்றமளிக்கத் தொடங்கியதில் வியப்பில்லை. அன்னியர் கள் அழையாத விருந்தாளிகளாக உள்ளே பிரவேசிப்பதைத் தடுப்பதற்காகக் கிராமவாசிகள் தத்தம் கிராமத்தைச் சுற்றி உயர்ந்த வேலிகளும் கொத்தளங்களும் அமைத்து அரண் செய்து கொண்டனர்.

ஒரு குலத்து மக்கள் பிறகுலத்தினரை அவ நம்பிக்கை யோடு நோக்கினர்கள். அன்னியனை வழிப்பறி செய்வதோ கொல்வதோ பாவமாகக் கருதப்படவில்லை. ஒவ்வொரு குலமும் தன் உறுப்பினர்களை ஜனங்கள் என்று குறிப் பிட்டது. ஆனால் பிற குலங்களைச் சேர்ந்தவர்களும் ஜனங் கள்தாம் என்று கருதவில்லை. ஒவ்வொரு குலத்தினரும் தம்மைச் "சூரிய புத்திரர்கள்" என்றும் "விண்ணுலகத்தின் புதல்வர்கள்" என்றும் குறிப்பிட்டுக் கொண்டனர். ஆனால் அன்னியர்களை இழிவு படுத்தும் நிந்தைப் பெயர் களால் குறிப்பிட்டனர். சிலகுலத்தினருக்கு அந்த நிந்தைப் பெயர்களே உறுதிப்பட்டன; அவையே அந்தக் குலங் களது பெயர்களாகி விட்டன.

அமெரிக்க இந்தியர் குலங்களில் ஒன்றின் பெயர், "புழுதி படிந்த மூக்குகள்"; இன்னொன்றின் பெயர், "கோணல் குடிகள்". அக்குலங்களே இத்தகைய நிந்தனைப் பெயர்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்க முடியா தென்பது தெளிவு.

அன்னியர்களிடம் பகைகொள்ளும் இந்தப் பண்டைக் காலப் போக்கின்மீத மிச்சங்களை இன்றும் காணலாம். இது பயங்கரமான விஷயம். இந்த இரும்பு யுகத்தில், இன்னும் சரியாகச் சொல்வதென்றால், அலுமினியத்துக்கும் மின் சாரத்துக்கும் உரிய இந்த யுகத்தில், அன்னியர்களை விரோ தித்துக் கொள்ள வேண்டுமென்று பிரச்சாரம் செய்யும் நிற வெறியர்களும் இனவெறியர்களும் இருக்கிறார்கள். அவர் கள் தாம் மட்டுமே மக்கள் என்றும் பிறரெல்லாம் மாக்கள் என்றும் கருதுகின்றனர்.

அன்னியனிடம், இன்னோர் குலத்தைச் சேர்ந்தவனிடம் விரோதம் பாராட்டுவது பூர்வீக உணர்ச்சியின் மீதமிச்ச மாகும்; புராதனகால மூடநம்பிக்கையின் எச்சமாகும்; காலாவதி யாகிவிட்ட கருத்தாகும்.

உயர்ந்த ஜனசமுதாயங்கள் என்றும் தாழ்ந்த ஜனசமு தாயங்கள் என்றும் பாகுபடுத்துவதற்கு ஆதாரமில்லை என் பதை வரலாறு நமக்குப் போதிக்கிறது. பண்பாட்டில் முன்னேறிய மக்களும் பின்தங்கிய மக்களும் இருக்கின்ற னர். ஒரே காலத்தில் வாழும் மக்கள் அனைவரும் தொழில் முறைக்கால அளவையின்படி ஒரே சகாப்தத்தைச் சேர்ந்த சமகாலத்தவராகக் கூறமுடியாது.

எல்லா தேசீய இனங்களும் சரிநிகர் சமானமான வளர்ச்சியை அடைந்திருக்கவில்லை. சில தேசீய இனங்கள் யந்திர சகாப்தத்தில் வாழ்கின்றன. வேறு சில தேசீய சமுதாயங்கள் பண்டைக் காலத்து மரக்கலப்பையால் உழுதும், புராதன காலத்துக்கைத்தறிகளில் துணி நெய்தும் வாழ்கின்றன. இரும்பு என்று ஒன்று இருப்பதையே அறியாமல், எலும்பினால் கருவிகளைச் செய்து கொள்ளும் ஜனங்களும் இருக்கிறார்கள்.

வளர்ச்சி யடைந்த மக்கள், பிற்பட்ட நிலையிலுள்ள மக்களுக்கு உதவவேண்டும். கடந்த இருபதாண்டுகளில்,

மத்திய ஆசியாவிலும் சைபீரியாவிலும் வடகோடிப் பகுதி[1] யிலும் வாழும் மக்கள், நூற்றுண்டு கால முன்னேற்றத்தை அடைந்து விட்டனர். பிற்பட்டவர்கள் முற்பட்டவர்களை எட்டிப் பிடித்துக் கொண்டிருக்கின்றனர்.

ஐரோப்பியர்கள் ஆஸ்திரேலியாவைக் கண்டு பிடித்த பொழுது, அங்கு கற்காலத்து மக்கள் வாழ்வதைக் கண்டனர். ஆனுல் ஐரோப்பாவின்கடந்தகாலமே, பாலினீஷி[2] யாவின் நிகழ்காலமாக இருந்ததை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை.

### அத்தியாயம்—5

# இருவேறு உலகங்களிடையே போராட்டம்

கடல்களில் கப்பற் பிரயாணம் செய்த ஜனங்கள் புதிய நாடுகளை மட்டுமல்ல, பண்டு ஒழிந்த காலங்களையும் கண்டு பிடித்திருக்கிருர்கள்.

ஐரோப்பியர்கள் நற்பேற்றின் துணை கொண்டு ஆஸ்திரேலியாவைக் கண்டு பிடித்து அந்தக் கண்டம் முழுவதையும் வசப்படுத்திக் கொண்டார்கள்.

ஆனுல் அது ஆஸ்திரேலியர்களுக்குத் தணியாத அவப் பேருக முடிந்தது. ஆஸ்திரேலியர்கள் தொழில்முறைக் கால அளவைப்படி வேருெரு சகாப்தத்தில் வாழ்ந்து கொண்டிருந்தனர். அவர்கள் ஐரோப்பியர்களின் முறைகளுக்குப் பணிய விரும்பவில்லை. எனவே, ஐரோப்பியர்கள் அவர்களைக் காட்டுமிருகங்களைத் துரத்துவதைப்போல் துரத்தி வேட்டையாடினுர்கள்.

---

1. சைபீரியா, மத்திய ஆசியா, வடகோடிப்பகுதி ஆகியவை ஸோவியத் யூனியனின் பகுதிகளாகும். பிற்பட்ட நிலையில் புதைந்து கிடந்த இவை, 1917-ம் ஆண்டில் புரட்சி வெற்றி அடைந்து ஸோவியத் ஆட்சி ஏற்பட்டபின், வியக்கத்தக்க முன்னேற்றம் அடைந்துள்ளன.

2. பாலினீஷியா: ஆஸ்திரேலியாவையும் பிலிப்பைன்ஸ் முதலிய பஸிபிக் தீவுகளையும் பாலினீஷியா என்பர்.

ஆஸ்திரேலியர்கள் அப்பொழுதும் குடிசைகளில் வசித்தனர்; ஐரோப்பிய நகரங்களிலோ பெரிய கட்டிடங்கள் இருந்தன. ஆஸ்திரேலியர் அதுவரையில் தனி உடைமை முறையைப்பற்றி யாதும் அறிந்திருக்கவில்லை. ஐரோப்பாவிலோ, ஒருவன் இன்னொருவனுக்குச் சொந்தமான காட்டிலிருந்த மானைக்கொன்றால், அதற்காக அவன் சிறையிலடைக்கப் பட்டான்.

ஆஸ்திரேலியன் எதைச் சட்ட பூர்வமானதாகக் கருதினானோ அதையே ஐரோப்பியன் குற்றமாகக் கருதினான். ஆஸ்திரேலிய வேடர்கள் ஆட்டுமந்தையைக் கண்டவுடன் மனமகிழ்ந்து ஆரவாரம் செய்தனர்; அந்த மந்தையைச் சூழ்ந்தனர்; பீதி கொண்ட ஆடுகள்மீது தமது ஈட்டிகளையும் எறிகலங்களையும் நாலுபுறங்களிலிருந்தும் எறிந்தனர். ஆனால் உடனே ஐரோப்பியக் குடியானவர்கள் தமது கைத் துப்பாக்கிகளுடன் செயல்பட்டனர்.

கால் நடைகளை வளர்த்த ஐரோப்பியன், ஆடுகளைத் தனி உடைமையாகக் கருதினான். வேடர்களான ஆஸ்திரேலிய ஆதிக்குடிகளோ, நற்பேற்றினால் தம்மை எதிர்ப்படும் வேட்டைப் பொருளாக ஆடுகளைக் கருதினர். "ஆட்டை வாங்கியவனுக்கோ வளர்த்தவனுக்கோ தான் அது சொந்தமாயிருக்க முடியும்" என்பது ஐரோப்பியச் சட்டம். "காட்டு விலங்கு துரத்திப்பிடிக்கும் வேடனுக்கே சொந்தம்" என்பது ஆஸ்திரேலியச் சட்டம்.

ஆஸ்திரேலியர்கள் தமது சகாப்தத்தின் சட்டத்துக்குக் கீழ்ப்படிந்தார்கள். ஆனால் அதைப் புரிந்து கொள்ளாத ஐரோப்பியர்கள் அவர்களைச் சுட்டுக் கொன்றனர். அவர்களை மனிதர்களாகக் கருதாது, ஆட்டுப் பட்டியில் புகுந்த ஓநாய்களைக் கொல்வதுபோல் கொன்றனர்.

சுதேசிப் பெண்கள் உருளைக்கிழங்குத் தோட்டத்தைக் கண்டபொழுதும், இருவேறு உலகத்துச் சட்டங்களும் மோதிக்கொண்டன. ஒரு விநாடி நேரம்கூடத் தயங்காமல்

அப் பெண்கள் தமது கம்புகளால் அந்த அற்புதமான கிழங்குகளைத்தோண்டி எடுத்தனர். இத்தனை உண்ணத் தக்க கிழங்குகள் கிடைப்பதென்றால், அவை அனைத்தும் ஓரிடத்தில் கிடைப்பதென்றால், அது பெறுவதற்கரிய பேறுதான்! அவர்கள் ஒரு மாதத்தில் கண்டு பொறுக்கிச் சேகரிக்கக் கூடியதைவிட அதிகமாக இங்கு ஒருமணி நேரத்தில் சேகரிக்க முடிந்தது.

ஆனால் அவர்களது அரியபேறு கொடிய அவப்பேறாக முடிந்தது. துப்பாக்கிகள் இடிமுழக்கம் செய்தன; பெண்கள் தமது உருளைக்கிழங்குச் சாக்குகளுடன் தரையில் விழுந்தனர். தம்மைக் கொல்வது யார், ஏன் கொல்ல வேண்டும் என்ற கேள்விகளுக்கு விடை தெரியாமலேயே அவர்கள் இறந்தனர்.

அமெரிக்காவில் ஐரோப்பியர்கள் குடியேறிய பொழுதும் இதேபோல் இருவேறு உலகங்கள் ஒன்றோடொன்று போராடின.

## அமெரிக்காவைக் கண்டு பிடித்த கதை

ஐரோப்பியர்கள் அமெரிக்காவைக் கண்டு பிடித்த பொழுது, அவர்கள் ஒரு புதிய உலகத்தைக் கண்டுபிடித்து விட்டதாக எண்ணினார்கள். ''புதிய உலகத்தைக் கண்டு பிடித்த கிறிஸ்தபர் கொலம்பஸ்'' என்ற விளக்கவாசகத்துடன் அவருக்கு ஓர் உடற்கவசம் விருதாக அளிக்கப் பட்டது.

ஆனால் உண்மையில் அவர் கண்டுபிடித்த உலகம் புதியதல்ல, பழையதுதான். ஐரோப்பியர்கள், தாம் செய்வது யாது என்பதை அறியாமலேயே, தமது பண்டு ஒழிந்த காலத்தை அமெரிக்காவில் கண்டுபிடித்தார்கள்.

(அட்லாண்டிக்) மகா சமுத்திரத்துக்கு அப்பாலிருந்து வந்த இப்புதியவர்களுக்கு அமெரிக்க இந்தியர்களின் பழக்க வழக்கங்கள் புதிரானவையாகவும் காட்டு மிராண்டித்தனமானவையாகவும் தோன்றின. அமெரிக்க இந்தியர்களது

வீடுகள் ஐரோப்பியருடையது மாதிரி இல்லை; அவர்களது நடைஉடை பாவனைகளும் வேறுவித மானவையாக விருந்தன.

வடபகுதியில் வாழ்ந்த அமெரிக்க இந்தியர்கள் கல்லாலும் எலும்பாலும் தமது தடிகளையும் அம்பு முகப்புகளையும் செய்து கொண்டனர். அவர்கள் இரும்பைப் பற்றிக் கேள்விப் பட்டதேயில்லை. அவர்கள் அதற்கு முன்பே விவசாயத்தைப் பற்றி அறிந்திருந்தனர்; தானியம் (மக்காச் சோளம்) பயிரிட்டார்கள்; தோட்டங்களில் பூசணிக்காயும் அவரையும் புகையிலையும் பயிரிட்டனர். ஆனால் வேட்டையே அவர்களது முக்கியமான தொழிலாயிருந்தது. அவர்கள் மரத்தால் அமைந்த வீடுகளில் வசித்தனர்; தம் கிராமங்களைச் சுற்றி உயரமான வேலிகளை நிறுவி அரண் செய்து கொண்டிருந்தனர்.

தெற்கே மெக்ஸிகோவில் வாழ்ந்த அமெரிக்க இந்தியர்கள் செம்பிலும் பொன்னிலும் நகைகள் செய்து கொண்டிருந்தனர். அவர்கள் காய்ந்த செங்கற் [1] களால் பெரிய வீடுகளைக்கட்டிக்கொண் டிருந்தனர். அவற்றுக்குக் கர்ப்பூர சிலாசத் [2] தின் சாந்தைப் பூசியிருந்தனர்.

அமெரிக்காவில் முதன் முதலில் வெற்றி கண்டவர்களும் குடியேறியவர்களும் இந்த விஷயங்களை யெல்லாம் விவரமாக எடுத்துரைக்கிறார்கள். ஆனால் பழக்க வழக்கங்களை விவரிப்பதைவிட உடைமைகளை விவரிப்பது சுலபம். அமெரிக்க இந்தியர்களது வழக்க ஒழுக்கங்கள் விநோத மானவையாக இருந்ததால், ஐரோப்பியர்களால் அவற்றைப் புரியமுடியவில்லை. எனவே அவற்றைப் பற்றி அவர்கள் எழுதியதெல்லாம் தெளிவு இல்லாமல் குழப்பமாக உள்ளன.

---

1. காய்ந்த செங்கல்: தீயில் சுடாது வெயிலில் காய வைத்தவை. சில வகையான களி மண்ணை வைக்கோலுடன் கலந்து பிசைந்து வெயிலில் காயக்கூடிய கற்களைச் செய்தனர்.

2. கர்ப்பூர சிலாசத்து: (கால்சியம் சல்பேட்டு) வெண்பளிங்குக்கல் இதன் ஒருவகையாகும். இந்தப் பொருளிலிருந்தே பாரிஸ் சாந்து (Plaster of Paris) செய்யப்படுகிறது. (மொர்.)

புதிய உலகத்தின் பெரும் பிரதேசங்களில், பணப் புழக்கமில்லை, வியாபாரிகள் இல்லை, ஏழை பணக்காரர்கள் இல்லை. சில சுதேசிக்குலங்கள் பொன்னைப்பற்றி அறிந்திருந் தன; ஆனால் அவற்றுக்கு அதன் மதிப்புத் தெரியவில்லை.

கொலம்பஸுடன் சென்ற மாலுமிகளை முதலில் கண்ட இந்தியர்களில் சிலர் மூக்கில் பொன்னில் செய்த அணியைப் போட்டுக்கொண்டிருந்தனர்; தங்கச் சங்கிலி களையும் அணிந்திருந்தனர். அவர்கள் கண்ணாடி மணிகளை யும் துணித்துண்டுகளையும் சிறுதிற அணிமணிகளையும் பெற்றுக்கொண்டு அந்தத்தங்க நகைகளை மனநிறைவோடு கொடுத்தனர்.

உலகின் ஒவ்வொரு சமுதாயத்திலும், ஜனங்கள் ஆண் டான் என்றும் அடிமை என்றும், நிலப்பிரபு என்றும் பண்ணை அடிமை என்றும் பாகுபட்டிருப்பதாகக் கடல் களுக்கு அப்பாலிருந்து வந்தவர்கள் எண்ணிப் பழக்கப் பட்டிருந்தனர்.

அமெரிக்க இந்தியர்கள் விரோதியைக் கைப்பற்றிய போது, அடிமையாகவோ சேவகனாகவோ அவனை அவர்கள் தாழ்த்தவில்லை. ஒன்று அவனைக்கொன்றார்கள்; அல்லது தம் குலத்தவனாகச் 'சுவீகாரம்' எடுத்துக்கொண் டார்கள்.

இங்கு தனிப்பட்டவருக்குச் சொந்தமான கோட்டை வீடுகளோ பெரும் பண்ணைகளோ இல்லை. உதாரணமாக இரோகோயி என்ற சங்கத்தைச் சேர்ந்த குலங்களின் மக் கள் சமுதாயப்பேரில்லங்களில் வசித்தனர். அவர்கள் அவற்றை 'நீண்ட வீடுகள்' என்று குறிப்பிட்டனர். ஒரு குழுவினைச்சேர்ந்த அனைவரும் ஒன்றாக வசித்தனர்; கூட் டாக வேலை செய்தனர். நிலம் தனிப்பட்ட நபர்களுக்குச் சொந்தமாயில்லை; அது குலம் முழுமையின் உடைமை யாக விருந்தது. இங்கு மற்றொருவன் நிலத்தில் வேலை செய்த பண்ணையடிமைகளைப் பார்க்கமுடியாது; எல்லோ ரும் சுதந்திரர்களா யிருந்தனர்.

நிலப்பிரபுக்களையும் பண்ணை அடிமைகளையும் உடைய நிலப்பிரபுத்துவ சமுதாயத்தில் வாழ்ந்த ஐரோப்பியர்கள் திகைப்படைந்து குழம்புவதற்கு இந்த ஓர் உண்மையே போதும், ஆனால் மேலும் பலவினோதங்களை அவர்கள் கண்டனர்.

ஒருவன் இன்னொருவனது உடைமையைக் கைப்பற்றினால், போலீஸ்காரன் அவனைக் கழுத்தில் கைகொடுத்துத் தள்ளிச் சிறையிலடைப்பான் என்பதை ஐரோப்பாவில் ஒவ்வொருவனும் அறிந்துகொண்டிருந்தான். ஆனால் இங்கு போலீஸ்காரர்களும் இல்லை, சிறைகளும் இல்லை. எனினும் பொது வாழ்வில் முறைமை நிலவியது. ஜனங்களே ஒழுங்கு முறையை அமல் நடத்தினார்கள்; ஆனால், இது ஐரோப்பியர்களது வழக்கத்துக்கு மாறுபட்டதாகவிருந்தது.

அமெரிக்காவில், ஒருவன் தன் உறவினராலும் குலத்தினராலும் பாதுகாக்கப்பட்டான். ஒருவன் கொலை செய்யப் பட்டானென்றால், அவனது குழுவினர் (Clan) அனைவரும் சேர்ந்து அந்தக் கொலைக்குப் பழிவாங்கினார்கள். சில சந்தர்ப்பங்களில், சமாதான முறையிலும் இத்தகைய சம்பவத்துக்குத் தீர்வு காணப்பட்டது. கொலைகாரனின் உறவினர்கள் மன்னிப்புக் கோரினார்கள்; கொலையுண்டவனின் உறவினர்களுக்குப் பரிசுகள் அளித்தார்கள்.

ஐரோப்பாவில் இளவரசர்களும் அரசர்களும் அரசர்க்கரசர்களும் இருந்தனர். அமெரிக்காவில் அரசர்கள் இல்லை. குலத்தின் விவகாரங்கள் அனைத்தும், குலத்தினர் முன்னிலையில் தலைவர்களது கமிட்டியால் தீர்மானிக்கப்பட்டன. தொண்டு புரிந்தவர்கள் தலைவர்களாகப் பொறுக்கி எடுக்கப் பட்டனர்; அவர்கள் மோசமாக வேலை செய்தால், பொறுப்பிலிருந்து நீக்கப்பட்டனர். தலைவன் என்பவன் தனது குலத்தினர்மீது ஆதிக்கம் செலுத்துவோனாயில்லை. சில குலத்தினரது மொழிகளில், 'நாவலன்' என்று பொருள் படும் சொல்லே தலைவனைக் குறிப்பிடுவதற்குப் பயன்பட்டது.

பழைய உலகத்தில், அரசன் சர்க்காரின் தலைவனாக இருந்தான்; தந்தை குடும்பத்தின் தலைவனாக இருந்தான். சமுதாயத்தின் மிகப்பெரிய ஸ்தாபனமாக அரசும் மிகச் சிறிய ஸ்தாபனமாகக் குடும்பமும் விளங்கின. அரசன் குற்றம் புரிந்தோரைத் தண்டித்துப் பிரஜைகளுக்கு நீதி வழங்கினான். அரசன் தன் மகனிடம் தன் தேசத்தை ஒப்படைத்தான்; தந்தை தன் பண்ணையைத் தன் மகனிடம் ஒப்படைத்தான்.

இங்கே, புதிய உலகத்தில், குலங்களது பழக்கங்கள் வேறுவகையினவாக இருந்தன. சில குலங்களில், தந்தைக்குத் தன்மக்கள்மீது எவ்விதமான அதிகாரமும் கிடையாது. மக்கள் அன்னைக்கே உரியவர்களாயிருந்தனர். "நீண்ட வீடுகளில்" பெண்களே அனைத்தையும் நிர்வகித்தனர். ஐரோப்பியக் குடும்பங்களில், புதல்வர்கள் பிறந்த வீட்டில் தங்கினார்கள்; புதல்விகள் கூட்டை விடுத்து வெவ்வேறு திசைகளில் பறந்து சென்றனர். இங்கே, அதற்கு நேர்மாறான நிலைமை நிலவியது. கணவன் தன் வீட்டுக்குத் தன் மனைவியை இட்டுக்கொண்டு வருவதற்குப் பதிலாக, மனைவி தன் கணவனைத் தன் பிறந்த வீட்டுக்கு இட்டு வந்தாள்.

புதிய உலகில் பிரயாணம் செய்த ஒருவர், பின்வருமாறு கூறுகிறார்:

"பெண்களே வழக்கமாக வீட்டை நிர்வகிக்கிறார்கள். இயல்பாகவே இந்தப்பணி அவர்களை ஐக்கியப்படுத்துகிறது. பொருட்சேமிப்புகளெல்லாம் பொதுஉடைமையாக உள்ளன. ஆனால் மிகுதியாகப் பொருள்திரட்டுவதற்கு இயலாமல், சிறு அளவே பண்டங்களைக்கொண்டு வரும் கணவனுக்கு ஆபத்துத்தான்! அவனுக்கு எத்தனை குழந்தைகள் இருந்தால் என்ன! வீட்டில் அவனுக்கு எத்தனை உடைமைகள் இருந்தால் என்ன! எந்த நேரத்திலும், பாயைச் சுருட்டிக்கொண்டு வெளியேறும்படி அவன் உத்திரவிடப்படலாம். அந்த உத்திரவை மீறினால் ஒரு நன்மையும் விளையாது.

அதற்குமாருக, நெருப்பில் வாழும் நிலையே அவனுக்கு ஏற்படும். யாராவது அத்தை அல்லது பாட்டி அவனுக்கு ஆதரவாக முன்வந்தால்தான், அங்கு தொடர்ந்து இருக்க வழி ஏற்படலாம். இல்லாவிட்டால், அவன் தான் பிறந்த குலத்துக்கே திரும்பவேண்டும்; அல்லது மற்ருேர் குலத்தில் மணம் புரிந்துகொள்ள வேண்டும். பெண்களுக்கு அதிகாரம் அதிகம். அவசியம் ஏற்படும்பொழுது, தலைவனைச் சாதாரண வீரனது தரத்துக்கு இறக்குவதற்கு அவர்கள் தயங்குவதில்லை. 'கொம்புகளை முறித்தெறிவது' என்று இதை அவர்கள் குறிப்பிடுகிருர்கள். எனவே, தலைவன் தேர்வு எப்பொழுதும் அவர்களது இஷ்டத்தையே பொறுத்திருக்கிறது.''

பழைய உலகத்தில் பெண்கள் ஆண்களுக்கு அடிமைப் பட்டிருந்தனர். அமெரிக்க இந்தியர்களிடையே, பெண்ணே வீட்டுத் தலைவியாக விருந்தாள்; சில சமயங்களில், பெண் குலத் தலைவியாகவும் இருந்தாள். ஜான் டான்னர் என்ற அமெரிக்கன் அமெரிக்க இந்தியர்களிடையே சிக்கியபொழுது, ஆட்டவா குலத்தின் தலைவியான நியத்–நோகுவா என்பவள் அவனைச் சுவீகாரம் எடுத்துக்கொண்டதைப்பற்றி ருஷிய எழுத்தாளரான புஷ்கின் கதை எழுதியிருக்கிருர். அவளது படகில் ஒரு கொடி பறந்தது. அவள் ஆங்கிலேயர் வசமிருந்த துறைமுகத்துக்கு வந்தபொழுதெல்லாம், பீரங்கிகளின் முழக்கத்துடன் வரவேற்கப்பட்டாள். வெள்ளைக்காரர்களும் சுதேசிகளும் அவளிடம் மிகுந்த மரியாதை வைத்திருந்தனர்.

இந்தச் சூழ்நிலையில், ஜனங்கள் தமது வம்சாவளியைத் தந்தையின் மூலமல்லாமல் தாயின் மூலம் கணித்தனர் என்பதில் வியப்பில்லை. ஐரோப்பாவில் குழந்தைகள் தந்தையின் பெயரை மேற்கொண்டனர். இங்கே அவர்கள் தமது தாயின் குலப்பெயரை மேற்கொண்டனர். தந்தையின் குலம் 'மான்' என்றும் தாயின் குலம் 'கரடி' என்றும் அழைக்கப்பட்டனவென்ருல், குழந்தைகள் 'கரடி'க் குலத்

தைச் சேர்ந்தவராயினர். ஒவ்வொரு குலத்திலும் பெண்களும் அவர்களது மக்களும் மகளிரின் மக்களும் பேத்திமார்களின் மக்களும் இருந்தனர்.

இவையெல்லாம் ஐரோப்பியருக்கு விளங்கவில்லை. அவர்கள் அமெரிக்க இந்தியர்களது வழக்கங்களைக் 'காட்டுமிராண்டித்தனமானவை' என்றனர்; அந்த ஜனங்களைக் 'காட்டுமிராண்டிகள்' என்றனர்.

வில் அம்புக்காலத்தில், படகும் நிலத்தைப் பண்படுத்தும் கருவியும் முதலில் தோன்றிய காலத்தில், தமது முன்னோர்களும் இதே வழக்கங்களைக் கொண்டிருந்தனர் என்பதை அந்த ஐரோப்பியர்கள் மறந்தனர்.

ஆரம்பத்தில் அமெரிக்காவில் வெற்றிபெற்றுக் குடியேறியவர்கள், தமது குறிப்புக்களில், குலத்தலைவர்களை அரசர்களாகவும் பிரபுக்களாகவும் சித்திரித்தனர். அவர்கள் 'தலைவன்' என்ற சொல்லைப் பட்டப்பெயராகக் கருதினர். குலமரபுச் சின்னத்தைத் தலைவனது குடும்ப மரபுச் சின்னமாகக் கருதினர். தலைவர்களது குழுவை செனேட்டுக்கு ஒப்பிட்டு வியாக்கியானம் செய்தனர். நாம் சேனைத்தலைவனை அரசனென்று அழைத்தால் எப்படிப்பொருள்படுமோ. அந்த முறையில் குலத்தலைவனை அரசன் என்று எண்ணினர்.

பலநூற்றாண்டுகளுக்கு, அமெரிக்காவில் குடியேறிய வெள்ளையர்களால் சுதேசிகளின் வழக்கங்களைப் புரிந்து கொள்ள முடியவில்லை. மானிட இயல் வல்லுநரான மார்கன் என்ற அமெரிக்கர், "புராதன சமூகம்" என்ற தமது நூலில் அமெரிக்காவை இரண்டாவது தடவையாகக் கண்டுபிடித்த வரையில், இந்த நிலைமை நீடித்தது. இரோகோயி சங்க*த்

* இரோகோயி சங்கம்: நியூயார்க் ராஜ்யத்தில் வாழ்ந்த ஐந்து குலங்கள் சேர்ந்து அமைத்த சங்கம். பிறகு இன்னொரு குலமும் இந்தச் சங்கத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டது. இந்தக் குலங்களும் வேறு சில குலங்களும் இரோகோயி குடும்பத்துக் குரிய மொழிகளைப் பேசின. இரோகோயி சங்கத்தாரே தொடக்கத்தில் பிரிட்டிஷாருடனும் பிரெஞ்சுக்காரருடனும் போர் புரிந்தவர்களுள் தலையாயவர்.

திலும் ஆஸ்டெக்* மக்களிடையிலும் நிலவிய குலவழி அமைப்பு, நீண்டகாலத்துக்கு முன் ஐரோப்பாவில் இருந்து ஒழிந்த ஒன்றே என்பதை மார்கன்தான் எடுத்துக் காட்டினார்.

ஆனால் 1877-ஆம் ஆண்டுவரையில் மார்கன் தமது நூலை எழுதவில்லை ; நாமோ அமெரிக்காவில் ஆரம்பத்தில் வெற்றி கண்ட ஐரோப்பியர்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறோம்.

வெள்ளையர்களுக்கு இந்தியர்களைப் புரியவில்லை; இந்தியர்களால் வெள்ளைக்காரர்களைப் புரிந்து கொள்ள முடியவில்லை. கையளவுத்தங்கத்துக்காக, வெள்ளைக்காரர்கள் ஏன் ஒருவரையொருவர் கழுத்தறுக்கத் தயாராயிருந்தனர் என்பது இந்தியர்களுக்குப் புரியவில்லை. வெள்ளையர்கள் எதற்காக அமெரிக்காவுக்கு வந்தனர் என்பதும் அவர்களுக்கு விளங்கவில்லை. 'அன்னிய நாட்டைப் பிடித்துக் கொள்வது' என்றால் என்ன என்று அவர்களுக்குத் தெரியவில்லை. நிலம் குலம் முழுமைக்கும் சொந்தம் என்பதும், குலத்தை ரட்சிக்கும் தெய்வங்கள் அதைப் பராமரிக்கிறார்கள் என்பதும் பூர்வீக மக்களின் நம்பிக்கைகள். பிறருக்குச் சொந்தமான நிலத்தைப் பலாத்காரமாகக் கைப்பற்றினால், ஆக்கிரமிக்கப் பட்ட குலத்துத் தெய்வத்தின் கோபத்துக்கு ஆக்கிரமிப்பாளர் இரையாக நேரிடுமென்று அவர்கள் நம்பினார்கள்.

அமெரிக்க இந்தியர்கள் போர் புரிந்தனர்; ஆனால் ஒரு குலத்தினர் அடுத்த குலத்தினரைத் தோற்கடித்த பொழுது, அவர்களை அடிமைப் படுத்தவில்லை; அவர்கள்மீது தமது வாழ்க்கை முறையைத்திணிக்கவும் இல்லை. அவர்கள்

---

* ஆஸ்டெக் மக்கள்: மெக்ஸிகோவின் ஆதிக் குடிகள். அமெரிக்க இந்தியர்களுள் மிகுந்த நாகரிகம் படைத்த மக்கள் இவர்களே. மூன்று குலங்கள் சேர்ந்து ஒரு சங்கம் அமைத்துக் கொண்டனர்; வேறு சில குலங்கள் சங்கத்துக்கு உட்பட்டிருந்தன. சங்கத்துக்கு ஒரு நிர்வாகக் கமிட்டி இருந்தது; ஒரு சேனைத் தலைவனும் இருந்தான்.

தோல்வியுற்ற குலத்தின் தலைவனை நீக்கவும் இல்லை; தோல்வி யுற்ற குலத்தினர் தம் தலைவனைப் பெறுவதற்கு விடுதலைத் தொகையாகப் பொருள் கொடுக்க வேண்டுமென்று மட்டுமே வற்புறுத்தினர். தலைவனை நீக்கும் உரிமை அவனது குழுவுக்கோ குலத்துக்கோதான் இருந்தது.

ஆக, இருவேறு உலகங்கள் உராய்ந்தன; இருவேறு வாழ்க்கை முறைகள் மோதின. அமெரிக்காவை ஐரோப் பியர் வென்ற வரலாறு என்பது இருவேறு உலகங்களது போராட்டத்தின் சரித்திரமேயாகும்.

ஸ்பானியர்கள் மெக்ஸிகோவை வென்ற நிகழ்ச்சி, இந்தப் போராட்டத்தின் தன்மையைப் புலப்படுத்தும் சிறந்த உதாரணமாகும்.

## தொடர்பான தவறுகள்

1519–ஆம் ஆண்டில், மெக்ஸிகோவின் கடற்கரைக்கு அப்பால் ஒரு கப்பற்படை தோன்றியது. அதில் மும்மூன்று பாய் மரங்களை உடையனவாய்ப் பதினொரு கப்பல்கள் இருந் தன. அக்கப்பல்களின் பக்கங்கள் புடைத்துக் கொண்டன; அவற்றின் முற்பகுதியும் பிற்பகுதியும் நீர்ப்பரப்பினுக்கு மேல் உயர்ந்து எழுந்தன. பக்கங்களின் சதுரமான திறப்பு கள் வழியே துப்பாக்கிகள் வெளியில் நோக்கின. தளங் களில் ஈட்டிகளும் பட்டாளத்துக் கைத்துப்பாக்கிகளும் நிறைந்திருந்தன. கொடிக் கப்பலின் முன்புறத்தில், அகன்ற தோட்களை உடைய ஒரு தாடிக்காரன் நின்றான். அவன் தனது வட்டமான தட்டையான குல்லாயைக் கண் கள்வரை இழுத்து விட்டுக் கொண்டிருந்தான். அவன் தாழ்வான கடற்கரையையும் அங்கு கூடியிருந்த அரை நிர்வாணமான இந்தியர்களையும் தன் கூரிய கண்களால் நோக்கினான்.

கொடிக் கப்பலில் நின்ற இவனது பெயர் ஹெர்னான் டோ கார்ட்டஸ் என்பதாகும். அவனே, மெக்ஸிகோவை வென்று வசப்படுத்திக் கொள்வதற்காக வந்திருக்கும் படை

யின் தலைவன். அவனைத் தலைமைப் பொறுப்பிலிருந்து நீக்கி விட்டதாக ஸ்பானிய சர்க்கார் எழுதிய கடிதம் அவனது சட்டைப்பையில் இருந்தது என்பது உண்மை. ஆனால் எதற்கும் துணிந்த சாகசியான கார்ட்டஸுக்கு அந்தப்பதவி நீக்க உத்திரவு எம்மாத்திரம்! அவனுக்கும் ஸ்பெயினுக்கும் இடையே கடல் முடிவில்லாது வியாபித் திருந்தது. இங்கே, இந்தக் கப்பல்களில், அவனே அரசனைப் போல அதிகாரம் செலுத்தினான்.

கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சின. வழிமேல் உள்ள தீவு களில் கார்ட்டஸால் பிடிபட்டு அடிமையான இந்தியர்கள். பீரங்கிகளையும் துப்பாக்கி வண்டிகளையும் கட்டுக் கட்டாக விருந்த கைத்துப்பாக்கிகளையும் படகுகளில் இறக்கத் தொடங்கினார்கள். அவர்கள் குதிரைகளைத் தளத்துக்குக் கொண்டு வந்தனர். அவை பீதியடைந்து பின்னங்காலில் நின்றன. அவற்றைப் படகுகளில் இறக்கிக்கரையில் கொண்டு சேர்ப்பதுதான் மிகவும் கடினமான வேலையாக விருந்தது.

அந்த மிதக்கும் வீடுகளையும், உடம்பெல்லாம் ஆடை யால் மூடிக் கொண்டிருக்கும் அந்த வெளுத்த மேனிக்காரர் களையும் அவர்களது விசித்திரமான ஆயுதங்களையும் அமெரிக்க இந்தியர்கள் அதிசயத்துடன் நோக்கினார்கள். ஆனால் வாலையும் பிடரியையும் குலுக்கிக்கொண்டும் கனைத்துக் கொண்டும் நின்ற அந்தப் பேருருப்பிராணிகள் தான் அவர்களுக்கு மிகப்பெரிய வியப்பை ஊட்டின. அத்தகைய பெருவடிவுப் பிராணிகளை அவர்கள் அதற்கு முன் கண்டதில்லை.

வெள்ளையர் வருகை தந்த சேதி நாட்டின் கடற்கரை யெங்கும் விரைவாகப்பரவியது; மலைகளால் சூழப்பட்ட உள்நாட்டுப் பகுதிக்கும் பரவியது. அங்கே மலைகளால் பாதுகாக்கப் பட்ட பள்ளத்தாக்கின் குடியிருப்புகளில் ஆஸ்டெக் மக்கள் வாழ்ந்தனர். அந்தக் குடியிருப்புகளில் மிகப் பெரியது திநேசிடிட்லான் என்பதாகும். அது ஓர்

ஏரியின் நடுவில் அமைந்திருந்தது; பாலங்கள் மூலம் கரையுடன் தொடர்பு கொண்டிருந்தது; அதன் வீடுகளுடைய பிரகாசமான வெண் சுவர்களும் கோயில்களின் பொற் கூரைகளும் சேய்மையிலேயே புலப்பட்டன. அந்த வீடுகளில் மிகப்பெரிய ஒன்றில், ஆஸ்டெக்குகளின் ராணுவத் தலைவனான மான்டிஸுமா தனது குழுவினருடன் வசித்து வந்தான்.

மான்டிஸுமா வெள்ளையர்களது வருகையைப் பற்றிக் கேள்விப் பட்டவுடன், தலைவர்களது கமிட்டியைக் கூட்டினான். அவர்கள் தாம் என்ன செய்யவேண்டுமென் பதைப்பற்றி நெடுநேரம் யோசனை செய்தனர். வெள்ளையர்கள் ஏன் வந்தனர், அவர்கள் விரும்பியது என்ன என்ற விஷயங்களைப் புரிந்துகொள்வதே தலைமையான பிரச்னையாக விருந்தது.

வெள்ளையர்கள் தங்கத்தை விரும்பி நேசித்தனர் என்பதை, இதர இடங்களிலிருந்து எட்டிய வதந்திகள் மூலம் அவர்கள் அறிந்திருந்தனர். எனவே, வெள்ளையர்களுக்குச் சிறந்த பரிசுகளை அனுப்புவதென்றும் அவற்றைப் பெற்றுக் கொண்டு தம்தாய்நாட்டுக்குத் திரும்பும்படி அவர்களைக் கேட்டுக் கொள்வதென்றும் தலைவர்கள் முடிவு செய்தனர்.

இது சீர்படுத்த முடியாத தவறாயிற்று; ஏனெனில், தங்கம் வெள்ளையரின் பேராசையைத் தூண்டுவதற்கே பயன்பட்டது. ஆனால் ஆஸ்டெக்குகள் இதை அப்பொழுது உணரவில்லை; அவர்களால் உணர்ந்திருக்கவும் முடியாது; ஏனெனில், (அமெரிக்க) இந்தியர்களும் வெள்ளையர்களும் வெவ்வேறான சகாப்தங்களில் வாழ்ந்து கொண்டிருந்தனர்.

தூதர்கள் புறப்பட்டுச் சென்றனர். அவர்கள் தம்முடன் வாகன் சக்கரம் அளவுக்குப் பெரியனவாயிருந்த தங்க மோதிரங்களையும் பொன்னில் செய்த மானிடவடிவங்களையும் மிருக வ்டிவங்களையும் வேறுபல பொன் நகைகளையும் எடுத்துக்கொண்டு சென்றனர். அவர்கள் அந்தப்

பொக்கிஷங்களை யெல்லாம் பூமியினுள் ஆழத்தில் புதைத் திருந்தார்களெனில், அது விவேகமான செயலாக இருந் திருக்கும் !

கார்ட்டஸும் அவனது கூட்டாளிகளும் தங்கத்தைக் கண்டவுடன், ஆஸ்டெக்குகளின் வீழ்ச்சி உறுதியாயிற்று. கடல்கடந்து செல்லும்படி வெள்ளையர்களைத் தூதர்கள் வேண்டிய தெல்லாம் வீணாயிற்று. மலைத்தொடரினிடையே பயணம் செய்வதினால் ஏற்படக்கூடிய கஷ்டங்களையும் ஆபத்துக்களையும் அவர்கள் அந்த அழையாத விருந்தாளி களிடம் எடுத்துச் சொல்லி அச்சுறுத்திய தெல்லாம் வியர்த்த மாயிற்று.

இதற்கு முன்னால், மெக்ஸிகோவின் தங்கத்தைப்பற்றிச் செவிவழிச் செய்திகளையே ஸ்பானியர்கள் கேட்டிருந்தனர். ஆனால் இப்பொழுது அதை அவர்கள் கண்கூடாகக் கண் டனர். அவர்களது விழிகள் ஒளி உமிழ்ந்தன, கதை களெல்லாம் மெய்தான் என்பதை அறிந்த உவகையால்.

தூதர்களது வேண்டுகோள்க ளெல்லாம் பரிகசிக்கத் தக்கவையாகவே அவர்களுக்குத் தோன்றின. கைக் கெட்டிய குறிக்கோளை விடுத்துவிட்டுக் கடல் கடந்து செல்வதாம்! இதைவிடப் பெரிய பைத்தியக்காரத்தனம் உண்டா ?

அவர்கள் வழியில் எத்தனை இடர்களை அனுபவித்தார் கள். அந்தக் காய்ந்த ரொட்டி, கடித்தபொழுது பல்லை உடைத்துவிடும் போலிருந்த கடினமான ரொட்டி; அந்தக் கித்தான் படுக்கை, புரண்டு படுக்க இடமில்லாமல், நெருக்கியடித்துக் கொண்டு, உடலை நோவச் செய்த கித்தானில் படுத்துப்பட்ட துன்பம்; அந்த வேலை, கீல் பூசிய பாய்மரக்கயிறுகளிடையே மெய்வருந்தச் செய்த அந்த வேலை; அதன்பின் புயல்கள்; அவை போதாதென்று கடற்பாறைத் தொடர்கள்—இத்தனை துன்பங்களையும் அவர்கள் எதற்காகப் பொறுத்துக் கொண்டனர்? செல்வத்

துக்காகத்தானே? இரவில் அந்தச் செல்வத்தைப் பற்றித் தானே அவர்கள் கனவு கண்டனர்!

முகாமைக்கலேத்து விட்டுப் புறப்படுமாறு கார்ட்டஸ் கட்டளையிட்டான். அவனது ஆட்கள், ஆயுதங்களையும் தீவனங்களையும் அடிமைகளின் முதுகில் ஏற்றினுர்கள். மனிதர்களை விடப் பொதிசுமக்கும் மிருகங்களையே அதிகமாக ஒத்திருந்த அந்த அடிமைகள், சுமை தாங்காது முனங்கிக்கொண்டு, கஷ்டப்பட்டு நடந்தனர். அவர்கள் எவ்வாருகிலும் நடந்தாக வேண்டும்; பின்தங்கினுல் பேராபத்து; ஸ்பானியர்கள் அவர்களைக் கத்திகளால் குத்தி விரைவுபடுத்தினுர்கள். நடக்க மறுத்தவர்களின் மண்டையை உடைத்துப் போட்டார்கள்.

அந்தக்காலத்தில் வரையப்பட்ட ஓவியம் சேதமுருமல் இருக்கிறது; அதில் ஆஸ்டெக்குகளே இந்தப்படையெழுச்சியைச் சித்திரித்திருக்கின்றனர். அந்த ஓவியத்தில், முதுகில் சுமை தூக்கிய ஜனங்கள் மூன்று சாலேகள் வழியே நடந்து கொண்டிருக்கின்றனர். ஒருவன் தனது முதுகில் ஒரு பீரங்கி வண்டியின் சக்கரத்தை வைத்துக்கொண்டிருக்கிருன்; இன்ெனுருவன் கைத்துப்பாக்கிகளின் கட்டையையும் மற்ெருருவன் தீவனங்கள் நிறைந்த பெட்டியையும் தூக்கிச் செல்கின்றனர். ஒரு ஸ்பானிய அதிகாரி ஓர் அமெரிக்க இந்தியன் தலேக்குமேல் தன் கைத் தடியைப் பிடித்துக்கொண்டிருக்கிருன். அவன் அந்த இந்தியனது மயிரைப் பிடித்துக்கொண்டு அவனே உதைத்துக் கொண்டிருக்கிருன். அருகில் ஒரு செங்குத்தான பாறை; அதன் உச்சியில் ஒரு சிலுவை.

அந்த ஆக்கிரமிப்பாளர்கள், தாம் 'நல்ல கிறித்துவர்கள்' என்று எண்ணிக்கொண்டனர். அவர்கள் தேசத்தைப் பிடிக்கச் சென்றபொழுது, சிலுவையையும் கொண்டு சென்றனர்.

இந்தச் சித்திரத்தில், துணிக்கப்பட்ட தலேகளும் வெட்டுண்ட கைகளும் தரையெங்கும் கிடக்கின்றன.

படிப்படியாக, ஸ்பானியர்கள் முன்னேறினார்கள். இறுதியில், ஒரு மலைக்கணவாயிலிருந்து அவர்கள் ஏரியையும் அதன் இடையே உள்ள குடியிருப்புக்களையும் நோக்கினார்கள்.

ஆஸ்டெக்குகள் அவர்களை எதிர்க்கவில்லை. ''விருந்தாளிகள்'' தலைமைக் குடியிருப்புக்குள் பிரவேசித்தனர். அவர்கள் செய்த முதற்காரியமே கண்ணியம் துறந்ததாக விருந்தது. ராணுவத்தலைவனான மான்டிஸுமாவே அவர்களது அதிபன் என்று கருதி அவனைச் சிறைப் பிடித்தார்கள்.

மான்டிஸுமாவுக்கு விலங்கிடும்படி கார்ட்டஸ் கட்டளையிட்டான். மான்டிஸுமா ஸ்பானிஷ் அரசனுக்கு விசுவாசம் செலுத்துவதாகப் பிரமாணம் எடுக்க வேண்டுமென்று அவன் கோரினான். கைதியோ, தான் திருப்பிச் சொல்ல வேண்டுமென்பதற்காகக் கூறப்பட்டதனைத்தையும் ஒன்று விடாமல் பணிவாக மொழிந்தான். ஆனால் அவர்கள் அரசன் என்று கூறியதின் பொருள் என்ன என்பதும் விசுவாசப்பிரமாணம் என்றால் என்ன என்பதும் அவனுக்குச் சிறிதும் விளங்கவில்லை.

கார்ட்டஸ் வெற்றி அடைந்துவிட்டதாக எண்ணினான். மெக்ஸிகோவின் அரசனைக் கைப்பற்றி விட்டதாகவும் அந்த அரசன் தன் அதிகாரத்தை ஸ்பெயின்தேசத்து மன்னனிடம் ஒப்படைத்து விட்டதாகவும் அவன் எண்ணினான். அதாவது, சகல பிரச்னைகளும் பைசலாகி விட்டதாகக் கார்ட்டஸ் கருதினான். ஆனால் அவன் போட்டது தப்புக்கணக்கே. மான்டிஸுமாவுக்கு ஸ்பானிய வாழ்வைப்பற்றி ஒன்றும் தெரியாது என்றால், கார்ட்டஸுக்கு மெக்ஸிகோ மக்களது வாழ்வைப்பற்றி எதுவும் தெரியாது. மான்டிஸுமா அரசன் என்று அவன் எண்ணினான். உண்மையில், மான்டிஸுமா சேனைத்தலைவன்தான்; தேசத்தின் தலைவிதியைத் தீர்மானிக்கும் அதிகாரம் அவனிடம் இல்லை.

குஞ்சு பொறிப்பதற்கு முன்னுல் முட்டைகளை எண்ணித் திருப்தி அடைவோனைப் போலவே, கார்ட்டஸ் தான் வெற்றி பெற்றுவிட்டதாகக் கருதினுன்.

அவன் சிறிதும் எதிர்பார்க்காத ஒரு காரியத்தை ஆஸ்டெக்குகள் செய்தனர்; அவர்கள் மான்டிஸூமாவின் சகோதரனைப் புதிய தலைவனுகத் தேர்ந்தெடுத்தனர்.

ஸ்பானியர்களின் தங்குமனையாகப் பயன்பட்ட பெரிய வீட்டைத் தாக்கிப் பிடிப்பதற்தாகப் புதிய தலைவன், தன் குலத்து வீரர்கள் அனைவரையும் அழைத்தான்.

ஸ்பானியர்கள் கைத்துப்பாக்கிகளாலும் பெருந்துப்பாக்கிகளாலும் சுட்டார்கள். ஆஸ்டெக்குகள் கற்களை எறிந்தார்கள்; வில்லில் நாண் ஏற்றி அம்புகளை எய்தார்கள். துப்பாக்கிக் குண்டுகளும் ரவைகளும், கற்களையும் அம்புகளையும் விடச்சக்தி மிகுந்தவை. ஆனுல் ஆஸ்டெக்குகள் தமது சுதந்திரத்துக்காகப் போராடினுர்கள். அவர்கள் எதற்கும் அஞ்சாது, சிறிதும் தயங்காது, போர்புரிந்தனர். பத்துப்பேர் உயிர்நீத்தால், அந்த இடத்தில் நூறு வீரர்கள் வந்துநின்றனர். அவர்கள் தம் சகோதரர்களைக்கொன்றவர்களைப் பழிவாங்குவதற்காகப் போராடினுர்கள்; தம் குலத்தினரைக் கொன்ற கொடியோர்மீது வஞ்சம் தீர்ப்பதற்காகப் போராடினுர்கள். தன் குழுவுக்கு ஆபத்து நேரிட்டபொழுது, தன் குழுவுடன் தன் குலம் முழுமைக்குமே ஆபத்து உண்டானபொழுது, ஆஸ்டெக் குலத்தவன் மரணத்தைத் திரணமாக மதித்தான்.

நிகழ்ச்சிப்போக்கு, தனக்குப் பாதகமாகி விட்டதைக் கண்ட கார்ட்டஸ், ஆஸ்டெக்குகளுடன் பேச்சுவார்த்தை நடத்தத் தீர்மானித்தான். சாந்தி செய்விப்பதற்கு மான்டிஸூமாவைப் பயன்படுத்துவதே சிறந்தது என்று அவன் கருதினுன். மான்டிஸூமா அவர்களது அரசன் என்பது அவன் எண்ணம். எனவே, ஆயுதங்களைக் கீழே வைக்கும்படி அவன் உத்திரவிடுவதே நல்லது என்று முடிவு செய்தான்.

ஸ்பானியர்கள் மான்டிஸுமாவின் விலங்குகளை நீக்கினார்கள்; வீட்டுக் கூரைக்குப் போகும்படி அவனிடம் சொன்னார்கள். ஆனால் ஜனங்கள் அவனைக் கோழையாகவும் துரோகியாகவும் கருதினர். எனவே அவன் கூரை மீது வந்தவுடன், அம்புகளாலும் கற்களாலும் மரியாதை செய்வித்தனர்.

"உதவாக்கரையே! நீ ஒரு வீரன் அல்ல! அந்த நாய்கள் கைதியாக்குவதற்கு இணங்கிய நீ ஒரு பெண்பிள்ளை! நூற்பதற்கும் நெய்வதற்கும்தான் நீ லாயக்கு! கோழை!" என்று நாலுபுறங்களிலிருந்தும் ஆஸ்டெக்குகள் கத்தினார்கள்.

மான்டிஸுமா படுகாயமுற்று விழுந்தான்.

முற்றுகையிட்ட ஆஸ்டெக்குகளைக் கடந்து செல்வதற்குள் கார்ட்டஸ் ரொம்பக் கஷ்டப்பட்டுவிட்டான். அவனது சிப்பாய்களில் பாதிப்பேர் கொல்லப்பட்டு விட்டனர். ஆஸ்டெக்குகள் அவனைப் பின் தொடராதது அவனுடைய அதிர்ஷ்டம். அவர்கள் துரத்திக்கொண்டு போயிருந்தால், அவன் உயிரோடு தப்புவதற்கு முடிந்திருக்காது.

கார்ட்டஸ் தப்பி ஓடுவதற்கு இடம் தந்தது, ஆஸ்டெக்குகளின் இன்னொரு தவறாகும். அவன் இன்னொரு சேனையைத் திரட்டிக்கொண்டு திரும்பிவந்து, டினோசிடிட்லானை முற்றுகையிட்டான். ஆஸ்டெக்குகள் சில மாத காலம் தற்காத்துக் கொண்டனர். ஆனால் பீரங்கியைச் சமாளிக்க வில் அம்பால் முடியுமா? டினோசிடிட்லான் பிடிபட்டது, அழிக்கப்பட்டது.

இரும்பு யுகத்தின் மனிதர்கள் வெண்கல யுகத்தின் மனிதர்கள்மீது வெற்றியடைந்தனர். பழைய குழு ஏற்பாடு புதிய ஏற்பாட்டின் தாக்குதலுக்கு முன் சீர்குலைந்தது. வரலாற்றுப் போக்கே கார்ட்டஸ் பக்கமிருந்தது.

அந்தச் சுதந்திரமான குறிஞ்சிநில வீரர்களது வழித்தோன்றல்களாக எஞ்சியிருப்பவர்கள், தமது நாட்டை

ஆக்கிரமித்து உடைமையாக்கிக் கொண்டவர்களது தோட்டங்களில் வேலை செய்கின்றனர்.

## அத்தியாயம் — 6

# உயிர்க்கருவிகள்

சாமானியமான பூட்ஸு வாங்குவதற்குப் பதிலாக, ஒரு தடவை அடி எடுத்து வைக்கும்பொழுது மூவாயிரம் கல்தொலைவு கடக்கக் கூடிய பூட்ஸை வாங்கிய மனிதனைப்பற்றிச் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த ஓர் எழுத்தாளர் கதை எழுதியிருக்கிறார்.

அந்தக் கதைத்தலைவன் வேற்று நினைவு வயப்பட்டவன். எனவே தன் தவற்றை உடனடியாகக் கண்டு பிடிக்கவில்லை. அவன் ஏதோ ஒன்றைப்பற்றி மெய்மறந்து சிந்தித்தவனாய்க் கடைத்தெருவிலிருந்து புறப்பட்டான். திடீரென்று, அவனது உடம்பு கடுங்குளிரால் நடுநடுங்கியது. சுற்றுமுற்றும் நோக்கினான்; எங்கும் பனிக்கட்டி மயமாக இருந்தது. தொடுவானத்தின் அடியில், செங்கதிரோன் ஒளிகுன்றியவனாகக் காணப்பட்டான். மூவாயிரம் மைல் பூட்ஸை அணிந்ததால், தனக்கே தெரியாமல் தான் வட துருவமண்டலத்தை அடைந்திருப்பதை அவன் உணர்ந்தான்.

அவனது இடத்தில் வேறு யாராவது இருந்திருந்தால், அற்புதமான நற்பேற்றினால் கிடைத்த அந்தப் பூட்ஸைப் பயன்படுத்திப் பணம் திரட்ட முயன்றிருப்பான். ஆனால் அந்தக் கதைத் தலைவன் பணத்தை ஒரு பொருட்டாக மதியாதவன். விஞ்ஞானத்திலேயே பெரும் சிரத்தை கொண்டிருந்தான். எனவே, உலகம் முழுவதையும் பார்த்துப் பரிசீலனை செய்வதற்கு இந்த நற்பேற்றைப் பயன்படுத்திக் கொள்ளத் தீர்மானித்தான்.

அவன் தனது அற்புதமான விரைவு பூட்ஸை அணிந்துகொண்டு, வடகோடியிலிருந்து தென்கோடிக்கும்

தென்கோடியிலிருந்து வடகோடிக்கும் பிரயாணம் செய்தான். குளிர்காலத்தில், சில சமயங்களில் சைபீரியாவின் உறைபனிவெளிகளது குளிரைத் தாங்கமுடியாமல், ஆப்பிரிக்கப் பாலை நிலத்துக்குச் சென்றான். உலகின் கீழ்ப்பகுதியில் சூரியன் அஸ்தமித்தவுடன், மேல்பகுதிக்குப் போனான்.

கிழிந்துபோன கறுப்புக் கோட்டை அணிந்த அவன், தான் திரட்டிய பொருட்களைக் கொண்ட பெட்டியை அக்குளின்கீழ் வைத்துக் கொண்டு, ஆஸ்திரேலியாவிலிருந்து ஆசியாவுக்கும் ஆசியாவிலிருந்து அமெரிக்காவுக்கும் போனான். இடையில் இருக்கும் தீவுகள் அவனுக்கு அடி வைக்கும் கற்களாகப் பயன்பட்டன.

அவன் ஒரு சிகரத்திலிருந்து இன்னொன்றில் அடி எடுத்து வைத்துப் பனிமலைகளையும் எரிமலைகளையும் கடந்தான். தாவரங்களையும் தாதுப் பொருட்களையும் சேகரித்தான். பண்டைக்காலக் குகைகளையும் கோயில்களையும் கண்டான். உலகத்தை அறிந்தான்; உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளையும் கற்றறிந்தான்.

வாசகரே, மனிதனது வாழ்வைப் படித்து அறிவதற்கு நாமும் விரைவு பூட்ஸ் போட்டுக் கொள்ள வேண்டியதாயிற்று. இந்நூலின் பக்கங்களில், நாம் கண்டம் விட்டுக் கண்டம் பாய்கிறோம்; ஒரு சகாப்தத்திலிருந்து இன்னொன்றுக்குச் செல்கிறோம்.

சில சமயங்களில், நம்மை எதிர் நோக்கிய கால வீச்சும் இடவிரிவும் நம்மைக் கிறுகிறுக்கச் செய்தன. ஆயினும் நாம் நமது பயணத்தை நிறுத்தவில்லை. சாமான்ய பூட்ஸு அணிந்தவர்கள் மாதிரி நின்று நிதானித்து விவரங்களைப் பயில்வதற்கு நம்மால் முடியவில்லை.

நாம் நூற்றாண்டுகளை ஒரே தாவில் கடந்தபொழுது, ஓரிரண்டு விஷயங்களைச் சிறிதே கவனித்திருக்கலா மென்பது உண்மை. ஆனால், நமது விந்தை பூட்ஸைக்கழற்றி

விட்டுச் சாதாரண நடையில் நிமிஷ நேரம் நடந்திருந்தோமானாலும், நம்மால் விவரங்களின் குவியல்களிலிருந்து மீளவே முடியாது. காட்டிலுள்ள மரங்களை ஒவ்வொன்ருகப் பரிசீலனை செய்யும் பொழுது, மரங்களின் சேர்க்கையால் காடு உண்டாகி யிருப்பதைப் பார்க்கத் தவறும் ஆபத்து ஏற்படலாம்.

நாம் நமது விந்தை பூட்ஸில் சகாப்தம் விட்டுச் சகாப்தம் சென்று காலத்தைக் கடந்ததுடன், ஒரு விஞ்ஞானத்திலிருந்து இன்னென்றுக்குச் சென்று பல விஞ்ஞானங்களையும் கடந்தோம்.

தாவர இயல், விலங்கு இயல் ஆகியவற்றிலிருந்து மொழி இயலுக்குச் சென்ருேம்; கருவிகளின் வரலாறு, சமயங்களின் வரலாறு, தேசங்களின் வரலாறு ஆகிய துறைகளுக்கும் சென்ருேம்.

இயற்கையாகவே, இதைச் செய்வது எளிதாயில்லை. ஆனுல் நமக்கு வேறு வழியில்லாதிருந்தது. விஞ்ஞானங்கள் அனைத்தும் மனிதனுல் மனிதனுக்காகச் சிருஷ்டிக்கப்பட்டவை. மலரின் இதழ்களுடைய வடிவத்தைப் பற்றியோ வெண்கலயுகத்தின் கோடரிகளை வகைப்படுத்துவதைப்பற்றியோ பேசுவதுடன் அமையாது, மனிதனது உலக வாழ்வையும் இந்த உலகில் அவன் வகிக்கும் பாத்திரத்தையும் பற்றிப்பேசும் நமக்கு அந்த விஞ்ஞானங்கள் அனைத்தையும் அறிமுகம் செய்து கொள்வது அவசியமாகிறது.

நாம் சற்று முன்னுல் கார்ட்டஸ் காலத்திய அமெரிக்காவில் இருந்தோம்.

நாம் கி. பி. மூன்று அல்லது நான்காவது நூற்ருண்டுக்கு உரிய ஐரோப்பாவுக்குத் திரும்பிச் செல்வோம். இரோகோயர்களும் ஆஸ்டெக்குகளும் அமைத்துள்ள குழு ஏற்பாட்டை இங்கும் காணலாம். மாதர்களின் ஆட்சியிலுள்ள சமுதாயப் 'பேரில்லங்களை'யும் இங்கு காணலாம்.

இந்த ஐரோப்பியர்கள் சகல விஷயங்களுக்கும் மனைக்குரியவளையே எதிர் பார்க்கிறார்கள். ஏனெனில், அவள் தான் வீட்டின் அமைப்பாளராகவும் குழுவின் தலைவியாகவும் விளங்குகிறாள். குளிர்காலத்துக்கான சேமிப்புகளைப் பாதுகாப்பது அவளே. பயிரிடுவதற்குப் பூமியைப் பண்படுத்துவதும், முற்றிய பயிரின் கதிர்களை அறுத்துத்தானியத்தைக் கொண்டு வருவதும் அவளே.

அவள் ஆடவனைவிட அதிகமாக வேலை செய்கிறாள். எனவே, அவள் ஆடவனைவிட அதிகமாக மதிக்கப்படுகிறாள். அந்த நாட்களில் ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு வீட்டிலும், எலும்பிலோ கல்லிலோ செதுக்கப்பெற்ற பெண்ணுருவத்தை—தாய் வடிவத்தைக் காணலாம். அது குழுவினரது ஆதி மாதாவின் உருவம். குழுவின் அனைவரும் அவளது வழித்தோன்றல்கள். அவளது ஆவியே வீட்டைப் பாதுகாத்தது. உணவு அனுப்ப வேண்டுமென்றும் விரோதிகளிடமிருந்து வீட்டைக் காப்பாற்ற வேண்டுமென்றும் அவர்கள் அவளிடம் பிரார்த்தனை செய்தனர்.

காலப்போக்கில், வீட்டை ரட்சிக்கும் ஆதிமாதாவே ஈட்டி ஏந்தி நகரைக்காக்கும் அதினேயாக மாறினாள். அவர்கள் அதினேயைச் சிறு வடிவில் அமைக்கவில்லை. அவளது பெருஞ் சிலையே, அவள் பெயரால் அமைந்த ஆதன்ஸ் நகரைப் பாதுகாக்கிறது.

## பழைய அமைப்பு வெடிக்கிறது

இன்றும் நமது மொழியில் குழு ஏற்பாட்டின் அறிகுறிகள் தென்படுகின்றன. ஆனால் நாம் அச் சமுதாய முறையை அறவே மறந்து விட்டோம்.

சில சமயங்களில் வயது வந்தவர்கள், 'நண்பரே' என்பதற்குப்பதிலாக 'அண்ணா' என்றோ 'தம்பி' என்றோ விளிக்கின்றனர். அறிமுகமாகாத குழந்தையுடன் பேசும் பொழுதும், 'மகனே' என்று விளிக்கிறோம்.

---

*ஆதென்ஸ் : (ஏதென்ஸ்) கிரேக்க நாட்டின் தலைநகரம்.

ஜெர்மானிய மொழியில் 'நெவ்யூ'† என்பதற்கு நேரான சொல், 'சகோதரியின் மக்கள்' என்றே பொருள்படும். ஏனென்றால், பண்டைக் காலத்தில் சகோதரியின் மக்களே குழுவில் தங்கினுர்கள். சகோதரனது மக்கள் அவனது மனைவியின் குழுவுக்கு உரியவர்களானுர்கள். சகோதரியின் குழந்தைகள், உறவினர்கள் 'மருமக்கள்' என்று அழைக்கப்பட்டனர்; ஆனுல் சகோதரனது குழந்தைகள் உறவினராகக் கருதப்படவில்லை; ஏனெனில் அவர்கள் வேறு குழுவினராஞர்கள்.

நாம் நம்மையும் மீறி அந்தக் குழு அமைப்பை நினை ஆட்டும் வகையில் சில சமயங்களில் நடந்து கொள்கிறோமென்ருல், அது வலுவானதாக விருந்திருக்க வேண்டுமென்பது வெளிப்படை. அது எவ்வாறு தகர்ந்தது ?

அமெரிக்காவில் ஐரோப்பிய ஆக்கிரமிப்பாளர்களது வருகையால் அது தகர்ந்தது. ஐரோப்பாவில், அமெரிக்காவைக் கண்டு பிடிப்பதற்கு ஆயிரமாயிரம் ஆண்டுகட்கு முன்னுல், அந்தச் சமுதாய ஏற்பாடு கரையானுக்கு இரையான வீடுமாதிரிதானே அழிந்தது.

ஆடவர்கள் மேன்மேலும் வீட்டு விவகாரங்களை நிர்வகிப்பதிலிருந்து அந்த அழிவு தொடங்கியது.

பண்டு ஒழிந்த காலம்முதல், பெண்கள் நிலத்தைத் தோண்டிப் பயிர் செய்தனர்; ஆண்கள் கால்நடைகளை மேய்த்தனர். கால் நடைகள் சிலவாக விருந்தபொழுது, பெண்களின் வேலையான விவசாயமே மிக முக்கியமான தொழிலாக விருந்தது. அவர்கள் அருமையாகவே இறைச்சி தின்னுர்கள்; போதுமான பாலும் கிடைக்கவில்லை. பெண்கள் சேகரித்த தானியம் இல்லாவிட்டால் வீட்டில் போதுமான உணவு கிடைத்திருக்காது. அக்

† 'நெவ்யூ (Nephew) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு உடன் பிறந்தார் மகன் என்பது பொருள். அதாவது அச்சொல் மருமகனையும் குறிக்கும், ஒன்றுவிட்ட மகனையும் குறிக்கும்.

காலத்தில் அவர்கள் ஓட்ஸ்மாவில் செய்த சிறிய ரொட்டியோ கையளவு காய்ந்த தானியமோதான் பகலுணவாகப் பெற்றனர். இத்துடன் அவர்கள் பெண்களால் சேகரிக்கப் பெற்ற காட்டுத்தேனையும் காட்டுக்கனிகளையும் அருந்தினர். பெண்கள் வீட்டையும் நிர்வகித்ததால், அவர்களே அனைத்துக்கும் பொறுப்பா யிருந்தனர்.

ஆனால் எப்பொழுதுமே, எல்லா இடங்களிலும் இதே நிலைமை நிலவியது என்று சொல்ல முடியாது. சமவெளிகளில் தானியம் நன்றாக விளையவில்லை. பிரேரிப்புல், தானியப் பயிருக்கு இடமும் உணவும் இல்லாமல் செய்தது. அந்தப்புல்லின் உறுதியான வேர்கள் மண்ணை இறுகப் பற்றிக் கொண்டிருந்தன ; ஜனங்கள் அவற்றைத்தோண்டி எடுக்க முயற்சித்தனர். ஆனால் அது பொலபொல வென்று உதிரும் மண்ணாயிருந்தால் அல்லவா வேர்களைக்களைந்தெறியலாம் ? புல்லின் வேர்களைப்பிடுங்குவதற்கு, திண்ணிய கட்டிகளாகவும் புற்பற்றைகளாகவும் மண்ணைப் பெயர்க்க வேண்டியிருந்தது. எனவே, அங்குசாகுபடி செய்வது சிரமமாயிருந்தது.

இரண்டு அல்லது மூன்று பெண்கள் மண்ணைத் தோண்டும் கருவியைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு முயன்றனர். அப்பொழுதும் அவர்களால் மேற்பரப்பைப் பிறாண்டவே முடிந்தது. இந்த ஆழமில்லாத உழுசால்களில் விதைகளைத்தூவினால், அவை வெயிலில் காய்ந்தன, பறவைகளுக்கு உணவாயின, சில விதைகளில் பயிர் உண்டாயிற்று. ஆனால் அங்கொன்று இங்கொன்றாக முற்றிய பயிர்களின் கதிர்கள் மட்டமானவையாக விருந்தன. மேலும், வறட்சி ஏற்பட்டு பயிர் சாவியாவதும் உண்டு. வறட்சிக்குப் பழகிய சுதேசிப் புல்வகைகளோ தீங்குறாமல் வளர்ந்தன.

ஆக, அறுவடைப் பருவம் வந்தபொழுது, அறுத்துக் குவிப்பதற்கு யாதுமில்லை. களைகளின் இடையே கதிர்களைக் காணமுடியவில்லை. ஆனால் விரட்டியடிக்கப்பட்ட

சைனியம் மீண்டு வந்து கொடிகளைக் காட்டுவதைப் போல், பிரேரிப்புல் மீண்டும் காற்றில் அசைந்தாடியது.

தானியத்துக்குப் பதிலாகத் தன்னிச்சையாக வளரும் புல்! இதற்காகக் கஷ்டப்பட்டுப் பாடுபடுவதா? அதன் பயன் தான் என்ன?

ஆனால் தானியம் மனிதருக்குப் பயன்பட்ட மாதிரி, பிரேரிப்புல் கால்நடைகளுக்குப் பயன்பட்டது. ஆடுமாடு கள் பிரேரியில் நன்றாக வாழ்ந்தன. அவை எங்கும் நல்ல மேய்ச்சலையே கண்டன. ஒவ்வொரு வருஷத்திலும், அவற் றின் தொகை பெருகியது. மனிதன் தன் கத்தியை அரைக் கச்சையில் சொருகிக் கொண்டு, கால்நடைகளைத் தொடர்ந்து சென்றான். இடையனது விசுவாசமிக்க நண்ப னை நாய் ஆடு மேய்ப்பதில் அவனுக்கு உதவியது. பிரேரியில் மந்தை ரொம்பதூரம் போய்ச்சிதறி விடாமல் பார்த்துக் கொள்வதில் நாய் உதவியது. ஆடுமாடுகளின் தொகை பெருகியதால், பாலும் வெண்ணெயும் கம்பள மும் மேன்மேலும் அதிகமாகக் கிடைத்தன.

வீட்டில் தானியத்துக்குத் தட்டு ஏற்பட்டது. ஆனால் சமையல் கலங்களில், மிகுதியான ஆட்டுப் பாலாடையும் சுவையான ஆட்டிறைச்சியும் கொதித்துக் கொண்டிருந் தன.

ஆடவனது வேலையான ஆடுமாடு மேய்ச்சலே, சம நில வாழ்வில் மிகவும் முக்கியமாயிருந்தது.

ஸ்விட்ஸர்லந்தில், செங்குத்தான பாறை ஒன்றின் மேல் ஒரு பண்டைக்காலச் சித்திரம் கண்டு பிடிக்கப் பட்டது. அது கச்சிதமாகவும் தெளிவாகவும் இல்லை; திருத்தமுறாததாகவும் குறைபாடுள்ளதாகவும் இருக்கிறது. அதில் உள்ள உழவனோ குழந்தைகளால் வரையப்படும் வினோதமான மனித உரு மாதிரி இருக்கிறான். ஆனால் அந்தச் சித்திரம் நன்றாயிருக்கிறதா இல்லையா என்பதை நாம் பொருட்படுத்தத் தேவையில்லை. நமக்கு அது ஓர்

ஓவியமல்ல; அது ஒரு சான்று. எருதுகளால் இழுக்கப் படும் மரக்கலப்பையை உழவன் பின்தொடர்வதை இந்த அத்தாட்சி ஐயத்துக்கு இடமின்றிப் புலப்படுத்துகிறது.

மனித குலத்தின் வரலாற்றில் இதுவே முதன் முதலாகச் செய்யப்பட்ட கலப்பை. இது நிலத்தைத் தோண்டுவதற்குப் பயன்பட்ட கருவியைப் பெரிதும் ஒத்திருக்கிறது. ஒரே வித்தியாசம் என்னவெனில், இதில் ஒரு நீண்ட கோல் இணைக்கப்பட்டிருக்கிறது. மேலும் ஜனங்களுக்குப் பதிலாகக் காளைமாடுகள் கலப்பையை இழுக்கின்றன.

மனிதன் முதலாவது ஊர்தியைக் கண்டுபிடித்து விட்டான். எவ்வாறு எனில் ஏரில் பூட்டப்பட்ட எருது உயிருள்ள மோட்டார் ஆகும். அதுவே நம் காலத்து உலோக டிராக்டருக்குத்தாத்தா. மனிதன் மாட்டை நுகத்தடியில் பூட்டியபொழுது தன் வேலைச் சுமையையும் மாட்டின்மீது ஏற்றினான். முன்னால் மனிதனுக்குப் பாலும் இறைச்சியும் தோலும் மட்டும் கொடுத்துவந்த மாடு இப்பொழுது தனது உழைப்புச் சக்தியையும் கொடுக்கத் தொடங்கியது.

கழுத்தில் பூட்டிய நுகத்தடியுடன் வயலுக்குச் சென்ற எருதுகள், கலப்பையை இழுத்தன. பழைய விவசாயக் கருவியைவிட ஆழமாகக் கலப்பை நிலத்தை உழுதது. உழவுசாலிலிருந்து பெயர்ந்தமண், நீளமான கரிய நாடாவைப்போல் கிடந்தது.

ஆரம்பத்தில் உழவன் கலப்பையின் கைப்பிடிமீது தன் சக்தி அனைத்தையும் செலுத்திச் சாய்ந்தான். இப்பொழுது, அவனது வேலையை எருதைக்கொண்டு செய்து முடித்தான். காளைமாடு உழவுக்குப் பயன்பட்டதுடன், தானியக்கதிர்களை அடிப்பதற்கும் தானியத்தை ஏற்றிக் கொண்டு செல்வதற்கும் பயன்பட்டது. அறுவடைக் காலத்தில் உழவன் மாட்டைக் களத்துமேட்டுக்கு இட்

டுச் சென்ருன். அங்கே அது தானியக்கதிர்களை மிதித்துத் துவைத்துக் கதிர்மணிகளைப் பிரித்தது. அதன்பின் அவன் அந்த மாட்டைச் சக்கரமில்லாத கனவண்டியில் பூட்டிஞன். அது தானிய மூட்டைகளைக் களத்துமேட்டிலிருந்து இழுத்துக்கொண்டு சென்றது.

கால்நடை வளர்ப்பு விவசாயத்துக்கு உதவியது. இடையனுயிருந்த மனிதன் உழவனுகவும் ஆனுன்; இதன்மூலம் வீட்டில் அவனது அதிகாரம் அதிகரித்தது.

பெண்ணுக்கு மிகுதியான வேலை மிஞ்சியிருந்ததென்பது மெய். அவள் நூல்நூற்ருள், துணி நெய்தாள், தானியத்தை அறுவடை செய்தாள், குழந்தைகளைக் கவனித்துக்கொண்டாள். ஆனுல் அவள் முன்போல் குடும்பத்தின் தலைமைக்குரியவளாக இல்லை. மேய்ச்சல் நிலத்திலும் சாகுபடி நிலத்திலும் ஆடவன் முதலிடத்தை வகித்தான்.

வீட்டில், முன்போல் பெண்கள் ஆண்களைத் திட்டுவதில்லை. மாருக, ஆண்கள் பெண்களைத் திட்டத் தொடங்கினுர்கள். ஆண்கள் தற்காப்பு நிலையிலிருந்து தாக்கும் நிலைக்கு மாறினுர்கள். முன்பெல்லாம், வீட்டுக்குப் புதிதாக வந்தவனை மாமியார்களும் அத்தைகளும் பாட்டிகளும் எளிதில் விரட்டியடித்தனர். இப்பொழுது அவர்கள் இன்னெரு குழுவிலிருந்து மணவினை மூலம் தம் குழுவுக்கு வந்துள்ள அந்த அன்னியனைத் தாஜா செய்தார்கள்; ஏனெனில் அவன் அவர்கள் அனைவருக்காகவும் வேலை செய்தான்; குழுவினருக்குத் தன் உழைப்பால் உணவளித்தான். ஒவ்வொரு குழுவும் தனது ஆடவர்கள் வேறு குழுக்களுக்குச் செல்வதை வெறுக்கத் தொடங்கியது.

ஆக, நூறுவயது ஆன ஓக்மரத்தைப் போல, பழைய சமுதாய அமைப்பு வெடிப்புக்குள்ளாகியது. ஜனங்கள் மேன்மேலும் அதிகமாக மரபு நெறிகளை மீறத் தொடங்கினுர்கள். முன்னுளில் மனைவி கணவனைத் தன் பிறப்பகத்

துக்கு இட்டுவந்தாள். இப்பொழுது, கணவன் மனைவியைத் தன் பிறப்பகத்துக்கு அழைத்துச் செல்லத் தொடங்கினான்.

இது பழைய வழக்கத்தை மீறிய செயலானதால், இம்மாதிரிச் செய்தவன் குற்றவாளியாகக் கருதப்பட்டான். எனவே, கணவனால் மனைவியைத் தொல்லையில்லாது தன் வீட்டுக்கு இட்டுச்செல்ல முடியவில்லை. அவன் அவளைக் கடத்திக்கொண்டு போகவேண்டியதாயிற்று. பலாத்காரமாகவோ வஞ்சனையாகவோ அவளை இட்டுச்செல்ல நேர்ந்தது.

மணமகனது குழு, அவனுக்கு எந்தக் குழுவிலிருந்து பெண் எடுப்பதென்று முடிவு செய்தபின், ஓர் இருண்ட இரவில், மணமகனும் அவனது உறவினர்களும் ஈட்டியும் வாளும் தரித்தவராய் அவர்கள் தேர்ந்தெடுத்த பெண்ணின் வீட்டுக்குத் திருட்டுத்தனமாகச் சென்றனர். நாய்கள் குரைத்தன ; வீட்டிலிருந்தவர் அனைவரையும் எழுப்பின. மயிர் நரைத்த தாத்தாக்களிலிருந்து மீசை அரும்பாத இளைஞரான பெண்ணின் சகோதரர்கள் வரை அனைவரும் ஆயுதம் ஏந்தினர். ஆண்கள் சவால் விடுத்துக் கூச்சலிட்டதையும் விடப்பெண்கள் உரக்கக் கூவிப்புலம்பினார்கள். ஆனால், மணமகன் குழு வெற்றியடைந்தது. திமிறிக்கொண்டிருந்த மணமகளைக் கைப்பற்றிய மணமகன் தனது குழுவினரது ஆதரவுடன் பின்வாங்கினான்.

ஆண்டுகள் கழிந்தன. காலப்போக்கில் வழக்கம்மீறிய செயலே வழக்கமாகியது. மணமகனுக்கும் மணமகளது உறவினருக்கும், இடையே நிகழ்ந்த போராட்டம் ஒரு சடங்காக மாறியது. இரத்தம் சிந்திப்போராட்டம் நிகழ்த்தியதற்குப் பதிலாகப் பரிசுகள் வழங்கும் சடங்கு உண்டாயிற்று. மணமகளது சகோதரிகளும் தாயும் புலம்பும் நிகழ்ச்சி திருமணச்சடங்கின் பகுதியாக அமைந்தது. திருமணச்சடங்கு விருந்தோடு நிறைவுபெற்றது.

வேறு ஒரு குழுவுக்குச் சென்று வாழவேண்டியிருப்பதை எண்ணி வருந்திய நங்கைகளின் பழைய துன்பகரமான பாடல்கள் இன்னும் மறையவில்லை.

வேறு குழுவினுள் வாழ்க்கை நடத்துவதும் விரும்பத்தக்கதாயில்லை. புக்ககத்தில், மனைவி கணவனது ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்தாள். அவளது மாமனரும், மாமியாரும், கணவனின் உறவினர்கள் அனைவரும் கணவனையே ஆதரித்ததால், அவளிடம் பரிவுகாட்டுவார் எவருமில்லை. கணவனது வீட்டார் அவளைக் கூடுதலாகக் கிடைத்த வேலைக்காரியாகவே கருதினர். அவள் வாளாவிருந்து பொழுதைக் கழிப்பதை அவர்கள் விரும்பவில்லை. அவள் உண்ணும் உணவுக்குத் தகுந்ததாய் உழைக்க வேண்டுமென்பதில் அவர்கள் குறியாயிருந்தனர். ஆகக்கூடி, தாய்வழிக் குழுவுக்குப் பதிலாகத் தந்தை வழிக்குழு அமைந்தது.

முன்னாளில் குழந்தைகள் தாய்மார்களுடன் அவர்களது குழுவில் இருந்தனர்; இப்பொழுது குழந்தைகள் தந்தைமார்களுடன் அவர்களது குழுவில் தங்கினர். தாய்வழியில் வம்சாவளியைக் கணித்தமுறை ஒழிந்தது. தந்தை வழியில் வம்சாவளியைக் கணிக்கும் முறை அமலுக்கு வந்தது. ஒவ்வொருவனும் தன் சொந்தப் பெயருடனும் குழுப்பெயருடனும், ''இன்னார் மகன்'' என்பதைத் தெரிவிக்கும் மூன்றாவது பெயரையும் அடைந்தான்.

தந்தை பெயரைச்சேர்த்து மகனை விளிக்கும் முறை அன்று முதல் இன்றுவரை வழக்கிலுள்ளது. ''ராபர்ட் மகன், பீட்டர்'' என்று தொல்லோர்கள் கூறியதையே, ''பீட்டர் ராபர்ட்ஸன்'' (ஸன் என்ற ஆங்கிலச் சொல்லுக்கு மகன் என்று பொருள்) என்று இன்று குறிப்பிடுகிறோம்.

பீட்டர் ஹெலன் என்பவளது மகனானால், அவனைப் 'பீட்டர் ஹெலன் ஸன்' என்று விளிக்கலாமென்று எவரும் நினைப்பதில்லை.

## முதல் நாடோடிகள்

மனிதன் கண்டுபிடித்த விந்தையான சேமிப்புவிடுதி, அவனுக்கு மேன்மேலும் அதிகமான தீவனங்களைக் கொடுத்துக்கொண்டே யிருந்தது. ஆயிரக்கணக்கான ஆடுகள் சமநிலங்களிலும் பிரேரிகளிலும் மேய்ந்தன. வயல்களில், வேலைசெய்யத் தயங்கிய மாடுகளைநோக்கி உழவர்கள் ஊளையிட்டு வளமார்ந்த கரிசல்மண்ணை உழுதார்கள்.

வளமான பள்ளத்தாக்குகளில், தோட்டங்களும் கொடிமுந்திரி வனங்களும் முதன்முதலாகத் தோன்றின. அவை செழிப்பாக வளர்ந்து கனிகளை ஈன்றன. மாலை நேரத்தில், ஜனங்கள் அத்திமரங்களின் நிழலில் கூடினர்.

உழைப்பால் மனிதனுக்கு மேன்மேலும் அதிகமான உணவு கிடைத்தது என்பது உண்மை. ஆனால் அவன் மேன்மேலும் கடினமாக உழைக்கவும் வேண்டியிருந்தது. ஒவ்வொரு கொடிமுந்திரிக்கொத்தும் ஒவ்வொரு கோதுமைக்கதிரும் சாறில் ஊறவைத்தமாதிரி மானிட உழைப்பில் ஊறியிருந்தன.

உதாரணமாக, அவன் கொடிமுந்திரிகளுடன் மிகுந்த பாடுபட்டான். கொடிமுந்திரிக்கொத்துக்களைப் பறித்துக் கொண்டுவந்தபின் கல்லில் செய்த ஆலையில் கொடுத்துப் பிழிந்தான். அவற்றின் குருதிச் சிவப்பான சாறு ஆட்டுத் தோல் குப்பியினுள் இறங்கியது. ஜனங்கள் அந்தத் திராட்சைக்கனி ரசத்தையும், அதற்குரியவனும் ஆட்டுத் தோல் அணிந்தவனுமான அழகான தேவனையும் புகழ்ந்து பாடினார்கள்; அவன் பொறுத்த கஷ்டங்களைக் குறிப்பிட்டும் பாடினார்கள்.

ஒவ்வொரு வருட வசந்தகாலத்திலும், ஆற்றுவெள்ளம் தாழ்வான பிரதேசங்களில் பாய்ந்தது; அப்பொழுது அந்நிலங்களில் தான் கொண்டுவந்த வண்டலையும் பரப்பிச் சென்றது. எனவே, அங்கு இயற்கையே பயிர்களைக் கவனித்துக்கொண்டது எனலாம்.

ஆனால் இங்கும் விவசாயிக்கு ஓய்வில்லை. வயல்களில் தண்ணீர் நிற்கச்செய்வதற்காகக் கால்வாய்களை வெட்டினான்; தண்ணீர் மிகுதியாகத் தேவைப்பட்ட இடங்களில் அது ஏறிப்பாய்வதற்கு வசதியாக அணைகளைக் கட்டினான்.

தமது உழைப்பு இல்லாவிட்டால், நிலத்தில் பயனற்ற புல்களே மண்டியிருக்குமென்பதை மறந்து, ஜனங்கள் நிலத்துக்கு வளம்தந்த நதிக்குப் பிரார்த்தனை செய்தார்கள்.

விவசாயியின் வேலை மேன்மேலும் சிரமமானதாயிற்று. ஆனால் கால்நடை வளர்ப்பவனுக்கும் கஷ்டம் ஏற்படாமல் இல்லை. செழிப்பான பிரேரிகளில் கால்நடைகள் பல்கிப்பெருகின. மந்தை பெரிதாகப் பெரிதாகப் பராமரிப்பு வேலையும் கடினமானதாயிற்று. பத்துப் பதினைந்து ஆடுகளைக் கவனிப்பது ஒன்று; ஆயிரக்கணக்கான ஆடுகளைக் கவனிப்பது வேறொரு விஷயம். மேலும் பெரியமந்தை, மேய்ச்சல் நிலத்தை விரைவில் வெறுமையாக்கியது; எனவே ஜனங்கள் அவற்றை வேறு மேய்ச்சல் வெளிக்கு ஓட்டிக்கொண்டு போனார்கள். இவ்வாறாகத் தம் கிராமத்திலிருந்து நெடுந்தொலை போக நேர்ந்தது.

கடைசியில் கிராமவாசிகள் அனைவருமே உடைமைகளை எடுத்துக்கொண்டு மந்தையுடன் புறப்பட்டனர். அவர்கள் தமது கூடாரங்களை ஒட்டகங்கள் மீது ஏற்றிக்கொண்டனர்; கால்நடைகளை ஓட்டிக்கொண்டு சென்றனர்.

அவர்கள் களைமண்டிய வயல்களைக் கவனிப்பாரில்லாது விட்டுச்சென்றனர். ஆனால் அதற்காக அவர்கள் வருந்தவில்லை; ஏனெனில் வறண்ட சீதோஷ்ணப் பிரதேசங்களில் நல்ல விளைச்சல் அரிதாகவே இருந்தது.

முதன் முதலாக, தனி நபர்களுக்கிடையே மட்டு மில்லாமல், குலங்களின் இடையேயும் வேலைப் பிரிவினை ஏற்பட்டது.

சமநிலங்களில் இடையர் குலங்கள் கால் நடைகளை வளர்த்தன. அவை கால் நடைகளைக் கொடுத்துத் தானியத்

தைப் பெற்றுக் கொண்டன. அவை குறிப்பிட்ட இடத்தில் நிலைத்திருப்பதில்லை. ஒரு மேய்ச்சல் வெளியிலிருந்து இன்னொன்றுக்குப் போய்க்கொண்டே யிருந்தன. இந்த நாடோடிகளது வாழ்வு தங்குதடையற்றதாகவும் சுதந்திர மானதாகவும் இருந்தது.

அவர்கள் மரங்களோ வீடுகளோ இல்லாத இடத்தில், வானத்தின் கீழ் கூடாரங்களை அமைத்துக் கொண்டனர். அகன்ற சமநிலம் முழுவதுமே அவர்களது இல்லமாக இருந்தது. அவர்கள் நீண்டதூரம் பயணம் சென்றபொழுது, இடப்பக்கமும் வலப்பக்கமும் அலைமோதும் தோணிபோல் அசைந்து சென்ற ஒட்டகத்தின் முதுகே, குழந்தைகளின் தொட்டிலாகப் பயன்பட்டது.

## உயிர்க்கருவிகள்

நாடோடிக் குலங்களது வாழ்வு அமைதியானதாக விருந்ததில்லை. அவர்களது வழியில் முற்றிய பயிர்களை உடைய வயல்கள் இருந்தால், தாம் விதைத்துச் சாகுபடி செய்யாத அவ்வயல்களில் அவர்கள் அறுவடை செய்தனர். நதிப்பள்ளத்தாக்கை நோக்கி மலைச்சரிவில் இறங்கிய போதும், சமநில ஓரமாகக் காட்டைச் சுற்றிவளைத்துச் சென்றபோதும் அவர்கள் கிராமங்களைக் கொள்ளை யடித்தனர், பயிர்களை மிதித்துத்துவைத்தனர்; கால்நடைகளையும் ஜனங்களையும் கடத்திச் சென்றனர்.

அவர்கள் ஆட்களையே அதிகமாக நாடினர் ; ஏனெனில் அவர்களைக் கால்நடைப் பராமரிப்பில் பயன்படுத்த முடிந்தது. ஒவ்வொரு இடையர் குலத்திலும், எப்பொழுதுமே, ஆள் பஞ்சம் இருந்து கொண்டிருந்தது. ஒவ்வொருவனுக்கும் பத்துப் பன்னிரண்டு புதல்வர்கள் இருந்த போதிலும், ஊழியர் எண்ணிக்கை போதுமானதாயில்லை. மந்தைகள் மிகவிரைவாகப் பல்கிப் பெருகியதால், இடையர் பற்றுக் குறை தீராத பிரச்னையாக விருந்தது. எனவே, இடையர் குலத்தினர் பிற குலத்தினரைக் கைப்பற்றி அடிமைப் படுத்தினர்.

நாடோடி இடையர் குலங்கள் இம் மாதிரி செய்தன. ஆனால் உழவர்களும் அமைதியாக விருந்ததில்லை. அறுவடை முடிந்தபின், இலையுதிர்காலத்தில், அக்கம் பக்கத்துக் குலங்களின் உறைவிடங்களில் புகுந்து தானியம், துணி, நகை, ஆயுதம் முதலிய பொருட்கள் அனைத்தையும் திருடுவதற்கு அவர்கள் தயங்கவில்லை. ஆனால், அவர்களும் ஆட்களையே மிகுதியான மதிப்புள்ள கொள்ளைப் பொருளாக மதித்தனர்.

ஏனெனில், விவசாயிகளுக்கும், கால்வாய்களை வெட்டுவதற்கும் அணைகளைக் கட்டுவதற்கும் ஏர் உழுவதற்கும் அதிகமான ஆட்கள் வேண்டியிருந்தது.

முன்னாட்களில் குலங்கள் தமது கைதிகளை அடிமைப் படுத்தியதில்லை ; ஏனென்றால் அதில் அர்த்தமிருந்திருக்காது. ஒரு ஜோடிக்கரங்கள் கூடுதலாகக் கிடைத்ததால் வருமானம் பெருகியிருக்காது. அடிமையான மனிதன் வேலை செய்திருப்பான் என்பது மெய் ; ஆனால் அவன் உற்பத்தி செய்தது முழுவதையும் அவனே உண்டிருப்பான்.

அவர்கள் பெரிய மந்தைகளையும் வளமார்ந்த வயல்களையும் அடைந்தபின், நிலைமை அடியோடு மாறியது. ஒரு மனிதனது உழைப்பால் அவனுக்குத் தேவைப்பட்டதைவிட அதிகமான தானியமும் இறைச்சியும் கம்பளியும் கிடைத்தன. அடிமை தன் உழைப்பின் மூலம் தன்னோடு தன் எஜமானனுக்கும் உணவு அளிக்க முடிந்தது. அவன் கூடுதலாக வேலை செய்து குறைவாக உண்ணும்படி செய்வதொன்றே எஜமானன் ஆற்ற வேண்டிய பணியாயிற்று.

ஆக, மனிதன் தன் சகோதரனையே ஓர் உயிர்க்கருவியாக மாற்றினான். மனிதன் மனிதனையே தாழ்த்தினான் : எருதினை நுகத்தடியில் பூட்டுவதைப்போல் மனிதனையும் கட்டுப்படுத்தினான். சுதந்திரத்தை நோக்கி முன்னேறும் பாதையில், இயற்கையை வெல்லும் குறியை நோக்கிச் செல்லும் வழியில், மனிதன் மனிதனுக்கு அடிமையானான்.

முன்னுளில் நிலம் பொது உடைமையா யிருந்தது: அதாவது, அதில் பாடுபட்டவர் அனைவருக்கும் உரியதா யிருந்தது. இப்பொழுது, அடிமை தனக்குச் சொந்தமா யில்லாத நிலத்தைச்சாகுபடி செய்யத் தொடங்கினுன். அவன் ஓட்டிய எருது அவனுடையதன்று; அவன் அறு வடை செய்த தானியமும் அவனுடையதன்று.

பண்டைக்காலத்து எகிப்து தேசத்தில், ஏர் உழுத அடிமை பின்வருமாறு பாடினுன்;

"எருதுகளே! உங்களை நான்
இது வொன்று கேட்பேன்!
கருதாமல் தானியத்தின்
கதிர்களை மிதிப்பீர்.

ஒருவன் எஜமானன்
உரிமைப் பயிரிஃது!
கருதாமல் தானியத்தின்
கதிர்களை மிதிப்பீர்!

## நினைவும் நினைவுச் சின்னங்களும்

இதுவரையில் நாம் கடந்த காலத்தினுள் நடத்திய பிரயாணம் மிக்க சிரமமானதாயிருந்தது. குகைகளின் வளைந்துவளைந்து செல்லும் வழிகளில் திக்குத்தெரியாது திண்டாடினேம். புதை பொருட்களுக்காக வெட்டிய குழிகளிலும் பள்ளங்களிலும் நுழைத்த காலை இழுக்க முடியாது தவித்தோம். நாம் கண்டவையனைத்தும் புதிராக இருந்தன; அந்தப் புதிர்களின் விடையை அனுமானிக்க வேண்டியதாயிருந்தது. நாம் தேடியலைந்த போது, வழியில் அடையாளம் எதுவும் புலப்படவில்லை; தூண்களில் செதுக்கிய கல்வெட்டு ஒன்றும் தென்படவில்லை. கற்கால மனிதர்கள் எழுதத்தெரியாதவர்களாயிருந்த போது, அவர் கள் கல்வெட்டுகளை விட்டுச் சென்றிருக்க வேண்டுமென்று நாம் எப்படி எதிர் பார்க்க முடியும்!

ஆனால், இப்பொழுது, கைகாட்டிகளை உடைய சாலையை அடைந்து விட்டோம். ஆரம்பத்தில் உண்டான கல்வெட்டுகளை (கல்லறை) நடுகற்களிலும் கோயிற் சுவர்களிலும் காண்கிறோம். இவை தெய்வங்களைத்திருப்தி செய்வதற்காக வரையப்பட்ட பழைய மாந்திரீகச் சித்திரங்களை எவ்வகையிலும் ஒத்திருக்கவில்லை. இவை முதலிலிருந்து முடிவுவரை உள்ள கதைகளைச் சித்திரிக்கின்றன; இவை ஜனங்களின் கதைகள்; ஜனங்களுக்காக வரையப்பட்டவை.

நம் காலத்து எழுத்துக்களைப் போன்ற எதையும் இங்கு காணோம். எருதை எருது உருவத்தால் புலப்படுத்தியிருக்கிறார்கள். மரத்தைக் கிளைகளோடு கூடிய மரத்தால் காட்டியுள்ளனர்.

எழுத்தின் வரலாறு சித்திர எழுத்துக்களுடன் தொடங்குகிறது. இந்தச் சித்திரங்களின் சிக்கலை நீக்கி அவற்றை மரபு வழக்கமான அறிகுறிகளாக ஆக்குவதற்கு நீண்டகாலம் பிடித்தது.

நெடுங் கணக்கின் எழுத்துக்களைப் பார்க்கும்பொழுது அவை எங்கெந்தச் சித்திரங்களிலிருந்து உருவாயின என்பதை ஊகிப்பது கடினமாயுள்ளது. ['ஏ' என்று உச்சரிக்கப்படும்] A என்ற எழுத்து எருதுத்தலையின் உருவம் என்பதை எவரால் ஊகிக்க முடியும்? ஆனால் 'A' யைத் தலைகீழாக எழுதினீர்களானால், கொம்புகளோடு கூடிய எருதுத்தலையின் உருவத்தைக் காணலாம். பண்டைக்கால ஸெமித்தியர்களது மொழியில், எருது என்ற பொருள்பட்ட சொல் 'ஏலப்' என்பதாம். இந்தச் சொல்லின் முதல் எழுத்தாக உள்ள 'A' யைப் பண்டைக்கால ஸெமித்தியரது நெடுங்கணக்கில் கொம்புகளோடு கூடிய எருதுத்தலை உருவத்தால் குறிக்கப்பட்டது.

இதேபோல், ஒவ்வோர் எழுத்தின் வரலாற்றையும் உய்த்துணரலாம். ('ஒ' என்று உச்சரிக்கப்படும்) 'O' என்ற எழுத்து கண் வடிவத்திலிருந்து தோன்றியது. 'ஆர்'

என்று உச்சரிக்கப்படும்) 'R' என்ற எழுத்து, நீண்ட கழுத்தின் மேல் அமைந்த தலையின் உருவத்திலிருந்து உண்டானது...................

ஆனால் நமது விந்தையான விரைவு பூட்ஸ் நம்மை நெடுந்தொலைவுக்கு அழைத்துக் கொண்டு போய்விட்டது. நாம் நமது கதையில் சித்திர எழுத்துத் தோன்றிய காலத் துக்குத்தான் வந்திருக்கிறோம்.

மனிதன் மெதுவாகவும் தடவித்தடுமாறிக் கொண்டும் எழுதுவதற்குக் கற்றுக்கொண்டான்.

அறிவதற்குரிய பொருள் அதிகமாயில்லாதபோது, ஜனங்கள் அதை எளிதாக நினைவில் பதிய வைத்துக்கொண் டனர். மரபுகளும் கதைகளும் வாய்மொழி வழியாகவே போதிக்கப் பட்டன. ஒவ்வொரு கிழவரும் நடமாடும் புத்தகமாக இருந்தார்கள். ஜனங்கள் கதைகளையும் வாழ்வு இயல் விதிகளையும் ஒரு சொற் பிசகாமல் நினைவில் வைத்துக் கொண்டனர். அவற்றைத் தம் அரிய பரம்பரைச் சொத் தாகக் கருதித் தம் மக்களுக்குக் கற்றுக் கொடுத்தனர். அந்த மக்களும் அதேபோல் தமது மக்களுக்குப் போதித் தனர்.

ஆனால் இப்பொழுது நினைவுச்சின்னங்கள் நினைவுக்கு உதவியாக அமைந்தன. மனிதனது அனுபவங்கள் தலை முறை தலைமுறையாகத் தொடர்ந்து கிடைப்பதற்கு, எழுத்து பேச்சுக்கு உதவியது. தலைவனது நடுகல்லின்மீது, எதிர்காலத்தினர் அறிவதற்கு வாய்ப்பாக, அவனது சாதனை களையும் அவன் நிகழ்த்திய போராட்டங்களையும் சித்திரித் தனர். அவர்கள் அக்கம் பக்கத்துக் குலங்களின் தலைவர் களுக்குத் தூதர்களை அனுப்பியபோது, அவனது நினைவுக்கு உதவியாக, மரப்பட்டையிலோ உடைந்த பானைத்துண் டிலோ சித்திர எழுத்தைக்கீறி அவனிடம் கொடுத்தனர்.

உலகில், முதன்முதலில் தோன்றிய புத்தகம் நடுகல் மீது செதுக்கப்பட்டதாகும். முதன்முதலில் வரையப் பட்ட கடிதம், மரப்பட்டையில் கீறியதாகும்.

காலத்தையும் இடத்தையும் வெற்றிகொள்வதற்கு நமக்கு உதவுகின்ற தொலைபேசிகள், ரேடியோக்கள், ஒலிப் பதிவுக்கருவிகள் ஆகியவற்றைக் குறித்துப் பெருமைப் படுகிறோம். ஆயிரமாயிரம் மைலுக்கு அப்பாலுள்ள இடத்துக்கு ரேடியோமூலம் மனிதனது பேச்சை அனுப்பக் கற்றுக்கொண்டு விட்டோம். நாடாக்களிலும் ஒலிப் பதிவுத்தட்டுகளிலும் பதிவான நமது குரல்களைப் பன்னூறு ஆண்டுகளுக்குப்பின் வாழ்வோர் கேட்பார்கள். இது மகத்தான சாதனையே. ஆயினும் நமது சாதனையை மிகைப்படுத்தக்கூடாது.

நீண்ட நெடுங்காலத்துக்கு முன்பே, நமது முன்னோர்கள் மரப்பட்டையில் சேதி அனுப்புவதன் மூலம் இடத்தையும் நடுகல்லில் செய்தியைச் செதுக்கியதன் மூலம் காலத்தையும் முதன்முதலாக வென்றார்கள்.

பண்டைக்காலத்துச் சாதனைகளையும் போராட்டங்களையும் உணர்ச்சிமுனைப்போடு சித்திரிக்கும் பல நினைவுச் சின்னங்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. வாளும் ஈட்டியும் ஏந்திய வீரரது உருவங்கள் கல்லில் செதுக்கப் பட்டுள்ளன. வீடு திரும்பும் வெற்றி வீரர்களையும், அவர்களுக்குப் பின்னால் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டு செல்லும் கைதிகளையும் நினைவுச் சின்னங்களில் காண்கிறோம்; அந்தக் கைதிகளது கைகள் முதுகுக்குப் பின்னால் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கின்றன. ஆக சொற்களுக்குப் பதிலாக அமைந்துள்ள இந்தச் சித்திரங்களில் முதன்முதலாக, அடிமை முறையின் சின்னமான கைவிலங்கைக் காண்கிறோம்.

இந்தச் சின்னம், மனிதகுல வரலாற்றில் தொடங்கிய புதிய அத்தியாயத்தைப்பற்றி நமக்கு எடுத்துரைக்கிறது. அடிமை முறை அமையத் தொடங்கிவிட்டதை அந்தச் சின்னத்திலிருந்து நாம் உய்த்துணர்கிறோம்.

எகிப்து நாட்டுக் கோயில்களில் இதே போன்ற பல சித்திரச்சாட்சிகள் பிற்பாடு அமைந்ததை நாம் காண்கி

ரேம். கட்டிடம் அமைப்பதற்காகக் கற்களைத் தூக்கிக் கொண்டு செல்லும் அடிமைகளது வரிசையைக் காண்கி ரேம். அவர்களில் ஒருவன் தோள்மீது செங்கற்களின் பெட்டியை வைத்து இருகைகளாலும் பிடித்துக் கொண்டு நடக்கிறான். இன்னொருவன், நீண்டகோலின் இருமுனைகளிலும், நாம் தண்ணீர்ப்பானைகளைத் தொங்க விட்டுக்கொண்டு போவதைப்போல், செங்கற்களைக் கட் டித் தொங்கவிட்டுத் தோள்மீது கம்பைச் சமநிலைப்படுத் திக் கொண்டு போகிறான். கொத்தர்கள் சுவரை எழுப்பு கிறார்கள். அங்கே, ஒரு செங்கல்மீது மேலாள் ஒருவன் உட்கார்ந்திருக்கிறான். அவன் தன் முழங்கைகளை முழங் கால் மூட்டுகள்மீது ஊன்றிக்கொண்டிருக்கிறான்; கையில் நீண்ட கோலை வைத்திருக்கிறான். அவன் வேலை செய்யத் தேவையில்லை. பிறரிடம் வேலைவாங்குவதே அவனது பணி. இன்னொரு மேலாள், கட்டிட வேலை நடக்குமிடத் தில் அங்கும் இங்கும் நடந்துகொண்டிருக்கிறான். அவனது தடி அச்சுறுத்தும் வகையில் ஓர் அடிமையின் தலைக்கு மேல் ஓங்கியவாறு உள்ளது! அவன் விரும்பாத காரியத்தை அடிமை செய்துவிட்டான் போலும்!

## அடிமைகளும் சுதந்திரர்களும்

"உள்ளியிலிருந்து ரோஜா வளர்வதுமில்லை; அடிமைத் தாய்வயிற்றில் சுதந்திர புருஷன் பிறப்பதுமில்லை."

இவ்வாறு, தியோக்னிஸ் என்ற கிரேக்க நாட்டுக்கவி எழுதினர்; அடிமை ஏற்பாடு நிலையாக அமைந்த பின்னர் அவர் எழுதிய வரிகள் இவை.

ஆனால், அதற்கு முற்பட்ட காலத்தில், அடிமைகள் இழிந்த இனத்தினராகக் கருதப்படவில்லை. அப்பொழுது சுதந்திரர்களும் அடிமைகளும் ஒரு பெரிய குடும்பம்போல் சேர்ந்து வசித்தனர்; சேர்ந்தே வேலை செய்தனர். இந்தக் குடும்பக்கம்யூனுக்குத் தலைவராகவும் அதிபதியாகவும் குடும்பத்தந்தை விளங்கினர். அவரது புதல்வர்களும் அந்தப்

புதல்வர்களது மனைவிமக்களும், ஆண், பெண் அடிமைக ளும் அவருடன் ஒரே வீட்டில் வசித்தனர். அவர்கள் அனைவரும் எல்லாக் காரியங்களிலும் அவரது கட்டளைக்கு இணங்க நடந்துகொண்டனர். கீழ்ப்படியாத மகனையும் கீழ்ப்படியாத அடிமையையும் 'பிரம்பாலடித்துத்' தண்டிப் பதற்குத் தந்தைக்கே உரிமை இருந்தது.

பண்டைக் காலத்து மரபுக்கு இணங்கக்கிழவனுயிருந்த அடிமை தன் எஜமானனை 'மகனே' என்று விளித்தான்; எஜ மானனும் கிழ அடிமையைத் 'தந்தையே' என்று விளித் தான்.

நீங்கள் 'ஒதிஸ்ஸி' என்ற நூலைப்படித்திருந்தீர்களானுல், அதில் வரும் பன்றி இடையனுன ஊமியஸ் என்ற கிழ வனை மறந்திருக்க முடியாது. அவன் தன் எஜமானனு டன் ஒரே மேஜையில் அமர்ந்து உண்டு குடித்தான் என் பதையும் அது ஓர் இயற்கையான செயலாகவே வர்ணிக்கப் பெறுவதையும் நீங்கள் அறிவீர்கள். 'ஒதிஸ்ஸியம்' என்ற காவியத்தைப் பாடிய கிராமியப் பாடகர்களும் நாடோடிப் பாணர்களும், குலத்தலைவனைக் குறிப்பிடுவதைப்போல் பன்றி இடையனையும் 'தெய்வங்களுக்கு நிகரானவன்' என்று குறிப்பிடுகிறுர்கள்.

ஆனுல் இது முற்றிலும் உண்மையான சேதியல்ல. பன்றி இடையனுன ஊமியஸ், தெய்வங்களுக்கோ எஜ மானனுக்கோ நிகரானவனுக இல்லை. அவன் வேலை செய்யவேண்டி யிருந்தது. எஜமானனே இச்சைப்பட் டால் வேலை செய்யலாம்; இல்லாவிட்டால் வாளாவிருக்க லாம். குடும்ப உறுப்பினனைவிட அடிமை அதிக வேலை செய்தான்; ஆனுல் குறைந்த பயனை அடைந்தான். அடிமை உடைமைப் பொருளாக இருந்தான்; சுதந்திரனே உடை மைக்கு அதிகாரியாக இருந்தான்.

எஜமானன் இறந்தவுடன், கால்நடைகளுடனும் இதர உடைமைகளுடனும் அடிமைகளும் இறந்தவனின் புதல்வர்களுக்கு உரியவரானுர்கள்.

முன்னாளில் நிலவிய சமத்துவம், இந்தக் குடும்பக்கம்யூனில் இல்லாதொழிந்தது. இங்கு தந்தை தன் மக்கள்மீது ஆட்சி புரிந்தான்; கணவன் மனைவிமீது அதிகாரம் செலுத்தினான்; மாமனார் மருமகளை (மகனது மனைவியை) அதிகாரம் செய்தார். வயதில் மூத்தப் புதல்வர்களை மணந்த பெண்கள் வயதில் இளைய புதல்வர்களை மணந்த பெண்கள்மீது ஆதிக்கம் செலுத்தினர். ஆனால் எல்லோருக்கும் கீழ்ப்பட்ட நிலையில் அடிமை இருந்தான்.

குலங்களிடையிலும், கம்யூன்களிடையிலும் முன்னாளில் நிலவிய சமத்துவமும் இல்லாதொழிந்தது. சில குலங்களிடமும் சில கம்யூன்களிடமும் அதிகமான கால்நடைகள் இருந்தன; வேறு சில குலங்களிடமும் கம்யூன்களிடமும் குறைவான கால்நடைகளே இருந்தன. கால்நடைகள் மிகுந்த மதிப்பு உடையவை. அவற்றைக் கொடுத்துத் துணியும் ஆயுதங்களும் பெறமுடிந்தது. ஆதிநாணயங்கள் எருதுவடிவத்தில் செய்யப்பட்டன என்பது தற்செயலான நிகழ்ச்சியல்ல.

ஆனால் கால்நடையைவிடவும் அடிமைக்கு அதிக மதிப்பு இருந்தது. அவன் பன்றிகளையும் பசுக்களையும் ஆடுகளையும் கவனித்துக்கொண்டான். மாலையில் அவன் வலுவான வேலியால் சூழப்பட்ட இடத்தில் இருந்த மாட்டுக்கொட்டகையிலும் ஆட்டுக்கொட்டிலிலும் பன்றிப் பட்டியிலும் அந்தந்தப் பிராணிகளை அடைத்தான். அறுவடை செய்வதிலும், கொடிமுந்திரிக் கனிகளிலிருந்து சாறு பிழிவதிலும் பாலாடைகளிலிருந்து வெண்ணெய் எடுப்பதிலும் அடிமை உதவினான். களஞ்சியங்களில், பொன்னிறத் தானியம் நிறையக் குவிந்தது. நறுமணம் மிகுந்த எண்ணெயால் மட்ஜாடிகள் நிறைந்திருந்தன.

அடிமை சுதந்திரமனிதனுக்கு உதவி செய்தான். ஆனால் சிரமம் மிகுந்த வேலை அடிமையின் தலையில்தான் விழுந்தது.

போர் லாபகரமானதாயிற்று. எவ்வாறெனில், போரில் அடிமைகளைப் பெறமுடிந்தது; அடிமைகள் செல்வத்தைத் திரட்டிக்கொடுத்தனர். எனவே, கால்நடை வளர்ப்பையும் பயிர்த்தொழிலையும் அடிமைகளது பொறுப்பில் விட்டு விட்டுச் சுதந்திரமனிதர்கள் போர்மேல் சென்றனர்.

## கோட்டையை முற்றுகையிடல்

போரினுல் ஜனங்களுக்கு வேலை அதிகமாயிற்று. தாக்குதலை நடத்துவதற்காக வாட்களையும் ஈட்டிகளையும் போர்த்தேர்களையும் அடைய வேண்டியிருந்தது.

போர்த்தேரில் பூட்டிய இருபுரவிகள், சமர்க்களத்தில் சுழன்று சுழன்று சென்றன. ஆனுல் போர்முறையில், தாக்குதலும் தற்காப்பும் பின்னிப்பிணைந்தவை. வீரர்கள் தலைக்குக் காப்பு அணிந்துகொண்டும், இடதுகையில் கேடயத்தை ஏந்திக்கொண்டும் களம் புகுந்தனர்; இவ்வாருக, எதிரியின் ஈட்டி வாள்களிலிருந்து தற்காப்புத் தேடினர். அவர்கள் சமுதாயப் பேரில்லங்களைச் சுற்றிப்பெரிய கருங் கற்களைக்கொண்டு வலுவான மதில்களை அமைத்தனர். குழுவிற்கு எந்த அளவுக்குச் செல்வமும் சக்தியும் அதிக மாயிருந்ததோ அந்த அளவுக்கு அக்குழுவினர் தம்மைப் பாதுகாத்துக்கொள்ளும் பணியில் அதிகமாக ஈடுபட வேண்டியிருந்தது; ஏனெனில், போராடிக் காப்பாற்று வதற்குத் தகுதியான பொருட்கள் அவர்களிடம் அதிகமா யிருந்தன. உயரமான குன்றுகளின்மேல் பிரமாண்டமான கோட்டை வீடுகள் அமைந்தன. அவற்றில் பல அறைக ளும் சேமிப்பு விடுதிகளும் இருந்தன. அவற்றின் மதில் களில் காவலரண்கள் அமைக்கப்பட்டிருந்தன. அவை வலுமிகுந்த கதவுகளைப் பெற்றிருந்தன.

கோட்டை மதில்மீது நின்று நோக்கினுல், பலமைல் தூரத்துக்குச் சுற்றுவட்டாரம் புலனுயிற்று. சமநிலத்தில், புழுதிப்படலமோ ஈட்டிகளின் பிரகாசமோ புலப்பட்டால், ஜனங்கள் கோட்டையினுள்ளிருந்து கொண்டு தற்காத்துக்

கொள்வதற்குத் தயாரானுர்கள். உழவன் தன் எருதுகளைக் கோட்டைக்குள் விரட்டினுன். இடையனும் தனது மந்தையை விரைவு படுத்திக் கோட்டைக்குள் சேர்த்தான். சகல நபர்களும் பிராணிகளும் உள்ளே வந்தபின், கோட்டைக் கதவுகள் மூடப்பட்டன. மதில்மீதும், கண்காணிப்பதற்கேற்ற இதர இடங்களிலும், அம்புகளை ஏவுதற்கு ஆயத்தமான வீரர்கள் எதிரியின் வருகைக்காகக் காத்திருந்தனர்.

முற்றுகையிடுவோர் கோட்டையை நெருங்கியவுடன், மதிலுக்கு வெளியே தம் முகாம்களை அமைத்துக்கொண்டனர். கோட்டையைப் பிடிப்பது எளிதல்ல வென்பதையும் அதன் உயர்ந்த மதில்கள் உடைந்து விழுவதற்குப் பல மாதங்கள் காத்திருக்க வேண்டுமென்பதையும் அவர்கள் அறிந்திருந்தனர்.

ஒவ்வொரு நாள் காலையிலும், கிரீச்சென்ற ஓசையுடன் கோட்டைக்கதவுகள் திறந்தன. குழுவின் தலைவிதியைத் தீர்மானிப்பதற்கான போராட்டத்தை நடத்துவதற்காகத் தற்காப்பு வீரர்கள், ஈட்டியும் கையுமாய்த் திறந்த வெளிக்கு விரைந்தனர். குதிரை வால்களால் ஒப்பனை செய்யப் பட்டவையும் பிரகாசமானவையுமான எதிரியின் தலைக்காப்பின் மீது அவர்கள் ஈட்டிகளை வேகத்தோடு எறிந்தனர். கொல்வதையும் கொல்லப் படுவதையும் பொருட்படுத்தாமல், களைத்துப்போகும் வரையில் போராடினுர்கள்.

தம் வீடுவாசலையும் மனைவி மக்களையும் பாதுகாக்கிறோம் என்ற எண்ணத்தால் உந்தப்பட்டுத் தற்காப்பு வீரர்கள் உத்வேகத்துடன் போராடினர். மாற்றுக்கட்சிக்காரர்களோ, கிடைப்பதற்கரிய கொள்ளைப் பொருளைப்பெற வேண்டுமென்ற பேரார்வத்தால் தூண்டப்பட்டுப் போராடினுர்கள். இரவில் நேரமானபின், இறந்தவரின் சவங்களைக் களத்தில் விட்டுவிட்டுத் தற்காப்பாளர்கள் இருட்டின் பாதுகாப்பில் வாபஸாயினர். பொழுது புலரும்வரையில் போர் ஓய்ந்திருந்தது.

நாட்கள் உருண்டோடுகின்றன. கோட்டையி லுள்ளவர் முற்றுகையிடுவோரை வீரத்தோடு எதிர்த்துப் போராடுகின்றனர். ஆனால் பசியோ எதிரியின் வாளையும் அம்பையும் விடப்பயங்கரமாக வதைக்கிறது.

தானியமிருந்த தொட்டியில் தூசியே எஞ்சியிருக்கும் பொழுது, எண்ணெய் ஜாடிகளில் உள்ள சிற்றளவு எண் ணெயும் தனித்தனியான துளிகளாகச் சொட்டும்பொழுது, கோட்டைக்குள் புலம்பலின் ஒலி எழுகின்றது: குழந்தை கள் பசியைப் பொறுக்க முடியாது கதறுகின்றன. ஆனால் ஆடவரின் கோபத்துக்கு இலக்காக நேரிடுமென்று அஞ்சும் பெண்கள் குழந்தைகளின் கண்ணீரை ரகசியமாகத்துடைக் கிறார்கள்.

ஒவ்வொரு நாள் போராட்டத்துக்குப் பிறகும், காவலர் படை சுருங்குகிறது. கடைசியில் ஒருநாள், முற்றுகை யிடுவோர், பின்வாங்கும் தற்காப்பாளரைத் துரத்திக் கொண்டு வந்து கோட்டையினுள் நுழைகிறார்கள். அவர் கள் கோட்டையின் உயரமான மதில்களைத்தகர்த்து விடு கின்றனர். ஜனங்கள் உழைத்து உண்டு வாழ்ந்த இடத்தில், இடிபாடுகளும் சவங்களுமே எஞ்சியுள்ளன. வெற்றி வீரர்கள், சுதந்திரர்களாயிருந்த ஆடவரையும் பெண்டிரை யும் குழந்தைகளையும் அடிமைப் படுத்துவதற்காகக் கைது செய்து கொண்டு செல்கிறார்கள்.

## மாண்டவரின் சாட்சியம்

பலதேசங்களின் சமவெளிகளில், ஆங்காங்கே நீளமான மேடுகள் தென்படுகின்றன. அவற்றின் உயரம் குறைவு. சில இடங்களில் ஒரே ஒரு பரந்தமேடு தனியாகத் தென் படுகிறது வேறுசில இடங்களில், சிறு குன்றுகளின் வரிசையைப்போல் பல மேடுகள் தொடர்ச்சியாக உள்ளன.

பழம் பொருளாராய்ச்சியாளர்கள் இவற்றைச் சவச்சேம மேடுகள் என்பர். இந்த மேடுகளைப் பற்றிப் பலநாடு களிலுள்ள ஜனங்களுக்கு யாதும் தெரியவில்லை. பொதுநிலை

கடந்த விஷயத்தைக் குறித்துக் கதைகள் தோன்றி நிலைப்பது இயல்பு. அந்த விஷயம் தொன்மையானதாகவும் இருந்து விட்டால், கதைக்குப் பஞ்சம் உண்டா ? எனவே இந்த மேடுகளைப்பற்றிப் பல கதைகள் நிலவுகின்றன.

நாம் சவச்சேம மேடுகளை அகழ்ந்தெடுத்து ஆராய்ச்சி நடத்தியுள்ள பழம் பொருளாராய்ச்சியாளர்களை வினவுவோம். பல நூற்றாண்டுகட்கு முன் என்ன நிகழ்ந்தது என்பதை அவர்கள் கண்டு பிடித்திருக்கின்றனர்.

இந்தச் சவச்சேமமேடுகள், நீண்ட நெடுங்காலத்துக்கு முன் சமவெளியில் வாழ்ந்த மக்களின் கல்லறைகளே என்று அவர்கள் கூறுகிறார்கள். அவர்கள் அந்த மேடுகளைத் தோண்டிப்பார்த்தனர். ஆழத்தில், மனிதரின் எலும்புக் கூடுகளையும் மண் பாத்திரங்களையும் கல்லாலோ வெண்கலத்தாலோ செய்த கருவிகளையும் சில குதிரை எலும்புகளையும் கண்டனர்.

எலும்புக் கூட்டுடன் உள்ள பொருட்கள் எங்கிருந்து வந்தன ? அவை உயிர் நீத்தாருக்கு உறவினர்கள் கொடுத்தவையே. இறந்தவரின் நெடுந்தொலைப் பிரயாணத்துக்கு உதவியாக இவற்றைக் கொடுத்தனர். ஒருவன் செத்த பிறகும் உண்ணவும் உழைக்கவும் வேண்டியிருக்குமென்றும், பெண்ணுக்கு நூற்புக்கதிரும் ஆணுக்கு ஈட்டியும் இறந்த பிறகும் தேவைப் படுமென்றும் அக்காலத்து ஜனங்கள் நம்பினார்கள்.

மிகத்தொன்மையான மேடுகளில் பார்த்தால், சில கல்லறைகளில், இறந்தவனின் சகல உடமைகளும் அவனோடு புதைக்கப் பட்டுள்ளன. ஆனால் அந்த ஆதிகாலத்தில் மனிதனுக்குச் சிற்சில உடைமைகளே இருந்தன. அப்பொழுது, 'என்னுடையது' என்று உரிமை பாராட்டக் கூடியதாக மனிதனிடம் என்ன இருந்தது ? கழுத்தில் கட்டியதாயித்து இருந்தது ; அல்லது விரோதியைக் கொல்வதற்குப்பயன்பட்ட ஈட்டி இருந்தது. வீட்டில் இருந்தவையெல்லாம் பொது உடைமையாகக் கருதப்பட்டன.

ஏனெனில், வீடு குழு முழுவதற்கும் உரியதாக இருந்தது. எனவே, மிக்க தொன்மையான சவச்சேம மேடுகளில், ஏழைக்கல்லறையும் இல்லை, பணக்காரக்கல்லறையும் இல்லை. இறந்தவர்கள் அனைவரும் ஒரு நிகரானவர்களே.

பிற்பாடுதான், இறந்தவர்களிடையே ஏழை–பணக்காரன் வேற்றுமை தோன்றுகிறது.

டான் நதிக்கரையில், மூன்று வகையான கல்லறைகளைக் கொண்ட சவச்சேம மேடு கண்டு பிடிக்கப்பட்டது. முதல்வகை, பணக்காரர்களுடையவை; இரண்டாவது வகை, நடுத்தரமான நிலையிலிருந்த வசதிக்காரர்களுடையவை; மூன்றாவது வகை, ஏழைகளுடையவை.

மிகப்பெரிய கல்லறையின் நடுவில் ஒரு பெரிய குழி இருந்தது. அந்தச் சவக்குழியில், வர்ணம் பூசிய கிரேக்க நாட்டு மலர்க்குவளைகளும் பொன்னால் சிங்காரிக்கப்பட்ட உடற்கவசங்களும் கைதேர்ந்த வினைத்திறமையுடன் விளங்கிய குத்துவாட்களும் இருந்தன.

நடுவாந்திர அளவில் அமைந்த கல்லறைகளில், தங்கம் சம்பந்தப்பட்ட பொருட்களைக் காண்பது அரிதாயிருந்தது. வண்ணப் பூச்சுடன் கூடிய மலர்க்குவளை இல்லவே இல்லை. ஏழைகளின் கல்லறைகளைப்பற்றிக் குறிப்பிடத் தேவையில்லை. மெருகு எண்ணெய் பூசிய பகட்டான கிண்ணங்களோ உயர்ந்த வேலைப்பாட்டுடன் கூடிய உடற்கவசங்களோ ஏழையின் சவக்குழியில் இருக்குமென்று எதிர்பார்க்க முடியாது.

இந்த இடுகாட்டில் இதர கல்லறைகளைக் காட்டிலும் சின்னஞ்சிறிய சவமேடுகளே அதிகமாயிருந்தன. இவற்றின் சிறுகுழிகளில், சவத்தின் வலது கைப்புறத்தில் ஈட்டி கிடந்தது; இடது கைப்புறத்தில், இறந்தவன் தாகசாந்தி செய்து கொள்வதற்கு உதவும் பொருட்டு ஒரு குவளை வைக்கப்பட்டிருந்தது. ஏழை பிணக்குழியிலும் ஏழையாகத்தான் இருந்தான்.

"இடுகாட்டு அமைதி நிலவியது" என்று கூறுகிறோம். ஆனால் இந்தச் சவக்குழிகள் மௌனம் சாதிக்கவில்லை. உலகத்தில் முதன் முதலாக ஏழைகளும் பணக்காரர்களும் தோன்றிய காலத்தைப்பற்றி இவை தெட்டத்தெளிவாக நமக்கு எடுத்துரைக்கின்றன. இறந்தவர்கள், வாழ்ந்தவர்களைப்பற்றிப் பேசுகிறார்கள்.

கல்லறை நிலத்திலிருந்து கிளம்பி, அண்மையிலுள்ள குடியிருப்புக்குப் போனால், அங்கே முன்காலத்தில் குடிகொண்டிருந்த பெருஞ் செல்வத்தின் அறிகுறிகளையும் ஏழ்மையின் அறிகுறிகளையும் காணலாம். ஆற்றங்கரையில் அமைந்திருந்த அந்தக் கிராமத்துக்கு இரண்டு மதில்கள் இருந்தன என்பதைப் பழம் பொருளாராய்ச்சியாளர்கள் கண்டு பிடித்துள்ளனர். வெளிப்புறத்தில் கிராமத்தைச் சுற்றி அமைந்த மதில் ஒன்று; கிராமத்தின் நடுவிலிருந்த வட்டமான பாகத்தைச் சுற்றி அமைந்த மதில் இன்னொன்று. இந்த மையத்து வட்டத்தினுள் அவர்கள் பல-விலை உயர்ந்த பாத்திரங்களையும் மலர்க்குவளைகளையும் கண்டு பிடித்தனர்; இவை யெல்லாம் நெடுந்தொலையிலுள்ள கிரீஸிலிருந்து வந்தவை. மையப்பகுதிக்கு வெளியே, அதாவது உட்புற மதிலுக்கும் வெளிப்புறமதிலுக்கும் இடையே, அம்மாதிரியான பொருட்கள் கிடைக்கவில்லை. இங்கு உள்ளூரில் செய்த சாமானியமான மட்பாத்திரங்களது உடைசல்களே கிடைத்தன. இங்கு வாழ்ந்த மக்கள், சித்திரங்கள் தீட்டப்பெற்ற கிண்ணங்களையோ மெருகு எண்ணெய் பூசிப் பளபளப்பாயிருந்த தட்டங்களையோ அன்னிய நாட்டிலிருந்து வாங்கக் கூடிய நிலையில் இருந்தவர்களல்ல.

பிற்காலத்தில், இந்த ஜனங்களுடைய பிணக்குழிகள் மீது உயரமான செய்கரைகள் அமைந்தன. மண்ணில் அமைந்த அந்தச் செய்கரைகள், இன்றும் சமநிலத்திடையே எடுப்பாகத் தெரிகின்றன.

ஆக, இடுகாடுகள் அவற்றில் புதைக்கப்பட்ட மக்களைப் பற்றி நமக்குக் கூறுகின்றன. சில சந்தர்ப்பங்களில்

அவை பயங்கரமான உண்மைகளையும் வெளியிடுகின்றன. எஜமானனுடன் புதைக்க வேண்டுமென்பதற்காகக் கொல் லப்பட்ட அடிமைகளைப் பற்றியும், உயிர்நீத்த கணவன் மாருடன் சவக்குழிக்குள் புகவேண்டுமென்று நிர்ப்பந் திக்கப்பட்ட பெண்களைப் பற்றியும் இடுகாடுகள் நமக்கு எடுத்துரைக்கின்றன. செல்வம் மிகுந்த குழுவுக்குத் தலைவ னுயிருந்த தந்தையின் கொடுமையைப் பற்றிப் புத்தகங் களையும் விட அதிகமான உணர்ச்சி முனைப்போடு அவை பேசுகின்றன. அந்தக் குழுத்தலைவன், பொன்னாலும் வெண்கலத்தாலும் செய்த பொருட்களைப்போலவே மனைவி களையும் அடிமைகளையும்கூடத் தன் உடைமைகளாகக் கருதினுன். எனவே, அவன் இறந்தபொழுது அவர் களையும் தன்னுடன் பிணக்குழிக்கு இட்டுக்கொண்டு போனுன்!

## மனிதன் புதிய உலோகத்தைப் படைக்கிருன்

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகப் பிணக்குழிகளின் பேரிருளிலும் குடியிருப்புக் கோட்டைகளின் இடிபாடு களிலும் கிடந்த அரும்பொருட்கள் இப்பொழுது அரும் பொருட் காட்சியகங்களில் பாதுகாப்பாக உள்ளன. பல் லாண்டுகளாக மனிதனுக்குக் கட்புலனுகாது மறைந்து கிடந்த இந்தத் தொல்காலத்துப் பொருட்களை நாம் ஒவ் வொருவரும் இப்பொழுது கண்கூடாகப் பார்க்க முடி கிறது.

பார்வையாளர்கள் அரும்பொருட் காட்சியகத்தின் கண்ணுடிப் பேழைகள் முன்னுல் நின்று அந்தப் பேழை களிலுள்ள தங்கக்கைப்பிடியுடன் கூடிய வாள்களையும், நுண்ணியமான வினைத்திறனுடன் விளங்கும் முறுக்குச் சங்கிலிகளையும், வணக்கத்துக்கு உரித்தான பொன்னில் செய்த உருண்டைமணிகளையும், எருதுவடிவிலோ கலை மான் வடிவிலோ செய்த வெள்ளிப்பாத்திரங்களையும் நீண்ட நேரம் நோக்குகின்றனர்.

இவை ஒவ்வொன்றையும் செய்வதற்கு எவ்வளவு பாடுபடவேண்டி யிருந்தது! எவ்வளவு கலைத்திறன் தேவைப்பட்டது!

வெண்கல வாளை எளியமுறையில் செய்வதற்கே பல நாட்களாயிற்று. முதலில் அவர்கள் கனியத்தைத் தோண்டி எடுக்கவேண்டியதாயிற்று. தூயநிலையில் இருந்து செப்புக் கட்டிகள் அங்கும் இங்கும் காணப்பட்ட காலம் மறைந்து விட்டது. அவர்கள் தீக்கல்லுக்காகப் பூமியினுள் சென்ற மாதிரியே, செம்புக்கனியத்துக்காகவும் போனார்கள். ஆழமாக அமைந்த சுரங்கவழிகளின் அடிமட்டத்தில் அவர்கள் பிக்காசுகளால் கனியத்தை வெட்டி எடுத்தனர்; அதைத் தோல்பைகளில் மேலே கொண்டுவந்தனர்.

கனியம் எடுப்பதை எளிதாக்குவதற்காக, அவர்கள் சுரங்கத்தினுள் சொக்கப்பனை கொளுத்தினர். கற்சுவர்கள் வெப்பமானவுடன் அவற்றின்மீது தண்ணீரை ஊற்றினர். தண்ணீர் சீறி நீராவிப் படலங்களாக மாறியது; கல்வெடித்துச் சிதறியது. இவ்வாறாக, நெருப்பு சுரங்கத் தொழிலாளியின் பிக்காசுக்கு உதவியது.

அந்த நாட்களில், சுரங்கமே எரிமலைமாதிரி இருந்தது. எரிமலை வாயிலிருந்து வருவதைப்போல், சுரங்க வாயிலிருந்து நீராவிப்படலங்கள் வெளிவந்தன. (எரிமலை என்று பொருள்படும்) வல்கானோ (VOLCANO–ஆங்கிலச்சொல்) என்பதே பண்டைக்காலத்துக் கொல்லனது தெய்வத்தின் பெயரான வல்கன்* என்பதிலிருந்து உண்டானதாகும்.

அவர்கள் கனியத்தை எடுத்தபின், அதை உருக்கி உலோகத்தைப் பிரித்தெடுத்தனர். இதற்கும் மிகுந்த திறமை தேவைப்பட்டது. உலோகம் கடினத்தன்மை

---

வல்கன்: பண்டைக்காலத்து ரோமானியரது அக்கினித் தேவன். ஜூபிடர் என்ற தலைமைத் தேவனுக்கும் அவனது தேவியான ஜூனோவுக்கும் பிறந்தவன். உலோக வேலைக்கலைக்கு உரியவன். தேவர்களது உடற்கவசங்களை அவன் செய்து கொடுத்தான் என்பது கதை. இவனே கொல்லர்களின் தொழில்முறைத் தேவன்-மொர்.

பெறவேண்டு மென்பதற்காகவும், அதைக்கொண்டு தாம் விரும்பிய பொருட்களை எளிதாக வார்த்தெடுக்க வேண்டு மென்பதற்காகவும் அவர்கள் செப்புக்கனியத்தை உருக்கும் பொழுதே அத்துடன் வெள்ளீயக் கனியத்தையும் சேர்த்தார்கள். இதன்மூலம், செம்பும் வெள்ளீயமும் சேர்ந்த உலோகக் கலவையை அடைந்தார்கள். இது தூயநிலையிலுள்ள செம்பு அல்ல; இது புதிய தன்மைகளை யுடைய புதிய உலோகமாகும்; மனிதன் உண்டாக்கிய இதுவே வெண்கலமாகும்.

திருத்தமுறாத கற்கருவிகளுக்குரிய பழங்காலத்தில், ஒரு தொழிலாளியின் வேலையை இன்னொருவன் எளிதாகச் செய்யமுடிந்தது. ஒரு தொழிலில் தேர்ச்சி பெறுவது கடின மானதாயில்லை. வேடர்குலத்திலிருந்த சகல ஆடவரும் வேடராயிருந்தனர். ஒவ்வொரு வேடனும் தனக்குத் தேவையான வில்லையும் அம்புகளையும் செய்துகொள்ள முடிந்தது.

ஆனால் இளமரத்தை வெட்டி வளைத்து அதன் இரு முனைகளையும் கயிற்றால் இணைத்துக்கட்டுவது ஒன்று; கனியத்துண்டிலிருந்து பிரகாசமான வெண்கல வாளைச் செய்வது வேறொரு விஷயம். இப்பொழுது, உடற்கவசம் செய்யும் கலையைப் பயில்வதற்குப் பல்லாண்டுகள் தேவைப் பட்டன. மக்கள் தமது தந்தைமார்களிடமிருந்து அதைக் கற்றுக்கொண்டனர். தொழில் திறமை என்பது ஒரு குழுவின் உடைமையாயிற்று; அதன் பரம்பரைச் செல்வ மாயிற்று. சில இடங்களில், சமுதாயத்தின் உறுப்பினர் அனைவருமே குயவர்களாகவோ போர்க்கலங்களை உற்பத்தி செய்வோராகவோ செம்பு வேலை செய்வோராகவோ இருந்தனர். அந்தச் சமுதாயங்களின் புகழ் நெடுந்தூரத் துக்குப் பரவியது.

## எனது ! உனது !

முதலில் ஒவ்வொரு கைத்தொழில் வினைஞனும் தனது சமூகத்துக்காகவே, தனது கிராமத்துக்காகவே, வேலை

செய்தான். ஆனால் காலப்போக்கில், குயவரும் போர்க் கருவி செய்தோரும், தானியத்துக்காகவோ துணிக்கா கவோ, இதர கைத்தொழில் பண்டங்களுக்காகவோ தமது பொருட்களைப் பண்டமாற்று செய்யத் தொடங்கினர். பழைய குழு ஏற்பாடு நொடிக்கத் தொடங்கியது.

முன்னாளில், கிராமத்தில் அனைவரும் சரிநிகர் சமான மாக விருந்தனர். இப்பொழுது, ஒரு வெடிப்பு, பணக் காரக் குழுவுக்கும் ஏழைக் குழுவுக்கும் இடையே எல் லைக் கோடு கிழித்தது. இன்னொரு வெடிப்பு, கைத் தொழில் வினைஞர்களை உழவர்களிடமிருந்து பாகு படுத்தியது.

கைத்தொழிலாளி சமுதாயத்துக்காக வேலை செய்த வரையில், சமூகம் அவனுக்கு உணவு அளித்தது. ஜனங் கள் சேர்ந்து வேலை செய்தனர்; தாம் உற்பத்தி செய்த தைப் பங்கிட்டுக் கொண்டனர். ஆனால் கைத்தொழிலாளி தன் வாட்களையோ மட்பாண்டங்களையோ தானே பண்ட மாற்று செய்தபொழுது, அவன் அதன் மூலம் தனக்குக் கிடைத்த தானியத்தையோ துணியையோ பிற பொருட் களையோ தனது குழுவினருடன் பங்கிட்டுக்கொள்ள விரும்பவில்லை. தானும் தன் மக்களுமே அயலார் உதவி யின்றி அந்தத் தானியத்தையோ துணியையோ வேறு பொருளையோ சம்பாதித்துள்ளதாக அவன் கருதினான்.

குடும்பங்கள் தனித்தனியான வீடுகளில் வசிக்கத் தொடங்கின. கிரேக்க நாட்டில், மைஸீனேயிலும் டைரின் ஸிலும் * கண்டு பிடிக்கப்பட்டுள்ள கிராம இடிபாடுகள் இதைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன.

செல்வம் மிகுதியாகப் பெற்றிருந்த குடும்பம் உயர்ந்த குன்றின் உச்சியில், வலுவான மதில்களுடன் கூடிய வீட் டில் வாழ்ந்தது. அவர்கள் தமது செல்வத்தைக் கற்சுவ

---

* மைஸீனேயும் டைரின்ஸும் கிரேக்க நாட்டின் கீழ்க் கரையோரத்தில் உள் ளவை. இவ்விடங்களில் இருந்த பூர்வீக நாகரிகங்கள் கண்டுபிடிக்கப் பட்டி ருக்கின்றன.

ருக்குப் பின்னால் பதுக்குவதற்குக் காரணம் இருந்தது! அங்கு குலத்தின் சேனைத்தலைவனும் அவனது புதல்வர்களும் அவர்களது மனைவி மக்களும் வசித்தனர். கீழே இருந்த பள்ளத்தாக்கில், கடைநிலையிலிருந்த உழவர்கள் சிறு குடிசைகளில் வாழ்ந்தனர். சுற்றுப்புறத்தின் தாழ்வான குன்றுகள்மீது போர்க்கருவி செய்வோர், குயவர், செம்புவேலை செய்வோர் ஆகிய கைத்தொழிலாளரின் வீடுகள் இருந்தன.

இத்தகைய நகரத்தில் ஜனங்கள் முன்போல் சரிநிகரானவர்களாக வாழவில்லை. சாதாரண மக்கள், மிகுந்த சக்தியை உடைய தலைவனது செல்வத்தைப் பற்றி எண்ணி ஏங்கினர்; அவன்பால் மிக்க மரியாதையோடு நடந்துகொண்டனர். தெய்வங்களே அவனது கட்சியில் இருந்தனரென்பது அவர்களது நம்பிக்கை. புரோகிதர்கள் இந்த நம்பிக்கையை இளம்பருவத்திலிருந்தே திரும்பத் திரும்பச்சொல்லி வேரூன்றச் செய்திருந்தனர்.

விவசாயத்தில் ஈடுபட்ட உழைப்பாளிகள், கைத்தொழிலாளியையோ சுரங்கத் தொழிலாளியையோகூடத் தம் சகோதரராகக் கருதவில்லை. புகையால் கறுத்த முகத்தை உடைய சுரங்கத் தொழிலாளி, வாய்வழியே தீயைக்கக்கும் சுரங்க வழிக்குள் சென்று செம்பு எடுத்து வந்தான் என்றால் அவன் ஏதோ ஒருவகை மந்திரவாதியாகத்தான் இருக்க வேண்டுமென்று அவர்கள் நம்பினர். அங்கே, அந்தச்சுரங்கத்தினுள் என்ன நிகழ்ந்ததோ, கண்டது யார்? அவன் அந்தக் கனியத்தை எப்படி அடைந்தான்? அவன் எங்கே தோண்டவேண்டு-மென்று யாரோசொல்லிக் கொடுத்திருக்க வேண்டும். அற்புதம் நிகழ்த்தி அதனைச் செம்பு உலோகமாகவோ வெண்கலமாகவோ மாற்றுவதற்கும் யாரோ உதவி செய்திருக்க வேண்டும். சுரங்கத் தொழிலாளி அந்த அடிநிலத் தொளையில் ஏதோ மாயசக்திபடைத்த ரட்சகர்களை அடைந்திருக்க வேண்டும். எனவே, அவனிடமிருந்

தும் அவனது சுரங்கத்திடமிருந்தும் எட்டி நிற்பதே சாதாரண மக்களுக்கு அழகு.

இவ்வாறுதான், கிரேக்க நாட்டில் மட்டுமல்ல, எல்லா நாடுகளிலும் மக்கள் எண்ணினார்கள். மிகத்தொன்மை யான காலத்திலிருந்து மந்திரவாதி, கொல்லர்களைப் பற்றிய கதைகள் வழங்கி வந்துள்ளன. ஜனங்கள் ஏழ்மையைப் பற்றியும் செல்வத்தைப் பற்றியும் அக்காலத்தில் எண்ணி னார்க ளென்பதை உணர்த்தக்கூடிய சொற்கள் இன்றும் தொடர்ந்து வழக்கிலுள்ளன. ஏழை பணக்காரன் வேற்று மை எவ்வாறு ஏற்பட்ட தென்பது அவர்களுக்குப் புரிய வில்லை. ஒருவனது விதி தெய்வங்களால் முன்கூட்டியே நிச்சயிக்கப் படுவதாக அவர்கள் எண்ணினர். தெய்வங்கள் பணக்காரர்களை ஆதரிப்பதாகவும் ஏழைகளைத் துன்புறுத்து வதாகவும் அவர்கள் கருதினர்.

## அத்தியாயம் 7

# மனிதன் வளர்கிறான்

### விஞ்ஞானத்தின் தோற்றம்

உலகம் முழுவதும் மாயமந்திர மயமாக விருப்பதாகத் தொல்காலத்து மனிதன் எண்ணினான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை; அவனால் எதையும் விளக்க முடியவில்லை. ஓர் அடி நடந்தாலும், ஒருமுறை கரத்தை வீசினாலும், நற்பேற் றையோ அவப் பேற்றையோ உறுதி செய்யக்கூடிய மாய சக்திகள் தோன்றலா மென்று அவன் நினைத்தான்.

அக் காலத்தில், அவர்கள் சிறு அளவே அனுபவம் பெற் றிருந்தனர். இரவுக்குப்பின் பகலும் மாரிக்காலத்துக்குப் பின் வசந்தகாலமும் நிச்சயம் வரும் என்பதைக் கூட அவர் களால் உணர முடியவில்லை. அவர்கள் சூரியோதயத்துக்கு உதவியாக மாயமந்திரச் சடங்குகளைச் செய்தனர்.

எகிப்து தேசத்தில், சூரியன்மீது அதிகார முள்ளவனுகப் பாரோ* கருதப்பட்டான். ஒவ்வொரு நாள் காலையிலும் அவன் கோயிலுக்குச் சென்று, அன்றைய பயணத்தைக் கதிரவன் முறையாக மேற்கொள்வதை உத்திரவாதம் செய்தான். இலையுதிர் காலத்தில், எகிப்தியர்கள் 'கதிரவனின் கைத்தடி' என்ற பெயரால் ஒரு விழாவைக் கொண்டாடினுர்கள். இலையுதிர் காலத்துக் கதிரவன் பலங்குன்றிய நிலையில் இருப்பதால், அவன்தன் பயணத்தை நடத்துவதற்குக் கைத்தடியின் உதவியைப் பெறவேண்டுமென்று எண்ணினுர்கள்.

ஆனுல் மனிதன் உழைத்துக் கொண்டே யிருந்தான்; உலகத்தையும் இயற்கையின் விதிகளையும் பற்றி மேலும் மேலும் அறிந்து கொண்டே யிருந்தான்.

கல்லைத் தேய்த்துக் கூராக்கிய தொல்காலத்து வினைஞன் தனது கைகளின் உதவியாலும் கண்களின் துணையாலும் கல்லின் தனி இயல்புகளை அறிந்து கொண்டான். கல்லுக்குக் கடினத்தன்மை உண்டென்பதையும் அதை நன்ருகப் புடைத்தால் சுக்கு நூருக உடையுமென்பதையும் அவன் தெரிந்து கொண்டான். ஆனுல் கற்களில் பல ரகங்கள் இருந்தன. ஒரு கல் பேசா விட்டாலும், இன்னெரு நாள் கிடைக்கும் கல் பேசலாம் என்று அவன் எண்ணினுன். நாம் இந்தக் கருத்தை நகைப்புக்குரியதாகக் கருதுகிருேம். ஆனுல் ஆதி மனிதன் நம்மைப் போல் சிந்தனை செய்யவில்லை.

ஆதி மனிதன், விதிகளை உய்த்துணர்வதற்குக் கற்றுக் கொள்ளவில்லை. எனவே, வாழ்வு விதிவிலக்குகள் நிறைந்ததென்று அவன் கருதினுன். எந்த இரண்டு கற்களும் வடிவத்தில் ஒத்திருக்க வில்லை என்பதை அவன் கண்டான்; எனவே அவை வெவ்வேருன முறையில் நடந்து கொள்ளலாமென்று எண்ணினுன். அவன் புதிதாக நிலத்தைத் தோண்டும் சாகுபடிக் கருவியைச் செய்தபொழுது, பழைய

*பாரோ (Pharaoh): பண்டைக்கால எகிப்திய அரசர்களது பட்டப்பெயர்.

கருவியை முற்றிலும் ஒத்ததாக அதைச் செய்தான். அப்பொழுதே அது நிலத்தை நன்கு தோண்டு மென்பது அவனது எண்ணம்.

ஆனால் வருஷங்கள் கடந்தன: ஆயிரமாயிரம் ஆண்டுகள் உருண்டோடின. பலவிதமான கற்களுடன் பழகிய மனிதன், கல்லின் பொதுத்தன்மையைச் சிறுகச் சிறுகக் கற்றுக் கொண்டான். எல்லாக் கற்களும் கடினமானவையாகவிருந்தன; எனவே கல் கடினமான பொருள் என்பதை அறிந்தான். எந்தக்கல்லும் பேசவில்லை; எனவே கற்கள் பேசா என்பதை உணர்ந்தான்.

இவ்வாறாக, விஞ்ஞானம் முளைவிட்டது; பொருட்களைப் புரிந்து கொள்ளும் ஞானம் உதயமாகியது.

இப்பொழுது, தீக்கல் கடினமான பொருள் என்று விளைஞன் சொன்னால், அவன் கையிலிருந்த கல்லை மட்டும் கருதிச் சொல்லவில்லை; சகல தீக்கல்களுமே கடினமானவை என்ற பொருளில்தான் சொன்னான். அவன் இயற்கையின் ஒரு விதியைப்பற்றி, உலகத்தில் நிலவும் ஒரு விதியைக் குறித்து அவன் அறிந்து கொண்டுவிட்டான்.

"குளிர் காலத்துக்குப்பின் வசந்தகாலம் வருகிறது" என்கிறோம். இதைப்பற்றி நாம் சிறிதும் வியப்படையவில்லை. குளிர்காலத்தைத் தொடர்ந்து வருவது இலையுதிர் காலமல்ல, வசந்தகாலம்தான் என்பதைச் சொல்லத் தேவையில்லை. ஆனால் நீண்டகால அனுபவத்துக்குப் பின்பே, தொல்லோர்கள் பருவங்களின் வரிசை முறையை உணர்ந்தனர். அவர்கள் விஞ்ஞானத்துறையில் ஆதியில் கண்டுபிடித்தவற்றில் அது ஒன்று. குளிர் காலமும் கோடை காலமும் தற்செயலாக மாறிமாறி உண்டாவதில்லை என்பதையும், எப்பொழுதுமே குளிர் பருவத்துக்குப்பின் வசந்தமும் வசந்தத்துக்குப்பின் கோடை காலமும் அதற்குப்பின் இலையுதிர் காலமும் உண்டாகின்றன என்பதையும் கற்றுக் கொண்ட பின்பே, ஜனங்கள் ஆண்டுகளைக் கணிக்கத் தொடங்கினார்கள்.

எகிப்தியர்கள் நைல்நதியில் வெள்ளம் வருவதைக் கவனித்து வருஷ அளவையைக் கண்டு பிடித்தனர். நைல் நதியில் ஒருதடவை வெள்ளம் வந்ததற்கும் அடுத்ததடவை வெள்ளம் வந்ததற்கும் இடைப் பட்ட காலத்தைக் கொண்டே அவர்கள் தமது ஆண்டு அளவையைக் கணித்தனர். புரோகிதர்களே நதியில் தண்ணீர் வருவதைக் கண்டு உரைத்தனர்; ஏனெனில், நதி ஒரு தெய்வம் என்று ஜனங்கள் கருதினுர்கள். வெள்ளம் எவ்வளவு உயரம் வந்தது என்பதைக் காட்டுவதற்காகப் புரோகிதர்கள் அமைத்த குறியீடுகள் இன்றும் நைல்நதிக்கரைக் கோயில்களில் காணப் படுகின்றன.

ஜுலை மாதத்தில், வயல்கள் வெப்பத்தால் காய்ந்த போது, விவசாயிகள் பொறுமையிழந்தவராய் நைல்நதியின் கலங்கலான வெள்ளத்துக்காகக் காத்திருந்தனர். அந்த மஞ்சளான நீர் உண்மையில் வருமா? அல்லது தெய்வங்கள் அவர்களிடம் கோபித்துக்கொண்டு வயற்பாசன நீரை அனுப்பாதிருந்து விடுமா? இவ்வாறெல்லாம் எண்ணி அவர்கள் மனங்கலங்கினர்.

நாலுபுறங்களிலிருந்தும் கோயில்களில் நிவேதனப் பொருட்கள் வந்து குவிந்தன. விவசாயிகள் தம்மிடம் மிஞ்சியிருந்த கையளவு தானியத்தையும் புரோகிதர்களிடம் கொடுத்துத் தம் சார்பில் தெய்வங்களை வழிபடுமாறு இறைஞ்சினர்.

ஒவ்வொரு நாளும், பொழுது புலரும் வேளையில், புரோகிதர்கள் ஆற்றங்கரைக்குச் சென்று தண்ணிர் வருகிறதாவென்று பார்த்தனர். ஒவ்வொரு தினமும், மாலையில் கோயிலின் தட்டையான கூரைமீது ஏறி மண்டியிட்டு விண்மீன்களை நோக்கினர். நட்சத்திரங்கள் நிறையப்பெற்ற வானமே அவர்களது பஞ்சாங்கமாகப் பயன்பட்டது.

கடைசியில் அவர்கள் கோயிலில் புனித உணர்வோடு அறிவித்தார்கள்: "தேவர்கள் நமது பிரார்த்தனைக்கு அருள்

கூர்ந்து செவி கொடுத்து விட்டனர். மூன்று இரவுகள் கழிவதற்குள், வயல்களில் பாய்வதற்கு வெள்ளம் வரப் போகிறது.''

மாயமந்திர மயமாயில்லாமல் புரியக்கூடிய தாயிருந்த உலகத்தை—அவர்களுக்குப் புதுமையாக விருந்த அவ் வுலகை—மக்கள் பையப்பையப் புரிந்து கொண்டனர். கோயிற் கூரையே வானுராய்ச்சி நிலையமாக முதன்முதலில் பயன்பட்டது. குயவர்கள், உலோக வேலைக்காரர்கள் ஆகியோரின் தொழில் நிலையங்களே விஞ்ஞான பரிசோதனை கள் நடத்துவதற்கான ஆராய்ச்சிச்சாலைகளாக முதன் முதலில் பயன்பட்டன.

ஜனங்கள் கண்டறிவதற்கும் எண்ணுவதற்கும் முடிவு கள் செய்வதற்கும் கற்றுக்கொண்டனர்.

இந்த ஆதிவிஞ்ஞானம், நம்கால விஞ்ஞானத்திலிருந்து மிகவும் வேறுபட்டிருந்தது. அது அப்பொழுதும் மாய மந்திர வித்தைமாதிரி இருந்தது; ஏனெனில் விஞ்ஞானத் துக்கும் மாயமந்திர வித்தைக்கும் இடையே வேறுபாடு காண்பது கடினமாகியிருந்தது. ஜனங்கள் நட்சத்திரங்களை நோக்கி, அவற்றைக்கொண்டு, வருவது உரைக்கவும் முற் பட்டனர். அவர்கள் விண்ணையும் மண்ணையும் அறிவ தற்கு முயன்றபொழுதே, அவற்றுக்குப் பிரார்த்தனையும் செய்தனர். எனினும், ஒளி பையப்பைய இருளைத்துளைத் துக்கொண்டு வெளிவந்தது.

## தேவர்கள் ஒலிம்பஸு*க்குச் செல்கின்றனர்

ஒரு காலத்தில், புராதன மனிதன், ஒவ்வொரு கல்லி லும் ஒவ்வொரு மரத்திலும் ஒவ்வொரு பிராணியினுள் ளும் தெய்வங்கள் உறைவதாக நம்பினுன். ஆனுல் கொஞ்சம் கொஞ்சமாக இந்த நம்பிக்கை இல்லாதொழிந் தது.

---

* ஒலிம்பஸ்: வடகிழக்கு கிரீஸிலுள்ள மிகவும் உயர்ந்த மலை. இம்மலையைத் தேவர் களது [கடவுளரது] இருப்பிடமாகப் பண்டைய கிரேக்கர்கள் கருதினுர்கள்.

ஒவ்வொரு பிராணியினுள்ளும் ஒரு தெய்வம் இருக்கிறது என்ற நம்பிக்கையை அவன் துறந்தான். அந்த நம்பிக்கைக்குப் பதிலாகக் காட்டில் வசிக்கும் ஒரு கானகத் தெய்வத்தைப் படைத்துக்கொண்டான். ஒவ்வொரு தானியக் கதிரிலும் ஒரு தெய்வம் இருக்கிறது என்ற நம்பிக்கையை விவசாயிகள் கைவிட்டனர். அதற்குப் பதிலாகக் கதிர்மணிகளை உருவாக்கும் தெய்வமொன்றை அவர்கள் படைத்துக்கொண்டனர்.

பழைய சிறு தெய்வங்களுக்குப் பதிலாக உண்டான இந்தப்புதிய தெய்வங்கள் மனிதர்களிடையே வசிக்கவில்லை. அறிவு வளர்ச்சியானது அத்தேவர்களை மனிதர் குடியிருப்புகளிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகத் துரத்திக் கொண்டேயிருந்தது. இறுதியில், மனிதன் காலடி வைத்திராத இடங்களுக்கு—புனிதமான காடுகளின் இருண்ட உட்பாகங்களுக்கும் மரங்கள் அடர்ந்த மலையுச்சிகளுக்கும்—அந்தத் தேவர்கள் நகர்த்தப்பட்டனர்.

ஆனால் அதன்பின் அந்த இடங்களுக்கும் மனிதன் சென்றான். அடர்ந்த காடுகளிலும் அறிவு ஒளிவீசியது. மலைச்சரிவுகளைப்போர்த்தியிருந்த கருமேகங்களையும் அறிவுக்கதிர்கள் விரட்டியடித்தன. எனவே, புதிய புகலிடத்திலிருந்தும் துரத்தப்பட்ட தேவர்கள் வானத்துக்கும் கடலின் அடிவாரத்துக்கும் பூமியின் குடலினுள் இருக்கும் நரகலோகத்துக்கும் சென்றனர்.

போர்களிலும் முற்றுகைகளிலும் பங்குகொள்வதற்காகத் தேவர்கள் வாட்களையும் ஈட்டிகளையும் தரித்துக்கொண்டு நிலவுலகத்துக்கு வந்ததைப்பற்றித் தலைமுறை தலைமுறையாகக் கதைகள் வாய்மொழிமூலம் வழங்கி வந்தன. அந்தத்தேவர்கள் தான் நெருக்கடியான நேரத்தில் கதாநாயகனைக் கருமுகிலினுள் மறைத்தனர் என்றும் இடிப்படையால் எதிரிகளை அழித்தனர் என்றும் கதை சொன்னார்கள். ஆனால் இவையெல்லாம் பண்டு ஒழிந்த

காலத்தில் நிகழ்ந்தவை என்றும் கதை சொன்னவர்கள் கூறினார்கள்.

ஆக, மனிதனது அனுபவம் மேன்மேலும் விரிவடைந்ததால், ஒளிவட்டம் மேன்மேலும் நீண்ட விட்டத்தினுள் வியாபித்ததால், அண்மையிலிருந்த தேவர்கள் நெடுந்தொலைக்குச் சென்றனர்; நிகழ்காலத்திலிருந்து கடந்த காலத்தினுள் சென்றனர்; இந்த உலகிலிருந்து ''மறுபக்கத்தில்'' உள்ள வேறு உலகத்துக்குச் சென்றனர்.

தேவர்களுடன் உள்ள அலுவல்களைக் கவனிப்பது கஷ்டமாயிருந்தது. முன்காலத்தில் யாரும் மாயமந்திரச் சடங்குகளைச் செய்ய முடிந்தது. அவை எளிய முறையில் அமைந்திருந்தன. உதாரணமாக மழையைத் தருவிக்க வேண்டியிருந்தால், வாயில் தண்ணீரை வைத்துக்கொண்டு நடனமாடும்பொழுது அதைப் பீறிட்டுச் சிதறச் செய்தால் போதும். மேகங்களை விரட்டவேண்டியிருந்தால், கூரைக்குச் சென்று காற்றடிப்பது மாதிரி வாயால் ஊதினால் போதும். ஆனால் இத்தகைய முறைகள் மூலம் மழையைத் தருவிக்கவோ மேகங்களை விரட்டவோ முடியாதென்பதை ஜனங்கள் இப்பொழுது கற்றுக்கொண்டுவிட்டனர். எனவே, கடவுளரிடமிருந்து வரம்பெற்று விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வது எளிய விவகாரமல்ல என்று அவர்கள் முடிவு செய்தனர். எனவே, சாமான்ய மக்களுக்கும் தேவர்களுக்கும் இடையேஉள்ள நடுவனாகப் புரோகிதன் பயன்படுத்தப்பட்டான். புரோகிதன் சகல சிக்கலான சடங்குகளையும், தேவர்களைப் பற்றிய சகல மறைபொருளான கதைகளையும் அறிந்திருந்தான்.

முன்னாளில் மந்திரவாதி சடங்குகளை நடத்தி வைப்பவனாகவே வேடர் நடனத்தின் வழிகாட்டியாகவே இருந்தான். அவன் தன் குழுவினரைவிடக் கூடுதலாகத் தெய்வங்களிடம் உறவுகொண்டிருக்கவில்லை.

புரோகிதன் அப்படியல்ல. இவன் தேவர்களுக்கு அருகில், புனிதமான தோப்பில் வாழ்ந்தான். இவன்

கோயிற் கூரையில் ஏறி, விண்மீன்களை உற்றுநோக்கித் தேவர்களின் சித்தத்தை அறிந்துகொண்டான்; ஏனெனில் அவனுக்குமட்டுமே விண்மீன்களைப் பார்த்துப் படித்துப் புரியமுடிந்தது. போர் தொடங்குவதற்குமுன் அவன் ஒரு பிராணியின் உள்பகுதிகளை ஆராய்ந்துவிட்டு, போரில் வெற்றி கிட்டுமா அல்லது தோல்வி உண்டாகுமா என்பதை முன்கூட்டியே உரைத்தான்.

தேவர்கள் மனிதரிடமிருந்து பிரிந்து மேன்மேலும் தொலைவாகப் போய்க்கொண்டிருந்தனர். அவர்கள் சகல மனிதரையும் ஒரு நிகராகப் பாவித்த காலம் போய்விட்டது. பழைய சமத்துவம் ஒழிந்துவிட்டதை ஜனங்கள் அனுபவத்தில் உணர்ந்தனர். "அவ்வாறுதான் நிகழும்" என்று புரோகிதர்கள் கூறினார்கள். "மனிதன் அனைத்தையும் கடவுளரிடம் விட்டுவிட வேண்டும். தலைவர்கள் நாடுகள்மீது ஆட்சி செலுத்துவதைப்போல், கடவுளர் உலகத்தை ஆள்கின்றனர்" என்று அவர்கள் கூறினர்.

ஆனால் புரோகிதர்களின் போதனைகளை எல்லோரும் பணிவாக ஏற்றுக்கொள்ளவில்லை. தேவர்களின் சித்தத்துக்குப் பணியவிரும்பாத சிலரும் இருந்தனர்.

"ஸீயஸின் நீதி எங்கே இருக்கிறது? நல்லவர்கள் துன்பமடைகின்றனர். அக்கிரமக்காரர்கள் சுபிட்சமாக உள்ளனர். தந்தைமார்களின் பாவங்களுக்காகக் குழந்தைகள் தண்டிக்கப்படுகிறார்கள். நம்மிடையே வாழும் ஒரே பெண் தெய்வமான நம்பிக்கையை வழிபடுவதொன்றே எஞ்சியுள்ள வழி. மற்ற கடவுளரெல்லாம் ஒலிம்பஸுக்குச் சென்றுவிட்டனர்" என்று ஒரு கிரேக்கக் கவி பேசும் காலமும் வந்தது.

## மனிதன் வளர்கிறான்

உண்மைக்கும் கற்பனைக்கும் இடையே உள்ள வேற்றுமையை, அறிவுக்கும் மூடநம்பிக்கைக்கும் இடையிலுள்ள வேறுபாட்டை ஆதிமனிதன் உணரவில்லை.

ஆடையைப் பாலிலிருந்து பிரித்தெடுப்பதைப்போல், அறிவை மூடநம்பிக்கையிலிருந்து பிரித்தெடுத்து அதன் விடுதலையை உறுதிப்படுத்துவதற்கு ஆயிரமாயிரம் ஆண்டுகளாயிற்று.

வழிவழியாக நமக்குக் கிடைத்துள்ள பாட்டுக்களிலும் கதைகளிலும், குலங்கள், குலத்தலைவர்கள் ஆகியோரின் வரலாற்றைத் தேவர்கள் வீரர்கள் ஆகியோரைப் பற்றிய கற்பனைக் கதையிலிருந்து வேறுபடுத்திக் காண்பது கடினமாயிருக்கிறது; அதைப்போலவே, உண்மையான நிலநூல் அறிவைக் கற்பிதமான பூகோளக் குறிப்புக்களிலிருந்தும் விண்காட்சியிலிருந்து பெற்ற அறிவைப்பழைய கட்டுக்கதைகளிலிருந்தும் இனம் கண்டுகொள்வது கஷ்டமாயிருக்கிறது.

கிரேக்கர்களது பழைய கவிதைகளையும் கதைகளையும் 'இலியாத்', 'ஒதிஸ்ஸி' என்ற பெருங்காப்பியங்களில் காணலாம். கிரேக்கர்கள் டிராய் நகரை முற்றுகையிட்டு அழித்த கதையையும் அதன்பின், கிரேக்க குலங்களில் ஒன்றின் தலைவனான உலிஸ்ஸிஸ் என்பவன் இதாக்கா என்ற தன் நகரை அடைவதற்குமுன் நெடுங்காலம் கடற் பிரயாணம் செய்து பல சோதனைகளுக்குள்ளானதையும் அந்தக்காப்பியங்கள் எடுத்துரைக்கின்றன. டிராய் நகரின் மதில்களுக்கு முன்னால் நடந்த போரில், தேவர்களும் மனிதர்களுடன் சேர்ந்து பங்குகொண்டனர்; சில கடவுளர் முற்றுகையிட்டோர் பக்கத்திலும் வேறு சிலர் முற்றுகைக்கு உள்ளானவர் பக்கத்திலும் பங்கெடுத்தனர். தேவர்களது தனியன்புக்குப் பாத்திரமான ஒருவனைச்சாவு அச்சுறுத்தினால், அவர்கள் அவனைக்கடத்தித் தீங்குநேராது பாதுகாத்தனர். கடவுளர் ஒலிம்பஸ் மலையின் சிகரத்தில், விருந்துண்டபோது, போரை நீடிக்கச் செய்வதா அல்லது போரிடும் மக்களை ஒத்துப்போகச் செய்வதா என்று விவாதம் செய்தனர்.

இந்தப் பழங்கதைகளில், உண்மை கற்பனையுடன் கலந்திருக்கிறது. இவற்றில் எது வரலாறு, எது கட்டுக் கதை? கிரேக்கர்கள் எப்போதாவது டிராய் நகரத்தின் மதில்களுக்கு முன் போராடினுர்களா? டிராய் என்று ஒரு நகரம் எப்போதாவது இருந்ததா?

அறிஞர்கள் மத்தியில் இவற்றைப் பற்றி வாதப்பிரதி வாதம் நிகழ்ந்தது. கடைசியில், ஒரு பழம் பொருளாராய்ச்சி யாளர் சகல சந்தேகங்களையும் அகற்றினர். இலியாதிலுள்ள குறிப்புக்களை வழிகாட்டியாகக் கொண்டு, அவர் சின்ன ஆசியா[1]வுக்குச் சென்றார்; டிராய் எங்கு இருந்ததாகக் கருதப்பட்டதோ அதே இடத்தில் அந் நகரின் இடிபாடு களைத்தோண்டி எடுத்தார்.

ஒதிஸ்ஸியிலும் எல்லாம் கட்டுக்கதையல்ல என்பதை நிலநூல் வல்லுநர்கள் மெய்ப்பித்தனர். உலிஸிஸின் சஞ்சார மார்க்கத்தை உய்த்துணர அவர்களால் முடிந்தது. நிலப்படத்தை உன்னிப்பாக ஆராய்ந்தீர்களானல், அதில் துயிற் பூண்டைப்புசித்தவர்களின் நாட்டையும் (Land of the lotus-eaters) ஈவோலஸ் தீவையும் காணலாம். தம்மி டையே வந்த உலிஸிஸின் கப்பலைத் தகர்த்துவிடுவதுபோல் அச்சுறுத்திய ஸிலா[2]வையும் கரிப்டிஸை[3]யும் காணலாம்.

துயிற் பூண்டு உண்டவர்களின் தேசம் என்பது ஆப் பிரிக்காவின் ட்ரிபோலி[4]க்கரையாகும். ஈவோலஸ் தீவுக்கு

1. சின்ன ஆசியா: துருக்கி தேசத்தின் ஆசியப்பகுதி. இது கிரீஸ் நாடுவரை கடலுக்குள் நீண்டு உட்சென்றிருப்பதால் கிரேக்கர்களே அப் பகுதிக்குச் சின்ன ஆசியா என்ற பெயரை அளித்தனர்.

2. ஸிலா: ஆறுமுக அரக்கி. நாயைப்போல் குரைத்தாள்.

3. கரிப்டிஸ்: மற்ருேர் அரக்கப்பிறவி. தினம் மூன்று தடவைகள் கடல் நீரை விழுங்கி உமிழ்ந்த அரக்கன்.

இத்தாலிக்கும் ஸிஸிலிக்கும் இடையே இரண்டு குன்றுகளில் இவை வசித்தன என்று ஒதிஸ்ஸி கூறும். ஸிலா இத்தாலியப் பக்கத்துக்குன்றிலுள்ள குகையிலும், கரிப்டிஸ் அதன் எதிர்ப்புறக்குன்றிலும் வசித்தன.

4. ட்ரிபோலி: மத்தியதரைக் கடற்கரையிலுள்ளது. இது லிபியா ராஜ்யத்தின் பகுதி. ட்ரிபோலி நகரம் லிபியாவின் தலைநகர்.

இப்பொழுது லிபார்ஸ்கி* என்ற பெயர் வழங்கப்படுகிறது. ஸிஸிலிக்கும் இத்தாலிக்கும் இடையிலுள்ள ஜல சந்தியில் ஸில்லா என்ற குன்றும் கரிப்டிஸ் என்ற பெரிய நீர்ச்சுழியும் இருக்கின்றன.

ஒதிஸ்ஸியிலுள்ளவை யெல்லாம் கற்பனையல்ல. ஆனால் நீங்கள் அதிலிருந்து பண்டைக் காலத்துப் பூகோள இயலைக் கற்க முயன்றீர்களானால், அது பெருந்தவறாகும்.

முதன் முதலாக எழுதப்பெற்ற பிரயாண நூலான ஒதிஸ்ஸியில், பூகோளக் குறிப்புகளெல்லாம் கற்பனைக் கதைகளாக உருவெடுத்துள்ளன. மலைகள் பயங்கரமான பிராணிகளாக மாறியுள்ளன. தீவுகளில் வாழ்ந்த காட்டு மிராண்டிகள் மானிடரைத் தின்னும் தன்மைக்குரிய ஒற்றைக்கண் அரக்கர்களாக மாறியுள்ளனர்.

அக்கால மக்கள் தாம் பிறந்து வளர்ந்த இடத்தையே அறிந்திருந்தனர். வியாபாரிகள் கடற் பிரயாணம் செய்தனர் என்பது உண்மை. ஆனால் அவர்கள் கடற்கரையிலிருந்து கண்ணுக்கு எட்டாத தூரம் செல்வதில்லை. திசை காட்டியோ நிலப்படமோ இல்லாத நாளில் கடற்பரப்பில் தூரம் செல்வது ஆபத்தான காரியமாயிருந்தது. சூரியனையும் நட்சத்திரங்களையும் நோக்கியே அவர்கள் தட்டுத்தடுமாறித் தமது கப்பலைச் செலுத்தவேண்டியிருந்தது. ஏதாவது ஒரு தீவிலுள்ள ஒரு செங்குத்தான குன்றோ கடற்கரையிலிருந்து ஓங்கி வளர்ந்த மரமோதான் அவர்களுக்குக் கலங்கரை விளக்கமாகப் பயன்பட்டது.

கடலினுள் ஆயிரக்கணக்கான அபாயங்கள் பதுங்கியிருந்தன. திரைகடல் சிறிதே கிளர்ச்சி யுற்றாலும் அகன்ற கிண்ண வடிவுக் கப்பல்கள் தடுமாறின. அந்தக் குறைபாடான கப்பற்பாய்களை நிர்வகிப்பது கஷ்டமாயிருந்தது; காற்று மனிதனது கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்தது. அது இறகை வீசியடிப்பது மாதிரிக் கப்பலையும் ஆட்டி வைத்தது.

---

*லிபார்ஸ்கி (அல்லது லிப்பாரி) ஸிஸிலிக்கு வடக்கே உள்ள தீவு.

இறுதியில் கப்பல் கடற்கரையை அடைந்தால், களைத்துச் சோர்வுற்ற மாலுமிகள் அதை மணற் பாங்கான கரைக்கு இழுத்துச் செல்ல வேண்டியிருந்தது. கடைசியாக நிலத்தை அடைந்து விட்டதால், மாலுமிகள் ஓய்வெடுக்க முடிந்தது என்பது உண்மை. ஆனால் அவர்களுக்கு மனத்தில் நிம்மதி இல்லை. ஏனெனில், அவர்கள் கடலையும்விட அதிகமாகப் புதிய தேசத்தைக் கண்டு பயந்தனர். அவர்கள் மனிதரையே உண்ணும் மனிதரைப்பற்றிப் பிற மாலுமிகளிடமிருந்து கேள்விப் பட்டிருந்தனர். அத்தகைய அரக்கர்களைப் பார்ப்பதாகவும் அவர்கள் கற்பனை செய்து கொண்டனர். ஒவ்வொரு புதிய பிராணியும் அபாயத்தை விளைவிக்கும் ஒருவிதமான பயங்கரப் பிராணி என்று அவர்கள் எண்ணினர். எனவே, கடற்கரையில் இறங்கியவர்கள் உள் நாட்டினுள் நெடுந்தொலைவு செல்வதற்கு அஞ்சினர்.

எனினும், ஒவ்வொரு கடற் பிரயாணத்தாலும், அவர்களது உலக அறிவு விரிவடைந்தது. அறியப்படாதவற்றின் எல்லைகள் மேன்மேலும் ஒடுங்கின; கற்பிதமான கதைகளுக்குரிய உலகத்தின் எல்லைகள் சுருங்கின. துணிவு மிகுந்த மாலுமிகள் கடலின் நுழைவாயிலையே அடைந்தனர்; அதற்கு அப்பால் மகா சமுத்திரம்* இருந்தது. அது பிரபஞ்சத்தைப் போலவே எல்லையற்றதாக அவர்களுக்குத் தோன்றியது. அவர்கள் தாயகம் திரும்பியபோது, உலகத்தின் முனைக்குச் சென்று வந்ததாகக் கூறினார்கள். உலகம் மகா சமுத்திரத்தினால் சூழப்பட்டிருக்கிறதென்றும் சொன்னார்கள்.

ஆயிரக் கணக்கான ஆண்டுகட்குப் பின், ஜனங்கள் ஐரோப்பாவிலிருந்து இந்தியாவுக்குச் சென்றனர்; சீனாவிலிருந்து ஐரோப்பாவுக்குச் சென்றனர். மாலுமிகள் மகா சமுத்திரத்தைக் கடந்தனர்; அதன் அக்கரையிலும் ஜனங்

---

*மத்திய தரைக்கடல் அட்லாண்டிக் மகா சமுத்திரத்துடன் ஜிப்ரால்டர் ஜலசந்தி மூலம் இணைகிறது. பண்டைய கிரேக்க மாலுமிகள் ஜிப்ரால்டரை அடைந்தனர். அப்பாலிருந்த (அட்லாண்டிக்) மகா சமுத்திரம் உலகைச் சுற்றி ஓடுவதாகக்கருதினர். அதற்கு அப்பால் வேறுநாடுகள் இருப்பதாக அவர்கள் நினைக்கவில்லை.

கள் வாழும் தேசம் இருப்பதைக் கண்டனர். எனினும், அதன் பிறகும் நீண்ட காலத்துக்குப் பூகோள இயலுடன் கட்டுக்கதைகள் கலந்தே யிருந்தன.

அமெரிக்காவைக் கண்டு பிடித்த கொலம்பஸே, அந்த நாட்டில் ஓர் உயரம் மிகுந்த மலை இருப்பதாகவும் அதுவே விண்ணுலகைத் தாங்கிக் கொண்டிருப்பதாகவும் கருதினான். விண்ணுலகின் வெளிப்புறத்தே யுள்ள அந்த மலைச்சிகரத் துக்குச் சென்று, அதைச் சுற்றியுள்ள தேசத்தை ஆராய முடியுமென்று நம்புவதாக ஸ்பெயின் தேசத்தின் ராணிக்கு அவன் எழுதினான்.

குளிர்காலம் முழுவதும் கரடி*களைப்போல் உறங்கும் மனிதர்கள் யூரல் மலைத்தொடருக்கு அப்பால் வசித்தன ரென்று பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த ருஷியர்கள் எண்ணினார்கள். "கீழைய தேசத்தின் வினோதமான மக்கள்" என்ற தலைப்பில் ஒரு தொன்மையான கைப்பிரதி நமக்குக் கிடைத்திருக்கிறது. அதில் வாயில்லாத மக்களைப் பற்றியும் தலையில்லாத மக்களைப்பற்றியும் மார்பகத்தில் கண்ணை உடைய மக்களைப் பற்றியும் விவரமாக வர்ணித் திருக்கின்றனர்.

இவை யெல்லாம் நமக்கு நகைப்பூட்டலாம். ஆனால் நாமும் நம்மால் அடைய முடியாத உலகங்களில் பயங்கர மான பேருரு இனங்கள் வாழ்வதாகக் கற்பனை செய்கிறோம். நாம் நிலவுலகை நன்கறிந்து விட்டோம். எனவே, நமது கற்பிதமான பிராணிகளை செவ்வாய்க்கும் சந்திரனுக்கும் அனுப்பி விட்டோம்!

## ஆதி கவிகள்

காலப்போக்கில், மாயமந்திரமயமாகவும் வியக்கத்தக் கனவாகவும் தோன்றிய விஷயங்கள் அறிவுக்குப்புலனாயின.

---

*இங்கு பழுப்புக்கரடியே குறிப்பிடப்படுகிறது. அது குளிர்காலம் வந்து, பனிபெய்து, உணவு ஒன்றும் அகப்படாதபோது, குகையிலோ, வெண்பனியில் தானே பறித்த முழைஞ்சையிலோ குளிர்காலமெல்லாம் உறங்கும். (மொர்)

கம்மியன் மேன்மேலும் அதிகமாகத் தன் கைகளிலும் கண்களிலும் நம்பிக்கை வைத்தான். அவன் அருமையாகவே மாயமந்திர வித்தையை நாடினான். சூரியன் உதயமாகும் பொழுது, பள்ளத்தாக்கிலுள்ள அந்தகாரம் நீங்குவதைப் போல், மாயமந்திரம் வாழ்விலிருந்து சிறிதுசிறிதாக நீங்கியது.

சமயச் சடங்குகளிலும் புனிதமான விளையாட்டுகளிலும் ஆடல்பாடல்களிலும் அது நீண்டகாலத்துக்கு நீடித்தது. ஆனால் விழிப்படைந்த பகுத்தறிவு அவ்விடங்களிலிருந்தும் அதை விரட்டியது. ஆடல்பாடல்கள் மிஞ்சின; ஆனால் அவற்றுடன் இணைந்திருந்த மாயமந்திரம் மறைந்தது.

பண்டைய கிரேக்கவிவசாயிகள் கனிகளை வழங்கிய டையோனிஸஸ்* என்ற தெய்வத்தைக் களியாட்டங்கள் வாயிலாக வழிபட்டனர்; அவை ஆரம்பத்தில் மாயமந்திரம் ஓதுவதாகவே இருந்தன. குளிர்காலத்து வெண்பனிக்கு இரையாகி இறந்துகிடந்த இயற்கை, மீண்டும் மக்களுக்குத் தானியமும் கனியும் ஒயினும் அளிப்பதற்குப் புத்துயிர் பெறவேண்டுமென்று அவர்கள் கருதினர். அதன் பொருட்டு, டையோனிஸஸ் இறந்து உயிர்த்தெழுந்ததைப் பற்றிக் கோரஸ் (பாடகர்குழு) பாடியது. மிருக முகமூடியை அணிந்த விவசாயிகள் கிராமத்து ஆராதனை பீடத்தைச் சுற்றி ஆடினார்கள். கோரஸ்ஸின் தலைவன், டையோனிஸஸின் துன்பங்களைப் பற்றிப்பாடினான். கோரஸ்ஸின் இதர பாடகர்கள் பல்லவியைத் திரும்பப்பாடி ஒத்திசை கூட்டினார்கள்.

மாயக் கவர்ச்சி மிகுந்த இந்தப்புராதனமான ஆடல் பாடல், கிட்டத்தட்ட ஒரு நாடகம் மாதிரியே இருந்தது. கோரஸ் தலைவனும் முகமூடி ஆட்டக்காரர்களும் எதிர்கால நடிகர்களின் முன்னோடிகளே என்பதை எளிதில் உணரமுடியும். கோரஸ் தலைவன் தேவனின் துன்பங்களைப்

---

*டையோனிஸஸ்: கொடி முந்திரிக்கனியின், அதன் ரசமான ஒயினின் தேவன்

பற்றிப்பாடுவதுடன் அவற்றைத் தன் மெய்ப்பாடுகளால் புலப்படுத்துகிறான். அவன் மார்பில் அடித்துக் கொள் கிறான்; புலம்புகிறான்; விண்ணை நோக்கிக் கைகளை உயர்த்துகிறான். தேவன் புத்துயிர் பெற்றவுடன், முகமூடி ஆட்டக்காரர்கள் ஆனந்தக் கூத்தாடுகின்றனர். ஒருவருக் கொருவர் 'அழகு' காட்டுகின்றனர்; ஒருவரை யொருவர் கேலி செய்து கொள்கின்றனர்.

சில நூற்றாண்டுகள் கடந்தன, களியாட்டம் மிஞ்சியது; ஆனால் அதன் மாயவித்தை மறைந்தது. முன்போலவே ஜனங்கள் ஆடிப்பாடி நடிக்கிறார்கள்; ஆனால் அவர்கள் தேவர்களுடைய துன்பங்களைப் பொருளாகக் கொள்ளாது மாந்தருடைய துன்பங்களைப் பொருளாகக் கொண்டு ஆடிப்பாடி நடிக்கின்றனர். அதைக்காணும் பார்வை யாளர்கள் சிரிக்கிறார்கள்; அழுகிறார்கள்; வீரச்செயல்களைக் கண்டு மெய்சிலிர்க்கிறார்கள்; கயமையையும் பேதைமை யையும் கண்டு நகைக்கிறார்கள். பண்டைய கோரஸ்ஸின் தலைவன், துன்பியல் நாடகத்தின் நடிகனாகிறான்; உல்லாச மான முகமூடியாட்டக்காரர்கள் கோமாளிகளாகவும் நகைச்சுவை நடிகர்களாகவும் உருவாகின்றனர்.

ஆனால் கோரஸ் தலைவன் ஆதி நடிகன் மட்டுமல்ல; அவனே ஆதிகவியும் கூட. முதலில் அவன் கோரஸ்ஸுடன் தான் பாடினான். ஆனால் அதன்பின் அவன் தனிமையிலும் பாடினான்.

பாட்டுக்கள் வேறு, சடங்குகள் வேறு. தனியாகப்பாடு வோன் புனிதமான களியாட்டங்களில் மட்டும் பாடுவ தில்லை. தலைவன் தனது பரிவாரத்துடன் விருந்துண்ணும் பொழுதும் பாடுகிறான். அவன் பாடும்பொழுது, தனது ஹார்ப்பின் நரம்புகளை மீட்டுகிறான்; சில சமயங்களில் நாட்டியமும் ஆடுகிறான். இவ்வாறாக, பழைய வழக்கப் படி இசை, சொல், ஆடல் ஆகிய மூன்றையும் ஒன்று படுத்துகிறான். தனித்துப் பாடவேண்டிய பகுதியையும் கோரஸ் சேர்ந்து பாடும் பல்லவியையும் அவனே பாடு

கிறன். அதாவது அவனே தலைவனுகவும் கோரஸ்ஸாகவும் செயல் படுகிறன்.

அவன் எதைப்பற்றிப் பாடுகிறன்? தேவர்களேயும் வீரர்களேயும் பற்றிப்பாடுகிறன்; வீராதி வீரர்களேப் புற முதுகு காட்டி ஓடச்செய்த குலத்தலைவர்களேப் பற்றிப் பாடுகிறன். களத்தில் உயிர்நீத்த வீரர்களேப் புகழ்ந்து பாடுகிறன். ஒருவன் தன் சகோதரனேக் கொன்றவன் மீது வஞ்சம் தீர்ப்பதைப்பற்றிப் பாடுகிறன்.

இது மாயக்கவர்ச்சிப் பாடல் அல்ல; வினைவைப்பை நீக்குவதற்கான பாடலும் அல்ல. இது வீரச்செயல்களேப் பற்றியகதையைப் பொருளாகக் கொண்டது; அம்மாதிரி வீரம் விளேவிக்க வேண்டுமென்ற உத்வேகத்தை அளிப்பது.

ஆனுல் காதல், வசந்தம், துயரம் ஆகியவற்றைப்பற்றிய பாடல்கள் எங்கிருந்துவந்தன?அவையும் திருமணங்களிலோ ஈமச்சடங்குகளிலோ, அறுவடைக்காலத்திலோ கொடி முந்திரிப்பழச்சாறு பிழிந்தபோதோ நிகழ்ந்த சடங்குகளி லிருந்தே தோன்றின. இந்தச் சடங்குகளில், கோரஸ் பாடகர்கள், சிறுசிறு பாடல்களே ஒருவர்பின் ஒருவராகப் பாடினர். ராட்டினத்தில் நூல்நூற்ற இளம் பெண்ணும் தொட்டிலில் குழந்தையைக்கிடத்தி அதை ஆட்டிய அன்னேயும் இந்தச் சிறு பாடல்களேத் தாமாகத் திரும்பப் பாடிக்கொண்டனர்.

வீரர்களேப்பற்றிய முதற்பாடல்களேயும் காதலேப் பற்றிய முதற் பாடல்களேயும் எழுதியது யார்?

நமக்குத் தெரியாது. முதன் முதலில் வாளேச்செய்தது யார் என்பதையோ முதன் முதலில் கைராட்டினத்தைச் செய்தவன் யார் என்பதையோ அறியமாட்டோம். அதேபோலத்தான் இந்தப்பாடல்களே முதலில் பாடியவரை நாம் அறியோம். ஒருவன் அல்ல. நூற்றுக்கணக்கான தலே முறைகளே கருவிகளேயும் பாடல்களேயும் சொற்களேயும் படைத்தன. பாணன் தானே இயற்றிய பாடல்

களைப் பாடவில்லை. அவன் கேட்டு அறிந்தவற்றைப் பாடினான். பாட்டு ஒருவன்பின் இன்னொருவனாகப் பல பாணர்களை அடைந்தபோது, அது வளர்ந்தது; மாறுதலுற்றது. பல உபநதிகளின் சேர்க்கையால் நதி உருவாவதைப்போல், பாட்டுக்களிலிருந்து நெடுங்கவிதைகள் உண்டாயின.

ஹோமர் இலியாதை இயற்றினார் என்று நாம் கூறுகிறோம். ஆனால் ஹோமர் யார்? அவரைப் பற்றிக் கற்பிதமான கதைகளே நமக்குக் கிடைத்திருக்கின்றன. அவரது காவியத்தில் காட்சிதரும் வீரர்களைப் போலவே அவரும் கற்பிதமானவராக இருக்கிறார்.

முதன்முதலில் வீரர்களைப் பற்றிப்பாட்டுக்கள் இயற்றப்பட்டபொழுது, பாடகன் தன் குழுவுடனும் குலத்துடனும் நெருங்கி வாழ்ந்தான். ஜனங்கள் சகல காரியங்களையும் சேர்ந்தே செய்தனர். பாடகரது பாடல்களும் பல தலைமுறைகளின் கூட்டுச்சாதனையாக உருவாயின. வழி வழியாகத் தனக்குக் கிடைத்த பாடலைப் பாணன் மாற்றி அழகு செய்தபோதும், அவன் தன்னை அதன் கர்த்தாவாகவோ ஆசிரியனாகவோ கருதிக்கொள்ளவில்லை.

ஆனால் 'தன்னுடையது' 'பிறருடையது' என்று மனிதன் இனம் காணத்தொடங்கிய காலம் வந்தது. குழு தகர்ந்து கொண்டிருந்த காலம்; அதன் பழைய ஒற்றுமை இல்லாதொழிந்த காலம். அப்பொழுது, கம்மியன் தனக்காக வேலை செய்தான். முன்போல், குழுவின் கருவியாக அவன் தன்னைக் கருதிக்கொள்ளவில்லை.

சில நூற்றாண்டுகள் கழிந்தபின், தன்னுணர்ச்சிப் பாடல்களை இயற்றிய கிரேக்கக் கவியான தியோக்னிஸ் கூறுவார்:

என்றன் கலைத்திறமை ஈன்ற பயனை<br>
இன்பக் கவிதைகளில் என்முத்திரையிட்டேன்;<br>
யாரே இவற்றைக் களவாடப் போதுவரே!<br>
யாரே எனதென்பர்? என் கவிதை என்னுடைமை?<br>
மெகாரா நகர்தன்னில் வாழும் தியோகினியா<br>
பாடிவைத்த பாட்டென்பர்; யாவரும் பார்த்தறிவார்.

குழு ஏற்பாடு நிலவிய காலத்தில் இம்மாதிரி எவரும் சொல்லியிருக்க முடியாது.

மனிதன் மேன்மேலும் அதிகமாக 'நான்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறான். தன் வேலையைச் செய்தது தான் அல்லவென்றும், தன்மூலம் வேறு ஒன்று செயல்பட்டது என்றும் அவன் கருதியகாலம் என்றோ மறைந்து விட்டது. கவிஞன் இன்னமும் தனக்குத் தெய்வீக ஊக்கம் அளித்த கலைநங்கையைப் பற்றிப் பேசுகிறான். 'பாடல் இயற்றும் திறனை'த்தேவர்களிடமிருந்து அடைந்த விவரத்தைப் பாடுகிறான். எனினும் அவன் தன்னை மறந்துவிடவில்லை.

"கலைநங்கைகள் என்னை ஊக்குவித்தனர்.
நான் அழியாப்புகழ் எய்திவிட்டேன்"

என்று கிரேக்க கவியான ஸாப்போ என்பவள் தன் கவிதையில் கூறுகிறாள். இதில் அவள் பழமையைப் புதுமையுடன் சேர்த்திருப்பதைக் காண்கிறோம். அவள் தானே சொற்களைக்கண்டு ஆண்டு கவிதை இயற்றியதாகக் கருதவில்லை. கலைநங்கையரே தன்மூலம் கவிதை இயற்றினர் என்று நம்புகிறாள்.

ஆனால் இந்த வரிகளில் கர்த்தாவின் பெருமிதத்தையும் காண்கிறோம். தன்பெயர் நிரந்தரமாக நிலைத்திருக்குமென்பதை அறிந்த கவியின் பெருமித உணர்வைக் காண்கிறோம்.

இவ்வாறாக மனிதன் வளர்கிறான். அவனது உயரம் அதிகரிக்க அதிகரிக்க, அவனது பார்வையின் வீச்சும் விரிவடைந்துகொண்டே யிருக்கிறது.

---